ஒரு நவீன ஆன்மீகச் செவ்விலக்கியம்

# நான் ப்ரம்மம்

## I AM THAT

முதல் பகுதி





ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்

# நான் ப்ரம்மம்

## ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களுடன் உரையாடல்

[முதல் பகுதி]

மராத்தி ஒலிப்பதிவுகளை
ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்:

**மோரிஸ் ஃப்ரைட்மேன்**
(Maurice Frydman)

தமிழாக்கம்:

**சி.அர்த்தநாரீஸ்வரன், B.Sc., F.C.A.**

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
தொலைபேசி: 24332682
மதுரை ❖ கோவை ❖ பாண்டி

எல்லா வாழ்பவைகளும் வசிக்கின்ற அது, எல்லா வாழ்பவைக் குள்ளும் வசிக்கின்ற அது, எல்லோருக்கும் கிருபையைக் கொடுக்கின்ற அது, பிரபஞ்சத்தின் உச்ச உயர்வான ஆன்மா, அளவற்ற இருத்தல் - நான் அது.

**-அம்ரித்பிந்து உபநிஷத்**

எல்லாவற்றிலும் ஊடுருவுகின்றதும், எதனாலும் கடக்கப்பட முடியாததும், நம்மைச் சுற்றி உள்ள பிரபஞ்ச வெளியைப் போன்று எல்லாவற்றையும் உள்ளும், புறமும் முழுவதும் நிரப்புகின்றதும் ஆகிய உச்ச உயர்வான, இருமையற்ற ப்ரம்மம் - அந்த ஒன்று நீ.

**- ஸ்ரீ சங்கரர்.**

மெய்யைத் தேடி விசாரம் செய்பவர் என்பவர், தன்னைத் தேடுபவரே.

'நான் யார்' என்னும் கேள்வியைத் தவிர, மற்ற எல்லாக் கேள்விகளையும் விட்டு விடு.நீ உறுதியாக உள்ள ஒரே உண்மை, நீ உள்ளாய் என்பதே. 'நான்' என்பது உறுதியாக உள்ளது. 'நான் இது' என்பது அவ்வாறு இல்லை. மெய்யாக நீ என்ன என்பதைக் கண்டுபிடிக்கப் போராடு. நீ என்ன என்று அறிய, முதலில் நீ என்னவாக இல்லை என்று ஆராய்ந்து அறிய வேண்டும்.

நீ என்னவாகவெல்லாம் இல்லை என்பதைக் கண்டுபிடி- நீ உறுதியாகவோ அல்லது அருவமாகவோ உணர்ந்து அறிகின்ற உடல், உணர்ச்சிகள், எண்ணங்கள், காலம், இடம், இது அல்லது அது ஆகிய எதுவுமே நீயாக இருக்க முடியாது. உணர்ந்து அறிவது என்னும் செயலே, நீ என்ன உணர்ந்து அறிகிறாயோ அது நீ அல்ல என்பதைக் காண்பிக்கிறது.

நீ எந்த அளவிற்குத் தெளிவாக மனதளவில் எதிர் மறையாகத்தான் உன்னை விவரிக்க முடியும் என்று புரிந்து கொள்கிறாயோ, அந்த அளவிற்கு விரைவாக உன் தேடுதலின் முடிவிற்கு வந்து, நீ அளவற்ற இருத்தல் என்று அறிவாய்.

**- ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்**

## ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் என்பவர் யார்?

குருஜியிடம் அவருடைய பிறந்த தேதியைக் கேட்டபோது, தான் பிறக்கவே இல்லை என்று பதிலளித்தார்.

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்கள் 1897 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 17ம் தேதி பௌர்ணமி நாளில் பிறந்தார். அது ஹனுமான் ஜெயந்தி பண்டிகை நாள். அவருடைய பிறப்பை அந்தப் புனிதமான நாளோடு தொடர்புபடுத்தி அவருடைய பெற்றோர் அவருக்கு மாருதி என்று பெயர் வைத்தனர்.

அவர் சிறுவனாக இருந்த காலத்தைப் பற்றியும், வாலிபப் பருவத்தைப் பற்றியும் கிடைக்கும் தகவல்கள் கொஞ்சம் கொஞ்சமாகவும், தொடர்பில்லாமலும் இருக்கின்றன. அவருடைய தந்தை ஷிவ்ராம்பண்ட் ஒரு ஏழை. சில காலம் அவர் ஒரு வீட்டு வேலைக்காரராக பம்பாயிலும், பிறகு சிறு விவசாயியாக மஹாராஷ்ட்ராவில், ரத்னகிரி மாவட்டத்தில் உள்ள கண்டல் கோவன் என்னும் ஒரு சிறு கிராமத்திலும் பிழைப்பை நடத்தினார். மாருதி பள்ளிப் படிப்பு இல்லாமலேயே வளர்ந்தார். சிறு பையனாக அவரால் செய்யக் கூடிய மாடு மேய்ப்பது, வயல் வேலை பார்ப்பது போன்றவற்றைத் தன் தந்தைக்கு உதவியாகச் செய்து வந்தார். அவருடைய வேலைகளைப் போலவே, அவருடைய சந்தோசங்களும் எளிமையானவையே. ஆனால் அவர், எல்லாவிதமான கேள்விகளையும் கேட்கின்ற ஆர்வமுள்ள மனதைக் கொண்டிருந்தார்.

அவருடைய தந்தையாருக்கு விஷ்ணு ஹரிபாபு கோரே என்னும் பண்பான, படித்த பிராமண நண்பர் ஒருவர் இருந்தார். கோரே அடிக்கடி மதம் சம்பந்தப்பட்டவைகளைப் பற்றிப் பேசுவார். அதை சிறுவன் மாருதி உன்னிப்பாகக் கேட்டு, அதில் யாரும் எதிர் பார்க்காத அளவிற்கு ஆழ்ந்துவிடுவார். கோரே அவருக்கு

அக்கறையுள்ள, அன்பான, அறிவுள்ள சரியான மனிதராக இருந்தார்.

மாருதிக்குப் பதினெட்டு வயதான போது அவருடைய தந்தை இறந்து விட்டார்- மனைவி, நான்கு மகன்கள், இரண்டு மகள்களை விட்டுவிட்டு. சிறிய தோட்டத்திலிருந்து கிடைத்த சொற்ப வருமானம் தந்தையின் இறப்பிற்குப் பிறகு மேலும் குறைந்தது. அது அவ்வளவு பேரும் சாப்பிடப் போதவில்லை. மாருதியின் மூத்த சகோதரர் வேலைதேடி கிராமத்தை விட்டு பம்பாய்க்குச் சென்றார். மாருதி அவரைத் தொடர்ந்து சென்றார். அவர் பம்பாயில் சிறிய சம்பளத்தில் ஜூனியர் குமாஸ்தாவாக ஒரு அலுவலகத்தில் வேலை செய்ததாகவும், வெறுத்துப் போய் அந்த வேலையை ராஜினாமா செய்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது. அவர் பிறகு சிறு பொருள்கள் விற்பவராகச் சில்லரை வியாபாரத்தைச் செய்தார். அப்போது குழந்தைகளுக்கான துணிகள், புகையிலை, சுருட்டு ஆகியவற்றை விற்கும் கடையை ஆரம்பித்தார். இந்த வியாபாரம் நாளடைவில் வளர்ந்து, அவருக்கு ஓரளவிற்குப் பொருளாதார வலிமையைத் தந்தது. இந்தக் காலகட்டத்தில் அவர் திருமணம் செய்து கொண்டார். ஒரு மகனும் மூன்று மகள்களும் பிறந்தனர்.

குழந்தைப் பருவம், இளமைப் பருவம், திருமணம், குழந்தைகள் என்று மாருதி வழக்கமான, சாதாரண மனிதன் வாழ்கின்ற, எதுவும் பெரிதாக நிகழாத வாழ்க்கையை, பின்னால் தொடரப் போகின்ற புனிதத்தன்மையைப் பற்றி சிறிதும் அறியாமலே நடு வயது வரை வாழ்ந்தார். அந்தக் கால கட்டத்தில் அவருடைய நண்பர்களில் ஒருவர் யஷ்வந்ராவ் பாஃகர் என்பவர். அவர் இந்து மதப் பிரிவுகளில் ஒன்றான நவநாத் சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு ஆன்மீக குருவான ஸ்ரீ சித்தராமேஷ்வர் மஹராஜ் என்பவரின் பக்தர். ஒரு நாள் மாலை நேரத்தில் அவர் மாருதியைத் தன் குருவிடம் அழைத்துச் சென்றார். அந்த மாலை வேளை, அவருடைய வாழ்க்கையில் திருப்பு முனையாக ஆகிற்று. குரு அவருக்கு ஒரு மந்திரத்தைப் போதித்து, தியானத்திற்கான குறிப்புகளைக் கொடுத்தார். ஆரம்ப காலப் பயிற்சியின்போது அவர் சில காட்சிகளைக் காண ஆரம்பித்தார். எப்போதாவது மெய்மறந்த நிலைக்கும் செல்வார். அவருக்குள்

ஏதோ ஒன்று வெடித்து, ஒரு பேரண்ட விழிப்புணர்வை, ஒரு சாசுவதமான உயிர்வாழும் உணர்வை அவருக்குள் பிறக்கச் செய்தது. சிறு பெட்டிக் கடைக்காரர் என்னும் மாருதியின் அடையாளம் கரைந்து, ஒளிவீசுகின்ற தன்மையுடைய ஸ்ரீ நிசர்கதத்தா வெளிப்பட்டார்.

பெரும்பாலான மக்கள், தன் விழிப்புணர்வு என்னும் உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அதைவிட்டு விலகவேண்டும் என்னும் ஆசையோ, வலிமையோ கிடையாது. அவர்கள் தங்களுக் காகவே இருக்கிறார்கள்; அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் சுய திருப்தியையும், சுய மகிமைப் படுத்துதலையும் நோக்கியே இருக்கின்றன. ஆனாலும் சில மகான்கள், ஆசிரியர்கள், ஞானிகள் வெளிப்படையாக அதே உலகத்தில் வாழ்வதாகத் தோன்றினாலும், அதே சமயம் பேரண்ட விழிப்புணர்வுள்ள, அளவற்ற அறிவை உள்ளடக்கிய உலகத்திலும் வாழ்கிறார்கள். தனக்கு ஒளி பொருந்திய அனுபவம் கிடைத்த பிறகு, ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அப்படிப்பட்ட ஓர் இருமை வாழ்க்கையை வாழ ஆரம்பித்தார். அவர் தன் கடையை நடத்தினார். ஆனால், லாப நோக்குடைய வியாபாரியாக இல்லாமல் போனார். பிறகு, தன் குடும்பத்தையும், வியாபாரத்தையும் விட்டுவிட்டு, 1937ம் ஆண்டு ஒரு ஆண்டியாக, ஒரு யாத்திரைக்காரராக, விரிந்த, பல்வகைப்பட்ட இந்திய மத அரங்கில் மாறினார். தன் மீதிக் காலத்தை, சாசுவதமான வாழ்க் கையை விரும்பிக் கழிக்கும் எண்ணத்துடன் இமய மலையை நோக்கி வெறும் காலுடன் நடக்க ஆரம்பித்தார். ஆனால் சீக்கிரமே அம்மாதிரியான விருப்பத்தின் இயலாமையை உணர்ந்து வீட்டிற்குத் திரும்பினார். சாசுவதமான வாழ்க்கை தேடப்படுவது அல்ல; முன்பே அவரிடம் உள்ளது என்று உணர்ந்து 1938ஆம் ஆண்டு அறிந்தார். 'நான் உடல்' என்னும் கருத்திற்கு அப்பால் சென்று விட்டதால் அவர் ஆனந்தமான, அமைதியான, உன்னதமான, அதனோடு ஒப்பிட்டால் எதுவுமே மதிப்பற்றதாகத் தோன்றும் மனோ நிலையை அடைந்தார். அவர் மெய்ஞானம் அடைந்தார்.

தொடர்ந்து மும்பையில், கேத்வாடி என்னும் இடத்தில் இருந்த அவரது வீட்டில் தன்னைத் தேடி வந்தவர்களை வரவேற்று தினமும்

இருவேளை சொற்பொழிவுகள் செய்து வழி நடத்தினார். 8.9.1981ம் தேதி 84ம் வயதில் சமாதியானார்.

குரு படிக்காதவராக இருந்தாலும், அவருடைய உரையாடல்கள் ஒரு அசாதாரணமான அளவிற்கு ஞானமுள்ளவையாக இருக்கின்றன. ஏழையாகப் பிறந்து வளர்ந்தாலும், அவர் செல்வந்தர்களிலும் செல்வந்தர். ஏனெனில், மிக மிக உன்னதமான செல்வமும் ஒன்றுமில்லாததாகத் தோன்றும்படியான அளவற்ற, வற்றாத அறிவாகிய சொத்து அவரிடம் இருந்தது. அவர் வாஞ்சை உள்ளவராகவும், மென்மையானவராகவும், சிரிப்புணர்வு உள்ள வராகவும், தீர்க்கமாக அச்சமற்றும், உண்மை ஆர்வத்துடனும், தன்னிடம் வரும் அனைவருக்குமே வழிகாட்டுபவராகவும், உதவுபவராகவும் இருந்தார்.

அம்மாதிரியான மனிதரைப் பற்றி ஒரு வாழ்க்கைக் குறிப்பு எழுத முயற்சிப்பது அற்பமானதும், முடியாததும் ஆகும். ஏனெனில், அவர் கடந்தகாலமோ, எதிர்காலமோ இல்லாதவர்; அவர் சாசுவதமான, மாறாத, வாழ்கின்ற நிகழ்காலம். எல்லாமுமான சுயம் அவர்.

* * *

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் ஆசிரமம், 'சித்தாஸ்ரம்', நிசர்க சொசைட்டி, பத்ரேவாடி, பாபு பாக்வே மார்க், தாஹிசர் (மேற்கு), மும்பை -400 068 என்னும் முகவரியில் உள்ளது. (அங்கு செல்லும் வழியை அறிய google mapsல் Shree Nisargadatta samadhi mandir, mumbai' என்று தேடவும்.) அங்கு மஹராஜ் அவர்களின் அஸ்தி வைக்கப்பட்டுள்ளது. ஒரு தியான மண்டபமும் உள்ளது. மஹராஜ் அவர்களின் உரையாடல்கள் உள்ள ஒலி நாடாக்களும், ஒளிப் பதிவுகளும், அவருடைய வழிகாட்டுதல்களைக் கொண்டுள்ள புத்தகங்களும் அங்கு உள்ளன.

தினசரி காலை, மாலை இருவேளைகளிலும் பூஜையும், ஒவ்வொரு வியாழன் மற்றும் சனிக்கிழமை மாலை 6.30 மணி முதல் 9.00 மணி வரை சத்சங்கமும் அங்கு நடைபெறுகின்றன. வருடாவருடம் ஏப்ரல் மாதத்தில் மஹராஜ் அவர்களின் ஜெயந்தி விழாவும், செப்டம்பர் மாதத்தில் புண்ய திதி விழாவும் அங்கு கொண்டாடப்படுகின்றன.

# மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு

''ஒருவர் உணவு, உடை, வீடு, அறிவு, அன்பு ஆகியவற்றைக் கொடுக்கலாம். ஆனால், அதிகபட்சமான பரிசு மெய்யறிதல் என்பதைப்பற்றிய நற்செய்தியே'' - ஆன்மீகம் ஊற்றெடுத்துப் பிரவகிக்கும் பாரதத்தில் அண்மைக் காலத்தில் தோன்றிய ஞானிகளுள் ஒருவரான **ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்** இவ்வாறு தன் குரு சொல்லியதாகக் கூறியுள்ளார்.

அந்த நற்செய்தியைத் தாங்கி இரு பகுதிகளாக வந்துள்ள **'நான் ப்ரம்மம்'** என்னும் இப்புத்தகங்கள் ஆத்ம ஞானம் அடைய முயலும் சாதகர்களுக்கு மிகவும் உதவும் என்பது திண்ணம்.

தமிழ் கூறும் நல்லுலகம் பயனுற இந்த ஆன்மீகப் பணியைச் செய்ய எனக்கு வாய்ப்பளித்து, செய்வித்த **குரு அருளுக்கும், இறை அருளுக்கும்** என் இருத்தலின் ஆழத்திலிருந்து கோடானுகோடி நன்றி.

இந்த மொழிபெயர்ப்பிற்கு அனுமதி அளித்த மும்பை, ஸ்ரீ நிசர்கதத்த ஆத்யாத்ம கேந்ராவின் நிர்வாக அறங்காவலர் திரு **விஜய் சவந்த்** அவர்களுக்கும், இந்தப் புத்தகங்களை மனமுவந்து பதிப்பிக்கும் **கண்ணதாசன் பதிப்பக** உரிமையாளர் திரு.**காந்தி கண்ணதாசன்** அவர்களுக்கும், இப்பகுதியின் தமிழாக்கத்தை மராத்தி மூலத்திலிருந்து சரி பார்த்துத் திருத்த உதவிய நண்பர், ஆடிட்டர் திரு. N.A.**சபாபதி**, கோவை அவர்களுக்கும், இப்புத்தகத்தைக் கருத்தூன்றி வாசித்துச் சில திருத்தங்களைச் செய்து கொடுத்த ஐயா திரு P.S.**கருணாகரன்,** குற்றாலம் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றி. இப்புத்தகத்தை நேர்த்தியாக வடிவமைத்துக் கொடுத்த **சிவா கிராபிக்ஸ்** திரு. **பழ.சொக்கலிங்கம்** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

கோயம்புத்தூர்
டிசம்பர் - 2017

**சி.அர்த்தநாரீஸ்வரன்**
மொழிபெயர்ப்பாளர்
98422 45180

# பொருளடக்கம்

# 1. 'நான்' என்னும் உணர்வு

**கேட்பவர்:** தூக்கத்திலிருந்து விழிக்கும் போது உலகம் திடீரெனத் தோன்றுவது தினசரி நிகழும் அனுபவம். எங்கிருந்து அது வருகிறது?

**மஹராஜ்:** எதுவும் தோன்றுவதற்கு முன்னால் அது யாருக்குத் தோன்றுகிறதோ அவர் இருக்க வேண்டும். எல்லாத் தோற்றங்களும், தோற்ற மறைவுகளும் மாற்றமில்லாத ஒரு பின்புலத்தின் மேல் தோன்றும் ஒரு மாற்றமாக உள்ளன.

**கே:** தூக்கத்திலிருந்து விழிப்பதற்கு முன்னால் நான் உணர்வற்று இருந்தேன்.

**ம:** உணர்வற்று இருப்பது என்றால் என்ன?

**கே:** ஞாபகம் இருக்காது.

**ம:** ஞாபகம் இல்லை என்பது எந்த அர்த்தத்தில்? மறந்ததாகவா அல்லது அனுபவிக்கவில்லை என்பதாகவா? உணர்வற்று இருந்த போதும் நீ அனுபவிக்கவில்லையா? அறிந்துகொள்ளாமல் நீ இருக்க முடியுமா? ஞாபகத்தில் ஏற்படும் ஒரு விடுதல், இல்லாமல் போவதற்கு அத்தாட்சியாகுமா? உன் இருப்பில்லாமையை உண்மையான அனுபவமாக உன்னால் சரியாகச் சொல்ல முடியுமா? உன் மனம் இருக்கவில்லை என்றுகூட உன்னால் சொல்ல முடியாது. கூப்பிட்டவுடன் நீ எழுந்திருக்கவில்லையா? எழுந்தவுடன் 'நான்'என்னும் உணர்வுதானே முதலில் வந்தது? தூக்கத்திலும், மயக்கத்திலும் சில விழிப்புணர்வு (CONSCIOUSNESS) விதைகள் இருக்கவேண்டும். விழித்தவுடன் 'நான் - உடல் - இந்த உலகில் இருக்கிறேன்' என்னும் உணர்வு எழுகிறது. அது ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றுவதாகத் தெரியலாம். ஆனால் நிஜத்தில் அவை எல்லாம் ஒரே சமயத்தில் தோன்றுபவை - ஒரு உலகில் உள்ள ஒரு உடல் என்னும் ஒரு கருத்தாக. யாரோ ஒருவராகவோ,

மற்றவராகவோ இல்லாமல் 'நான்' என்னும் உணர்வு இருக்க முடியுமா?

**கே:** நான் எப்போதும் ஞாபகங்களும், பழக்கங்களும் உள்ள ஒருவனாகவே இருக்கிறேன். எனக்கு வேறு எந்த 'நான்' என்பதும் தெரியாது.

**ம:** நீ அறிந்துகொள்வதை ஏதாவது தடுக்கிறதோ என்னவோ? மற்றவர்களுக்குத் தெரிந்த ஏதாவதுஒன்று உனக்குத்தெரியவில்லை என்றால் நீ என்ன செய்வாய்?

**கே:** அவர்களின் அறிவுரைப்படி அவர்களின் அறிவின் மூலத்தைத் தேடுவேன்.

**ம:** நீ வெறும் உடலா, வேறு ஏதாவது ஒன்றா அல்லது ஒன்றுமே இல்லையா என்று அறிந்துகொள்வது உனக்கு முக்கியமில்லையா? உன் எல்லாப் பிரச்சனைகளும் உன் உடல் சார்ந்த பிரச்சனைகள் என்று நீ அறியவில்லையா? உணவு, உடை, வீடு, குடும்பம், நண்பர்கள், பெயர், புகழ், பாதுகாப்பு, ஜீவித்தல் - ஆகிய எல்லாப் பிரச்சனைகளும் நீ வெறும் உடலல்ல என்று அறிந்தவுடன் பொருளற்றுப் போய்விடும்.

**கே:** நான் உடலல்ல என்று அறிவதால் என்ன பயன்?

**ம:** நீ உடல் அல்ல என்று சொல்வது கூட முழுவதும் உண்மை அல்ல. ஒருவிதத்தில் நீ உடல், இதயம், மனம் மற்றும் அதற்கு மேலே. 'நான்' என்னும் உணர்விற்குள் ஆழமாகச் செல். அப்போது உன்னை நீ அறிவாய். அதனால் அனைத்தையும் அறிவாய். நீ தவற விட்ட அல்லது மறந்த பொருளை எப்படிக் கண்டு பிடிப்பாய்? உன் மனதில் அதைக் கண்டுபிடிக்கும் வரை அதை வைத்திருப்பாய். 'நான்' என்பதுடைய இருத்தல் (BEING) என்னும் உணர்வுதான் முதலில் வரும். அது எங்கிருந்து வருகின்றது என்று உன்னைக் கேட்டுக்கொள். அல்லது அதை அமைதியாகத் தொடர்ந்து கவனி. மனம் 'நான்' என்பதில் அசையாமல் நிற்கும் போது நீ வார்த்தைகளால் விவரிக்க முடியாத, ஆனால் அனுபவிக்க மட்டுமே முடியும் நிலைக்குள் நுழைவாய். நீ செய்யவேண்டியது எல்லாம் திரும்பத் திரும்ப முயற்சிக்க வேண்டியதுதான். சாதாரணமாக

'நான்' என்னும் உணர்வு உன்னுடன் எப்போதும் இருப்பது. நீ தான் உடல், உணர்ச்சிகள், எண்ணங்கள், உடைமைகள் என்னும் பலவற்றை அதனுடன் இணைத்துக் கொண்டாய். இந்த எல்லாச் சுய அடையாளங்களும் தவறுதலானவை. அவற்றால் நீ எதுவாக இல்லையோ அதுவாக உன்னைக் கருதிக் கொள்கிறாய்.

**கே:** அப்படியானால் நான் யார்?

**ம:** நீ என்னவாக இல்லை என்பது தெரிந்தால் போதும். நீ யார் என்று உனக்குத் தெரிய வேண்டியது இல்லை. முன்பே தெரிந்தவை, தொடரக் கூடியவை, உருவகிக்கக் கூடியவைதான் அறிவு என்றால் சுயம் அறிதல் என்று ஒன்று இருக்க முடியாது. நீ யார் என்று விவரிக்க முடியாது, முழுவதும் மறுதளிப்பதைத் தவிர. 'நான் இதுவல்ல, நான்அதுவல்ல' என்று மட்டுமே நீ கூற முடியும். 'இதுதான் நான்' என்று அர்த்தத்தோடு சொல்ல முடியாது. அதில் எந்த அர்த்தமும் இல்லை. நீ குறிப்பிட்டுச் சொல்லும் 'இது' அல்லது'அது' நீயாக இருக்க முடியாது. கண்டிப்பாக நீ வேறு 'ஒன்றாக'வும் இருக்க முடியாது. நீ இன்னதென்று உணரக்கூடிய ஒன்றோ, கற்பனை செய்யக் கூடிய ஒன்றோ அல்ல. இருப்பினும் நீ இல்லாமல் உணர்ந்தறிதலோ, கற்பனையோ இருக்க முடியாது. நீ இதயத்தின் உணர்ச்சிகளையும், மனம் சிந்திப்பதையும், உடல் இயங்குவதையும் கவனிக்கிறாய்; நீ செய்யும் உணர்ந்தறிதல் (PERCEPTION) என்னும் செயலே நீ உணர்ந்தறிவதாக நினைக்கும் பொருள் நீ அல்ல என்று காண்பிக்கிறது. நீ இல்லாமல் உணர்ந்தறிதல், அனுபவம் ஆகியவை இருக்க முடியுமா? ஒரு அனுபவம் ஒருவருடையதாக இருக்க வேண்டும். யாராவது வந்து அதைத் தன்னுடையது என்று சொல்ல வேண்டும். அனுபவிப்பது என்பது இல்லாமல் அனுபவம் என்பது உண்மை அல்ல. அல்லது அந்த அனுபவத்திற்கு மதிப்பு இல்லை. அனுபவிப்பவர்தான் அனுபவத்திற்கு மெய்த் தன்மையைக் கொடுக்கிறார். உன்னால் பெற முடியாத அனுபவத்தால் உனக்கு என்ன பயன்?

**கே:** அனுபவிப்பவர் என்னும் உணர்வு, 'நான்' என்னும் உணர்வு, இவைகள் கூட ஒரு அனுபவம் இல்லையா?

**ம:** அனுபவிக்கப்படும் ஒவ்வொன்றும் ஒரு அனுபவமே. ஒவ்வொரு அனுபவத்திலும் அதை அனுபவிப்பவர் தோன்றுகிறார். தொடர்ச்சி என்னும் மாயத் தோற்றத்தை ஞாபகம் உருவாக்கு கிறது. உண்மையில் ஒவ்வொரு அனுபவமும் அதன் சொந்த அனுபவிப்பவரைக் கொண்டுள்ளது. பரஸ்பர அடையாள உணர்விற்குக் காரணம், எல்லா அனுபவிப்பவர் - அனுபவம் என்னும் தொடர்புகளுக்கும் அடிப்படையான பொதுவான தன்மை. பரஸ்பர அடையாளமும், பிளவுபடாத தன்மையும் ஒன்றல்ல. எவ்வாறு ஒவ்வொரு பூவும் அதன் சொந்த வர்ணத்தைக் கொண்டுள்ளதோ, ஆனால் எல்லா வர்ணங்களும் ஒரே ஒளியினால் தோன்றுகின்றனவோ, அது போல பல அனுபவங்கள் பிரிக்கப் படாத மற்றும் பகுக்க முடியாத பிரக்ஞையில் (AWARENESS) தோன்றுகின்றன -ஒவ்வொன்றும் ஞாபகத்தில் தனியாகவும், சாரத்தில் ஒன்றாகவும். இந்தச் சாரம்தான் எல்லா அனுபவங் களுக்கும் வேர்; அடித்தளம்; காலமற்ற, இடமற்ற சாத்தியக் கூறு.

**கே:** *நான் அதை எப்படி அடைவது?*

**ம:** நீ அதை அடைய வேண்டியது இல்லை. ஏனெனில் நீதான் அது. நீ ஒரு வாய்ப்புக் கொடுத்தால் அது உனக்குள் வெளிப்படும். பொய்மையின் மேல் உள்ள உன் பற்றுதலை விட்டு விடு. அப்போது மெய் லாவகமாகவும், சுலபமாகவும் நுழையும். இது அல்லது அதுவாக நீ இருப்பதாகவோ, செய்வதாகவோ கற்பனை செய்வதை நிறுத்து. அப்போது நீ தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமும் இதயமும் என்று அறிவாய். விருப்பத் தேர்வோ, பாரபட்சமானதோ அல்லாத, பற்றுதல் அற்ற, ஆனால் எல்லாவற்றையும் அன்பு செலுத்தத் தகுதிபடைத்ததாகவும், அன்பு செலுத்தக் கூடியதாகவும் செய்யக் கூடிய ஒரு சக்தியாகிய மாபெரும் அன்பு அதனுடன் வரும்.

# 2. உடலின் மேல் கொண்டுள்ள பற்றுதல்

**கேட்பவர்:** மஹராஜ், என் முன் நீங்கள் உட்கார்ந்து இருக்கிறீர்கள். நான் உங்கள் காலடியில். நமக்குள் உள்ள அடிப்படையான வித்தியாசம் என்ன?

**மஹராஜ்:** அடிப்படையில் வித்தியாசம் எதுவும் இல்லை.

**கே:** இருப்பினும் உண்மையான வித்தியாசம் ஏதாவது இருக்க வேண்டும். நான் உங்களைத் தேடிவந்திருக்கிறேன். நீங்கள் என்னைத் தேடி வரவில்லை.

**ம:** ஏனென்றால் நீ வித்தியாசங்களைக் கற்பனை செய்து கொள்வதால் இங்கும் அங்கும் 'உயர்ந்த'மனிதர்களைத் தேடி அலைகிறாய்.

**கே:** நீங்களும் உயர்ந்த மனிதர்தான். நீங்கள் மெய்யை அறிந்தாகக் கூறுகிறீர்கள். நான் அப்படி இல்லை.

**ம:** உனக்குத் தெரியாது என்றும், அதனால் நீ தாழ்ந்தவன் என்றும் நான் எப்போதாவது சொன்னேனா? இந்த வேறுபாடுகளைக் கண்டுபிடித்தவர்கள் அதை நிரூபிக்கட்டும். உனக்குத் தெரியாதது எனக்குத் தெரியும் என்று நான் சொன்னதில்லை. நிஜமாக, உனக்குத் தெரிந்ததை விட எனக்கு மிகவும் குறைவாகத்தான் தெரியும்.

**கே:** உங்கள் வார்த்தைகள் புத்திசாலித்தனமானவை. உங்கள் நடத்தை உன்னதமானது. உங்கள் அருள் மிகவும் சக்தி வாய்ந்தது.

**ம:** எனக்கு அதைப் பற்றியெல்லாம் எதுவும் தெரியாது. உனக்கும் எனக்கும் எந்த வித்தியாசத்தையும் நான் காண்பதில்லை. உன்னுடையதைப் போலவே என் வாழ்க்கையும் நிகழ்வுகளின் தொடர்ச்சியே. ஒரே வித்தியாசம் நான் பற்றுதல் அற்று, கடந்து

போகும் நிகழ்வைக் கடந்தது போவதாகப் பார்க்கிறேன். நீயோ அவற்றுடன் ஒட்டிக் கொண்டு அவற்றோடு நகர்கிறாய்.

**கே:** எது உங்களை இவ்வளவு பெரு விருப்பமற்றவராகச் செய்கிறது?

**ம:** குறிப்பிட்டாற்போல் எதுவும் இல்லை. நான் என் குருவை நம்பும் படி ஆகிற்று. நான் என்னைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்று அவர் என்னிடம் சொன்னார். நான் அவரை நம்பினேன். அவரை நம்பி அதன்படி நடந்தேன். எது நான் இல்லையோ, எது என்னுடையது இல்லையோ அதை நான் பொருட்படுத்தாமல் விட்டு விட்டேன்.

**கே:** எதனால் நீங்கள் உங்கள் ஆசானை முழுவதும் நம்பும்படி அதிர்ஷ்டமுடையவராகவும், எங்கள் நம்பிக்கை மேலோட்டமானதாகவும், வெறும் வாய் வார்த்தையாகவும் இருக்கிறது?

**ம:** யாரால் சொல்ல முடியும்? அது அப்படி நடந்தது. காரணமும், தூண்டுதலும் இல்லாமல் காரியங்கள் நடக்கின்றன. யார் எவர் என்று என்ன முக்கியம்? என்னைப் பற்றிய உயர்ந்த கருத்து உன்னுடையது மட்டுமே. எந்தக் கணமும் நீ அதை மாற்றிக் கொள்வாய். உன் சொந்தக் கருத்தாக இருந்தாலும் அதற்கு ஏன் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்?

**கே:** இருப்பினும் நீங்கள் வித்தியாசமானவர். உங்கள் மனம் எப்போதும் அமைதியாகவும், சந்தோஷமாகவும் இருப்பதாகப் படுகிறது. உங்களைச் சுற்றி அதிசயங்கள் நடக்கின்றன.

**ம:** எனக்கு அதிசயங்களைப் பற்றித் தெரியாது. நாம் ஒவ்வொன்றும் அதிசயம் என்று ஒப்புக்கொண்டால் தவிர இயற்கை அதன் விதிகளுக்கு விலக்கு அளிக்குமா என்றே ஆச்சரியப் படுகிறேன். என் மனதைப் பொருத்தவரை அப்படி எதுவும் இல்லை. விழிப்புணர்வு இருக்கிறது. அதில் ஒவ்வொன்றும் நிகழ்கின்றன. அது மிகவும் வெளிப்படையாகத் தெரிகிறது. ஒவ்வொருவரின் அனுபவத்திற்குள்ளும் அது உள்ளது. நீ கவனமாகப் பார்ப்பதில்லை. அவ்வளவுதான். கவனமாகப் பார். நான் பார்ப்பதை நீயும் பார்க்கலாம்.

**கே:** *நீங்கள் எதைப் பார்க்கிறீர்கள்?*

**ம:** தவறான கோணத்தில் பார்ப்பதைத் தவிர நீ பார்க்கக் கூடியதைத்தான் நானும் பார்க்கிறேன், இங்கேயே, இப்போதே. உன்மேல் நீ கவனம் செலுத்துவதில்லை. உன் மனம் பொருட்கள் மேலும், மக்கள், கருத்துக்கள் ஆகியவற்றின் மேலும்தான் உள்ளது. உன் மேல் ஒருபோதும் இல்லை. உன்னையே கவனத்திற்குக் கொண்டு வா. உன் இருத்தலைப் பற்றி கவனம் கொள். நீ எவ்வாறு இயங்குகிறாய் என்று பார். உன் செயல்களின் நோக்கங்களையும், பலன்களையும் கவனி. தெரியாத்தனமாக உன்னைச் சுற்றி நீ எழுப்பியுள்ள சிறையை ஆராய்ந்து பார். நீ எது அல்ல என்று தெரிந்து கொள்வதால் உன்னை நீ அறிவாய். உன்னை நீ திரும்ப அடைவது மறுப்பதாலும், நிராகரிப்பதாலும் தான். ஒன்று மட்டும் உறுதி: மெய் என்பது கற்பனையானது அல்ல. அது மனதால் உருவாக்கப்பட்டது அல்ல. 'நான்' என்னும் உணர்வு கூட தொடர்ந்து வருவதல்ல. உபயோகமான குறிப்பாக இருந்தாலும் அது எங்கு தேட வேண்டும் என்று காண்பிக்கிறதே அன்றி எதைத் தேட வேண்டும் என்று காண்பிப்பதில்லை. அதை நன்கு பார். 'நான்' என்பதைத் தவிர உன்னைப் பற்றி உண்மையாக ஒன்றும் சொல்லமுடியாது, எதையும் குறிப்பிட்டுக் காட்ட முடியாது என்று நீ தெரிந்து கொண்டால் - அது உன் சுயமாகக் கூட இருக்கலாம் - 'நான்' என்பதின் தேவை முடிந்துவிடும் - நீ யார் என்று வாய் வார்த்தைகளில் சொல்லும் எண்ணம் போய் விடும். உனக்குத் தேவை எல்லாம் உன்னைப் பற்றி வரையறுக்க முயலும் எண்ணத்தை விடுவது தான். எல்லா வரையறைகளும் உன் உடலுக்கும், அதன் வெளிப்பாடுகளுக்கும்தான் பொருந்தும். உடல் மீது உனக்குள்ள பற்றுதல் நீங்கி விட்டால், நீ உன் இயல்பு நிலைக்கு இயல்பாகவும், முயற்சி இல்லாமலும் திரும்பிவிடுவாய். நமக்குள் உள்ள ஒரே வித்தியாசம் என்னவென்றால் நான் என் இயல்பான நிலையை அறிவேன். நீயோ குழம்பி உள்ளாய். எப்படி ஆபரணமாக்கப் பட்ட தங்கம் எந்தவிதத்திலும் தங்கத் துகளைவிட மனதால் அவ்வாறு கருதப் பட்டால் அல்லாமல் உயர்ந்தது இல்லையோ அது போல் நாம் இருப்பில் ஒன்றே - தோற்றத்தில்

மட்டுமே வேறுபடுகிறோம். அதை முழு முயற்சியுடன் தேடுவதாலும், வினவுவதாலும், தினந்தோறும், மணிக் கணக்கிலும் கேள்வி கேட்பதாலும், இந்தக் கண்டுபிடிப்பிற்கு உயிரையே கொடுப்பதாலும் கண்டு பிடிக்கலாம்.



# 3. நிகழ் காலத்தில் வாழ்தல்

**கேட்பவர்:** என்னுடைய உடலிலும், நிஜமான ஸ்வரூபத்திலும் எந்தத் தவறும் எனக்குத் தெரியவில்லை. இரண்டுமே என்னுடைய தயாரிப்பும் இல்லை. அதை மேம்படுத்தவும் வேண்டியது இல்லை. தவறாகச்சென்றது 'உள் உடம்பு' - மனம், விழிப்புணர்வு, அந்தகர்ணா, இப்படி எந்தப் பெயரில் வேண்டுமானாலும் அதை அழைக்கலாம்.

**மஹராஜ்:** உன் மனதில் என்ன தவறு உள்ளது என்று கருதுகிறாய்?

**கே:** அது அமைதி இல்லாமல் இருக்கிறது. சந்தோஷமாய் இருப்பதில் மிக விருப்பத்துடனும், சந்தோஷமற்று இருப்பதில் பயத்துடனும் இருக்கிறது.

**ம:** சந்தோஷத்தைத் தேடுவதிலும், சந்தோஷமற்று இருப்பதை வெறுப்பதிலும் என்ன தவறு? துக்கம் மற்றும் சுகம் என்னும் கரைகளின் மத்தியில் வாழ்க்கை என்னும் நதி ஓடுகிறது. எப்போது மனம் வாழ்க்கையுடன் இணைந்து ஓட மறுத்து, கரைகளில் சிக்கிக் கொள்கிறதோ அப்போது அது பிரச்சனை ஆகி விடுகிறது. வாழ்க்கையுடன் இணைந்து ஓடுவது என்னவென்றால் வருவது வரட்டும்,போவது போகட்டும் என்று எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வது. ஆசை கொள்ளாதே, பயப்படாதே. எவையெல்லாம் பிரத்தியட்சமாக நடக்கின்றனவோ அவற்றை நிகழும் பொது கவனி. எது நடக்கிறதோ அது நீ அல்ல. அது யாருக்கு நடக்கிறதோ அதுதான் நீ. கடைசியில், கவனிப்பவர் கூட நீ இல்லை. எல்லாவற்றையும் அணைத்துச் செல்லும் விழிப்புணர்வு எதில் தோன்றி வெளிப்படுகிறதோ, அந்த முடிவான ஆற்றல் கூறு நீ.

**கே:** இருப்பினும், உடலுக்கும் அகநிலைக்குமிடையில் நிறைய எண்ணங்களும், உணர்ச்சிகளும் உள்ளன. அவை உடலுக்கோ அகநிலைக்கோ பயன்படுவதில்லை. அவை வலுவற்றவை. கடந்து

செல்பவை. கண நேரத்தியவை, பொருளற்றவை. இருட்டடிக்கவும், மூச்சடைக்கவும் செய்யும் மனத் துகள்கள். ஆனாலும் அவை தெளிவற்றதாக்குபவையாகவும், அழிப்பவையாகவும் அங்கு உள்ளன.

**ம:** கண்டிப்பாக. ஒரு நிகழ்வின் ஞாபகம் அந்த நிகழ்விற்கு மாற்றாக அமைய முடியாது. எதிர்பார்ப்பும்தான். தற்போது உள்ள நிகழ்ச்சி முந்தியதை விடவும், வரப்போவதை விடவும் ஏதோ ஒரு வகையில் விதிவிலக்கானது, தனித்துவமானது. அதில் ஒரு உயிர்வாழும் தன்மை, ஒரு உண்மை நிலை இருக்கிறது. அது ஒளிர்வது போல் தனித்து நிற்கிறது. அதில் கடந்த மற்றும் எதிர்கால நிகழ்வுகளில் இல்லாத 'மெய்த்தன்மையின் முத்திரை' இருக்கிறது.

**கே:** எது நிகழ்கால நிகழ்விற்கு 'மெய்த்தன்மையின் முத்திரையை'க் கொடுக்கிறது?

**ம:** புதுமையாக எதுவும் கடந்ததையும், வரப்போவதையும் விட நிகழ்கால நிகழ்வில் கிடையாது. ஒரு கணத்திற்குக் கடந்தது நிஜம். வரப்போவதும் அவ்வாறே ஆகும். எது தற்பொழுதை வித்தியாசப்படுத்துகிறது? என் இருப்புதான். நான் மெய்யாகவே தற்பொழுதில் எப்போதும் இருக்கிறேன் - நிகழ் காலத்தில். மேலும் என்னுடன் இப்பொழுதில் இருப்பது என் உண்மை நிலையைப் பகிர்ந்து கொள்கிறது. கடந்தவை ஞாபகத்திலும், வருபவை கற்பனையிலும் உள்ளன. நிகழ்காலத்தில் நடப்பதில் உள்ள எதுவும் அதை மெய்யானது என்று தனித்துக் காண்பிப்பது இல்லை. கடிகார மணி அடிப்பது போல அது ஒரு எளிய காலமுறைப்படி நடப்பதாக இருக்கலாம். நாம் நினைத்ததைப் போலவும், எதிர்பார்த்ததைப் போலவும் தற்போதைய ஒலிப்பு முந்தையதை விடவும், அடுத்ததை விடவும் வித்தியாசமாகத் தெரியும் - அடுத்தடுத்து ஒலிப்பவை ஒரே மாதிரியானவை என்று அறிந்திருந்தாலும். தற்பொழுதில் கவனத்தைக் குவிக்கும் ஒன்று என்னுடன் உள்ளது - ஏனெனில் நான் எப்போதும் உள்ளேன். என் சுயத்தின் மெய்த் தன்மையை நிகழ்கால நிகழ்விற்குக் கொடுக்கிறேன்.

**கே:** ஆனால் ஞாபகத்தில் உள்ளவற்றை மெய்யாக இருப்பவை என்று கையாள்கிறோம்.

**ம:** நினைவில் உள்ளவற்றை அவை நிகழ்காலத்திற்கு வரும் போது தான் கவனிக்கின்றோம். மறந்து போன ஒன்று ஞாபகப் படுத்தப் படும்வரை கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. அதைத் தற்பொழுதிற்குக் கொண்டு வருவதை ஞாபகத்தில் உள்ளதை நினைவிற்குக் கொண்டுவருவது என்பது உணர்த்துகிறது.

**கே:** ஆமாம்; ஏதோ ஒரு தெரியாத காரணியைத் தற்பொழுதில் நான் பார்க்கிறேன். கடந்து போகிற ஒன்றிற்கு அது கணநேர உண்மைத் தன்மையைக் கொடுக்கிறது.

**ம:** அதை நீ தெரியாதது என்று சொல்லவேண்டாம். அது எப்போதும் செயல்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். நீ பிறந்ததிலிருந்து எப்போதாவது மாற்றமடைந்துள்ளதா? பொருட்களும், எண்ணங்களும் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கின்றன. இப்பொழுதில் உள்ளது உண்மை என்னும் உணர்வு எப்போதும் மாறாது, கனவில் கூட.

**கே:** ஆழ்ந்த தூக்கத்தில் தற்பொழுதின் மெய்த்தன்மை அனுபவம் இல்லை.

**ம:** ஆழ்ந்த தூக்கத்தின் வெறுமைத்தன்மை, குறிப்பிட்ட ஞாபகங்கள் இல்லாததால் ஏற்படுகிறது. ஆனால் நலமுடன் இருப்பதான ஒரு பொதுவான ஞாபகம் அங்கு உள்ளது. 'நான் ஆழ்ந்து தூங்கினேன்' என்னும் உணர்விற்கும், 'நான் இல்லை' என்னும் உணர்விற்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. தூங்கும்போது உடல், மனதின் உணர்வு நிலைக்கும் கீழான ஒரு நிலையில் இயங்குகிறது. அந்த நிலையை உயிர் அல்லது சுயம் அல்லது உள் இருத்தல் என்று எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம்.

**கே:** நாம் ஆரம்பித்த கேள்விக்கே திரும்ப வருவோம்: உயிரின் ஆதாரத்திற்கும், உயிரின் வெளிப்பாடான உடம்பிற்கும் இடையில் மனமும், அதன் எப்போதும் மாறுகின்ற நிலைகளும் உள்ளன.

**ம:** மனதில் என்ன தவறு உள்ளது?

**கே:** மன நிலைகளின் ஓட்டம் முடிவற்றது, அர்த்தமற்றது, வலிமிகுந்தது. வலி ஒரு நிலையான காரணி. இரு வலி மிகுந்த நிலைகளுக்குமிடையில் ஒரு இடைவெளியையே நாம் இன்பம்

என்று சொல்வது. ஆசையும் பயமும் உயிர் வாழ்தலின் பாவும் ஊடையும் ஆகும். இரண்டுமே வலியால் ஆனவை. எங்கள் கேள்வி: ஒரு சந்தோஷமான மனம் இருக்க முடியுமா?

**ம:** ஆசை சந்தோஷத்தின் ஞாபகம், பயம் துக்கத்தின் ஞாபகம். இரண்டுமே மனதை அமைதியற்று இருக்கச் செய்கின்றன. தற்போதுள்ள சந்தோஷமான கணங்கள் துக்க ஓட்டத்தில் வெறும் இடைவெளிகளே. மனம் எப்படி மகிழ்ச்சியாக இருக்கமுடியும்?

**கே:** நாம் சந்தோஷத்திற்கு ஆசைப் பட்டாலோ, துக்கத்தை எதிர்பார்த்தாலோ அது உண்மை. ஆனால் எதிர்பார்க்காத, முன்பே காத்திருக்காத மகிழ்ச்சியான தருணங்கள் உள்ளன. தூய மகிழ்ச்சி, ஆசையினால் களங்கப்படாதது, வேண்டப்படாதது, பெறத் தகுதி இல்லாமலே பெற்றது, கடவுளால் கொடுக்கப்பட்டது.

**ம:** இருப்பினும், துக்கம் என்னும் பின்புலத்தைக் கொண்டிருந்தால்தான் மகிழ்ச்சி என்பது மகிழ்ச்சி.

**கே:** துக்கம் என்பது பேரண்ட உண்மையா அல்லது முழுவதும் மனம் சார்ந்ததா?

**ம:** இந்தப் பிரபஞ்சம் முழுமையானது. எங்கு முழுமை உள்ளதோ, எங்கு எதுவும் குறைவில்லையோ அங்கு எது துக்கத்தைக் கொடுக்க முடியும்?

**கே:** இந்தப் பிரபஞ்சம் மொத்தமாகப் பார்க்கும் போது பூரணமாக இருக்கலாம், ஆனால் விளக்கமாகப் பார்க்கும் போது முழுமையற்றது.

**ம:** மொத்தத்தின் ஒரு பகுதி, மொத்தத்தோடு தொடர்பு படுத்திப் பார்க்கும்போது பூரணமானது. அது தனித்துப் பார்க்கப்படும் போதுதான் குறைவுடையதாகிறது, அதனால் துக்கத்திற்குக் காரணமாகிறது. எது தனித்துப் பார்க்க வைக்கிறது?

**கே:** மனதின் எல்லைகளே, கட்டாயமாக. மனம் பகுதியைத் தவிர முழுமையைப் பார்க்க முடியாது.

**ம:** நன்று; மனம் அதன் இயல்பால் பகுத்துப் பார்க்கிறது, எதிர்க்கிறது. இணைக்கின்ற, ஒத்துப்போகச் செய்கின்ற, பகுதியில்

முழுமையைப் பார்க்கின்ற, பகுதியை முழுமையுடன் பொருத்திப் பார்க்கின்ற வேறு ஏதாவது மனம் உண்டா?

**கே:** வேறு மனமா? அதை எங்கு தேடுவது?

**ம:** வரையறுக்கின்ற, பிரிக்கின்ற, எதிர்க்கின்ற மனதைத் தாண்டிச் சென்று, நமக்குத் தெரிந்த மன இயக்கத்தை முடித்து. இது எப்போது முடிகிறதோ, அப்போது அந்த மனம் பிறக்கிறது.

**கே:** அந்த மனதில் சந்தோஷத்தினாலும், துக்கத்தினாலும் ஏற்படும் பிரச்சனைகள் இருக்காதா?

**ம:** விரும்பக் கூடியதாகவும், வெறுக்கக் கூடியதாகவும் நமக்குத் தெரிந்தவாறு அல்ல. அது அன்பு வெளிப்பட வேண்டுவதாகவும், அப்போது தடைகளைச் சந்திப்பதாகவும் இருக்கும். அரவணைக்கும் மனம் என்பது செயல்படும் அன்பு, சூழ்நிலைகளுக்கு எதிராகப் போராடுவது, ஆரம்பத்தில் விரக்தியடைந்தாலும் முடிவில் வெற்றி பெறும்.

**கே:** ஆன்மாவிற்கும் உடலுக்கும் அன்புதான் பாலமா?

**ம:** வேறென்ன? மனம் பாதாளத்தை உருவாக்குகிறது. இதயம் அதைக் கடக்கிறது.



# 4. உண்மையான உலகம் மனதிற்கு அப்பால் உள்ளது

**கேட்பவர்:** பல தருணங்களில், 'இந்தப் பிரபஞ்சம் காரண காரிய விதிகளுக்குட்பட்டதா அல்லது இருப்பதும், இயங்குவதும் விதிகளுக்கு அப்பாற்பட்டவையா?' என்ற கேள்வி எழுப்பப் படுகிறது. நீங்கள், அது காரணமற்றது; எந்த ஒன்றும், எவ்வளவு சிறியதாயினும் காரணமற்றது; எந்தவிதக் காரணமும் இன்றித் தோன்றி மறைகின்றது என்னும் கருத்தைக் கொண்டுள்ளதுபோல் தெரிகிறது.

**மஹராஜ்:** காரண காரியத் தன்மை என்பது காலத்தில், இடத்தில் அடுத்தடுத்துத் தொடரும் நிகழ்வுகளாகும். இதில் இடம் என்பது ஸ்தூலம் அல்லது மனம் சார்ந்தது. காலம், இடம், காரணம் என்பவை மனப் பாகுபாடுகள். அவை மனதுடன் தோன்றி மனதுடன் மறைகின்றன.

**கே:** மனம் இயங்கும் வரை காரண காரியத் தன்மை ஒரு செல்லுபடியாகக் கூடிய விதி.

**ம:** எல்லா மனம் சார்ந்தவைகளைப் போல காரண காரிய விதி என்று சொல்லப்படுகின்றதும் அதனுடனே முரண்படுகிறது. இருக்கின்ற எதற்கும் குறிப்பிட்ட காரணம் கிடையாது. மிகச் சிறிய ஒன்றின் இருப்பிற்கும் இந்த முழுப் பிரபஞ்சமும் பங்களிக்கிறது. இந்தப் பிரபஞ்சம் எப்படி இருக்கிறதோ அப்படி இல்லாமல் இருந்தால் எதுவுமே உள்ளவாறு இருக்காது. எப்போதும் ஒவ்வொன்றின் மூல ஆதாரமும், அடிப்படையும் ஒரே காரணமாக ஒவ்வொன்றிற்கும் இருப்பதால் காரண காரியத் தன்மையைப் பிரபஞ்ச விதியாகச் சொல்வது தவறு. பிரபஞ்சம் அதன் உள்ளடக்கத்தில் உள்ளவைகளால் கட்டுப்பட்டதல்ல. ஏனெனில்

அதன் சாத்தியக்கூறுகள் முடிவற்றவை. தவிர, அது ஒரு அடிப்படையான மற்றும் முழுவதும் சுதந்திரமான கோட்பாட்டின் வெளிப்பாடு அல்லது தெரிவித்தல் ஆகும்.

**கே:** ஆமாம், ஒன்றுதான் மற்றொன்றிற்கு ஒரே காரணம் என்று சொல்வது முழுவதும் தவறு. இருப்பினும் நடைமுறை வாழ்க்கையில் ஒரு விளைவை எதிர்பார்த்தே செயல்களைச் செய்கிறோம்.

**ம:** ஆமாம், அறியாமையின் காரணமாக அவ்வகையான பல செயல்கள் நடக்கின்றன. முழுப்பிரபஞ்சமுமே நிகழச் செய்யா விட்டால் எதுவுமே நடக்காது என்று மக்களுக்குத் தெரிந்தால் குறைந்த சக்தியைச் செலவிட்டு அதிகப்படியானவற்றை அடையலாம்.

**கே:** ஒவ்வொன்றுமே ஒட்டு மொத்தமான காரணங்களின் வெளிப்பாடு என்றால் ஒன்றை அடையும் குறிக்கோளுடன் செயல்படுவது எப்படி?

**ம:** சாதிக்க வேண்டும் என்னும் வேட்கையே மொத்தப் பிரபஞ்சத்தின் வெளிப்பாடு ஆகும். அது சக்தியின் சாத்தியக்கூறு ஒரு குறிப்பிட்ட அளவீட்டிற்கு உயர்ந்துள்ளதைக் காட்டுகிறது. காலத்தைப் பற்றிய தவறான கருத்தே உன்னை காரண காரியத் தன்மையைப் பற்றிப் பேச வைக்கிறது. ஒரு பொதுவான வடிவமைப்பின் பகுதிகளாகக் கடந்ததையும், வரப்போவதையும் காலமற்ற இப்பொழுதில் பார்த்தால் காரண காரிய-விளைவுக் கருத்து செல்லுபடியாகாது. அதன் இடத்தைப் படைப்புச் சுதந்திரம் எடுத்துக்கொள்ளும்.

**கே:** இருந்தாலும், காரணமில்லாமல் எப்படி ஒன்று உருவாகி இருக்க முடியும் என்று என்னால் பார்க்க முடியவில்லை.

**ம:** நான் காரணமில்லாமல் இருக்கிறது என்று சொன்னால் அது ஒரு குறிப்பிட்ட காரணம் இல்லாமல் இருக்கிறது என்னும் அர்த்தத்தில் சொன்னேன். நீ பிறக்க உன் சொந்த அம்மா தேவை இல்லை; நீ வேறு யாருக்காவது மகனாகப் பிறந்திருக்கலாம். ஆனால் சூரியனும் பூமியும் இல்லாமல் நீ பிறந்திருக்க முடியாது.

இவைகூட நீ பிறக்கக் காரணமல்ல - பிறக்க வேண்டும் என்னும் உன்சொந்த ஆசைதான் முக்கியக் காரணம். ஆசைதான் பிறக்க வைக்கிறது, அதுதான் பெயரையும் உருவத்தையும் கொடுக்கிறது. ஆசைப்படக் கூடியது கற்பனை செய்யப்பட்டு வேண்டப்படுகிறது. அப்போது அது தொடக்கூடியதாகவோ, அனுமானிக்கக் கூடிய தாகவோ பரிணமிக்கிறது. இப்படி நாம் வசிக்கும் உலகம் - தனிப்பட்ட உலகம் உருவாக்கப்பட்டுள்ளது. உண்மையான உலகம் மனதின் அறிவுபூர்வமான எல்லைக்கு அப்பாற்பட்டது; நாம் அதை நம் ஆசை என்னும் வலையின் ஊடாக, இன்பம் மற்றும் துன்பம், சரி மற்றும் தவறு, உள்ளே மற்றும் வெளியே என்று பிரித்துப் பார்க்கிறோம். பிரபஞ்சத்தை உள்ளவாறே பார்க்க அந்த வலையைத் தாண்டி நீ வர வேண்டும். அது ஒன்றும் கடினம் அல்ல. ஏனெனில் அந்த வலை முழுவதும் ஓட்டைகள் உள்ளன.

**கே:** ஓட்டைகள் என்று எதைச் சொல்கிறீர்கள்? எவ்வாறு அதைக் கண்டு பிடிப்பது?

**ம:** அந்த வலையையும், அதன் முரண்பாடுகளையும் பார். நீ ஒவ்வொரு நிலையிலும் தேவையானதைச் செய்கிறாய். அதற்கு எதிரானதையும் செய்கிறாய். அமைதி, அன்பு, ஆனந்தம் ஆகியவற்றை வேண்டுகிறாய், ஆனால் வேதனை, வெறுப்பு, சண்டை ஆகியவற்றிற்காகக் கடினமாக உழைக்கிறாய். நீண்ட நாட்கள் வாழ வேண்டுகிறாய். ஆனால் அதிகமாகச் சாப்பிடுகிறாய். நட்பை வேண்டுகிறாய், ஆனால் அதைச் சுய லாபத்திற்காக உபயோகப் படுத்துகிறாய். இந்த மாதிரியான முரண்பாடுகளைப் பார்த்து அவற்றைக் களை - நீ அவற்றைப் பார்ப்பதே அவற்றைப் போகச் செய்து விடும்.

**கே:** நான் முரண்பாடுகளைப் பார்ப்பதே அவற்றைப் போகச் செய்துவிடும் என்றால் நான் பார்ப்பதற்கும் அவை போவதற்கும் காரண காரியத் தொடர்பு இல்லையா?

**ம:** காரண காரியத் தன்மை, ஒரு கோட்பாடாகக்கூட குழப்பத் தன்மைக்குப் பொருந்தாது.

**கே:** எந்த அளவிற்கு வாசனை ஒரு காரணி?

**ம:** அது பலவற்றில் ஒன்று. ஒவ்வொன்றிற்கும் கணக்கற்ற காரணிகள் உள்ளன. ஆனால் இருக்கும் எல்லாவற்றிற்கும் மூல ஆதாரம், முடிவற்ற சாத்தியக் கூறு, உச்சஉயர்வான மெய்மை (SUPREME REALITY) என்பது ஆகும். அந்த ஸ்வரூபம் நீதான். அது ஒவ்வொரு அனுபவத்தின் மேலும் அதன் வலிமையையும், ஒளியையும், அன்பையும் வீசுகிறது. ஆனால் இந்த ஆதாரம் ஒரு காரணமல்ல. எந்தக் காரணமும் ஒரு ஆதாரம் அல்ல. அதனால்தான் ஒவ்வொன்றும் காரணமற்றவை என்று சொல்கிறேன். நீ வேண்டுமானால் ஒன்று எவ்வாறு நிகழ்கிறது என்று ஆராயலாம். ஆனால் உன்னால் ஒன்று ஏன் அவ்வாறு இருக்கிறது என்று கண்டுபிடிக்க முடியாது.



## 5. பிறப்பது கண்டிப்பாக இறக்கும்

**கேட்பவர்:** *சாட்சி உணர்வு நிரந்தரமானதா, இல்லையா?*

**மஹராஜ்:** அது நிரந்தரமானது அல்ல. அறிந்ததுடன் அறிபவர் எழுந்து அடங்குகிறார். அறிபவரும் அறியப்படுவதும் எதில் எழுந்து அடங்குகிறனவோ அது காலத்திற்கு அப்பாற்பட்டது. நிரந்தரம் அல்லது சாசுவதம் என்னும் வார்த்தைகள் அதற்குப் பொருந்துவதில்லை.

**கே:** *தூக்கத்தில் அறியப்படுவதும் அறிபவரும் இல்லை. எது உடலை உணர்ச்சியுள்ளதாகவும், ஏற்றுக் கொள்ளும் தன்மையுடனும் வைத்திருக்கிறது?*

**ம:** அறிபவர் இல்லை என்று நீ உறுதியாகச் சொல்லமுடியாது. பொருட்கள் மற்றும் எண்ணங்களின் அனுபவம் அங்கு இல்லை. அவ்வளவே. ஆனால் அனுபவம் இல்லை என்பதும் ஒரு அனுபவமே. அது ஒரு இருட்டறையில் நுழைந்து 'எனக்கு எதுவும் தெரியவில்லை' என்று சொல்வது போல் இருக்கிறது. பிறவியிலேயே கண் தெரியாதவருக்கு இருட்டு என்பது என்னவென்று தெரியாது. அதுபோலவே, அறிபவர் மட்டுமே தனக்குத் தெரியாது என்று அறிந்தவர். தூக்கம் என்பது ஞாபகத்தில் ஒரு நினைவிழப்பு. உயிர் தொடர்கிறது!

**கே:** *இறப்பு என்பது என்ன?*

**ம:** ஒரு குறிப்பிட்ட உடலின் வாழும் தன்மையில் ஏற்படும் மாற்றம். ஒருங்கிணைப்பு முடிந்து பிரிதல் ஆரம்பமாகிறது.

**கே:** *ஆனால் அறிபவர் என்ன ஆகிறார்? உடல் மறைவதால் அறிபவரும் மறைகிறாரா?*

**ம:** எப்படி உடலை அறிபவர் பிறக்கும் போது தோன்றுகிறாரோ அப்படி இறக்கும் போது மறைகிறார்.

**கே:** எதுவும் மிஞ்சுவதில்லையா?

**ம:** உயிர் மிஞ்சுகிறது. விழிப்புணர்விற்கு அது வெளிப்பட ஒரு வாகனமும் கருவியும் தேவை. உயிர் மற்றோரு உடலை உருவாக்கும் போது மற்றொரு அறிபவர் உருவாகிறார்.

**கே:** அடுத்தடுத்த உடல்-அறிபவர்களுக்கும் அல்லது உடல்-மனங்களுக்கும் ஏதாவது ஒரு காரணத் தொடர்பு இருக்கிறதா?

**ம:** ஆமாம், ஞாபக உடல் அல்லது காரண உடல் என்று சொல்லக் கூடிய ஒன்று உள்ளது. அது எல்லா எண்ணங்கள், ஆசைகள், நிகழ்ந்தவைகள் ஆகியவற்றின் பதிவு ஆகும். அது ஒரு தனித்த இருப்பின் விழிப்புணர்வில் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ள பிம்பங்களின் கூட்டம் போன்றது.

**கே:** ஒரு தனித்த இருப்பு என்னும் இந்த உணர்வு என்ன?

**ம:** அது ஒரே மெய்மையின் ஒரு தனித்த உடலின் மேல் தோன்றும் பிரதிபலிப்பு ஆகும். அந்தப் பிரதிபலிப்பில் வரையறை அற்றதும், வரையறுக்கப் பட்டதும் குழப்பிக் கொள்ளப்பட்டு ஒன்றென எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இந்தக் குழப்பத்தைத் தெளிவிப்பதே யோகா ஆகும்.

**கே:** இறப்பு இந்தக் குழப்பத்தைத் தெளிவிப்பது இல்லையா?

**ம:** இறக்கும் போது உடல் மட்டுமே இறக்கிறது. உயிர் அல்ல, விழிப்புணர்வு அல்ல, இருக்கும் ஒன்றின் இருத்தல் அல்ல. இறப்பிற்குப் பின் இருப்பது போல உடல் ஒருபோதும் உயிர்த்தன்மையுடன் இருக்காது.

**கே:** ஆனால் ஒருவர் மறுபடியும் பிறக்கிறாரா?

**ம:** பிறந்தது எதுவும் கண்டிப்பாக இறக்கும். பிறக்காதது மட்டும் தான் இறப்பில்லாதது. எது தூங்குவது இல்லை, எது விழிப்பது இல்லை, எதனுடைய மங்கிய பிரதிபலிப்பு நம்முடைய 'நான்' என்னும் உணர்வு என்று கண்டுபிடி.

**கே:** நான் எப்படி இதைக் கண்டுபிடிப்பது?

**ம:** எப்படி ஒன்றைக் கண்டுபிடிக்கிறாய்? உன் மனதையும், இதயத்தையும் அதன் மீது வைத்து. ஆர்வமும், தொய்வில்லாத ஞாபகமும் இருக்க வேண்டும். எதை ஞாபகம் வைத்திருக்க வேண்டுமோ அதை ஞாபகம் வைத்திருப்பது வெற்றியின் இரகசியம். மனமார்ந்த ஈடுபாட்டால் அதை அடைவாய்.

**கே:** கண்டுபிடிக்க வேண்டும் என்று வேண்டுவதே போதும் என்கிறீர்களா? கண்டிப்பாகத் தகுதியும், சந்தர்ப்பங்களும் வேண்டும்.

**ம:** மனமார்ந்த ஈடுபாட்டால் இவை வந்துவிடும். மிக முக்கியமானது என்னவென்றால் முரண்பாடுகள் இல்லாமல் இருப்பது. குறிக்கோளும் அதற்குண்டான வழியும் வெவ்வேறு நிலைகளில் இருக்கக் கூடாது; உயிரும் ஒளியும் சண்டையிடக் கூடாது; நடத்தை நம்பிக்கையை ஏமாற்றக் கூடாது. வென்ற நிலத்தை விட்டு விட்டுத் திரும்பக் கூடாது. திருப்பவோ, பிடுங்கி எறியவோ, ஒதுக்கவோ கூடாது. அதை நேர்மை, ஒழுக்கம், முழுமைத்தன்மை என்று சொல். நோக்கத்தின் மேல் கொண்டுள்ள வைராக்கியம் மற்றும் தேடுதலில் உள்ள நேர்மை உன்னை உன் குறிக்கோளை அடையச் செய்யும்.

**கே:** கண்டிப்பாக வைராக்கியமும், நேர்மையும் வரப் பிரசாதங்கள். என்னிடம் அவை சிறிது கூட இல்லை.

**ம:** நீ தொடரும் போது அவை எல்லாம் வரும். முதல் அடியை முதலில் வை. எல்லா ஆசீர்வாதங்களும் உள்ளிருந்து வரும். உட்பக்கமாகத் திரும்பு. 'நான்' என்பதை அறிவாய். உன்னால் ஒதுக்க முடியும் நேரமெல்லாம், தன்னிச்சையாக அதற்குத் திரும்பும் வரை அதனுடன் இரு. இதைவிட எளிய மற்றும் சுலபமான வழி வேறு எதுவும் கிடையாது.

# 6. தியானம்

**கேட்பவர்:** எல்லா ஆசிரியர்களும் தியானம் செய்யச் சொல்கிறார்கள். தியானத்தின் நோக்கம் என்ன?

**மஹராஜ்:** நமக்கு புலன் உணர்வுகளாலும் செயல்களாலும் ஆகிய புற உலகத்தைப் பற்றி தெரியும். ஆனால் எண்ணங்களாலும் உணர்ச்சிகளாலும் ஆகிய அக உலகத்தைப் பற்றிச் சிறிதளவே தெரியும். தியானத்தின் அடிப்படை நோக்கம் அக வாழ்க்கையைப் பற்றிய விழிப்புணர்வைப் பெறுவதும், பரிட்சயப்படுத்திக் கொள்வதும் ஆகும். அதன் முடிவான நோக்கம் உயிர் மற்றும் விழிப்புணர்வின் ஆதாரத்தை அடைவது. கூடவே, தியானப் பயிற்சி நம் குணாதிசயத்தை ஆழமாகப் பாதிக்கிறது. நாம் அறியாதவற்றிற்கு அடிமைகள்; நாம் அறிந்தவற்றிற்கு எஜமானர்கள். நமக்குள் உள்ள தீய பழக்கங்களையும், பலவீனங்களையும் நாம் கண்டுபிடித்து, அதன் காரணங்களையும், செயல்பாடுகளையும் புரிந்து கொள்கிறோம். அவற்றைத் தெரிந்து கொள்வதாலேயே அவற்றை வெற்றிகொள்வோம். விழிப்புணர்வற்றதை விழிப்புணர்விற்குக் கொண்டு வந்தால் கரைந்துவிடும். விழிப்புணர்வற்றது கரையும் போது சக்தி வெளிப்படுகிறது. மனம் நிறைவாக உணர்கிறது; சாந்தம் அடைகிறது.

**கே:** சாந்தமான மனதால் என்ன பயன்?

**ம:** மனம் அமைதியாக இருக்கும்போது நம்மைத் தூய சாட்சியாக அறிகிறோம். அனுபவம் மற்றும் அனுபவிப்பவர் என்பதிலிருந்து விலகி, தூய பிரக்ஞையில் தனித்து நிற்கிறோம். 'நான் இது, நான் அது' என்று கற்பனையாகத் தன்னை நினைத்துக் கொண்டு சுய-அடையாளத்தால் உருவான தனிமனிதத் தன்மை தொடரும். ஆனால் அது பொருட்தன்மையிலான உலகத்தின் பகுதியாக

இருக்கும். அப்போது அதன் சாட்சித் தன்மையினுடனான ஒருமைத் தன்மை போய்விடும்.

**கே:** எனக்குத் தெரிந்தவாறு நான் பல நிலைகளில் வாழ்கிறேன். ஒவ்வொரு நிலையில் வாழவும் சக்தி தேவைப்படுகிறது. நபர்த்தன்மை அதன் இயல்பினால் ஒவ்வொன்றிலும் மகிழ்ச்சியுறு கின்றது. அதனால் அதனுடைய சக்தி வெளியேறுகிறது. சக்திகளை உயர்ந்த நிலையில் தேக்குவது அல்லது அவற்றைப் வெளியேறாமல் உள்ளேயும், மேலேயும் தள்ளுவது, அதனால் உயர்நிலைகள் மேம்படுவது என்பது தியானத்தின் நோக்கம் இல்லையா?

**ம:** குணங்களைப் போல நிலைகள் அந்த அளவிற்கு முக்கியமல்ல. தியானம் ஒரு சாத்வீகமான செயல். தாமச மற்றும் ராஜச குணங்களை முழுவதும் நீக்குவதே அதன் குறிக்கோள். தூய சாத்வீகம் என்பது சோம்பேறித்தனத்திலிருந்தும், அமைதியற்ற நிலையிலிருந்தும் பூரணமான சுதந்திரம் அடைவதாகும்.

**கே:** சாத்வீகத்தை எப்படி வலிமை மற்றும் தூய்மைப் படுத்துவது?

**ம:** சாத்வீகம் எப்போதும் தூயது மற்றும் உறுதியானது. அது சூரியனைப் போன்றது. பார்ப்பவரின் கோணத்தில் அது மேகத்தாலும் தூசிகளாலும் மூடப்பட்டிருப்பதாகத் தோன்றும். மறைப்பதற்கான காரணத்தைக் களை; சூரியனை விட்டு விடு.

**கே:** சாத்வீகத்தின் பயன் என்ன?

**ம:** சத்தியம், நல்லவை, ஒத்திசைவு, அழகு ஆகியவற்றால் என்ன பயன்? அவற்றின் குறிக்கோள் அவையே. முழுப் பிரக்ஞையில் அனுபவப்படும்போது அவற்றை அவையாகவே விட்டு விட்டால், குறுக்கிடாமல் இருந்தால், ஒதுக்கப்படாமலும், வேண்டப் படாமலும், உருவகப்படுத்தப்படாமலும் இருந்தால், அவை தன்னிச்சையாகவும், சிரமமில்லாமலும் பரிணமிக்கின்றன. அந்தப் பிரக்ஞையே சாத்வீகம். அது பொருட்களையும் மனிதர்களையும் உபயோகப்படுத்துவதில்லை - அவற்றை நிறைவு செய்கிறது.

**கே:** என்னால் சாத்வீகத்தை மேம்படுத்த முடியாததால் தாமச மற்றும் ர்ாஜச குணங்களை மட்டும் கையாள்வதா? அவற்றை எப்படிக் கையாள்வது?

ம: உன் உள்ளும், உன் மேலும் அவற்றின் தாக்கத்தைக் கவனிப்பதால். அவை இயங்குவதைக் கவனி. உன் எண்ணங்கள், சொற்கள், செயல்கள் மீது அவற்றின் வெளிப்பாட்டைக் கவனி. படிப்படியாக உன்மீது அவற்றின் பிடி குறையும். அப்போது சாத்வீகத்தின் தெளிந்த ஒளி வெளிப்படும். அது ஒன்றும் கடினமோ நீண்ட செய்முறையோ அல்ல. வெற்றிக்கு மனமார்ந்த ஈடுபாடு ஒன்றுதான் தேவை.



# 7. மனம்

**கேட்பவர்:** மிகவும் தகுதி வாய்ந்தவர்களால் சுவாரசியமாக எழுதப் பட்ட புத்தகங்களில் உலகத்தின் மாயத்தன்மை மறுக்கப் பட்டுள்ளது. (அதன் கடந்துபோகும் தன்மை பற்றி இல்லா விட்டாலும்). அவர்களின் கூற்றுப் படி, கீழ் நிலையிலிருந்து மேல் நிலை வரை இருப்பவைகளில் ஒரு மரபு உள்ளது. வெளிப் படையான அல்லது அறியக் கூடிய உச்ச நிலை இல்லாமல், ஒவ்வொரு நிலையிலும் உயிரினத்தின் சிக்கலான தன்மை, விழிப்புணர்வின் ஆழம், விசாலம் மற்றும் தீவிரத்தைச் சாத்தியப் படவும், வெளிப்படுத்தவும் செய்கின்றது. விழிப்புணர்வின் வளர்ச்சிக்காகவும், வளமூட்டுவதற்காகவும் வடிவங்களின் பரிணாமம் மற்றும் அதன் அளவற்ற சாத்தியக் கூறுகளை வெளிப் படுத்துதல் என்னும் ஒரு மிக உயர்ந்த சட்டம் எல்லாவற்றிலும் ஊடாக ஆளுகை செய்கிறது.

**மஹராஜ்:** அது அவ்வாறோ, அவ்வாறில்லாமலோ இருக்கலாம். அவ்வாறு இருந்தாலும், அது மனதின் பார்வையில் மட்டுமே. ஆனால் நிஜத்தில் முழுப் பிரபஞ்சமும் (மகாதகாஷ்) விழிப்புணர்வில் (சித்தகாஷில்) மட்டுமே உள்ளது. நானோ என் நிலையை பூரணத்தில் (பரமகாஷ்) இருத்தியுள்ளேன். தூய இருத்தலில் விழிப்புணர்வு உருவாகிறது. விழிப்புணர்வில் உலகம் தோன்றி மறைகிறது. இங்கு உள்ளவை அனைத்தும் நானே, இருக்கும் அனைத்தும் என்னுடையவையே. எல்லா ஆரம்பங் களுக்கும் முன்பும், எல்லா முடிவுகளுக்குப் பின்பும் நான் இருக்கிறேன். எல்லாமும் என்னுள், 'நான்'என்பதில் இருக்கின்றன. அது ஒவ்வொரு உயிர் வாழும் ஜந்துவிலும் பிரகாசிக்கிறது. நானில்லாமல் இருப்பில்லாமையைக்கூட நினைத்துப் பார்க்க முடியாது. எது நடந்தாலும் அதைப் பார்க்க நான் அங்கு இருக்க வேண்டும்.

**கே:** *நீங்கள் எதற்காக இந்த உலகம் இருப்பதை மறுக்க வேண்டும்?*

**ம:** நான் உலகத்தை மறுக்கவில்லை. நான் அதை விழிப்புணர்வில் தோன்றுவதாகப் பார்க்கிறேன். அது அறியாததின் அளவற்ற தன்மையில் உள்ள அறிந்ததின் மொத்தம் ஆகும். தோன்றுவதும் முடிவதும் வெறும் தோற்றங்களே. உலகம் காணப் படுவதாகச் சொல்லலாம். ஆனால் இருப்பதாகச் சொல்ல முடியாது. தோற்றங்கள் ஒரு கால அளவில் நீண்டதாகவும், இன்னொன்றில் குறுகியதாகவும் இருக்கலாம். ஆனால் முடிவில் ஒன்றே. காலத்திற்குட்பட்ட எதுவும் கணநேரத்தன்மையுடையது. அதில் மெய்த்தன்மை இல்லை.

**கே:** உங்களைச் சுற்றியுள்ள மெய்யான உலகத்தை நிச்சயமாக நீங்கள் பார்க்கிறீர்கள். நீங்கள் மிக இயல்பாக நடந்துகொள்வது போல் தெரிகிறது.

**ம:** உனக்கு அப்படித் தோன்றுகிறது. உன் விழிப்புணர்வுப் புலம் முழுவதும் ஆக்கிரமித்துள்ளது எனக்கு ஒரு துகள் போன்றது. உலகம் இருக்கின்றது, ஆனால் ஒரு கணம் மட்டுமே. உன் ஞாபகம்தான் இந்த உலகம் தொடர்வதாக உன்னை நினைக்க வைக்கிறது. நான் ஞாபகத்தால் வாழ்வதில்லை. விழிப்புணர்வில் ஒரு கணநேரத் தோற்றமாக, உலகத்தை அது உள்ளவாறு நான் பார்க்கிறேன்.

**கே:** உங்கள் விழிப்புணர்விலா?

**ம:** 'எனக்கு' மற்றும் 'என்னுடையது' என்னும் கருத்துக்கள், மற்றும் 'நான்' என்பது கூட விழிப்புணர்வில் இருக்கின்றன.

**கே:** அப்படியானால் உங்கள் 'பூரணமான இருப்பு' (பரமஹாஷ்) விழிப்புணர்வில்லாமையில் இருக்கிறதா?

**ம:** விழிப்புணர்வில்லாமை என்னும் கருத்துகூட விழிப்புணர்வில்தான் உள்ளது.

**கே:** அப்படியானால் நீங்கள் உச்சஉயர்வான நிலையில் இருப்பதாக எப்படிச் சொல்கிறீர்கள்?

**ம:** ஏனெனில் நான் அதில் இருக்கிறேன். அதுதான் இயல்பான ஒரே நிலை.

**கே:** *அதை நீங்கள் விவரிக்க முடியுமா?*

**ம:** காரணமற்றது, சுதந்திரமானது, தொடர்பற்றது, பகுக்க முடியாதது, இயற்றப் படாதது, அசைக்க முடியாதது, எந்தக் கேள்வியும் கேட்க முடியாதது, முயற்சியினால் அடைய முடியாதது என்று மறுப்பதால் மட்டுமே விவரிக்க முடியும். ஒவ்வொரு நேர்மறையான விளக்கமும் ஞாபகத்தில் இருந்து வருகிறது. அதனால் அது பொருந்தாது. இருப்பினும் என் நிலை மிகவும் பிரத்யட்சமானது. அதனால் அது சாத்தியமானது, தெளிவாகப் புரிந்துகொள்ளக் கூடியது, அடையக் கூடியது.

**கே:** *இந்தக் கணத்தில், சூன்யமான மனோ நிலையில் நீங்கள் கால வரையறை இன்றி மூழ்கி இருக்கிறீர்கள், அல்லவா?*

**ம:** சூன்யமான மனோ நிலையும் மனம் சார்ந்தது மற்றும் வாய் மொழித்தனமானது. அது தூங்கும் போதும், மயக்கத்திலும் மறைகிறது. ஒரு காலத்தில் மீண்டும் தோன்றுகிறது. தற்பொழுதில் காலமற்று நான் என் சுய நிலையில் இருக்கிறேன். கடந்ததும் வரப்போவதும் மனதில் மட்டுமே உள்ளன - நான் தற்பொழுதில் இருக்கிறேன்.

**கே:** *உலகமும் கூட தற்பொழுதில் உள்ளது.*

**ம:** எந்த உலகம்?

**கே:** *நம்மைச் சுற்றி உள்ள உலகம்.*

**ம:** அது உன் மனதில் நீ வைத்துக் கொண்டுள்ள உலகம்; என்னுடையது அல்ல. நான் உன்னுடன் பேசுவது கூட உன் உலகத்தில் மட்டும்தான் உள்ளது என்னும் போது என்னைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? என் உலகம் உன்னுடையதைப் போன்றது என்று நீ நம்ப எந்தக் காரணமும் கிடையாது. என் உலகம் மெய்யானது, உண்மையானது, அது உள்ளபடியே பார்க்கப் படுகிறது. ஆனால் உன்னுடையதோ உன் மன நிலையைப் பொறுத்துத் தோன்றி மறைகிறது. உன் உலகம் உனக்கு அந்நிய மானது மற்றும் தவறாக வழி நடத்துவது. ஆகையால் அதன் மேல் உனக்குப் பயம். என் உலகம் நானே. நான் அடைய வேண்டிய இடத்தில் இருக்கிறேன்.

**கே:** நீங்களே உலகம் என்றால் அதைப் பற்றி எப்படி உங்களுக்கு உணர்வு இருக்க முடியும்? விழிப்புணர்வு என்பது அதனால் உணரப்படும் பொருளைவிட வேறுபட்டது அல்லவா?

**ம:** விழிப்புணர்வும் உலகமும் ஒன்றாகத் தோன்றி மறைகின்றன. அதனால் அவை ஒரே நிலையின் இரு பரிமாணங்கள்.

**கே:** தூக்கத்தில் நான் இல்லை; உலகம் தொடர்கிறது.

**ம:** உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** விழிக்கும்போது நான் தெரிந்து கொள்கிறேன். என் ஞாபகம் எனக்குச் சொல்கிறது.

**ம:** ஞாபகம் மனதில் உள்ளது. மனம் தூக்கத்தில் தொடர்கிறது.

**கே:** மனதின் பகுதி இல்லாமல் போகிறது.

**ம:** ஆனால், மனதின் உலகத்தைப் பற்றிய படம் பாதிக்கப் படுவதில்லை. மனம் இருக்கும் வரை உன் உடலும், உன் உலகமும் அங்கு உள்ளன. உன் உலகம் மனதால் ஆனது, அகச்சார்புடையது, மனதால் சூழப்பட்டது, பின்னமானது, தற்காலிகமானது, தனிப் பட்டது, ஞாபகக் கயிற்றில் ஊசலாடுவது.

**கே:** உங்களுடையதும் அது போன்றதுதானே?

**ம:** இல்லை, இல்லை. நான் மெய்த்தன்மையால் ஆன உலகத்தில் வாழ்கிறேன். ஆனால் உன்னுடையதோ கற்பனையால் ஆனது. உன் உலகம் தனிப்பட்டது, உன்னுடையது, பகிர்ந்துகொள்ள முடியாதது, மிக நெருக்கமாக உனக்குச் சொந்தமானது. யாரும் அதில் நுழைய முடியாது, நீ பார்ப்பதைப் போல் பார்க்க முடியாது, நீ கேட்பதைப் போல் கேட்க முடியாது, உன் உணர்ச்சிகளை உணர முடியாது, உன் எண்ணங்களை எண்ண முடியாது. உன் உலகத்தில் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கின்ற உன் கனவுகளில் சூழப் பட்டு நீ உண்மையில் தனித்து இருக்கிறாய். அதை நீ வாழ்க்கை என்று எடுத்துக் கொள்கிறாய். என் உலகம் ஒரு திறந்த உலகம், எல்லோருக்கும் பொதுவானது, எல்லோராலும் தொடர்பு கொள்ளக் கூடியது. என் உலகத்தில் உள்நோக்கிய பார்வை, அன்பு, உண்மையான தரம் ஆகியவை உள்ளன; அதில் தனி நபர்தான்

**ம:** ஆம், உன்னால் முடியும். உன் வாழ்க்கையை அது வருவது போல் வாழ். ஆனால் உஷாராக, கவனத்துடன், நிகழும் ஒவ்வொன்றையும் அது நிகழ்வதுபோல் அனுமதித்து, இயல்பான வற்றை இயல்பாகச் செய்துகொண்டு, துன்பத்தையும், மகிழ்ச்சியையும் வாழ்க்கை கொண்டுவருவது போல் எடுத்துக் கொண்டு. இதுவும் ஒரு வழி.

**கே:** நன்று, அப்படியானால் நான் திருமணம் செய்துகொண்டு, குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு, வியாபாரம் செய்து கொண்டு சந்தோஷமாக இருக்கலாமா?

**ம:** கண்டிப்பாக. நீ சந்தோசமாகவோ, சந்தோசமில்லாமலோ இருக்கலாம். சகஜமாக எடுத்துக் கொள்.

**கே:** இருந்தாலும் எனக்குச் சந்தோசம் வேண்டும்.

**ம:** உண்மையான சந்தோசத்தை மாறக்கூடிய மற்றும் கடந்து போகின்ற பொருட்களில் காண முடியாது. சுகமும், துக்கமும் தாட்சண்யமின்றி மாறிமாறி வருபவை. சுகம் சுயத்திலிருந்து வருகிறது. அதைச் சுயத்தில் மட்டுமே காணலாம். உன் உண்மையான சுயரூபத்தைக் கண்டுபிடி. மற்றவை எல்லாம் அதனுடன் வரும்.

**கே:** என் ஸ்வரூபம் அமைதியும், அன்பும் என்றால் அது ஏன் நலம் இல்லாமல் இருக்கிறது?

**ம:** உன் ஸ்வரூபம் நலமற்று இருக்கவில்லை. ஆனால் மனதின் மேல் அதன் பிரதிபலிப்புதான் நலமற்று இருக்கிறது. ஏனெனில் மனம் நலமற்று இருக்கிறது. அது நீரின் மேல் தோன்றும் நிலவின் பிம்பம்? காற்றால் அலைக்கழிக்கப்படுவது போன்றது. வாசனா என்னும் காற்று மனதைக் கலக்கி, மனதில் 'நான்' என்பதன் பிரதிபலிப்பு மாற்றமடைவது போல் தோன்றச் செய்கிறது. ஆனால் இந்த அசைவு, அமைதி இன்மை, சுகம், துக்கம் என்னும் கருத்துக்கள் எல்லாம் மனதில் உள்ளன. சுயம் மனதைத் தாண்டி நிற்கிறது, பிரக்ஞையுடன் - ஆனால் மனதோடு சேராமல்.

**கே:** அந்தச் சுயத்தை எப்படி அடைவது?

**ம:** பிரத்தியட்சமாக நீ தான் சுயம், இங்கேயே, இப்பொழுதே மனதைத் தனித்து விட்டுவிடு. விழிப்புடனும், அக்கறையில்லாமலும் இரு. அப்போது உஷாராக ஆனால் பற்றுதல் இல்லாமல் நிகழ்வுகள் வருவதையும், போவதையும் கவனித்துக் கொண்டிருப்பது உன் உண்மையான இயல்பின் ஒரு தன்மை என்று அறிவாய்.

**கே:** மற்ற தன்மைகள் என்ன?

**ம:** தன்மைகள் அளவற்றவை. ஒன்றைத் தெளிவாக அறிந்து கொள். அப்போது எல்லாவற்றையும் அறிவாய்.

**கே:** எனக்குப் பயன்படும் சிலவற்றைப் பற்றிச் சொல்லுங்கள்.

**ம:** உனக்கு என்ன தேவை என்று நீயே நன்கு அறிவாய்!

**கே:**நான் அமைதியற்று இருக்கிறேன். நான் அமைதியை எப்படி அடைவது?

**ம:** எதற்காக அமைதி வேண்டும்?

**கே:** சந்தோசமாக இருக்க.

**ம:** நீ இப்போது சந்தோசமாக இல்லையா?

**கே:** இல்லை.

**ம:** எது உன்னைச் சந்தோசமில்லாமல் செய்கிறது?

**கே:** எனக்குத் தேவை இல்லாதவை என்னிடம் இருக்கின்றன. என்னிடம் இல்லாதவற்றை நான் வேண்டுகிறேன்.

**ம:** அதை நீ ஏன் திருப்பக் கூடாது: உன்னிடம் உள்ளவற்றைத் தேவையாக நினை. உன்னிடம் இல்லாததைப் பற்றி அக்கறை கொள்ளாதே.

**கே:** இன்பம் தருபவைகளை நான் வேண்டுகிறேன். துன்பம் தருபவை எனக்கு வேண்டாம்.

**ம:** எது இன்பமானது, எது இல்லை என்று உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** கடந்த கால அனுபவங்களின் மூலம்தான்.

**ம:** ஞாபகத்தால் வழி நடத்தப் பட்டு நீ சந்தோசமானதை வேண்டி, சந்தோசமில்லாததை ஒதுக்குகிறாய். அதில் வெற்றி பெற்றாயா?

**கே:** இல்லை. சந்தோசம் நிலைப்பதில்லை. துன்பம் மறுபடியும் வருகிறது.

**ம:** எந்தத் துன்பம்?

**கே:** இன்பத்தின் மேல் ஆசை, துக்கத்தின் மேல் பயம். இரண்டுமே அமைதியின்மையின் நிலைகள். களங்கமில்லாத இன்பம் என்னும் நிலை உள்ளதா?

**ம:** உடல் ரீதியானதோ, மனம் சார்ந்ததோ, எல்லா இன்பத்திற்கும் ஒரு கருவி தேவை. உடல் மற்றும் மனக் கருவிகள் பொருட்களால் ஆனவை. அவை சோர்ந்து போய்த் தேய்ந்து போய் விடும். அவை கொடுக்கும் இன்பங்கள் தாக்கத்திலும், காலத்திலும் அளவானவை. உன் எல்லா இன்பங்களுக்கும் துன்பம் பின்புலமாக உள்ளது. நீ துன்பப் படுவதால் சந்தோசத்தை வேண்டுகிறாய். ஆனால் மற்றொருபுறம் இன்பத்தைத் தேடுவதே துன்பத்திற்குக் காரணமாகிறது. இது ஒரு முடிவற்ற குரூரமான சுழல்.

**கே:** என் குழப்பத்தின் காரணம் புரிகிறது. ஆனால் அதிலிருந்து மீள வழி தெரியவில்லை.

**ம:** உன் குழப்பத்தின் காரணத்தை ஆராய்ந்தாலே வழி புலப்படும். உன் குழப்பம் உன் மனதில்தான் உள்ளது. அது குழப்பத்தை ஒருபோதும் எதிர்க்கவில்லை. போராடவும் இல்லை. அது துன்பத்திற்கு மட்டுமே எதிராக இயங்குகிறது.

**கே:** அப்படியானால் நான் குழப்பத்திலேயே இருக்க வேண்டியதுதானா?

**ம:** விழிப்புடன் இரு. குழப்பத்தைப் பற்றி வினவு, கவனி, விசாரணை செய். அதைப் பற்றி எல்லாவற்றையும் கற்றுக்கொள். அது எப்படி இயங்குகிறது என்று பார். அது உனக்கும் மற்றவர்களுக்கும் என்ன செய்கிறது என்று பார். குழப்பத்தைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்வதனால் குழப்பத்திலிருந்து தெளிந்து விடுவாய்.

**கே:** என்னை எனக்குள் பார்த்தால் என் உறுதியான ஆசை ஒரு நினைவுச் சின்னத்தை, என்னைத் தாண்டி நிற்கும் ஒன்றை, நான் உருவாக்கவேண்டும் என்பது. ஒரு வீடு, மனைவி, குழந்தை ஆகியவற்றைப் பற்றி நான் நினைக்கும் போது கூட அது தொடர்ந்து இருக்கக் கூடிய, உறுதியான அத்தாட்சியாக எனக்கு இருப்பதால் தான் அவ்வாறு தோன்றுகிறது.

**ம:** சரி, உனக்காக ஒரு நினைவுச் சின்னத்தைக் கட்டு. அதை எவ்வாறு செய்வதாய் உத்தேசம்?

**கே:** அது நிரந்தரமானதாக இருக்கும் வரை என்ன கட்டுகிறேன் என்பது முக்கியம் இல்லை.

**ம:** கண்டிப்பாக. எதுவுமே நிலையானதல்ல என்று நீயே பார்க்கலாம். எல்லாமும் தேய்ந்து போகின்றன, உடைந்து போகின்றன, கரைந்து போகின்றன. நீ எதன்மீது கட்டுகிறாயோ, அந்த நிலமே பிளவு படும். எல்லாவற்றையும் தாண்டி நிற்கின்ற எதை நீ கட்ட முடியும்?

**கே:** புத்திபூர்வமாகவும் சொல் வடிவிலும் எல்லாமும் கடந்து போகக் கூடியவை என்று எனக்குத் தெரிகிறது. இருப்பினும் என் இதயம் எப்படியாவது நிலைத்த தன்மையை வேண்டுகிறது. நிலையான ஒன்றை உருவாக்க நான் விரும்புகிறேன்.

**ம:** அப்படியானால் அதை நீ நிலைத்திருக்கும்படியான ஒன்றால் கட்ட வேண்டும். அப்படி நிலைத்திருக்கும் என்ன ஒன்று உன்னிடம் உள்ளது? உன் உடலோ அல்லது மனமோ நிலைத்திருக்காது. நீ வேறு எங்காவதுதான் பார்க்க வேண்டும்.

**கே:** நான் நிலைத்த தன்மையை வேண்டுகிறேன். ஆனால் அதை எங்கேயும் பார்க்க முடியவில்லை.

**ம:** நீ நிலைத்தவன் இல்லையா?

**கே:** நான் பிறந்தேன். நான் இறந்து விடுவேன்.

**ம:** நீ பிறப்பதற்கு முன் இருக்கவில்லை என்றும், இறந்த பிறகு 'இப்போது நான் இல்லை' என்றும் உன்னால் உண்மையாகச் சொல்ல முடியுமா? உன் சொந்த அனுபவத்திலிருந்து உன்னால் நீ

இல்லை என்று சொல்ல முடியாது. உன்னால் 'நான் உள்ளேன்' என்று தான் சொல்ல முடியும். மற்றவர்கள் கூட 'நீ இல்லை' என்று சொல்ல முடியாது.

**கே:** தூக்கத்தில் 'நான்' என்பது இல்லை.

**ம:** இது மாதிரியான மேலோட்டமான வார்த்தைகளைச் சொல்வதற்கு முன்னால் உன் விழித்த நிலையைக் கூர்ந்து ஆராய்ந்து பார். அப்போது மனம் வெறுமையாகவும், செயல்படாமலும் இருக்கும் போது அது பல இடைவெளிகளுடன் இருப்பதைப் பார்ப்பாய். முழுவதும் விழித்திருக்கும் போது கூட எவ்வளவு குறைவாக நீ ஞாபகம் வைத்திருக்கிறாய் என்று கவனி. தூங்கும் போது நீ விழிப்புணர்வுடன் இல்லை என்று உன்னால் சொல்ல முடியாது. உனக்கு ஞாபகம் இல்லை, அவ்வளவு தான். ஞாபகத்தில் உள்ள ஒரு இடைவெளி கண்டிப்பாக விழிப்புணர்வில் உள்ள இடைவெளி ஆகாது.

**கே:** என் ஆழ்ந்த தூக்க நிலையை என்னால் ஞாபகம் வைத்துக் கொள்ள முடியுமா?

**ம:** கண்டிப்பாக! உன் விழித்த நிலையில் உள்ள கவனிப்பற்ற இடைவெளிகளைத் தவிர்க்கும் போது படிப்படியாக நீ தூக்கம் என்று சொல்கின்ற, மனம் ஈடுபடாமல் இருக்கும் நீண்ட இடைவெளிகளைப் போக்கி விடுவாய். நீ தூங்குகின்றாய் என்னும் பிரக்ஞை உனக்கு இருக்கும்.

**கே:** இருப்பினும், நிலைத்த தன்மை, இருத்தலின் தொடர்ந்த தன்மை என்னும் பிரச்சனை தீர்க்கப்படவில்லை.

**ம:** நிலைத்த தன்மை என்பது காலம் செயல்படுவதால் ஏற்படுத்தப் பட்ட வெறுமனே ஒரு கற்பனை மட்டுமே. காலம் ஞாபகத்தைச் சார்ந்துள்ளது. நிலைத்த தன்மை என்றால் காலம் பூராவும் இருக்கின்ற தவறாத ஞாபகம் என்று நீ கருதுகிறாய். நீ மனதைச் சாசுவதப்படுத்தப் பார்க்கிறாய். அது முடியாது.

**கே:** அப்படியானால் எது சாசுவதம்?

**ம:** காலத்தால் மாறாத ஒன்று எதுவோ அதுதான். கடந்து போகின்ற ஒன்றை நீ சாசுவதப் படுத்த முடியாது - மாற்ற மில்லாததுதான் சாசுவதம்.

**கே:** நீங்கள் சொல்லும் பொதுவான கருத்து எனக்குப் பரிச்சய மானதுதான். நான் அதிகப் படியான அறிவைத் தேடவில்லை. நான் வேண்டுவதெல்லாம் அமைதிதான்.

**ம:** நீ வேண்டும் அமைதி, கேட்டால் உனக்குக் கிடைக்கும்.

**கே:** நான் கேட்கிறேன்.

**ம:** நீ முழுமனதுடன் கேட்க வேண்டும். ஒரு நெறிப் படுத்தப் பட்ட வாழ்கையை வாழ வேண்டும்.

**கே:** எப்படி?

**ம:** உன் மனதை அமைதி இல்லாமல் செய்யும் அனைத்திலிருந்தும் விடுபடு. அதன் அமைதியைக் குலைக்கும் அனைத்தையும் உதறிவிடு. உனக்கு அமைதி தேவை என்றால் அதற்குத் தகுதியான வனாக இரு.

**கே:** கண்டிப்பாக ஒவ்வொருவரும் அமைதிக்குத் தகுதியான வர்களே.

**ம:** அதைக் குலைக்காதவர்களே அதற்குத் தகுதி உடையவர்கள்.

**கே:** எந்த விதத்தில் நான் அதைக் குலைக்கின்றேன்?

**ம:** உன் ஆசைகளுக்கும், அச்சங்களுக்கும் அடிமையாக இருப்பதால்.

**கே:** அவை நியாயமானதாக இருந்தால் கூடவா?

**ம:** அறியாமையினாலும், தெரியாத்தனமாகவும் தோன்றும் உணர்ச்சிவசப்பட்ட எதிர்வினைகள் ஒருபோதும் நியாயமானவை அல்ல. தெளிவான மனதையும் சுத்தமான இதயத்தையும் தேடு. உனக்குத் தேவையானதெல்லாம் அமைதியாக விழிப்புடன் இருப்பதுதான். உன் ஸ்வரூபத்தை விசாரம் செய்துகொண்டு. இதுதான் அமைதிக்கு ஒரே வழி.

# 9. ஞாபகத்தின் எதிர் வினைகள்

**கேட்பவர்:** இந்தப் பிரபஞ்சம் உருவாக்கப் பட்டது என்று சிலர் சொல்கிறார்கள். மற்றவர்கள் இது எப்போதும் இருக்கின்றது, எப்போதும் மாறுதல் அடைந்துகொண்டு இருக்கிறது என்று சொல்கிறார்கள். அது சாசுவதமான விதிகளுக்குட்பட்டது என்று சிலர் சொல்கிறார்கள். மற்றவர்கள் காரண காரியத்தன்மையைக் கூட மறுக்கிறார்கள். சிலர் இந்த உலகம் மெய்யானது என்கிறார்கள். மற்றவர்கள் ஒருவிதத்திலும் அதற்கு இருப்புத் தன்மை இல்லை என்கிறார்கள்.

**மஹராஜ்:** எந்த உலகத்தைப் பற்றி நீ வினவுகிறாய்?

**கே:** என்னால் உணர்ந்தறியப்படும் உலகத்தைத்தான்.

**ம:** உள்ளபடிக்கே உன்னால் உணர்ந்தறியப்படும் உலகம் மிகச் சிறியது. அது முழுக்க முழுக்கத் தனிப்பட்டது. அதை ஒரு கனவாக எடுத்துக்கொண்டு விட்டு விடு.

**கே:** எப்படி நான் அதை ஒரு கனவாக எடுத்துக் கொள்ள முடியும்? ஒரு கனவு நிலைக்காது.

**ம:** உன் சிறிய உலகம் எவ்வளவு காலம் நீடிக்கும்?

**கே:** என் சிறிய உலகம் இருக்கிறது, ஆனால் முழுமையின் ஒரு பகுதியாக.

**ம:** சம்பூர்ணமான உலகம் என்னும் கருத்து உன் தனிப்பட்ட உலகத்தின் ஒரு பகுதி இல்லையா? இந்தப் பிரபஞ்சம் உன்னிடம் வந்து நீ அதன் ஒரு பகுதி என்று சொல்லப் போவதில்லை. உன்னை அதனுள் ஒரு பகுதியாக அடக்கிக்கொள்ள நீ தான் ஒரு சம்பூர்ணமானதைக் கண்டுபிடித்துள்ளாய். நிஜமாக உனக்குத் தெரிந்ததெல்லாம் உன் சொந்தத் தனிப்பட்ட உலகம் மட்டுமே,

எவ்வளவுதான் அதை நீ உன் கற்பனைகளாலும், எதிர்பார்ப்பு களாலும் ஜோடித்திருந்தாலும்.

**கே:** கண்டிப்பாக, உணர்ந்தறிதல் கற்பனையானது அல்ல.

**ம:** வேறென்ன? உணர்ந்தறிதல் என்பது அடையாளம் காண்பது, இல்லையா? முழுவதும் பரிச்சயமில்லாதது புலன்களால் உணரப் படலாம். ஆனால் இன்னதென்று உணர்ந்தறியப்பட முடியாது. உணர்ந்தறிதல் ஞாபகத்தை உட்படுத்துகிறது.

**கே:** ஒப்புக் கொள்கிறேன். ஆனால் ஞாபகம் அதை ப்ரம்மைத் தன்மையானதாக ஆக்காது.

**ம:** உணர்ந்தறிதல், கற்பனை, எதிர்பார்ப்பு, காத்திருப்பது, ப்ரம்மை - இவை அனைத்தும் ஞாபகத்தை அடிப்படையாகக் கொண்டவை. அவற்றிற்கிடையே வேறுபாடுகள் மிகக் குறைவு. அவை ஒன்றோடு ஒன்று கலந்துவிடுவன. எல்லாமும் ஞாபகத்தின் எதிர்வினைகளே.

**கே:** இருப்பினும், என் உலகத்தை நிரூபிக்க ஞாபகம் அங்கு உள்ளது.

**ம:** நீ எவ்வளவு ஞாபகம் வைத்துள்ளாய்? கடந்த மாதம் முப்பதாம் தேதி நீ என்ன நினைத்தாய், பேசினாய், செய்தாய் என்று உன் ஞாபகத்திலிருந்து எழுது; பார்க்கலாம்.

**கே:** ஆமாம், வெறுமைதான் உள்ளது.

**ம:** அது ஒன்றும் மோசமில்லை. நீ நிறையவே ஞாபகம் வைத்துள்ளாய் - விழிப்புணர்வற்ற ஞாபகம் நீ வாழும் உலகத்தை மிகவும் பரிட்சயமானதாக்குகிறது.

**கே:** நான் வாழும் உலகம் தனிப்பட்ட கருத்துக்குட்பட்டது, பகுதியானது என்று ஒப்புக் கொள்கிறேன். உங்களைப் பற்றி எப்படி? நீங்கள் எப்படிப் பட்ட உலகத்தில் வாழ்கிறீர்கள்?

**ம:** என் உலகமும் உன்னுடையதைப் போன்றதுதான். நான் உன்னைப் போலவே என்னால் இன்னதென்று அறியப்படும் உலகில் பார்க்கிறேன், கேட்கிறேன், உணர்கிறேன், நினைக்கிறேன்,

பேசுகிறேன், செயல்படுகிறேன். ஆனால் உனக்கு அதுதான் எல்லாமும். எனக்கு அது கிட்டத்தட்ட ஒன்றுமே இல்லை. உலகம் என்னில் ஒரு பகுதி என்று அறிந்ததால், நீ சாப்பிட்ட உணவிற்கு என்ன கவனம் செலுத்துகிறாயோ அதைவிட அதிகமாக அதற்கு நான் கவனம் செலுத்துவதில்லை. தயாரிக்கும் பொழுதும், சாப்பிடும் பொழுதும் உணவு உன்னிலிருந்து தனியானது. உன் மனம் அதில் கவனமாக இருக்கும். விழுங்கிய பிறகு, நீ அதைப் பற்றி முழுவதும் கவனமற்று இருப்பாய். நான் உலகத்தைச் சாப்பிட்டு விட்டேன். அதனால் அதைப் பற்றி மேற்கொண்டு நினைக்க வேண்டியது இல்லை.

**கே:** அப்படியானால் நீங்கள் முழுவதும் பொறுப்பற்று ஆகிவிட மாட்டீர்களா?

**ம:** நான் எப்படி ஆவேன்? என்னுள் ஒரு பகுதியானதை நான் எப்படி வேதனைப்படுத்துவேன்? மாறாக, உலகத்தைப் பற்றி நினைக்காமல் நான் என்ன செய்தாலும் அதற்குப் பயனுள்ளதாகத் தான் இருக்கும். எப்படி விழிப்புணர்வில்லாமல் உடல் அதனையே சரி செய்துகொள்கிறதோ, அப்படி உலகத்தைச் சரி செய்ய நான் ஓய்வில்லாமல் இயங்கிக் கொண்டிருக்கின்றேன்.

**கே:** கூடவே, உலகத்தின் அளவற்ற துக்கங்களை நீங்கள் அறிவீர்களா?

**ம:** கண்டிப்பாக, உன்னை விட மிக அதிகமாக நான் அறிவேன்.

**கே:** பிறகு நீங்கள் என்னதான் செய்கிறீர்கள்?

**ம:** நான் அதைக் கடவுளின் கண்கள் மூலம் பார்க்கிறேன். எல்லாமும் நன்றாக இருப்பதைப் பார்க்கிறேன்.

**கே:** எப்படி எல்லாமும் நன்றாக இருப்பதாகச் சொல்ல முடியும்? யுத்தங்களையும், சுரண்டல்களையும், குடிமக்களுக்கும், அரசாங்கத் திற்கும் இடையே நடக்கும் போராட்டங்களையும் பாருங்கள்.

**ம:** இந்தத் துன்பங்கள் எல்லாம் மனிதனால் ஏற்படுத்தப் பட்டவை. அவற்றை முடிவிற்குக் கொண்டு வருவது மனிதனின் சக்திக்கு உட்பட்டதே. மனிதனை அவன் செயல்களுக்குண்டான

விளைவுகளை எதிர்கொள்ளச் செய்தும், சமநிலை திரும்ப வேண்டும் என்று கட்டாயப் படுத்தியும் கடவுள் உதவுகிறார். கர்மா என்னும் விதிதான் நன்மை விளைவிக்க இயங்குவது. அதுதான் காயங்களைஆற்றும் கடவுளின் கரம்.



# 10. சாட்சிபாவம்

**கேட்பவர்:** எனக்கு நிறைய ஆசைகள் உள்ளன. அவை நிறைவேற வேண்டும். நான் எப்படி வேண்டுவதை அடைவது?

**மஹராஜ்:** நீ ஆசைப்படுவதை அடைய நீ தகுதி உடையவன் தானா? ஏதாவது ஒரு வழியில் உன் ஆசைகளை நிறைவேற்றப் பாடுபட வேண்டும். சக்தியைச் செலவிடு. பலன்களுக்காகக் காத்திரு.

**கே:** சக்தியை நான் எங்கிருந்து பெறுவது?

**ம:** ஆசைப் படுவதே சக்தியாகும்.

**கே:** அப்படியானால் ஏன் எல்லா ஆசைகளும் நிறை வேறுவதில்லை?

**ம:** அது உறுதியானதாகவோ, நீடித்திருப்பதாகவோ இல்லாமல் இருக்கலாம்.

**கே:** ஆமாம், அது தான் என் பிரச்சனை. நான் ஆசைப்படுகிறேன். ஆனால் செயல்பட சோம்பேறியாய் இருக்கிறேன்.

**ம:** உன் ஆசை தெளிவாகவும், உறுதியாகவும் இல்லையென்றால் அது உருவெடுக்காது. தவிர, உன் ஆசைகள் தனிப்பட்டவை யாகவும், உன் சொந்த சுகத்திற்காகவும் இருந்தால் அதற்கு நீ செலுத்தும் சக்தி கண்டிப்பாக அளவானதாகத்தான் இருக்கும். அது உன்னிடம் உள்ளதைவிட அதிகமாக இருக்காது.

**கே:** இருப்பினும் சாதாரண மனிதர்கள் அவர்கள் ஆசைப் படுவதை அடைகிறார்கள்.

**ம:** அது அவர்கள் நீண்ட காலத்திற்கு, மிகுந்த ஆசைப் பட்ட பிறகு. அப்படியும் அவர்கள் அடைவது அளவானதே.

**கே:** சுயநலமில்லாத ஆசைகளைப் பற்றி என்ன சொல்வது?

**ம:** நீ பொதுவான நன்மைக்காக ஆசைப்பட்டால் இந்த மொத்த உலகமும் உன்னுடன் ஆசைப்படும். மனிதகுலத்தின் ஆசையை உன்னுடையதாக்கி அதற்கு உழை. அப்போது நீ தோற்க மாட்டாய்.

**கே:** மனித குலத்திற்கு என்பது கடவுளின் வேலை. என்னுடையது அல்ல. எனக்கு என்னைப் பற்றித்தான் அக்கறை. என் நியாயமான ஆசைகளை நிறைவேற்றிப் பார்க்க எனக்கு உரிமை இல்லையா? அவை யாரையும் துன்பப்படுத்த மாட்டா. என் ஆசைகள் நியாயமானவை. அவை சரியானவை. அவை ஏன் நிறைவேறு வதில்லை?

**ம:** சூழ்நிலைகளைப் பொறுத்தே ஆசைகள் சரி அல்லது தவறு ஆகும்; அது நீ எப்படி அவற்றைப் பார்க்கிறாய் என்பதைப் பொறுத்தது. தனிமனிதனுக்குத்தான் சரியானதற்கும் தவறான தற்கும் இடையே ஒரு வேறுபாடு செல்லுபடியாகும்.

**கே:** அந்தமாதிரியான வேறுபாட்டிற்கு என்ன வழிமுறைகள்? எந்த ஆசைகள் சரியானவை, எந்த ஆசைகள் தவறானவை என்று நான் எப்படித் தெரிந்து கொள்வது?

**ம:** உன்னைப் பொருத்தவரை துக்கத்திற்கு வழி வகுக்கும் ஆசைகள் தவறானவை. சந்தோசத்திற்கு வழி வகுப்பவை சரியானவை. ஆனால் நீ மற்றவர்களை மறந்துவிடக் கூடாது. அவர்களின் துக்கமும், சந்தோஷமும்கூட முக்கியம்.

**கே:** முடிவுகள் எதிர்காலத்தில் உள்ளவை. அவை எப்படிப் பட்டவை என்று நான் எப்படித் தெரிந்து கொள்வது?

**ம:** உன் மனதை உபயோகி. ஞாபகம் வைத்துக்கொள், கவனி. நீ மற்றவர்களை விட வித்தியாசமானவன் இல்லை. அவர்களின் பெரும்பாலான அனுபவங்கள் உனக்கும் பொருந்தும். தெளிவாகவும், ஆழமாகவும் யோசி. உன் ஆசைகளின் முழுப் பரிமாணத்தையும், அவற்றின் விளைவுகளையும் பார். உன் மனப் பாங்கு மற்றும் உணர்ச்சிகளின் மிக முக்கியமான பகுதிகள் அவை. உன் செயல்களை அவை வலுவாகப் பாதிக்கின்றன. உனக்குத்

தெரியாததை உன்னால் கை விட முடியாது என்பதை ஞாபகத்தில் வை. உன்னைத் தாண்டிச் செல்ல உன்னை நீ அறிய வேண்டும்.

**கே:** என்னை நான் அறிவது என்றால் என்ன அர்த்தம்? என்னை அறிவதன் மூலம் நான் மிகச் சரியாக எதைத் தெரிந்து கொள்கிறேன்?

**ம:** நீ என்னவாக இல்லை என்று.

**கே:** நான் என்னவென்று அறிவது இல்லையா?

**ம:** நீ என்னவாக இருக்கிறாயோ, அதுவாக முன்பே இருக்கிறாய். நீ என்னவாக இல்லை என்று அறிவதன் மூலம் அதிலிருந்து விடுபட்டு உன் இயல்பான நிலையில் இருப்பாய். இவை எல்லாம் தன்னிச்சையாகவும், பிரயத்தனமில்லாமலும் நடக்கும். நீ என்னவோ அதில் நிலைத்திருப்பாய்.

**கே:** நான் என்ன கண்டுபிடிப்பேன்?

**ம:** கண்டுபிடிக்க எதுவும் இல்லை என்று நீ கண்டுபிடிப்பாய். நீ என்னவோ அதுதான். வேறொன்றுமில்லை.

**கே:** எனக்கு நீங்கள் சொல்வது புரியவில்லை.

**ம:** நீ ஏதோ ஒன்றாகவோ அல்லது வேறொன்றாகவோ இருக்கவேண்டும் என்னும் உன் நிலையான கருத்து உன்னைக் குருடாக்குகிறது.

**கே:** இந்தக் கருத்தை எப்படி விடுவது?

**ம:** என் மீது உனக்கு நம்பிக்கை இருந்தால், விழிப்புணர்வையும், அதன் அளவற்ற பொருளடக்கத்தையும் ஒளிரச் செய்கின்ற தூய பிரக்ஞை நீதான் என்று நான் சொல்லும்போது நம்பு. இதை அறிந்து அதன்படி வாழ். என்னை நீ நம்பாவிட்டால் 'நான் யார்' என்னும் விசாரத்துடன் உனக்குள் செல். அல்லது உன் மனதில், தூய மற்றும் எளிமையான இருத்தலாகிய 'நான்' என்பதில் கவனத்தைக் குவி.

**கே:** உங்கள் மீதான என் நம்பிக்கை எதைச் சார்ந்துள்ளது?

**ம:** மற்ற மனிதருடைய உள்ளத்திற்குள் ஊடுருவிப் பார்ப்பதை. என் இதயத்திற்குள் உன்னால் பார்க்க முடியவில்லை என்றால், உன்னுடையதிற்குள் பார்.

**கே:** என்னால் இரண்டும் முடியாது.

**ம:** ஒரு ஒழுங்கான, பயனுள்ள வாழ்க்கையை வாழ்வதால் உன்னைத் தூய்மைப் படுத்திக்கொள். உன் எண்ணங்கள், உணர்ச்சிகள், வார்த்தைகள், செயல்கள் ஆகியவற்றைக் கவனி. இது உன் பார்வையைத் தெளிவாக்கும்.

**கே:** முதலில் நான் எல்லாவற்றையும் துறந்துவிட்டு ஒரு வீடற்ற வாழ்க்கையை வாழ அவசியமில்லையா?

**ம:** உன்னால் துறக்க முடியாது. நீ வீட்டை விட்டு வெளியேறி உன் குடும்பத்திற்குத் தொந்தரவு தரலாம். ஆனால் வாசனைகள் உன் மனதில் உள்ளன. உன் மனதை உள்ளும், புறமும் அறிந்தால் ஒழிய அவை உன்னை விட்டு நீங்க மாட்டா. முதலில் வர வேண்டியது முதலில் - உன்னை அறி. மற்ற எல்லாமும் அதனுடன் வரும்.

**கே:** ஆனால் நீங்கள் முன்பே நான் உச்ச உயர்வான மெய்மை என்று சொல்லி விட்டீர்கள். அது ஆத்ம ஞானம் அடைந்ததாக ஆகாதா?

**ம:** நீ நிச்சயமாக உச்ச உயர்வான மெய்மைதான்! ஆனால் அதனால் என்ன? மணலின் ஒவ்வொரு துகளும் கடவுள்; அதை அறிவது முக்கியம். ஆனால் அது ஆரம்பம் மட்டும்தான்.

**கே:** நன்று. நான் உச்ச உயர்வான மெய்மை என்று நீங்கள் சொன்னீர்கள். நான் உங்களை நம்புகிறேன். பிறகு நான் என்ன செய்ய வேண்டும்?

**ம:** நான் முன்பே உன்னிடம் சொல்லி விட்டேன். நீ என்னவாக வெல்லாம் இல்லை என்று கண்டு பிடி. உடல், உணர்ச்சிகள், எண்ணங்கள், கருத்துக்கள், காலம், இடம், இருப்பு, இல்லாமை, இது அல்லது அது என்று உன்னால் உறுதியாகவோ அல்லது மறை பொருளாகவோ சுட்டிக் காட்டக் கூடிய எதுவுமே நீ அல்ல. ஒரு வெறும் வாய் வார்த்தை பலன் தராது - நீ ஒரு மந்திரத்தை முடிவில்லாமல் சொல்வதால் எந்தவிதமான பலனும் இல்லை. உன் சுயத்தைத் தொடர்ந்து கவனிக்க வேண்டும்- குறிப்பாக உன்

மனதை - கணத்திற்குக் கணம், எதையும் தவற விடாமல். இந்த சாட்சி பாவம் சுயத்தை சுயமற்றதிலிருந்து பிரிக்க அவசியம்.

**கே:** சாட்சி பாவம் என்னுடைய மெய்யான தன்மை இல்லையா?

**ம:** சாட்சி பாவத்திற்கு, வேறொன்று இருக்க வேண்டும் பார்ப்பதற்கு. நாம் இன்னும் இருமையில்தான் இருக்கின்றோம்!

**கே:** சாட்சியைப் பார்க்கும் சாட்சிபாவத்தைப் பற்றி என்ன? அறிதலைப் பற்றி அறிதலா?

**ம:** வார்த்தைகளைச் சேர்ப்பது உன்னை தொலைவிற்கு எடுத்துச் செல்லாது. உனக்குள் சென்று நீ என்னவாக இல்லை என்று கண்டு பிடி. வேறு எதுவும் பொருட்டல்ல.



# 11. விழிப்புணர்வும், பிரக்ஞையும்

**கேட்பவர்:** தூங்கும் போது என்ன செய்கிறீர்கள்?

**மஹராஜ்:** தூங்குகிறேன் என்று நான் அறிவேன்.

**கே:** தூக்கம் என்பது உணர்வற்று இருப்பதின் ஒரு நிலை அல்லவா?

**ம:** ஆமாம், நான் உணர்வற்று இருக்கிறேன் என்று அறிவேன்.

**கே:** விழித்திருக்கும் போதும், அல்லது கனவு காணும் போதும்?

**ம:** நான் விழித்திருக்கிறேன் அல்லது கனவு காண்கிறேன் என்று அறிவேன்.

**கே:** எனக்கு நீங்கள் சொல்வது விளங்கவில்லை. நீங்கள் சொல்வதின் அர்த்தம் என்ன? நான் என் கருத்தை விளக்குகிறேன்: தூங்குவது என்றால் உணர்வற்று இருக்கிறேன், விழித்திருக்கிறேன் என்றால் உணர்வுடன் இருக்கிறேன், கனவு காணும் போது மனதைப் பற்றிய விழிப்புணர்வுடனும், சூழ்நிலைகளைப் பற்றி விழிப்புணர்வு இல்லாமலும் இருக்கிறேன்.

**ம:** நன்று, எனக்கும் அது போலத்தான். இருப்பினும் ஒரு வித்தியாசம் இருப்பது போல் தோன்றுகிறது. ஒவ்வொரு நிலையிலும் மற்ற இரண்டு நிலைகளையும் நீ மறந்து விடுகிறாய். ஆனால் எனக்கோ, ஒரே இருப்பு நிலைதான் உள்ளது, விழித்திருப்பது, கனவு காண்பது, தூங்குவது ஆகிய மூன்று மனோ நிலைகளையும் உள்ளடக்கிய மற்றும் கடந்த நிலை.

**கே:** இந்த உலகில் ஒரு இலக்கை நோக்கிச் செல்லும் தன்மையையும், காரணத்தையும் காண்கிறீர்களா?

**ம:** இந்த உலகம் என் கற்பனையின் பிரதிபலிப்பாக இருக்கிறது. நான் எதையெல்லாம் பார்க்க விரும்புகிறேனோ, அதையெல்லாம்

பார்க்க முடியும். ஆனால் நான் எதற்கு ஆக்கல், வாழ்தல், அழித்தல் பற்றிய வரைமுறைகளைப் பற்றி ஆராய வேண்டும்? எனக்கு அவை தேவையில்லை. இந்த உலகம் எனக்குள் இருக்கிறது. இந்த உலகம் நான்தான். அதனால் எனக்குப் பயம் இல்லை. நான் அதை மனதுக்குள் ஒரு காட்சியாகப் பூட்டி வைக்க விருப்பம் இல்லை.

**கே:** மறுபடியும் தூக்கத்திற்கே வருவோம். நீங்கள் கனவு காண்கிறீர்களா?

**ம:** அப்படியென்றால் என்ன?

**கே:** உங்கள் கனவுகளின் தன்மை என்ன?

**ம:** விழித்த நிலையின் எதிரொலிகள்.

**கே:** உங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் என்ன நிகழ்கிறது?

**ம:** மூளையின் விழித்த தன்மை தற்காலிகமாகத் துண்டிக்கப் படுகிறது.

**கே:** அப்போது நீங்கள் உணர்வற்று இருக்கிறீர்களா?

**ம:** ஆமாம் - என்னுடைய சுற்றுப்புறத்தைப் பற்றி.

**கே:** முற்றிலும் உணர்வில்லாமல் இல்லையா?

**ம:** நான் உணர்வற்று இருக்கிறேன் என்னும் சுயப் பிரக்ஞையுடன் இருக்கிறேன்.

**கே:** நீங்கள் 'விழிப்புணர்வு' மற்றும் 'பிரக்ஞை' என்னும் வார்த்தைகளை உபயோகிக்கிறீர்கள். அவை இரண்டும் ஒன்றல்லவா?

**ம:** பிரக்ஞை (தூய விழிப்புணர்வு) என்பது ஆரம்பத்திலேயே இருப்பது. அது அசலான நிலை, ஆரம்பமும் முடிவும் அற்றது, காரணமற்றது, சுயம்புவானது, பகுக்க முடியாதது, மாற்றமில்லாதது. விழிப்புணர்வு என்பது மற்றொன்றுடனான தொடர்பால் வருவது, ஒரு பரப்பின் மேல் தோன்றும் பிரதிபலிப்பு, இருமைத் தன்மை உடையது. பிரக்ஞை இல்லாமல் விழிப்புணர்வு இருக்காது. ஆனால் விழிப்புணர்வு இல்லாமல். பிரக்ஞை இருக்கலாம், ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பது போல். பிரக்ஞை என்பது சார்பற்றது,

முழுமையானது. விழிப்புணர்வு அதனுள் இருப்பவற்றைச் சார்ந்துள்ளது; விழிப்புணர்வு என்பது எப்போதும் ஏதேனும் ஒன்றைப் பற்றியது. விழிப்புணர்வு என்பது பகுதியானது, மாறக் கூடியது. பிரக்ஞை என்பது முழுமையானது, மாற்றமில்லாதது, அமைதியானது, நிசப்தமானது. அது எல்லா அனுபவங்களுக்கும் பொதுவான பின்னல்.

**கே:** *எவ்வாறு ஒருவர் விழிப்புணர்வைக் கடந்து பிரக்ஞைக்குள் செல்வது?*

**ம:** பிரக்ஞையால் மட்டுமே விழிப்புணர்வு சாத்தியமாவதால், ஒவ்வொரு விழிப்புணர்வு நிலையிலும் பிரக்ஞை இருக்கிறது. எனவே, உணர்வுடன் இருப்பது என்னும் பிரக்ஞையானது விழிப்புணர்வில் தோன்றும் ஒரு அசைவு. உன் விழிப்புணர்வு ஓட்டத்தில் உனக்குள்ள ஆர்வம் உன்னைப் பிரக்ஞைக்குள் எடுத்துச் செல்லும். அது ஒன்றும் புதிய நிலை அல்ல. அது அசலானது, அடிப்படை இருப்பானது என்று கணநேரத்தில் அறியப்படுகின்றது. அதுதான் உயிர், மற்றும் அன்பும், ஆனந்தமும்.

**கே:** *மெய்த்தன்மை எப்போதும் நம்முடன் இருப்பதால் மெய்யறிதல் என்பது எதைக் கொண்டுள்ளது?*

**ம:** அறியாமைக்கு எதிரானது மெய்யறிதல். இந்த உலகை மெய் என்றும் தன் சுயத்தை மெய் இல்லை என்றும் எடுத்துக்கொள்வது அறியாமை, அதுவே துன்பத்திற்குக் காரணம். சுயம் மட்டுமே மெய், மற்ற அனைத்தும் தற்காலிகமானவை, கடந்து போகக் கூடியவை என்று அறிதலே விடுதலை, அமைதி, ஆனந்தம். இவை எல்லாம் மிகவும் எளிதானவை மற்றும் சுலபம். பொருட்களைக் கற்பனை செய்தவாறு பார்க்காமல் அவற்றை அவை உள்ளவாறே பார்க்கக் கற்றுக்கொள். ஒவ்வொன்றையும் அவை உள்ளவாறே பார்க்க முடிந்தால் உன்னையும் நீ உள்ளவாறே பார்க்க முடியும். எந்தக் கண்ணாடி உனக்கு உலகத்தை அது உள்ளவாறே காண்பிக்கிறதோ அதுவே உனக்கு உன் சொந்த முகத்தையும் காண்பிக்கும். 'நான்' என்னும் விசாரம் மெருகூட்டும் துணி. அதை உபயோகப்படுத்து.

# 12. நபர் என்பதில் மெய்த்தன்மையில்லை

**கேட்பவர்:** *நீங்கள் எவ்வாறு ஞானம் அடைந்தீர்கள் என்று தயவு செய்து சொல்ல முடியுமா?*

**மஹராஜ்:** எனக்கு முப்பத்து நான்கு வயதாகும் போது என் சத்குருவைச் சந்தித்தேன். முப்பத்து ஏழுவயதாகும் போது ஞானம் அடைந்தேன்.

**கே:** *என்ன நிகழ்ந்தது? மாற்றம் என்ன?*

**ம:** இன்பமும், துன்பமும் என்மேல் அவற்றின் தாக்கத்தை இழந்துவிட்டன. ஆசையிலிருந்தும், பயத்திலிருந்தும் விடுபட்டு விட்டேன். வேறு எதுவும் தேவைப்படாமல், என்னை நிறைவானவனாக உணர்ந்தேன். பரமகாசம் ஆகிய பெரும் கடலில், பிரபஞ்ச சிதாகாசத்தின் மேற்பரப்பில், மகாதகாசத்தின் துவக்கமும் முடிவும் இல்லாத எண்ணற்ற உன்னதமான உலகங்கள் தோன்றி மறைவதைப் பார்த்தேன். விழிப்புணர்வாகப் பார்த்தால் அவையெல்லாம் நான். நிகழ்வுகளாகப் பார்த்தால் அவையெல்லாம் என்னுடையவையே. ஒரு புதிரான சக்தி அவற்றைக் கவனித்துக் கொள்கிறது. அந்தச் சக்திதான் பிரக்ஞை. அதற்குச் சுயம், உயிர், கடவுள் என்று எந்தப் பெயரை வேண்டுமானாலும் நீ கொடுத்துக் கொள்ளலாம். எப்படி தங்கம் எல்லா நகைகளுக்கும் அடிப்படையோ, அப்படி அதுதான் இருக்கின்ற அனைத்திற்கும் அடிப்படையும், முடிவான துணையும் ஆகும். அது மிக நெருக்கமாக நம்முடையது. பெயரையும், உருவத்தையும் நகையிலிருந்து நீக்கிவிட்டால் தங்கம் மட்டுமே தெரியும். பெயரிலிருந்தும், உருவத்திலிருந்தும், அவை உருவாக்கும்

ஆசைகளிலிருந்தும் அச்சங்களிலிருந்தும் விடுபடு! அப்போது வேறு என்ன மிஞ்சும்?

**கே:** ஒன்றுமில்லாத தன்மை.

**ம:** ஆம், வெறுமை மிஞ்சுகிறது. ஆனால் அந்த வெறுமை விளிம்பு வரை நிறைந்துள்ளது. எப்படி விழிப்புணர்வு என்பது சாசுவதமான உண்மையோ, அப்படி அது சாசுவதமான சாத்தியக்கூறு ஆகும்.

**கே:** சாத்தியக்கூறு என்றால் எதிர்காலத்தைக் குறிக்கிறீர்களா?

**ம:** கடந்த, நிகழ், எதிர்காலம் - எல்லாம் அங்கு உள்ளன. மேலும் முடிவில்லாமல் அதிகமாக.

**கே:** ஆனால் வெறுமை என்பது வெறுமையே. ஆதலால் அதனால் நமக்கு மிகக் குறைந்த பயனே.

**ம:** நீ எப்படி அவ்வாறு சொல்லலாம்? தொடர்ச்சியில் பிளவு இல்லாமல் மறுபிறப்பு எப்படி இருக்கும்? இறப்பு இல்லாமல் புதுப்பித்தல் இருக்க முடியுமா? தூக்கத்தின் இருண்ட தன்மைகூட புத்துணர்ச்சியும், புத்திளமையும் கொடுப்பது. இறப்பு இல்லாமலிருந்தால் நாம் எப்போதும் சாசுவதமான, நினைவாற்றல் குன்றிய முதுமைத் தளர்வில் சிக்குண்டிருப்போம்.

**கே:** இறவாமை என்பது இல்லையா?

**ம:** எப்போது வாழ்வதும், இறப்பும் ஒன்றுக்கு ஒன்று அத்யாவசியம் என்றும், ஒரே இருப்பின் இரு தன்மைகள் என்றும் பார்க்கப் படுகிறதோ, அதுதான் இறவாமை. முடிவில் ஆரம்பத்தையும், ஆரம்பத்தில் முடிவையும் பார்ப்பதுதான் சாசுவதத்தின் அடையாளம். கண்டிப்பாக இறவாமை என்பது தொடர்ச்சி அல்ல. மாறும் செயல் தொடர்கிறது. எதுவும் நிரந்தரம் இல்லை.

**கே:** பிரக்ஞை நிரந்தரம் இல்லையா?

**ம:** பிரக்ஞை காலத்தால் ஆனதல்ல. காலம் விழிப்புணர்வில் மட்டுமே உள்ளது. விழிப்புணர்விற்கு அப்பால் காலமும், இடமும் எங்கே உள்ளன?

**கே:** உங்கள் விழிப்புணர்வின் எல்லைக்குள் உங்கள் உடலும்கூட உள்ளது.

**ம:** ஆமாம். ஆனால் 'என் உடல்' மற்ற உடல்களிலிருந்து வேறுபட்டது என்னும் கருத்து இல்லை. எனக்கு அது 'ஒரு உடல்', 'என் உடல்' அல்ல, 'ஒரு மனம்', என் மனம் அல்ல. என் ஈடுபாடு இல்லாமல் என் மனம் என் உடலைச் சரிவரப் பார்த்துக் கொள்கிறது. சாதாரணமாகவும், இயல்பாகவும் என்ன செய்யப்பட வேண்டுமோ அது செய்யப்படுகிறது.

உன் உடல் இயங்கும் விதம் பற்றி உனக்கு உணர்வு இல்லாமல் இருக்கலாம். ஆனால் எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகள், ஆசைகள் மற்றும் அச்சங்கள் என்று வரும்போது நீ துல்லிய சுயஉணர்வுடன் இருக்கிறாய். எனக்கு இவை கூட பெரும்பாலும் உணர்வற்றவை. முழு உணர்வு இல்லாமலே நான் மற்றவர்களுடன் பேசிக் கொண்டோ, செயல்களைச் சரியாகவும் முறையாகவும் செய்து கொண்டோ இருக்கிறேன். தன்னியல்பாகவும், துல்லியமாகவும் எதிர்கொண்டு என் விழித்த பௌதீக வாழ்க்கையைத் தானாகவே வாழ்வது போல் தெரிகிறது.

**கே:** இந்த தன்னிச்சையான பிரதிபலிப்புச் செயல் ஞானத்தால் வருவதா அல்லது பயிற்சியாலா?

**ம:** இரண்டாலும். உன் குறிக்கோளின் மேல் நீ கொண்டுள்ள பற்றுதல் உன்னை ஒரு தூய, முறையான வாழ்க்கையை வாழ வைக்கும். அது மெய்யைத் தேட வைக்கும்; மக்களுக்கு உதவ வைக்கும்; ஆசைகள், அச்சங்கள், தவறான கருத்துக்கள் முதலிய தடங்கல்களை நீக்கி, ஞானம் உன்னத நல்லொழுக்கத்தைச் சுலபமாகவும், தன்னிச்சையாகவும் அடையச் செய்யும்.

**கே:** உங்களுக்கு ஆசைகளும், அச்சங்களும் இனிமேல் கிடையாதா?

**ம:** ஒரு எளிய மனிதனாக, ஒரு சாதாரணமானவனாக, ஒரு மரியாதையான வியாபாரியாக, குறைந்த படிப்பறிவுள்ளவனாக நான் பிறக்க வேண்டும் என்பது என் விதி. என் வாழ்க்கை பொதுவான ஆசைகளையும் அச்சங்களையும் கொண்ட

சாமான்யமான ஒன்று. என் குருவின் மேல் கொண்டிருந்த நம்பிக்கையாலும், அவருடைய வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்த தாலும் என் மெய்த்தன்மையை உணர்ந்தேன். அப்போது, என் விதி முடியும் வரை என் மனித இயல்பை அதையே பார்த்துக் கொள்ளும்படி விட்டு விட்டேன். எப்போதாவது உணர்ச்சி வசப்பட்ட அல்லது மனோ வயப்பட்ட என் பழைய இயல்பு மனதில் தோன்றும். ஆனால் அது உடனே கவனிக்கப்பட்டு நீக்கப் பட்டு விடும். ஒரு உடலாக ஒருவன் சுமையாக்கப்பட்டிருக்கும் வரை அவன் அதன் விசித்திரப்பாங்கிற்கும், பழக்கங்களுக்கும் ஆட்பட்டிருப்பான்.

**கே:** உங்களுக்கு மரணத்தைப் பற்றி பயமா?

**ம:** நான் முன்பே இறந்துவிட்டேன்.

**கே:** எந்த அர்த்தத்தில்?

**ம:** நான் இருவகையில் இறந்தவன் - உடலால் மட்டுமல்ல, மனதாலும் கூட.

**கே:** ஆனால் நீங்கள் இறந்தாற்போல் தெரியவே இல்லை.

**ம:** நீதான் அவ்வாறு சொல்கிறாய். என்னைப் பற்றி என்னைவிட உனக்குத்தான் நன்றாகத் தெரியும் போல இருக்கிறது.

**கே:** மன்னிக்கவும். ஆனால் எனக்குப் புரியவில்லை. நீங்கள் உடலற்றவராகவும், மனதற்றவராகவும் இருப்பதாகச் சொல்கிறீர்கள். ஆனால் நான் உங்களை மிகவும் உயிருடனும், செயல்பாட்டுடனும் பார்க்கிறேன்.

**ம:** ஒரு மிகச் சிக்கலான வேலை எல்லா நேரமும் உன் மனதிலும் உடலிலும் நடைபெறுகிறது. அதை நீ உணர்வாயா? இல்லவே இல்லை. இருப்பினும் அடுத்தவருக்கு, எல்லாமும் புத்திசாலித் தனத்துடனும் காரணத்துடனும் நடைபெறுவதாகத் தோன்றும். ஒருவருடைய தனிப்பட்ட வாழ்க்கை பெரும்பாலும் பிரக்ஞையின் பிடிக்குக் கீழே மூழ்கி இருக்கலாம் என்றும், இருப்பினும், நல்லறிவுடனும், எளிதாகவும் நடந்துகொள்ளலாம் என்றும் ஏன் ஒப்புக்கொள்ளக் கூடாது?

**கே:** அது இயல்பானதா?

**ம:** எது இயல்பு? ஆசைகளும் அச்சங்களும் முழுவதும் ஆக்கிரமித்துள்ள, சச்சரவுகளும் போராட்டங்களும் நிறைந்துள்ள, அர்த்தமும் சந்தோசமும் இல்லாத உன் வாழ்க்கையா இயல்பானது? உன் உடலைப்பற்றிய தீவிரமான உணர்வுடன் இருப்பதா இயல்பு? உணர்ச்சிகளால் சின்னாபின்னமாக்கப்பட்டு, எண்ணங்களால் துன்புறுத்தப்பட்டு இருப்பதா இயல்பு? ஒரு ஆரோக்யமான உடலும், ஒரு ஆரோக்யமான மனமும் பெரும்பாலும் அதன் உரிமையாளரால் கவனிக்கப்படாமலே வாழ்கின்றன. வலியாலோ அல்லது துன்பத்தாலோ எப்போதாவது அவை கவனத்தையும், உள்நோக்கிய பார்வையையும் ஈர்க்கின்றன. இதையே ஏன் முழுத் தனிப்பட்ட வாழ்க்கைக்கும் விரிவு படுத்தக் கூடாது? எது நடந்தாலும் அதற்குச் சரியாகவும், முழுவதும் எதிர்வினை புரிந்தும், அதைச் சுயபிரக்ஞையின் குவியத்திற்குள் கொண்டுவராமலும் ஒருவர் சரியாக இயங்க முடியும். எப்போது சுயக் கட்டுப்பாடு இரண்டாம் இயல்பாகிறதோ, அப்போது சுயபிரக்ஞை அதன் குவியத்தை இருத்தல் மற்றும் செயல்களின் ஆழ்ந்த நிலைகளுக்குத் திருப்பும்.

**கே:** ஒரு எந்திரன் ஆகி விட மாட்டீர்களா?

**ம:** எது பழக்கமானதோ, திரும்பத் திரும்பச் செய்யப்படுகிறதோ அதைத் தானாக நடைபெறுமாறு செய்வதில் என்ன தவறு? எப்படியிருந்தாலும் அது தானாக நடப்பது. ஆனால் கூடவே அது குழப்பமானதாகவும் இருந்தால் அது வலியையும், துன்பத்தையும் உருவாக்கி, கவனத்தையும் ஈர்க்கின்றது. ஒரு தூய நெறிப்படுத்தப் பட்ட வாழ்க்கையின் நோக்கம், மனிதனைக் குழப்பத்தின் பிடியிலிருந்தும், துன்பத்தின் சுமையிலிருந்தும் விடுதலை அடையச் செய்வதே.

**கே:** கணினி மயமான வாழ்க்கையை நீங்கள் ஆதரிப்பீர்கள் போல் தெரிகிறது.

**ம:** பிரச்சனைகள் இல்லாத வாழ்க்கையால் என்ன தவறு? தனித்தன்மை என்பது மெய்யின் வெறும் பிரதிபலிப்பே. நடை

முறையில் தானாகவே அந்தப் பிரதிபலிப்பு ஏன் அசலைப் போல் இருக்கக் கூடாது? நபர் என்பது தனியாக ஏதாவது வடிவங்களைக் கொண்டிருக்க வேண்டுமா? அது எந்த வாழ்க்கையின் வெளிப் பாடோ அந்த வாழ்க்கை அதை வழி நடத்திச் செல்லும். உச்ச உயர்வான ஸ்வரூபத்தின் நிழல்தான் நபர் என்றும், ஆனால் அந்த நபர் தானே ஸ்வரூபம் அல்ல என்றும் நீ அறிந்து கொண்டால் நீ புலம்புவதிலிருந்தும், கவலையிலிருந்தும் விடுபடுவாய். நீ உன் உள்ளுக்குள்ளிருந்து வழி நடத்தப்படுவதற்கு ஒப்புக் கொள். அப்போது வாழ்க்கை அறியாததற்குள் செல்லும் ஒரு பயணமாக மாறும்.



## 13. உச்ச உயர்வு, மனம், உடல்

**கேட்பவர்:** நீங்கள் எங்களுக்குச் சொன்னதை வைத்துப் பார்க்கும் போது உங்கள் சுற்றுப்புறத்தைப் பற்றிச் சிறிதும் உணர்வு அற்றிருப்பது போல் இருக்கிறீர்கள். எங்களுக்கு நீங்கள் மிகவும் இடையறாத விழிப்போடும், சுறுசுறுப்பாகவும் இருப்பதாகத் தெரிகிறது. ஞாபகத்தில் எதையும் வைத்துக் கொள்ளாத ஒரு விதமான ஹிப்னாடிச நிலையில் நீங்கள் இருப்பதை எங்களால் நம்ப முடியவில்லை. மாறாக, உங்கள் ஞாபகம் மிக நன்றாக இருக்கிறது. உங்களைப் பொருத்தவரை இந்த உலகமும், அது உள்ளடக்கி யவைகளும் இல்லை என்னும் உங்கள் கூற்றை நாங்கள் எவ்வாறு புரிந்து கொள்வது?

**மஹராஜ் :** அது பார்வையின் கோணத்தைப் பொறுத்தது. உன் மனம் உலகத்தின் மேல் குவிக்கப்பட்டுள்ளது. என்னுடையதோ மெய்யின் மேல். அது பகலில் உள்ள நிலவைப் போல - சூரிய ஒளியில் நிலா தெரிவதில்லை. அல்லது நீ எவ்வாறு உணவு உண்கிறாய்? அது வாயில் இருக்கும் வரை அதைப்பற்றி உனக்கு உணர்வு இருக்கும். விழுங்கிவிட்டால் அதைப் பொருட்படுத்த மாட்டாய். அதை வெளியேற்றும் வரை மனதில் வைத்திருந்தால் பிரச்சனைதான். மனம் சாதாரணமாகச் சற்று செயலற்று இருக்க வேண்டும் -தொடர்ந்த இயக்கம் ஒரு நோய்த் தன்மை. இந்தப் பிரபஞ்சம் தானாக இயங்குகிறது என்பது எனக்குத் தெரியும். வேறு என்ன எனக்குத் தெரிய வேண்டும்?

**கே:** அப்படியானால் ஞானிக்கு அவர் செய்வதின் மேல் மனதைத் திருப்பினால் மட்டுமே அது என்ன என்று தெரியும்; இல்லை யென்றால் அவர் அக்கறையில்லாமல் வெறுமனே இயங்குகிறாரா?

**ம:** சாதாரண மனிதன் பொதுவாக அவன் உடலைப்பற்றி உணர்வு அற்றவன். அவனுக்குத் தன் உணர்வுகள், உணர்ச்சிகள்,

எண்ணங்கள் ஆகியவற்றைப் பற்றிய உணர்வறிவு இருக்கும். இவை கூட பற்றற்ற தன்மை அமையப் பெற்றால் விழிப்புணர்வின் மையத்திலிருந்து விலகி, தன்னிச்சையாக, முயற்சி இல்லாமல் நடக்கும்.

**கே:** அப்படியென்றால் விழிப்புணர்வின் மையத்தில் என்ன இருக்கும்?

**ம:** அதற்குப் பெயரும், உருவமும் கொடுக்க முடியாது. ஏனெனில் அதற்குக் குணம் இல்லை. மற்றும் அது விழிப்புணர்விற்கு அப்பாற்பட்டது. அது விழிப்புணர்விற்கு அப்பால் உள்ள தூய விழிப்புணர்வின் (பிரக்ஞையின்) ஒரு புள்ளி என நீ கூறலாம். எப்படி காகிதத்தில் உள்ள ஒரு துளை காகிதத்தில் உள்ளதாகவும், காகிதத்தால் ஆகாததாகவும் இருக்கிறதோ அப்படி உச்சஉயர் நிலையானது விழிப்புணர்வின் மையத்தில் உள்ளது. ஆனாலும் விழிப்புணர்வைக் கடந்து உள்ளது. அது மனம் ஒளி வெள்ளத்தால் நிரப்பப்பட அதில் உள்ள ஒரு வழியைப் போன்றது. அந்த வழி ஒளி அல்ல. அது வெறும் வழி தான்.

**கே:** ஒரு வழி என்பது வெறுமை, எதுவும் இல்லாமை.

**ம:** பெரும்பாலும் அப்படித்தான் மனதைப் பொறுத்த மட்டில். ஆனால் மனவெளிக்குள் பிரக்ஞை என்னும் ஒளி நுழைய அது ஒரு வழி. அந்த ஒளியை ஒரு கடினமான, அடர்ந்த, பாறை போன்ற, ஒரே வகையான கூறுகளாலான, மாற்றமில்லாத தூய பிரக்ஞைத் திரள் எனலாம். அதற்கு மனதால் உருவாக்கப்பட்ட பெயரும், உருவமும் கொண்ட படிவங்கள் கிடையாது.

**கே:** மன வெளிக்கும் (சிதாகாசத்திற்கும்), உச்சஉயர்நிலையின் இருப்பிடத்திற்கும் (பரமாகாசத்திற்கும்) எதாவது தொடர்பு உண்டா?

**ம:** உச்சஉயர்வு விழிப்புணர்வை உளதாய் இருக்கச் செய்கிறது. விழிப்புணர்வு உடலை உளதாய் இருக்கச் செய்கிறது.

**கே:** அதற்கு அப்பால் என்ன உள்ளது?

**ம:** ஒரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். ஒரு பண்பட்ட ஆயிரம் வயதான யோகி, நீண்ட நாள் உயிர் வாழும் கலையில்

விற்பனர், எனக்கு அந்தக் கலையைக் கற்றுக் கொடுக்க வருகிறார்.. நான் அவரை மிகவும் மதிக்கிறேன்; அவருடைய சாதனைகளை வியக்கிறேன். ஆனாலும் அவரிடம் இந்த நீண்ட ஆயுளினால் எனக்கு என்ன பயன் என்றுதான் கேட்பேன். நான் காலத்திற்கு அப்பாற்பட்டவன். எவ்வளவுதான் ஆயுள் நீண்டிருந்தாலும் அது எனக்கு ஒரு கணப் பொழுதே. அது ஒரு கனவே. அதே போல் நான் எல்லாக் குணாதிசயங்களுக்கும் அப்பாற்பட்டவன். அவை என் ஒளிக்குள் தோன்றி மறைந்தாலும், என்னை விவரிக்க முடியாது. இந்தப் பிரபஞ்சம் அதன் தன்மைகளையும், வேறுபாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு, பெயர்களும், உருவங்களும் உடையது. நானோ அவற்றிற்கு அப்பாற்பட்டவன். நான் இருப்பதால் இந்த உலகம் இருக்கிறது. ஆனால் நான் உலக ரூபம் அல்ல.

**கே:** ஆனாலும் நீங்கள் இந்த உலகில் வாழ்கிறீர்களே!

**ம:** நீதான் அவ்வாறு சொல்கிறாய்! இந்த உடலையும், இந்த மனதையும் உள்ளடக்கிய ஒரு உலகம் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் மற்ற மனங்களையும் உடல்களையும் விட அவற்றை நான் அதிகமாக என்னுடையது என்று கருதுவது இல்லை. அவை காலத்திலும், இடத்திலும் உள்ளன. ஆனால் நான் காலமும், இடமும் அற்றவன்.

**கே:** ஆனால் எல்லாமும் உங்கள் ஒளியில் இருப்பதால் நீங்கள் இந்த உலகைப் படைத்தவர் இல்லையா?

**ம:** நான் ஒன்று உருவாவதற்கான சாத்தியக் கூறோ, உருவாகும் தன்மையோ, பொருள்களின் மெய்த்தன்மையோ அல்ல. சூரிய ஒளிக் கற்றையில் தூசுகள் நடனமாடுவது போல என் ஒளியில் அவை வந்து போகின்றன. அந்த ஒளி தூசுகளை ஒளிரச் செய்கிறது. ஆனால் அவற்றை அது சார்ந்து இல்லை. அவற்றை அது உருவாக்குவதாகவும் சொல்ல முடியாது. அவற்றை அது அறிந்தது கூட இல்லை.

**கே:** நான் உங்களைக் கேள்வி கேட்கிறேன். நீங்கள் பதில் சொல்கிறீர்கள். அந்தக் கேள்வியையும், பதிலையும் பற்றி உங்களுக்கு உணர்வு இருக்கிறதா?

**ம:** உண்மையில் நான் கேட்பதும் இல்லை. பதில் சொல்வதும் இல்லை. நிகழ்ச்சிகளால் ஆன உலகத்தில் கேள்விகளும், பதில்களும் நிகழ்கின்றன. எனக்கு எதுவும் தோன்றுவதில்லை. ஒவ்வொன்றும் தானாகவே நேரிடுகின்றன.

**கே:** அப்போது நீங்கள் சாட்சியா?

**ம:** சாட்சி என்றால் என்ன பொருள்? வெறும் அறிவாற்றல். மழை பெய்தது. இப்போது நின்று விட்டது. நான் நனையவில்லை. மழை பெய்தது என்று எனக்குத் தெரியும். ஆனால் நான் பாதிக்கப் படவில்லை. நான் மழையைப் பார்த்துக்கொண்டு மட்டும் இருந்தேன்.

**கே:** முழு மெய்ஞானம் பெற்ற மனிதர், தன்னிச்சையாக உச்சஉயர்நிலைக்கு உட்பட்டு, சாப்பிடுவது, அருந்துவது போன்ற காரியங்களைச் செய்வதாகத் தெரிகிறது. அவருக்கு அவற்றைப் பற்றிய பிரக்ஞை இருக்குமா, இருக்காதா?

**ம:** விழிப்புணர்வு எதில் நிகழ்வுருகிறதோ - அது பிரபஞ்ச விழிப்புணர்வோ அல்லது மனமோ, அதை விழிப்புணர்வின் மூலம் என்கிறோம். விழிப்புணர்வில் உள்ள எல்லாப் பொருள்களும் இந்தப் பிரபஞ்சத்தை (மகாதகாஷை) உருவாக்குகின்றன. எது இரண்டையும் கடந்ததோ, இரண்டிற்கும் துணையோ, அது உச்சஉயர்நிலை(பரமஹாஷ்). அது முற்றிலும் அசைவில்லாத, அமைதியான நிலை. யார் அங்கு சென்றாலும் மறைந்து விடுவார்கள். அது வார்த்தைகளாலோ, மனதாலோ அடைய முடியாதது. அதை நீ கடவுள் என்றோ, அல்லது பரப்ரம்மம் என்றோ, உச்சஉயர் மெய்ப்பொருள் என்றோ கூறலாம். ஆனால் இந்தப் பெயர்கள் மனதால் கொடுக்கப் படுபவை. அது பெயரற்ற, உள்ளே ஒன்றும் இல்லாத, பிரயத்தனமற்ற, இருப்பையும், இருப்பற்ற தன்மையையும் கடந்த தன்னிச்சையான நிலை.

**கே:** ஆனால் ஒருவர் அதில் உணர்வுடன் இருப்பாரா?

**ம:** எப்படி பிரபஞ்சம் மனதின் உருவமோ, அப்படி விழிப்புணர்வு உச்சஉயர்வின் உருவமாகும். உச்ச உயர்விற்கு. உணர்வில்லை. ஆனால் அது விழிப்புணர்வை உருவாக்குகிறது.

**கே:** என்னுடைய தினசரி நடவடிக்கைகளில் பெரும்பாலானவை பழக்கத்தின்படி தானாக நடக்கின்றன. எனக்குப் பொதுவான காரணங்கள் தெரியும். ஆனால் ஒவ்வொரு செயலும் விளக்கமாக அல்ல. என்னுடைய விழிப்புணர்வு விசாலமாகவும், ஆழமாகவும் ஆகும் பொழுது, விவரங்கள் குறைந்து பொதுவான நோக்கத்திற்கு ஏதுவாகிறது. ஞானிக்கும் அதுபோல்தான் நடக்கிறதா?

**ம:** விழிப்புணர்வின் நிலையில் - ஆம். உச்சஉயர் நிலையில், இல்லை. இந்த நிலை முழுவதும் ஒற்றைத் தன்மையானது, பகுக்கமுடியாதது, மெய்த்தன்மையின் ஒரு தனித்த கெட்டியான பெரிய தொகுதி. அதை அறிய ஒரே வழி, அதாக இருப்பது தான். மனம் அதை அடைய முடியாது. அதை அடையப் புலன்கள் தேவையில்லை. அதைத் தெரிந்து கொள்ள மனம் தேவையில்லை.

**கே:** கடவுள் அவ்வாறுதான் உலகை நடத்துகிறார்.

**ம:** கடவுள் உலகை நடத்துவதில்லை.

**கே:** பிறகு யார் நடத்துகிறார்கள்?

**ம:** யாரும் இல்லை. எல்லாமும் தானாக நடக்கின்றன. நீ கேள்வி கேட்கிறாய். நீயே பதிலையும் சொல்கிறாய்.

கே; கேள்வி கேட்பவரேவா பதிலையும் சொல்கிறார்?

**ம:** மிகவும் சரி. உனக்குக் கேள்வி கேட்கும் போதே பதிலும் தெரியும். எல்லாம் விழிப்புணர்வில் நிகழும் லீலைகளே. எல்லா வேறுபாடுகளும் ப்ரம்மையே. பொய்யை மட்டுமே உன்னால் அறிய முடியும். உண்மை நீயேதான்.

**கே:** சாட்சியாய் இருந்த விழிப்புணர்வும், சாட்சியாய் இருக்கும் விழிப்புணர்வும் உள்ளன. இரண்டாவது உயர்ந்ததா?

**ம:** இரண்டு உள்ளன - தனி நபரும், கவனிக்கின்ற சாட்சியும். இந்த இரண்டையும் ஒன்றாக எப்போது பார்க்கிறாயோ, பார்த்துக் கடந்து போகிறாயோ, அப்போது உச்ச உயர் நிலையில் இருப்பாய். அது உணர்ந்தறியக்கூடியது அல்ல. ஏனெனில் அதுதான் உணர்ந்தறியும் திறனைச் சாத்தியமாக்குகிறது. அது இருத்தலையும்,

இருத்தலற்ற நிலையையும் கடந்தது. அது கண்ணாடி அல்ல; கண்ணாடியில் தோன்றும் பிம்பமும் அல்ல. அதுதான் இருத்தல் - காலமற்ற மெய்மை, கற்பனை செய்ய முடியாத அளவிற்கு இறுகியதும், கடினமானதும் ஆகும்.

**கே:** ஞானி - சாட்சியா அல்லது உச்சஉயர்வா?

**ம:** அவர் உச்சஉயர்வுதான். ஆனால் அவரைப் பிரபஞ்ச சாட்சியாகவும் பார்க்கலாம்.

**கே:** ஆனால் அவர் ஒரு நபராக இருக்கிறாரே?

**ம:** உன்னை நீ ஒரு நபர் என்று நம்பினால் நபர்களைத்தான் எங்கும் பார்ப்பாய். உண்மையில் நபர்களாக யாரும் இல்லை. ஞாபகங்கள், பழக்கங்கள் இவற்றின் தொகுப்புகள்தான் உள்ளன. மெய்ஞானம் அடையும் கணத்தில் தனி நபர் இல்லாமல் போகிறார். அடையாளம் இருக்கும். ஆனால் அடையாளம் ஒரு நபர் அல்ல. அது மெய்யான நிலையில் ஆரம்பத்திலிருந்தே உள்ளது. நபர் என்பதற்குள் தனிப்பட்ட இருத்தல் என்பது இல்லை. அது சாட்சியின் மனதிற்குள் தோன்றும் 'நான்' என்னும் பிரதிபலிப்பே. அதுவும் இருத்தலின் ஒரு நிலையே.

**கே:** உச்ச உயர்வு என்பது உணர்வுள்ளதா?

**ம:** உணர்வுள்ளதோ, உணர்வற்றதோ இல்லை. என் அனுபவத்திலிருந்து சொல்கிறேன்.

**கே:** 'பிரக்ஞானம் பிரம்மம்'. 'பிரக்ஞா' என்பது என்ன?

**ம:** உயிரைப் பற்றிய சுயஉணர்வில்லாத அறிவு.

**கே:** அதுதான் உயிர்த்துடிப்பா, உயிரின் சக்தியா, உயிர் வாழ்தலா?

**ம:** சக்தி முதலில் வருகிறது. ஒவ்வொன்றும் சக்தியின் உருவமே. விழித்த நிலையில் விழிப்புணர்வு மிகவும் வேறுபடுத்திப் பார்க்கப் படுகிறது. கனவில் சற்றுக் குறைவாக. தூக்கத்தில் இன்னும் குறைவாக. நான்காம் நிலையில் ஒரே விதமாக. அதையும் கடந்தது விவரிக்க முடியாத, பகுக்க முடியாத, அடர்த்தியான மெய்மை. அதுதான் ஞானியின் இருப்பிடம்.

**கே:** என் கையில் காயம் ஏற்பட்டது. அது ஆறி விட்டது. எந்தச் சக்தியால் அது ஆறியது?

**ம:** உயிரின் சக்தியால்.

**கே:** அது என்ன சக்தி?

**ம:** அது விழிப்புணர்வு. எல்லாம் உணர்வே.

**கே:** விழிப்புணர்வின் மூலம் என்ன?

**ம:** விழிப்புணர்வே அனைத்திற்கும் மூலமாகும்.

**கே:** விழிப்புணர்வு இல்லாமல் உயிர் இருக்க முடியுமா?

**ம:** முடியாது; அதுபோலவே உயிர் இல்லாமல் விழிப்புணர்வு இருக்க முடியாது. அவை இரண்டும் ஒன்றே. ஆனால் மெய்யாக உச்சஉயர்வு ஒன்றுதான் உள்ளது. மீதி எல்லாம் பெயரும், உருவமும் உள்ள பொருட்களே. பெயரும், உருவமும் உள்ளவைதான் உளதாய் இருக்கின்றன என்னும் கற்பனையை நீ கொண்டிருக்கும் வரையில் உச்சஉயர்வு உனக்கு இல்லாததாய்த் தோன்றும். பெயரும் உருவமும், எந்தவிதமான உள்ளீடும் இல்லாத ஓட்டைக் கூடுகள், மெய் என்பது பெயரும் உருவமும் அற்றது, உயிரின் தூய சக்தி மற்றும் விழிப்புணர்வின் ஒளி என்று நீ புரிந்துகொண்டால் மெய்த்தன்மையின் ஆழ்ந்த நிசப்தத்தில் மூழ்கி அமைதியை அடைவாய்.

**கே:** காலமும், இடமும் மாயைகள்; நீங்கள் அவற்றைக் கடந்தவர் என்றால் நியூயார்க் நகரில் இப்போது என்ன சீதோஷ்ணம் என்று உங்களால் கூற முடியுமா? அங்கு வெப்பமாக உள்ளதா அல்லது மழை பெய்கிறதா?

**ம:** நான் எப்படிச் சொல்லமுடியும்? அது மாதிரியான விஷயங்களுக்குச் சிறப்புப் பயிற்சி தேவைப்படும். அல்லது நியுயார்க்கிற்குப் பயணம் செய்ய வேண்டும். நான் காலத்தையும், இடத்தையும் கடந்தவன் என்று எனக்கு உறுதியாகத் தெரிந்தாலும் என்னை என் விருப்பப்படி காலத்திலும், இடத்திலும் ஒரு நிலையில் நிறுத்த முடியாது. எனக்கு அவற்றில் ஆர்வமும் இல்லை. சிறப்பான யோகப்

பயிற்சியில் பயன் எதுவும் இல்லை. நியுயார்க் என்பதை இப்போது கேட்டு இருக்கிறேன். எனக்கு அது ஒரு வார்த்தை மட்டுமே. எனக்கு அந்த வார்த்தை குறிப்பிடுவதைத் தவிர வேறு என்ன தெரிய வேண்டும்? ஒவ்வொரு அணுவும் ஒரு பிரபஞ்சமாக இருக்கலாம்- நம்முடையதைப் போல சிக்கலாக. அவற்றை எல்லாம் நான் தெரிந்து கொள்ள வேண்டுமா? நான் பயிற்சி செய்தால் முடியும்.

**கே:** நியூயார்க்கின் சீதோஷ்ண நிலையைப் பற்றி நான் கேட்ட கேள்வியில் எங்கு தவறு செய்து விட்டேன்?

**ம:** உலகமும், மனதும் இருத்தலின் நிலைகளே. உச்சஉயர்வு ஒரு நிலை அல்ல. அது எல்லா நிலைகளையும் ஊடுருவுகிறது. ஆனால் அது ஏதோ ஒன்றின் நிலை அல்ல. அது முழுவதும் காரணமற்றது, சுதந்திரமானது, சுயமாகப் பூரணமானது, காலம், இடம், மனம், பொருள் ஆகியவற்றைக் கடந்தது.

**கே:** அதை எந்தக் குறியீட்டினால் நீங்கள் கண்டு கொள்கிறீர்கள்?

**ம:** அதுதான் கருத்து - அது எந்தச் சுவடுகளையும் விடுவதில்லை. அதை எதனாலும் கண்டு கொள்ள முடியாது. அடையாளங் களையும், வழிமுறைகளையும் தேடுவதை விட்டு விட்டு, அதை நேரடியாகத்தான் பார்க்கவேண்டும். எல்லாப் பெயர்களையும் உருவங்களையும் விட்டுவிட்டால் மெய் உன்னுடன் இருக்கும். அதை நீ தேட வேண்டாம். பன்மையும், பிரிவினைகளும் மனதின் நாடகங்களே. மெய் ஒன்றே.

**கே:** மெய் எந்த அடையாளங்களையும் விடுவதில்லை என்றால் அதைப் பற்றிப் பேச வேண்டியது இல்லை.

**ம:** அது இருக்கிறது. அதை மறுக்க முடியாது. அது ஆழமானது, புரிந்து கொள்ள முடியாதது, புதிரைக் கடந்த புதிர். ஆனால் அது இருக்கிறது. மற்றவை வெறுமனே நடைபெறுகின்றன.

**கே:** அது அறியப்படாததா?

**ம:** அது அறிந்தவற்றையும், அறியப்படாதவற்றையும் கடந்தது. ஆனால் நான் அறியப்படாதது என்று சொல்வதை விட அறிந்தது

என்றுதான் சொல்வேன். ஏதாவது ஒன்றை அறிந்தால், மெய்தான் அறியப்பட்டதாகும்.

**கே:** *நிசப்தம் மெய்யின் ஒரு குணாதிசயமா?*

**ம:** அதுவும் மனதைச் சார்ந்ததே. எல்லா நிலைகளும், கட்டுப்பாடுகளும் மனம் சார்ந்தவைகளே.

**கே:** *சமாதிக்கு என்ன இடம்?*

**ம:** ஒருவருடைய விழிப்புணர்வை உபயோகப்படுத்தாமல் இருப்பதே சமாதி. உன் மனதைத் தனித்திருக்க விட்டு விட்டு அதனோடு சேராமல் இரு. உன் உடலிலிருந்தும், மனதிலிருந்தும் எதுவும் உனக்குத் தேவையில்லை.



# 14. தோற்றங்களும், மெய்த்தன்மையும்

**கேட்பவர்:** நிகழ்வுகள் எல்லாம் காரணமின்றி நடப்பதாகவும், ஒன்று தானாகவே நடைபெறுவதாகவும், அதற்கு எந்தக் காரணத்தையும் கூற முடியாது என்றும் நீங்கள் திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள். கண்டிப்பாக ஒவ்வொன்றும் ஒன்று அல்லது பல காரணங்களைக் கொண்டுள்ளது. நான் எவ்வாறு நடப்பவைகளின் காரணமின்மையைப் புரிந்து கொள்வது?

**மஹராஜ்:** உச்ச நிலையில் இருந்து பார்த்தால் இந்த உலகத்திற்குக் காரணம் கிடையாது.

**கே:** ஆனால் உங்கள் சொந்த அனுபவம் என்ன?

**ம:** ஒவ்வொன்றும் காரணமற்றது. உலகத்திற்குக் காரணம் கிடையாது.

**கே:** இந்த உலகம் தோன்றியதற்கான காரணத்தைப் பற்றி நான் வினவவில்லை. இந்த உலகம் தோன்றியதை யார் பார்த்தார்கள்? அது தொடக்கம் இல்லாமலும் இருக்கலாம். எப்போதும் இருப்ப தாகவும் இருக்கலாம். ஆனால் நான் உலகைப் பற்றிப் பேசவில்லை. இந்த உலகம் எப்படியோ இருக்கிறதாக எடுத்துக் கொள்கிறேன். அது பலவற்றைக் கொண்டிருக்கிறது. கண்டிப்பாக ஒவ்வொன்றிற்கும் ஒன்று அல்லது பல காரணங்கள் இருந்தே ஆக வேண்டும்.

**ம:** உனக்காகக் காலத்திலும், இடத்திலும் காரணங்களால் ஆளப்படும் ஒரு உலகை நீ ஒருமுறை உருவாக்கிவிட்டால் ஒவ்வொன்றுக்கும் காரணத்தைத் தேடவும், கண்டுபிடிக்கவும் வேண்டியிருக்கும். நீ கேள்வியைக் கேட்கிறாய். பதிலைத் திணிக்கிறாய்.

**கே:** என் கேள்வி மிகவும் எளிமையானது. நான் எல்லா விதமானவற்றையும் பார்க்கிறேன். ஒவ்வொன்றிற்கும் ஒன்று அல்லது பல காரணங்கள் இருக்கும் என்றும் புரிகிறது. உங்களுடைய கருத்துப் படி அவை காரணமற்றவை. உங்களைப் பொருத்தவரை எதற்குமே இருத்தல் இல்லை; ஆகவே காரண காரியம் என்னும் கேள்வி எழுவதில்லை. இருப்பினும் நீங்கள் பொருட்களின் இருப்பை ஒத்துக்கொள்வது போல் தெரிகிறது. ஆனால் அவற்றின் காரண காரியத்தை மறுக்கிறீர்கள். இதைத்தான் என்னால் புரிந்துகொள்ளமுடிய வில்லை. பொருள்களின் இருப்பை ஒத்துக் கொண்டால் ஏன் அவற்றின் காரணத்தை மறுக்க வேண்டும்?

**ம:** எவ்வாறு சினிமாத் திரையின் மேல் தோன்றும் படம் ஒளி தவிர வேறு இல்லை என்று உனக்குத் தெரிகிறதோ, அப்படி நான் விழிப்புணர்வை மட்டுமே பார்க்கிறேன். எல்லாமும் விழிப்புணர்வால் ஆனவை என்றும் தெரியும்.

**கே:** ஆனாலும் ஒளி அசைய ஒரு காரணம் இருக்க வேண்டும்.

**ம:** ஒளி நகர்வது இல்லை. அசைவு என்பது ஒரு படத்தில் தொடர்ந்த குறுக்கீடுகளும், வண்ணமிடுதலும் ஆகியவற்றால் ஆன ஒரு ப்ரம்மையே என்று உனக்கு நன்றாகத் தெரியும். நகர்வது என்பது படம். அதுதான் மனம்.

**கே:** அது படத்தைக் காரணமற்றதாக ஆக்காது. படமும், நடிகர்களும், தொழில்நுட்பக் கலைஞர்களும், இயக்குனரும், தயாரிப்பாளரும், பல்வேறு உற்பத்தியாளர்களும் அங்கு உள்ளனர். இந்த உலகம் காரண காரியத் தன்மையினால் ஆட்சி செய்யப் படுகிறது. ஒவ்வொன்றும் தொடர்புடையன.

**ம:** ஆமாம்; ஒவ்வொன்றும் தொடர்புடையவையே. அதனால் ஒவ்வொன்றிற்கும் கணக்கில்லாத காரணங்கள் உள்ளன. மிகச் சிறிய ஒன்றிற்கும் முழுப் பிரபஞ்சமும் பங்களிக்கிறது. ஒவ்வொன்றும் அது உள்ளவாறே உள்ளது. ஏனென்றால் இந்த உலகம் உள்ளவாறே உள்ளது. நீ நகைகளைக் கையாளுகிறாய். நானோ தங்கத்துடன். நகைகளுக்குள் காரணத் தொடர்பு எதுவும் இல்லை. ஒரு நகையை உருக்கி வேறொன்று செய்யும்போது அந்த

இரண்டிற்கும் காரணத் தொடர்பு இல்லை. தங்கம் என்பதுதான் பொதுவான தன்மை. ஆனால் தங்கம்தான் காரணம் என்று நீ சொல்ல முடியாது. ஏனெனில் அது தானாக எதையும் உருவாக்குவதில்லை. நகையின் குறிப்பிட்ட பெயரும், உருவமும் தோன்றுவது போல, மனதில் 'நான்' என்பதாக வெளிப்படுகிறது. இருப்பினும் எல்லாமும் தங்கம் மட்டுமே. அதே போல் மெய் ஒவ்வொன்றையும் சாத்தியமாக்குகிறது. இருப்பினும் எது ஒரு பொருளை அது உள்ளவாறு பெயருடனும் உருவத்தோடும் உருவாக்குகிறதோ அது மெய்யிலிருந்து வருவதில்லை.

ஆனால் எதற்காகக் காரண காரியங்களைப் பற்றி அவ்வளவு கவலைப் படவேண்டும்? பொருட்கள் அவையாகவே கடந்து செல்பவையாக இருப்பதால் காரணங்களை ஏன் பொருட்படுத்த வேண்டும்? வருவது வரட்டும், போவது போகட்டும். எதற்காகப் பொருள்களைப் பிடித்துக் கொண்டு அவற்றின் காரணங்களைப் பற்றி ஆராய வேண்டும்?

**கே:** ஒன்றை ஒன்று ஒப்பிட்டு நோக்கும் தன்மையில் ஒவ்வொன்றும் ஒரு காரணத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

**ம:** உனக்கு, ஒப்பிட்டு நோக்கும் தன்மை எந்தவிதத்தில் பயன் படும்? பூரணமான கோணத்தில் பார்க்க உன்னால் முடியும் போது ஒப்பிட்டு நோக்குவதற்கு ஏன் திரும்பப் போகவேண்டும்? பூரணத்தின் மேல் உனக்குப் பயமா?

**கே:** எனக்குப் பயம்தான். என் பூரணமான உறுதிப்பாடுகள் என்று சொல்லப்படுபனவற்றின் மேல் தூங்கி விழுந்து விடுவேனோ என்று பயமாக இருக்கிறது. ஒரு தெளிவான வாழ்க்கை வாழ பூரணம் உதவாது. ஒரு சட்டை உங்களுக்குத் தேவைப்பட்டால் நீங்கள் துணியை வாங்க வேண்டும். தையல்காரரைக் கூப்பிட வேண்டும். இன்னும் பலவற்றைச் செய்ய வேண்டும்.

**ம:** இந்த பேச்சு அறியாமையையே காட்டுகிறது.

**கே:** ஞானம் பெற்றவரின் கருத்து என்ன?

**ம:** ஒளி மட்டுமே உள்ளது. ஒளியே எல்லாம். மற்ற ஒவ்வொன்றும் இருக்கிறது ஆனால் ஒளியினால் ஆன படமாக. படம் ஒளிக்குள் உள்ளது. ஒளி படத்திற்குள் உள்ளது. வாழ்தல், இறப்பு, சுயம், சுயமற்றது - இந்தக் கருத்துக்கள் அனைத்தையும் விட்டு விடு. அவை உனக்குப் பிரயோஜனமற்றவை.

**கே:** எந்தக் கோணத்தில் நீங்கள் காரணத் தன்மையை மறுக்கிறீர்கள்? சார்புத் தன்மையில் - இந்தப் பிரபஞ்சம்தான் ஒவ்வொன்றிற்கும் காரணம். பூரணத் தன்மையில் - எதுவுமே இல்லை.

**ம:** எந்த நிலையிலிருந்து கேட்கிறாய்?

**கே:** தினசரி விழித்த நிலையில் இருந்து. அதில் மட்டும்தான் இந்தக் கலந்துரையாடல்கள் நடக்கின்றன.

**ம:** விழிப்பு நிலையில் இந்தப் பிரச்சனைகள் தோன்றுகின்றன. அதுதான் அதன் இயல்பு. ஆனால் நீ எப்போதும் அந்த நிலையில் இல்லை. உதவியற்று, விழுகின்ற, அதிலிருந்து எழுகிற நிலையினால் நீ என்ன நல்லது செய்ய முடியும்? உன் விழித்த நிலையில் தோன்றுவது போல, ஒவ்வொன்றும் காரண காரியத்துடன்தான் தொடர்புடையன என்று நீ அறிய அது எந்த விதத்தில் உனக்கு உதவும்?

**கே:** உலகமும், விழித்த நிலையும் ஒன்றாகவே தோன்றி மறைகின்றன.

**ம:** மனம் எப்போது நிலையாக, முற்றிலும் அமைதியாக இருக்கிறதோ, அப்போது விழித்த நிலை என்பது மேற்கொண்டு இல்லை.

**கே:** 'கடவுள்', 'பிரபஞ்சம்', 'முழுமை', 'பூரணம்', 'உச்சஉயர்வு' போன்ற வார்த்தைகள் காற்றில் உள்ள வெறும் சப்தங்களே. ஏனெனில் அவற்றின் மேல் எந்த நடவடிக்கையையும் எடுக்க முடியாது.

**ம:** நீ மட்டுமே பதில் சொல்லக்கூடிய கேள்விகளைக் கேட்கிறாய்.

**கே:** இது போன்று என்னை ஒதுக்கித் தள்ளாதீர்கள். முழுமை, பிரபஞ்சம், இது போன்ற கற்பனையானவற்றைப் பற்றி நீங்கள் சீக்கிரம் பேசுகிறீர்கள். அவை வந்து உங்களை அவற்றைப் பற்றிப் பேசவிடாமல் தடுப்பதில்லை. அது போன்ற பொறுப்பில்லாத பொதுவான கூற்றுக்களை நான் வெறுக்கிறேன். நீங்கள் அவற்றைத் தனிப்பட்டவை ஆக்குவதில் அதிகப் பழக்கமானவர். காரண காரியம் என்பது இல்லாமல் ஒழுங்கு இருக்காது. உபயோகமான செயல் என்பதும் இருக்காது.

**ம:** *ஒவ்வொரு நிகழ்விற்கும் காரணம் தெரிய வேண்டுமா? அது சாத்தியமா?*

**கே:** அது சாத்தியமில்லை என்று எனக்குத் தெரியும். எனக்குத் தெரிய வேண்டியது என்னவென்றால் ஒவ்வொன்றிக்கும் காரணம் இருக்கிறதா என்றும், செயல்களைப் பாதிக்கும் விதமாக அவற்றின் மேல் தாக்கம் செலுத்த முடியுமா என்பதும்தான்.

**ம:**செயல்களின் மேல் தாக்கம் செலுத்த அதன் காரணங்களைத் தெரிந்திருக்க வேண்டியது இல்லை. என்ன ஒரு சுற்றிவளைக்கும் முறை! நீயே ஒவ்வொரு செயலுக்கும் ஆதாரமும் முடிவும் இல்லையா? ஆதாரத்திலேயே அதைக் கட்டுப்படுத்த வேண்டும்.

**கே:** ஒவ்வொரு நாள் காலையிலும் பத்திரிகையில் இந்த உலகத்தின் துன்பங்கள் - வறுமை, பகை மற்றும் போர்கள் - ஆகியவை கட்டுப்பாடில்லாமல் குறையாமல் தொடர்வதைப் படிக்கிறேன். என் கேள்விகள் துன்பங்கள், அவற்றின் காரணம், அதைப் போக்கும் வழி ஆகியவற்றைப் பற்றியவை. அவை பௌத்தக் கோட்பாடுகள் என்று என்னை ஒதுக்கித் தள்ளாதீர்கள். என்மேல் முத்திரை குத்தாதீர்கள். உங்களுடைய காரணமற்ற தன்மை என்னும் நிலை, மாறிக் கொண்டே இருக்கும் இந்த உலகின் மேல் உள்ள நம்பிக்கைகளைத் தகர்க்கிறது.

**ம:** நீ குழம்பி விட்டாய். ஏனெனில் நீ இந்த உலகில் இருப்பதாக நம்புகிறாய். இந்த உலகம் உனக்குள் இருப்பதாக அல்ல. யார் முதலில் வந்தது - நீயா அல்லது உன் பெற்றோர்களா? நீ ஒரு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும் பிறந்ததாகவும், உனக்கு ஒரு

தாயும், ஒரு தந்தையும், ஒரு உடலும், ஒரு பெயரும் இருப்பதாகவும் கற்பனை செய்கிறாய். இதுதான் உன் பாவம், உன் துயரம். கண்டிப்பாக நீ அதன் மீது வேலை செய்தால் உன் உலகத்தை மாற்றலாம். எப்பாடு பட்டாவது உழை. எது உன்னைத் தடுக்கிறது? நான் உன்னை எப்போதும் நம்பிக்கை இழக்கச் செய்ததில்லை. காரணம் உண்டோ, இல்லையோ, நீ இந்த உலகத்தை உண்டாக்கி யுள்ளாய். நீ அதை மாற்றலாம்.

**கே:** காரணத்தன்மை இல்லாத உலகம் முற்றிலும் என் கட்டுப்பாட்டிற்குள் இல்லாதது.

**ம:** மாறாக, எந்த உலகிற்கு நீதான் ஆதாரமும் மூலமுமோ, அந்த உலகம் உன் மாற்றக் கூடிய சக்திக்குள்தான் இருக்கிறது. எது உருவாக்கப் பட்டதோ அது எப்போதும் கரையக் கூடியது, மற்றும் திரும்ப உருவாக்கப் படக் கூடியது. எல்லாமும் நீ விரும்பும்படி நடக்கும். ஆனால் நீ உண்மையிலேயே விரும்ப வேண்டும்.

**கே:** நான் தெரிந்து கொள்ள வேண்டுவது எல்லாம் இந்த உலகின் துன்பங்களை எவ்வாறு கையாள்வது என்பதுதான்.

**ம:** நீதான் உன் ஆசைகளாலும், அச்சங்களாலும் அவற்றை உருவாக்கி இருக்கிறாய். நீதான் அவற்றைக் கையாள வேண்டும். இவை எல்லாம் நீ உன் சுய இருப்பை மறந்ததால்தான். மெய்யை திரையின் மேல் உள்ள படம் போல ஆக்கியதால் நீ அதன் மக்களை நேசிக்கிறாய், அவர்களுக்காகத் துன்பப்படுகிறாய், அவர்களைக் காப்பாற்றத் துடிக்கிறாய். அவ்வாறு செய்யக் கூடாது. நீ உன்னிலிருந்து தான் ஆரம்பிக்க வேண்டும். வேறு வழி இல்லை. கண்டிப்பாக வேலை செய். வேலை செய்வதால் கெடுதல் இல்லை.

**கே:** உங்கள் பிரபஞ்சம் எல்லா அனுபவங்களையும் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. தனி மனிதன் அதன் ஊடாக ஒரு வழியைக் கண்டுபிடித்து மகிழ்ச்சியான மற்றும் துன்பமான நிலைகளை அனுபவிக்கிறான். இது கேள்வி கேட்க வைக்கிறது. தேட வைக்கிறது. அதனால் பார்வை விசாலமகிறது. தனி நபரை அவனுடைய குறுகிய, சுயமாக உருவாக்கிய, அளவான, தன் முனைப்பான உலகத்தைக் கடந்து போக வைக்கிறது. இந்த தனிப்

பட்ட உலகை காலப் போக்கில் மாற்றலாம். இந்தப் பிரபஞ்சம் காலமற்றது; பூரணமானது.

**ம:** தோற்றங்களை உண்மையானதென எடுத்துக் கொள்வது தான் மிகப்பெரியபாவம். அதுதான் எல்லாப் பேரிடர்களுக்கும் காரணம். நீதான் எல்லாவற்றிலும் ஊடுருவியுள்ள, சாசுவத மானதும், முடிவில்லாததுமான படைப்புத் திறனுடைய பிரக்ஞை. மற்றவை எல்லாம் சாதாரணமானவை, தற்காலிகமானவை. நீ யார் என்பதை மறக்காதே. கூடவே உன் மனதிற்குத் திருப்தியளிக்கும் வேலையைச் செய். வேலையும், அறிவும் ஒன்றோடு ஒன்று இணைந்து செல்ல வேண்டும்.

**கே:** என்னுடைய ஆன்மீக முன்னேற்றம் என் கையில் இல்லை போல் எனக்குத் தெரிகிறது. ஒருவன் சொந்தமாகத் திட்டமிட்டு அதைச் செயல்படுத்துவது எங்கும் கொண்டு செல்லாது. என்னைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டே இருக்கிறேன். கடவுளுக்குப் பழம் பழுத்து விட்டது என்று தெரியும்போதுஅதைப் பறித்துச் சாப்பிட்டு விடுவார். எந்தெந்தப் பழம் அவருக்குப் பச்சையாகத் தெரிகிறதோ அவை இந்த உலகம் என்னும் மரத்தில் இன்னும் ஒருநாள் இருக்கும்.

**ம:** கடவுளுக்கு உன்னைத் தெரியும் என்று நினைக்கிறாயா? அவருக்கு இந்த உலகம் கூடத் தெரியாது.

**கே:** உங்களுடைய கடவுள் வேறு விதமானவர். என்னுடையவர் வேறு. என்னுடையவர் இரக்கமுள்ளவர். அவர் என்னோடு சேர்ந்து துன்பப் படுவார்.

**ம:** ஆயிரக் கணக்கானவர்கள் இறக்கும் போது நீ ஒருவர் காப்பாற்றப் பட பிரார்த்திக்கிறாய். யாரும் இறக்கவில்லை என்றால் இந்த உலகத்தில் இடமே இருக்காது.

**கே:** நான் இறப்பதைப் பற்றி பயப்படவில்லை. எனக்கு துக்கத்தைப் பற்றியும், துன்பங்களைப் பற்றியும்தான் அக்கறை. என் கடவுள் ஒரு எளிமையான கடவுள். அவர் பிரயத்தனமற்றவர். நாம் புத்திசாலித்தனத்துடன் இருக்கும்படி அவரால் நிர்பந்திக்க முடியாது. அவர் பார்த்துக் கொண்டும், காத்திருக்கவும்தான் முடியும்.

**ம:** நீயும், உன் கடவுளும் சக்தியற்றவர்களாய் இருந்தால், அது இந்த உலகம் தற்செயலானது என்று உணர்த்தாதா? அது அவ்வாறாகின் நீ செய்யக் கூடியதெல்லாம் அதைக் கடந்து போவது ஒன்றே.

**கே:** நான் முற்றிலும் ஏமாற்றமடைந்துவிட்டேன். துக்கமும், துக்கத்தின் முடிவும் மனித இனத்தின் சாசுவதமான, நிலையான, கசப்பான கேள்வி.

**ம:** இந்த விஷத்தை மூலத்தில் இருந்தே நீக்கிவிடு. பிறகு எல்லாமும் சரியாகும்.



## 15. ஞானி

**கேட்பவர்:** கடவுளின் சக்தி இல்லாமல் எதுவும் செய்ய முடியாது. அவரில்லாமல் நீங்கள் கூட இங்கு உட்கார்ந்து கொண்டு எங்களுடன் பேச முடியாது.

**மஹராஜ்:** சந்தேகமில்லாமல் எல்லாம் அவன் செயல். எனக்கு எதுவும் தேவையில்லை என்று இருக்கும் போது எனக்கு அதைப் பற்றி என்ன? கடவுள் எனக்கு என்ன கொடுக்க முடியும் அல்லது என்னிடமிருந்து என்ன எடுத்துக் கொள்ள முடியும்? என்னுடையது எதுவோ அது என்னுடையதுதான். கடவுள் இல்லாதபோதும் என்னுடையது எதுவோ அது என்னுடையதே. 'நான்' என்னும் உணர்வு, இருத்தல் என்னும் நிஜம்- ஒரு மிகச்சிறிய பொருள், ஒரு துகள். இது எனக்குச் சொந்தமான மற்றும் உரிமையான இடம். யாரும் எனக்குக் கொடுக்கவில்லை. இந்த பூமி என்னுடையது; இதன் மேல் வளர்வது கடவுளுடையது.

**கே:** கடவுள் உங்களிடமிருந்து பூமியை வாடகைக்கு எடுத்துள்ளாரா?

**ம:** கடவுள் என் பக்தர். அவர் எனக்காக இதை எல்லாம் செய்திருக்கிறார்.

**கே:** கடவுள் உங்களிடமிருந்து வேறுபட்டவர் இல்லையா?

**ம:** எப்படி இருக்க முடியும்? 'நான்' என்பது வேர், கடவுள் என்பது மரம். நான் யாரை வணங்குவது, எதற்காக?

**கே:** நீங்கள் பக்தரா அல்லது பக்திக்கான பொருளா?

**ம:** நான் இரண்டும் அல்ல. நான் பக்தியே.

**கே:** இந்த உலகில் போதுமான அளவு பக்தி இல்லை.

**ம:** நீ எப்போதும் உலகை மேம்படுத்துவதிலேயே இருக்கிறாய். உன்னால் காப்பாற்றப் பட வேண்டும் என்று இந்த உலகம் காத்திருப்பதாக நம்புகிறாயா?

**கே:** நான் இந்த உலகத்திற்கு என்ன செய்ய முடியும் என்று எனக்குத் தெரியாது. நான் முயற்சி மட்டுமே செய்ய முடியும். நான் வேறு ஏதாவது செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்களா?

**ம:** நீ இல்லாமல் ஒரு உலகம் உள்ளதா? உனக்கு இந்த உலகத்தைப் பற்றி எல்லாமும் தெரியும். ஆனால் உன்னைப் பற்றி உனக்கு எதுவும் தெரியாது. உன் வேலைக்கு நீயே கருவி. உனக்கு வேறு கருவிகள் இல்லை. வேலையைப் பற்றி நினைப்பதற்கு முன் நீ ஏன் கருவியைக் கவனிக்கக் கூடாது?

**கே:** நான் காத்திருக்கலாம். ஆனால் உலகம் காத்திருக்காது.

**ம:**எவ்வளவு விபரீதமான கற்பனை! நீ விசாரணை செய்யாமலிருப்பதால் உலகைக் காத்திருக்க வைக்கிறாய்.

**கே:** எதற்காகக் காத்திருக்கும்?

**ம:** அதை யார் காப்பாற்றுவாரோ அவருக்காக.

**கே:**கடவுள் உலகத்தை இயக்குகிறார். அவர் அதைக் காப்பார்.

**ம:** அவ்வாறு நீதான் சொல்கிறாய். கடவுள் உன்னிடம் வந்து இந்த உலகம் என்னுடைய படைப்பு; எனக்குத்தான் அதன் மேல் அக்கறை; உன்னுடையதில்லை என்று சொன்னாரா?

**கே:** எதற்காக அது என் முழுப் பொறுப்பாக இருக்க வேண்டும்?

**ம:** கவனி. உன்னைத் தவிர வேறு யாருக்கு நீ வாழும் இந்த உலகம் தெரியும்?

**கே:** உங்களுக்குத் தெரியும். எல்லோருக்கும் தெரியும்.

**ம:** உன் உலகத்திற்கு வெளியிலிருந்து யாராவது வந்து சொன்னார்களா? நானும் மற்றவர்களும் உன் உலகத்திற்குள் கணப்பொழுதில் தோன்றி மறைகின்றோம். நாங்கள் உன் தயவில் இருக்கிறோம்.

**கே:** அது அவ்வளவு மோசமாக இருக்காது! நீங்கள் என் உலகத்தில் இருப்பது போல் நான் உங்கள் உலகத்தில் இருக்கிறேன்.

**ம:** உன்னிடம் என் உலகத்தைப் பற்றி எந்தத் தடயமும் இல்லை. நீ உன்னால் உருவாக்கப்பட்ட உலகத்தில் முழுவதும் மூழ்கி உள்ளாய்.

**கே:** முழுவதும் எனக்குத் தெரிகிறது. ஆனாலும் முற்றிலும் நம்பிக்கையற்று மூழ்கி இருக்கிறேனா?

**ம:** உன் உலகம் என்னும் சிறைக்குள் ஒரு மனிதன் தோன்றி, நீ உருவாக்கிய வலி நிறைந்த, முரண்பாடுகளுடைய உலகம் தொடர்ச்சியான ஒன்றோ அல்லது நிலையானதோ அல்ல என்றும், அது ஒரு தவறான கருத்தால் ஆனது என்றும் கூறுகிறான். நீ எவ்வாறு உள்ளே வந்தாயோ அவ்வாறே வெளியே செல்ல மன்றாடுகிறான். நீ உன்னை யார் என்று அறிய மறந்ததால் அதனுள் சிக்கிக் கொண்டாய். உன்னை உள்ளவாறு அறிந்தால் அதிலிருந்து வெளியே வந்து விடுவாய்.

**கே:** அது எந்த விதத்தில் இந்த உலகத்தைப் பாதிக்கும்?

**ம:** நீ உலகத்திலிருந்து விடுபட்டுவிட்டால் அதற்கு ஏதாவது செய்ய முடியும். அதன் கைதியாய் இருக்கும் வரை உன்னால் அதை மாற்ற முடியாது. மாறாக, நீ எது செய்தாலும் அது நிலைமையை முற்றச் செய்யும்.

**கே:** நல்லொழுக்கத்தன்மை என்னை விடுவிக்கும்.

**ம:** நல்லொழுக்கம் சந்தேகமில்லாமல் உன்னையும் உன் உலகத்தையும் சௌகரியமானதாகவும், சந்தோஷமானதாகவும் ஆக்கும். ஆனால் என்ன பயன்? அதில் மெய்த்தன்மை இல்லை. அது நிலைத்திருக்காது.

**கே:** கடவுள் உதவுவார்.

**ம:** உனக்கு உதவ கடவுள் உன் இருப்பை அறிய வேண்டும். ஆனால் நீயும் உன் உலகமும் கனவு நிலைகள். கனவில் நீ துன்பத்தை அனுபவிக்கலாம். யாருக்கும் அது தெரியாது. யாரும் உனக்கு உதவ முடியாது.

**கே:** அப்படியானால் என் எல்லாக் கேள்விகளும், என் எல்லாத் தேடல்களும், படிப்பறிவும் உபயோகமற்றவையா?

**ம:** இவையெல்லாம் தூக்கத்தினால் களைப்புற்ற மனிதனுக்குள் ஏற்படும் தூண்டல்கள் போன்றவை. அவை விழிப்பிற்குக் காரணங்கள் அல்ல. அதன் ஆரம்ப அறிகுறி. ஆனால் நீ முன்பே பதில் தெரிந்த வெற்றுக் கேள்விகளைக் கேட்கக் கூடாது.

**கே:** எனக்கு ஒருபோதும் பதில்கள் தெரியாது.

**ம:** உனக்குத் தெரியும். வார்த்தைகளால் ஆன கேள்விகளுக்கு வார்த்தைகளில்தான் பதில் இருக்கும்.

**கே:** எப்படி உண்மையான பதிலைப் பெறுவது?

**ம:** ஒரு உண்மையான கேள்வியை வார்தைகளில்லாமல் கேட்பதின் மூலம். உன் உள்ஒளியின் படி வாழ்வதின் மூலம். உண்மைக்காக சாகத் துணிந்தவன் அதை அடைவான்.

**கே:** மற்றொரு கேள்வி. ஒரு நபர் (வியக்தி) இருக்கிறார். நபரை அறிபவர் (வியக்தா) இருக்கிறார். சாட்சி இருக்கிறது. நபரை அறிபவரும் சாட்சியும் ஒன்றா அல்லது அவை தனித்தனி நிலைகளா?

**ம:** நபரை அறிபவரும், சாட்சியும் ஒன்றேதான். வியக்தாவை வியக்தியிலிருந்து பிரித்துப் பார்த்தால் பரிணமிக்காத உச்ச உயர்வு (அவியக்தா) வெளிப்படும். விழிப்புணர்வின் ஒளி பூர்ண பிரகாசமாக ஒளிரும்போது அதன் மூல ஆதாரம் தானாகவே தோன்றும்.

**கே:** ஞானி என்பவர் யார்? வியக்தாவா அல்லது உச்சஉயர்வா (அவியக்தாவா)?

**ம:** ஞானி என்பவர் அவியக்தாவாக இருந்துகொண்டு வியக்தாவாகவும் இருப்பார். அவர் இருத்தலும், பிரக்ஞையும் ஆகிய இரண்டுமே. விழிப்புணர்வோடு சம்பந்தப் படுத்திப் பார்த்தால் அவர் பிரக்ஞை. பிரபஞ்சத்தோடு சம்பந்தப் படுத்திப் பார்த்தால் அவர் தூய இருத்தல்.

**கே:** *நபரைப் பற்றி என்ன சொல்வது? எது முதலில் வருகிறது - நபரா, நபரை அறிபவரா?*

**ம:** நபர் (வியக்தி) என்பது மிகச் சிறிய பொருள். உள்ளபடியே அது ஒரு தொகுப்பு. அது தானாகவே இருப்பதாகக் கூற முடியாது. உணர்ந்தறியாவிட்டால் அது அங்கு இல்லை. அது மனதின் நிழலாக இருக்கிறது, ஞாபகங்களின் கூட்டுத் தொகையாக. அவியக்தா முதன்மையானது. அதன் இருத்தல், மனம் என்னும் கண்ணாடியில், அறியப்படுவதாகப் பிரதிபலிக்கப் படுகிறது. அறியப்பட்டது, ஞாபகங்களையும், பழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டு நபர் (வியக்தி) என்னும் உருவம் எடுக்கிறது. அது வியக்தாவின் மனம் என்னும் திரையின்மேல் தோன்றும் நிழல் அல்லது மேல்தோற்றம்.

**கே:** *கண்ணாடி உள்ளது; பிரதிபலிப்பு உள்ளது. ஆனால் சூரியன் எங்கே?*

**ம:** உச்ச உயர்வே (அவியக்தாவே) சூரியன்.

**கே:** *அது விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.*

**ம:** அது விழிப்புணர்வுள்ளதோ, விழிப்புணர்வற்றதோ அல்ல. அதை விழிப்புணர்வு உள்ள அல்லது விழிப்புணர்வு அற்ற தன்மையில் பார்க்கக் கூடாது. அது இரண்டையும் உள்ளடக்கிய, இரண்டையும் கடந்த உயிர்த்தன்மை.

**கே:** *உயிர்த் தன்மை மிகவும் புத்திசாலித்தனமானது. அது எவ்வாறு உணர்வற்று இருக்க முடியும்?*

**ம:** ஞாபகத்தில் ஒரு விடுதல் உள்ளபோது இருக்கும் உணர்வற்ற தன்மையைப் பற்றி பேசுகிறாய். உண்மையில் விழிப்புணர்வு மட்டுமே உள்ளது. எல்லா உயிரும் விழிப்புடையவை, எல்லாமும் விழிப்புணர்வு உடையவை. எல்லாமும் விழிப்புணர்வுடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

**கே:** *கற்களும் கூடவா?*

**ம:** கற்களும் கூட விழிப்புணர்வுடனும், உயிருடனும் உள்ளன.

**கே:** என்னுடைய பிரச்சனையெல்லாம் என்னால் கற்பனை செய்ய முடியாதவைகளை, இருப்பதாக ஏற்றுக் கொள்ளமுடியாது என்பதே.

**ம:** நீ கற்பனை செய்ய முடிந்தவற்றை மறுப்பதே புத்திசாலித் தனமாகும். கற்பனை செய்யப்பட்டவை உண்மை அல்ல.

**கே:** எல்லாக் கற்பனை செய்யக் கூடியவையும் உண்மை யில்லையா?

**ம:** ஞாபகங்களை அடிப்படையாகக் கொண்ட கற்பனைகள் பொய்யானவை. எதிர்காலம் என்பது முழுவதும் பொய்யல்ல.

**கே:** எதிர்காலத்தின் எந்தப் பகுதி உண்மை, எந்தப் பகுதி உண்மையில்லை?

**ம:** எதிர்பாராததும், முன் கூட்டியே கணிக்க முடியாததும் உண்மை.



# 16. ஆசையற்று இருப்பது உயர்வான பேரின்பம்

**கேட்பவர்:** *நான் பல ஆத்ம ஞானம் அடைந்தவர்களைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் ஒரு முக்தி அடைந்தவரைக் கூட அல்ல. நீங்கள் ஒரு முக்தி அடைந்தவரைப் பார்த்திருக்கிறீர்களா அல்லது முக்தி என்பது மற்றவற்றோடு இந்த உடம்பையும் விட்டு விடுவதா?*

**மஹராஜ்:** ஆத்ம ஞானம் என்றும், முக்தி என்றும் எதைச் சொல்கிறாய்?

**கே:** *அமைதி, புனிதத் தன்மை, அழகு ஆகியவற்றின் அற்புதமான அனுபவம் உள்ளது. நான் எதைப் பற்றிப் பேசுகிறேன் என்று எனக்குத் தெளிவாகத் தெரியும். ஏனெனில் நான் அந்த அனுபவங் களைப் பெற்றிருக்கிறேன். அப்போது உலகம் அர்த்தமுடைய தாகவும், அங்கு எல்லாவற்றிலும் ஊடுருவும் அடிப்படைத் தன்மையும், சாரமும் இணைந்தும் இருக்கும். அந்த அனுபவம் நிலைத்து இருக்காது என்றாலும் அதை மறக்க முடியாது. அது ஞாபகமாகவும், பெரிதும் விரும்பப்படுவதாகவும் மனதில் ஒளிரும். நான் அந்த அற்புதமான நிலையில் நிரந்தரமாக இருப்பதையே முக்தி என்று கூறுகிறேன். நான் கேட்பது முக்தி என்பது உடல் வாழ்வதுடன் ஒத்துப் போகுமா என்பதுதான்.*

**ம:** உடலில் என்ன தவறு?

**கே:** *இந்த உடல் பலமற்றது, குறுகிய காலமே வாழ்வது. அது தேவைகளையும் எதிர்பார்ப்புகளையும் உருவாக்குகிறது. அது ஒருவனை மிகவும் குறுக்குகிறது.*

**ம:** அதனால் என்ன? உடல் சம்பந்தப்பட்ட அனுபவங்கள் அளவானதாய் இருக்கட்டும். முக்தி என்பது சுயத்தை அதன் பொய்மையிலிருந்தும், தானே சுமத்திக்கொண்ட கற்பனையான கருத்துக்களிலிருந்தும் விடுவிப்பதாகும். எவ்வளவுதான் உன்னதமான அனுபவமானாலும் முக்தி அதில் அடக்கப் பட்டது அல்ல.

**கே:** அது எப்போதும் இருக்கக் கூடியதா?

**ம:** எல்லா அனுபவங்களும் காலத்திற்கு உட்பட்டவை. தொடக்கம் உள்ள ஒவ்வொன்றும் முடிவுறும்.

**கே:** அப்படியானால் நான் சொல்வதுபோல் முக்தி என்பதே இல்லையா?

**ம:** மாறாக, ஒவ்வொருவரும் முக்தரே. நீ விழிப்புணர்வுடையவன், கூடவே விழிப்புணர்வுடன் வாழச் சுதந்திரமானவன். யாரும் இதை உன்னிடமிருந்து எடுத்துக் கொள்ள முடியாது. உன்னை எப்போதாவது உலகில் இல்லாதவனாகவும் உணர்வற்றவனாகவும் அறிந்திருக்கிறாயா?

**கே:** எனக்கு ஞாபகமில்லை. ஆனால் அது நான் எப்போதாவது உணர்வற்று இருப்பதைப் பொய்யாக்க முடியாது.

**ம:** ஏன் அனுபவத்திலிருந்து பார்வையை அனுபவிப்பவருக்கு முற்றிலும் திருப்பக் கூடாது? திருப்பி, நீ சொல்லக்கூடிய ஒரே உண்மையான சொல் 'நான்' என்பதின் முழு அர்த்தத்தையும் உணரக் கூடாது?

**கே:** எவ்வாறு அதைச் செய்வது?

**ம:** 'எவ்வாறு' என்பது இங்கு கிடையாது. மனதில் 'நான்' என்னும் உணர்வை வைத்திரு; உன் மனமும், உணர்ச்சிகளும் ஒன்றாகும் வரை வைத்திருந்து அதனுடன் கலந்து விடு. திரும்பத் திரும்ப முயற்சி செய்வதால் லட்சியத்திற்கும், பிரியத்திற்கும் இடையில் சரியான சமநிலை கிடைக்கப் பெறுவாய். உன் மனம் 'நான்' என்னும் உணர்வு-எண்ணத்தில் உறுதியாக நிலை கொண்டிருக்கும். நீ என்ன நினைத்தாலும், சொன்னாலும், செய்தாலும் மாறாத

மற்றும் பிரியமான இந்த இருத்தல் உணர்வு உன் மனதின் எப்போதும் உள்ள பின் புலமாக இருக்கும்.

**கே:** நீங்கள் அதை முக்தி என்கிறீர்களா?

**ம:** நான் அதை இயல்பு என்கிறேன். பிரயத்தனமில்லாமலும் மகிழ்ச்சியாகவும் இருப்பதிலும், அறிந்துகொள்வதிலும், நடந்து கொள்வதிலும் என்ன தவறு? உடனடியாக இந்த உடல் அழிந்து போவதை ஏன் அசாதாரணமானது என்று நினைக்கிறாய்? இந்த உடல் இறக்கும் என்பதில் என்ன தவறு? உன் உடல் மீது நீ கொண்டுள்ள அபிப்பிராயத்தைச் சரிசெய்து அதைத் தனியாக விட்டு விடு. அதற்குச் செல்லமும் கொடுக்காதே, துன்புறுத்தவும் செய்யாதே. அதைச் சாதாரணமாக இயங்க விடு, பெரும்பாலான சமயங்களில் விழிப்புணர்வுடன் கூடிய கவனத்திற்குக் கொண்டு வராமலே.

**கே:** எனக்கு ஏற்பட்ட அற்புதமான அனுபவங்களின் ஞாபகங்கள் என்னைத் துரத்துகின்றன. அவற்றைத் திரும்பவும் பெற வேண்டுகிறேன்.

**ம:** நீ அவற்றைத் திரும்பவும் வேண்டுவதால் அவை உனக்குக் கிடைக்காது. எந்த ஒன்றுக்கும் ஆவலுடன் ஆசைப்படுவது எல்லா ஆழ்ந்த அனுவங்களையும் தடுத்துவிடும். சரியாக என்ன வேண்டும் என்று தெரிந்த மனதிற்கு மதிப்புடைய எந்த ஒன்றும் நிகழாது. ஏனெனில் மனம் உருவகப் படுத்தும் எதுவும், வேண்டும் எதுவும் மிகுந்த மதிப்பு உடையதாக இருக்காது.

**கே:** வேறு எதை வேண்டுவது மதிப்பானது?

**ம:** சிறந்ததை வேண்டு. மிக உயர்ந்த மகிழ்ச்சியை, மிகப் பெரிய சுதந்திரத்தை. ஆசையற்று இருப்பதே மிக உயர்ந்த பேரின்பம்.

**கே:** ஆசையிலிருந்து விடுபடும் சுதந்திரம் அல்ல நான் வேண்டுவது. நான் வேண்டுவது என் விருப்பங்களை அடையும் சுதந்திரத்தை.

**ம:** உன் விருப்பங்களை நீ நிறைவேற்றிக்கொள்ளத் தடை எதுவும் இல்லை. உள்ளபடிக்கே நீ வேறு எதுவும் செய்வதில்லை.

**கே:** நான் முயற்சி செய்கிறேன். ஆனால் என்னை வெறுப் படையச் செய்யும் தடைகள் உள்ளன.

**ம:** அவற்றைத் தாண்டி விடு.

**கே:** என்னால் முடியாது. நான் மிகவும் வலிமையற்றவன்.

**ம:** எது உன்னை வலிமையற்றவனாக்குகிறது? எது வலிமையற்ற தன்மை? மற்றவர்கள் அவர்கள் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும்போது உன்னால் ஏன் முடியாது?

**கே:** எனக்குச் சக்தி இல்லை.

**ம:** உன் சக்திக்கு என்ன ஆயிற்று? அது எங்கு சென்று விட்டது? பல்வேறு முரண்பாடான ஆசைகளிலும், தேடல்களிலும் நீ அதைச் சிதறி விடவில்லையா? உனக்கு சக்தி அளவற்று வழங்கப்படாது.

**கே:** ஏன் ?

**ம:** உன் குறிக்கோள்கள் சிறியவையும், கீழானவையும் ஆகும். அவை அதிகமானவற்றை வேண்டுவதில்லை. கடவுளின் சக்திதான் அளவற்றது - ஏனெனில் அவர் தனக்காக எதுவும் வேண்டுவதில்லை. அவரைப்போல் இரு. உன் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறும். உயர்வான எண்ணங்களும், அதிகமான ஆசைகளும் உனக்கு இருந்தால், அவற்றை நிறைவேற்ற நிறைய சக்தியை நீ பெறுவாய். எல்லோரின் நன்மையை நீ ஆசைப்படு. அப்போது இந்தப் பிரபஞ்சம் உன்னுடன் வேலை செய்யும். ஆனால் உன் சொந்த சுகத்தை நீ வேண்டினால் நீ கஷ்டப்பட்டு அதை அடைய வேண்டும். ஆசைப்படுவதற்கு முன் அதற்குத் தகுதியானவனாக ஆகு.

**கே:** நான் தத்துவம், சமூகவியல், கல்வியியல் ஆகியவற்றைப் படித்துக்கொண்டு இருக்கிறேன். ஆத்ம ஞானம் பெற மேலும் அதிகமான மன வளர்ச்சி தேவை என்று நினைக்கிறேன். நான் சரியான பாதையில்தான் செல்கிறேனா?

**ம:** பிழைப்புக்குச் சில சிறப்பான அறிவு தேவை. பொது அறிவு மனதை விரிவாக்குகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் நீ வாழ்நாள் முழுவதையும் அம்மாதிரியான அறிவைப் பெருக்குவதில்

செலவழித்தாயானால் உன்னைச் சுற்றி ஒரு சுவரை எழுப்பிக் கொள்வாய். மனதைத் தாண்டிச் செல்ல நன்கு ஆயத்தப் படுத்தப் பட்ட மனம் தேவை இல்லை.

**கே:** அப்படியானால் வேறு என்ன செய்ய வேண்டும்?

**ம:** உன் மனதை நம்பாதே: அதைத் தாண்டிச் செல்.

**கே:** மனதிற்கு அப்பால் நான் எதைக் காண்பேன்?

**ம:** இருத்தல், தெரிந்துகொள்தல், அன்பு செழுத்துதல் ஆகியவற்றின் நேரடி அனுபவத்தைப் பெறுவாய்.

**கே:** மனதிற்கு அப்பால் எப்படிச் செல்லுவது?

**ம:** ஆரம்பிக்கும் புள்ளிகள் நிறைய உள்ளன - அவை எல்லாமே ஒரே இலக்கைத்தான் அடைகின்றன. நீ தன்னலமில்லாத வேலையைத் தொடங்கலாம், பலனை எதிர்பார்க்காமல். பிறகு எண்ணங்களை விட்டு விட்டு, முடிவில் எல்லா ஆசைகளையும் விட்டு விடுவாய். இங்கு விடுதல் (தியாகம்) என்பது இயங்கும் காரணி. அல்லது நீ வேண்டுவது, எண்ணுவது, செய்வது என்பனவற்றைப் பொருட்படுத்த வேண்டாம். 'நான்' என்னும் உணர்வில் ஸ்திரமாக இரு; 'நான்' என்பதை மட்டுமே மனதில் ஒரே நிலையாக, திடமாக நிறுத்து. எல்லா அனுபவங்களும் உனக்குக் கிடைக்கும். எல்லா உணர்ந்தறிபவையும் நிலையற்றவை, 'நான்' என்பது மட்டுமே நிலையானது என்னும் விழிப்புணர்வில் அசையாமல் இரு.

**கே:** என்னால் என் வாழ்க்கையை இம்மாதிரியான பயிற்சி களுக்குச் செலவழிக்க முடியாது. எனக்கு என் கடமைகள் உள்ளன.

**ம:** எல்லா விதத்திலும் உன் கடமைகளைச் செய். நீ உணர்ச்சி வயப்பட்டு ஈடுபடாத செயல்களும், நன்மை பயக்கக் கூடிய செயல்களும், துன்பம் தராத செயல்களும் உன்னைக் கட்டுப் படுத்த மாட்டா. நீ பல்வேறு வேலைகளில் மிகுந்த பிரயாசையுடன் ஈடுபட்டு இருக்கலாம். ஆனால் உள்ளுக்குள் சுதந்திரமாகவும், அமைதியாகவும், எல்லாவற்றையும் பிரதிபலிக்கும் கண்ணாடி போன்ற மனதுடன் அவற்றால் பாதிக்கப் படாமல் இருப்பாய்.

**கே:** அப்படிப் பட்ட நிலை அடையக்கூடியதா?

**ம:** அப்படி இல்லையென்றால் அதைப் பற்றிப் பேச மாட்டேன். எதற்காக நான் கற்பனையான புனைவுகளில் ஈடுபட வேண்டும்?

**கே:** எல்லோரும் சாஸ்திரங்களை மேற்கோள் காட்டுகிறார்கள்.

**ம:** சாஸ்திரங்களை மட்டுமே அறிந்தவர்கள் ஒன்றுமே அறியாதவர்கள். அறிவது என்பது இருத்தல். நான் என்ன பேசுகிறேன் என்பது எனக்குத் தெரியும். நான் பேசுவது படித்ததாலோ, செவி வழிச் செய்தியாலோ அல்ல.

**கே:** நான் ஒரு பேராசிரியரின் கீழ் சமஸ்கிருதம் கற்றுக் கொள்கிறேன். ஆனால் உண்மையில் சாஸ்திரங்களைத்தான் படிக்கிறேன். நான் ஆத்மஞானத்தைத் தேடுகிறேன். அதற்குத் தேவையான வழிகாட்டுதலைத் தேடி இங்கு வந்துள்ளேன். தயவுசெய்து நான் என்ன செய்யவேண்டும் என்று சொல்லுங்கள்.

**ம:** நீ சாஸ்திரங்களைப் படித்திருந்தும் என்னை ஏன் கேட்கிறாய்?

**கே:** சாஸ்திரங்கள் பொதுவான வழிமுறைகளைத்தான் காண்பிக்கின்றன. ஆனால் தனி நபருக்கு பிரத்யேகமான வழிகாட்டுதல்கள் தேவை.

**ம:** உன் சொந்த சுயம் உன்னுடைய சத்குரு. வெளியில் உள்ள குரு வெறும் மைல் கல். உன் குறிக்கோளை அடைய உன் உள் குரு உன்னோடு வருவார். ஏனெனில் அவர்தான் குறிக்கோளே.

**கே:** உள் குருவை எளிதில் அடையமுடியாது.

**ம:** அவர் உனக்குள்ளும், உன்னோடும் இருப்பதால் சிரமம் அதிகமாக இருக்காது. உனக்குள் பார். அவரைக் காண்பாய்.

**கே:** நான் எனக்குள் பார்க்கும்போது உணர்ச்சிகளையும், உணர்ந்தறிதலையும், எண்ணங்களையும், ஆசைகளையும், அச்சங்களையும், ஞாபகங்களையும், எதிர்பார்ப்புகளையும் பார்க்கிறேன். நான் இந்த மேகக் கூட்டத்தில் மூழ்கிக் கிடக்கிறேன். வேறொன்றையும் பார்பதில்லை.

**ம:** எது இவற்றையெல்லாம் பார்க்கிறதோ, இல்லாததையும் பார்க்கிறதோ, அதுதான் உள் குரு. அவர் ஒருவர்தான் இருப்பவர். மற்றவை அனைத்தும் இருப்பதாகத் தோன்றுகின்றன. அவர் உன் சொந்த ஸ்வரூபம், உன் நம்பிக்கை, விடுதலையின் உத்திரவாதம்; அவரைக் கண்டுபிடித்து, அவரைக் கெட்டியாகப் பிடித்துக்கொள். அப்போது நீ காப்பாற்றப்படுவாய். பத்திரமாக இருப்பாய்.

**கே:** நான் உங்களை நம்புகிறேன். ஆனால் உள்ளே உள்ள சுயத்தைக் கண்டுபிடிப்பது என்று வரும்போது அது என்னிடமிருந்து தப்பித்துவிடுகிறது.

**ம:** 'அது தப்பித்து விடுகிறது' என்னும் கருத்து எங்கிருந்து வருகிறது?

**கே:** மனதில்.

**ம:** மனதை அறிபவர் யார்?

**கே:** மனதின் சாட்சி மனதை அறிகிறது.

**ம:** யாராவது உன்னிடம் வந்து 'நான்தான் உன் மனதின் சாட்சி' என்று சொல்கிறார்களா?

**கே:** இல்லை. அது மனதின் மற்றுமொரு கற்பனையான கருத்தாக இருக்கலாம்.

**ம:** அப்படியானால் சாட்சி என்பது யார்?

**கே:** நான்தான்

**ம:** ஆக, உனக்கு சாட்சியைத் தெரியும்; ஏனெனில் நீயே சாட்சி. சாட்சியை உனக்கு முன்னால் பார்க்க வேண்டியதில்லை. இங்கு மறுபடியும், இருத்தல் என்பது அறிதல்.

**கே:** ஆமாம்; நானே சாட்சி, விழிப்புணர்வு என்பதைக் காண்கிறேன். ஆனால் அது எனக்கு எந்தவிதத்தில் பயன் படும்?

**ம:** என்ன கேள்வி கேட்கிறாய்? எந்தவிதமான பலனை எதிர்பார்க்கிறாய்? நீ யார் என்று தெரிந்து கொள்வது போதாதா?

**கே:** ஆத்ம ஞானத்தால் என்ன பயன்?

**ம:** அது நீ என்னவாக இல்லை என்பதைப் புரிந்து கொள்ள உதவுகிறது; மெய்யற்ற கருத்துக்களிளிருந்தும், ஆசைகளிலிருந்தும், செயல்களிலிலிருந்தும் உன்னை விடுவிக்கிறது.

**கே:** நான் சாட்சி மட்டுமே என்றால் சரி, தவறு என்பவை எந்தவிதத்தில் முக்கியம்?

**ம:** உன்னை அறிய எது உதவுகிறதோ அது சரியானது. எது தடுக்கிறதோ அது தவறானது. ஒருவருடைய மெய்யான சுயத்தை (சத்ய ஸ்வரூபத்தை) உணர்வதே பரமானந்தம்; மறப்பது துன்பம்.

**கே:** சாட்சி- விழிப்புணர்வு என்பது ஒருவருடைய மெய்யான சுயமா?

**ம:** அது புத்தியில் சத்ய ஸ்வரூபத்தின் பிரதிபலிப்பு. சத்ய ஸ்வரூபம் அதையும் கடந்தது. சாட்சி என்னும் கதவின் வழியாகக் கடந்து அதை அடைகிறாய்.

**கே:** தியானத்தால் என்ன பயன்?

**ம:** பொய்யைப் பொய் என்று காண்பது தியானம். இது எல்லா நேரமும் நடைபெற வேண்டும்.

**கே:** தியானத்தைத் தவறாமல் செய்யச் சொல்கிறார்கள்.

**ம:** மெய்யையும், பொய்யையும் வெளிப்படையாகப் பிரித்தறியும் தினசரி முயற்சியே தியானம். பொய்யைத் துறந்துவிடுவதே தியானம். ஆரம்பிப்பதற்குப் பல தியான முறைகள் உள்ளன. ஆனால் அவை அனைத்தும் இறுதியில் ஒன்றில்தான் கலக்கின்றன.

**கே:** ஆத்மஞானம் அடைய சுருக்கமான வழி எது?

**ம:** எந்த வழியும் குறுகியதோ, நீளமானதோ கிடையாது. ஆனால் சிலர் மிகவும் ஈடுபாட்டுடனும், சிலர் குறைவாகவும் இருப்பர். நான் என்னைப்பற்றி வேண்டுமானால் சொல்கிறேன். நான் எளிமையான, சாதாரணமானவன். ஆனால் என் குருவைத் திடமாக நம்பினேன். அவர் செய்யச் சொன்னதை நான் செய்தேன். அவர் 'நான்' என்பதின் மீது எண்ணங்களை ஒருமுகப் படுத்தச் சொன்னார். நான் அவ்வாறே செய்தேன். நான் எல்லா உணரக்

கூடியவைகளுக்கும், புரிந்துகொள்ளக் கூடியவைகளுக்கும் அப்பாற் பட்டவன் என்று அவர் சொன்னார். அதை நான் முழுவதும் நம்பினேன். அவருடைய பாதத்தில் என் இதயத்தையும், ஆன்மாவையும் சமர்ப்பித்தேன். என் முழுக் கவனத்தையும் என் குடும்பத்தைக் கவனித்துக்கொள்ளும் வேலை நேரம் போக மீதி, இருந்த எல்லா நேரத்தையும் அதன்மேல் செலுத்தினேன். நம்பிக்கை மற்றும் மனமார்ந்த ஈடுபாட்டினால் மூன்று வருடங்களுக்குள் என் ஸ்வரூப ஞானத்தை அறிந்தேன். நீ உனக்கு ஒத்துவரும் வழியைத் தேர்ந்தெடுக்கலாம். உன் ஈடுபாடு முன்னேற்றத்தின் அளவை முடிவு செய்யும்.

**கே:** எனக்கு ஏதேனும் குறிப்பு உள்ளதா?

**ம:** 'நான்' என்னும் சுயப் பிரக்ஞையில் உறுதியாக உன்னை வைத்திரு. இதுவே எல்லா முயற்சிகளுக்கும் ஆரம்பமும் முடிவும் ஆகும்.



# 17. எப்போதும் இருப்பது

**கேட்பவர்:** புரிந்து கொள்வது, புத்திசாலித்தனம், உள்நோக்கிப் பார்ப்பது ஆகியவை மனதின் உச்சகட்ட சக்திகள். மனிதனுக்கு ப்ராண, மன, காரண என்னும் மூன்று உடல்கள் உள்ளன. ப்ராண உடல் அவன் இருப்பையும், மனோ உடல் அவன் அறிதலையும், காரண உடல் அவனுடைய ஆனந்தமான உருவாக்கும் குணத்தையும் குறிக்கின்றன. இவை எல்லாம் விழிப்புணர்வில் உள்ள நிலைகளே. ஆனால் தங்களுக்கே உரித்தான தன்மைகளுடன் அவை தனித்தனியே இருப்பதாகத் தோன்றுகின்றன. மனதில் தோன்றும் அறிந்துகொள்ளும் சக்தியின் பிரதிபலிப்பே புத்தி. அதுதான் மனதை அறிவுடையதாக்குகிறது. புத்தி பிரகாசமாக இருந்தால், அறிவு அகலமாகவும், ஆழமாகவும், உண்மையாகவும் இருக்கும். பொருள்களைப்பற்றியும், மனிதர்களைப்பற்றியும், தன்னைப்பற்றியும் அறிந்து கொள்ள உதவுவதே புத்தி. தன்னைப் பற்றி அறிந்து கொள்வதே மிக முக்கியம். அது மற்ற இரண்டையும் உள்ளடக்கியது. தன்னைப்பற்றியும், உலகத்தைப்பற்றியும் தவறாகப் புரிந்து கொள்வது பொய்யான கருத்துக்களிலும், ஆசைகளிலும் கொண்டுபோய்ச் சேர்த்து விடும். அதுவே திரும்பவும் கட்டுண்ட தன்மைக்கு வழி வகுக்கும். ப்ரம்மையின் பிடியிலிருந்து தப்பிக்க தன்னைப் பற்றிச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். இவை எல்லாவற்றையும் எழுத்தளவில் புரிந்துகொள்கிறேன். செயல் படுத்துதல் என்று வரும் போது, சூழ்நிலைகளையும் மக்களையும் எதிர்கொள்ளும் போது நான் தோல்வியடைந்து விடுகிறேன். என் தவறான எதிர் வினைகள் என்னைக் கட்டியுள்ள தளைகளை அதிகப்படுத்துகின்றன. என் சோம்பலான, மெதுவாக இயங்கும் மனதிற்கு வாழ்க்கை மிக வேகமாக இயங்குவதாகத் தெரிகிறது. எனக்குப் புரிகிறது; ஆனால் தாமதமாக. அதற்குள் பழைய தவறுகள் திரும்ப நடந்து விடுகின்றன.

**மஹராஜ்:** பிறகு உனக்கு என்ன பிரச்சனை?

**கே:** வாழ்க்கைக்கு புத்திசாலித்தனமான எதிர்வினை மட்டு மல்லாது விரைவான எதிர்வினையும் தேவை என்று நினைக் கிறேன். அது முழுமையாகத் தன்னிச்சையாக இருந்தால்தான் விரைவாக இருக்கும். அந்தத் தன்னிச்சையான தன்மையை நான் எப்படி அடைவது?

**ம:** கண்ணாடி சூரியனை ஈர்க்க எதுவும் செய்ய முடியாது. அது தன்னைத் தெளிவாக வைத்துக்கொண்டு, சூரியன் சரியான நிலைக்கு வரக் காத்திருக்கலாம். மனம் தயாரானவுடன் சூரியன் அதில் பிரதிபலிக்கும்.

**கே:** ஒளி சுயத்தினுடையதா அல்லது மனதினுடையதா?

**ம:** இரண்டுமே. அது தோற்றுவிக்கப்படாதது மற்றும் ஸ்திரமானது. மனம் அசையும் போதும், மாறும்போதும் அதனால் நிறமளிக்கப் படும். அது கிட்டத்தட்ட சினிமாவைப் போன்றது. ஒளி படச்சுருளில் இல்லை. ஆனால் படச்சுருள் ஒளியை வண்ணமாக்குகிறது. ஒளியின் வழியில் குறுக்கிட்டு அது நகருவது போல் தோன்றச் செய்கிறது. நீ உன் மனதை நிர்மலமாகவும், சாந்தமாகவும் வைத்திரு. பிறகு எல்லாமும் தானாகவே நிகழும். ஆரம்பத்தில் தீவிரமான பிரயத்தனம் தேவை. குறிக்கோளை நெருங்கும்போது பிரயத்தனமில்லாத பூரணத்துவம் இருக்கும்.

**கே:** நீங்கள் இப்போது பரிபூர்ண நிலையில் இருக்கிறீர்களா?

**ம:** பரிபூரணம் என்பது தூய்மையாய், சாத்விகமாக இருக்கும் மனதின் நிலை. மனம் தூய்மையாகவோ, தூய்மையில்லாமலோ இருந்தாலும் நான் அதற்கு அப்பாற்பட்டவன். பிரக்ஞை என் இயல்பு. முடிவாக நான் இருத்தலுக்கும், இருத்தல் இல்லாமைக்கும் அப்பாற்பட்டவன்.

**கே:** உங்கள் நிலையை அடைய தியானம் உதவுமா?

**ம:** தியானம் உன் தளைகளை அறிந்துகொள்ளவும், அவற்றைத் தளர்த்தவும், கட்டவிழ்க்கவும், விடுவிக்கவும் உதவும். நீ எதனோடும் பந்தப்படாமல் இருந்தால் உன் பங்கிற்கான

வேலையைச் செய்துவிட்டாய். பாக்கி வேலை உனக்காகச் செய்யப்படும்.

**கே:** *யாரால்?*

**ம:** உன்னை இதுவரை எந்தச் சக்தி கொண்டுவந்ததோ, அந்தச் சக்தியால். எந்தச் சக்தி உன்னை மெய்யின் மேல் விருப்பத்தையும், உன் மனதை அதைத் தேடவும் வைத்ததோ அந்தச் சக்தியால். அந்தச் சக்திதான் உன்னை உயிருடன் வைத்திருக்கிறது. அதை நீ உயிர் என்றோ உச்ச உயர்வு என்றோ சொல்லலாம்.

**கே:** *அதே சக்தி தான் என்னை நாளடைவில் கொல்கிறது.*

**ம:** நீ பிறக்கும்போது இல்லையா? நீ இறக்கும் போது இருக்க மாட்டாயா? யார் எப்போதும் இருப்பது என்று கண்டுபிடி. அப்போது உன் தன்னிச்சையான மற்றும் பூரணமான எதிர்வினைப் பிரச்சனை தீர்ந்துவிடும்.

**கே:** *நித்யமானதை அறிவதும், எப்போதும் மாறுகின்ற தற்காலிகமான நிகழ்வுகளுக்குப் போதுமான எதிர்வினையும் இரண்டு வேறுபட்ட, தனித் தனியான கேள்விகள். நீங்கள் அவற்றை ஒன்றாக்குவது போல் தெரிகிறது. எதனால் அவ்வாறு நீங்கள் செய்கிறீர்கள்?*

**ம:** நித்யத்தை அறிவது நித்யமாகவே, முழுமையானதாகவே, அனைத்தையும் உள்ளடக்கிய பிரபஞ்சமாகவே ஆவது. ஒவ்வொரு நிகழ்வும், முழுமையின் விளைவும், வெளிப்பாடும் ஆகும். அது முழுமையுடன் பரிபூரண ஒத்திசைவுடன் இருக்கிறது. முழுமையின் எல்லா எதிர்வினைகளும் சரியானவையே. அவை முறையாகவும், பிரயத்தனமில்லாமலும், சரியான நேரத்திலும் நடக்கின்றன.

அது சரியானதாக இருந்தால் வேறு மாதிரி இருக்காது. தாமதமான எதிர்வினை தவறானது. சந்தர்ப்பத்திற்கேற்றவாறு எண்ணம், உணர்ச்சி, செயல் ஆகிய அனைத்தும் ஒன்றாகவும், கூடவே நடப்பதாகவும் இருக்க வேண்டும்.

**கே:** *அது எவ்வாறு வரும்?*

**ம:** நான் முன்பே சொல்லி இருக்கிறேன். யார் நீ பிறந்தபோது இருந்தது என்றும், யார் நீ இறப்பதைப் பார்ப்பது என்றும் கண்டுபிடி.

**கே:** என் தந்தையும் தாயுமா?

**ம:** ஆம், உன் தந்தையும் தாயும். எந்த மூலத்திலிருந்து நீ வந்தாயோ அது. ஒரு பிரச்சனையைத் தீர்க்க அதன் மூலத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். விசாரம் மற்றும் ஆசையற்று இருப்பது என்னும் பிரபஞ்சக் கரைப்பான்களில் உன் பிரச்சனைகளைக் கரைப்பதின் மூலம் சரியான தீர்வு காண முடியும்.



# 18. நீ என்னவென்று அறிய நீ என்னவாக இல்லை என்று கண்டுபிடி

**கேட்பவர்:** இந்தப் பிரபஞ்சம் திடப் பொருள்கள், மனம், மற்றும் ஆன்மா ஆகியவற்றால் ஆனது என்னும் உங்கள் விளக்கம் இவ்வாறான விளக்கங்கள் பலவற்றில் ஒன்று. மற்ற மாதிரிகளிலும் இந்தப் பிரபஞ்சம் ஒத்துப் போவதாகத் தெரிகிறது. எது உண்மையான மாதிரி, எது உண்மையல்ல என்று தெரியாது. முடிவாக எல்லா மாதிரிகளும் வெறும் வாய்ச் சொற்களே அன்றி ஒன்றுகூட மெய்யைக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. உங்கள் கூற்றுப்படி மெய்த்தன்மை மூன்று பெரும்பரப்புக்களைக் கொண்டிருக்கிறது: பொருள்-சக்தி பரப்பு (மகாதகாஷ்), விழிப்புணர்வு நிலையின் பரப்பு (சித்தகாஷ்), மற்றும் சுத்தமான ஆன்மாவின் பரப்பு (பரமகாஷ்). முதலாவது இயக்கத்தையும் செயலின்மையையும் கொண்ட ஒன்று. அதை அனுமானிக்க முடிகிறது. நாம் பார்க்கிறோம் மற்றும் நாம் பார்க்கிறோம் என்றும் அறிகிறோம். நாம் உணர்வுடன் இருப்பதும், அவ்வாறு இருக்கிறோம் என்னும் விழிப்புணர்வும் நமக்கு இருக்கிறது. இவ்வாறு நமக்கு இரண்டு உள்ளது: பொருள்-சக்தி, மற்றும் விழிப்புணர்வு. பொருள் இருப்பது 'இட'த்தில் போல் தோன்றுகிறது. ஆனால் சக்தி எப்போதும் காலத்தில் இருப்பதாகப் படுகிறது. அது மாற்றத்தினுடன் இணைக்கப்பட்டுள்ளது. மாறும் வேகத்தால் அளக்கப் படுகிறது. எப்படியோ விழிப்புணர்வு இங்கேயே இப்போதே இருப்பதாகப் படுகிறது - காலம் மற்றும் இடத்தின் ஒற்றைப் புள்ளியில். ஆனால் நீங்கள் விழிப்புணர்வும் பிரபஞ்சமய மானது என்று சொல்வதுபோல் தெரிகிறது. அப்படிச் சொல்வதனால் அது காலமற்றதாகவும், இடமற்றதாகவும், தனி நபர்த்தன்மை அற்றதாகவும் ஆகி விடுகிறது. விழிப்புணர்வு காலமற்றதாக

இருப்பதையும், இடமற்று இருப்பதையும் இங்கேயே, இப்போதே இருப்பதையும் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் தனி நபர்த்தன்மை இல்லாத விழிப்புணர்வை என்னால் யோசிக்க முடியவில்லை. என்னைப் பொருத்தவரையில் விழிப்புணர்வு என்பது எப்போதும் குவிக்கப்பட்ட, ஒருமுகப் படுத்தப்பட்ட தனிமனிதனுக்குரிய ஒன்று. அனுமானிப்பவர் இல்லாமலே அனுமானித்தலும், அறிபவர் இல்லாமலே அறிதலும், அன்பைச் செலுத்துபவர் இல்லாமலே அன்பும், நடிப்பவர் இல்லாமலே நடிப்பும் இருக்க முடியும் என்று நீங்கள் சொல்வதுபோல் தெரிகிறது. அறிவது, அறிபவர், அறியப் படுவது ஆகிய மூன்றையும் வாழ்க்கையின் ஒவ்வொரு அசைவிலும் பார்க்கலாம் என்று நினைக்கிறேன். விழிப்புணர்வு என்பது ஒரு உணர்வுள்ள நபர் இருப்பதையும், அதற்கான ஒரு பொருள் இருப்பதையும், உணர்வுடன் இருக்கும் நிஜத்தையும் குறிக்கிறது. அந்த உணர்வுத் தன்மை உடையதை நான் ஒரு நபர் என்று அழைக்கிறேன். ஒரு நபர் இந்த உலகில் வாழ்கிறார், அவர் இதன் ஒரு பகுதி, இந்த உலகைப் பாதிக்கிறார், இந்த உலகால் பாதிக்கப்படுகிறார்.

**மஹராஜ்:** இந்த உலகமும், நபரும் எந்த அளவுக்கு உண்மை என்று நீ ஏன் விசாரிக்கக் கூடாது?

**கே:** இல்லை, இல்லை. நான் விசாரிக்க வேண்டியதில்லை. அவர் வாழும் உலகத்தை விட அந்த நபர் உண்மைத் தன்மையில் சற்றும் குறைவாக இல்லாமல் இருந்தால் போதும்.

**ம:** அப்படியானால் வேறு என்ன கேள்வி?

**கே:** நபர்கள் நிஜமாகவும், பிரபஞ்சம் உருவகப் படுத்தப் பட்டதாகவும் உள்ளனவா? அல்லது பிரபஞ்சம் நிஜமாகவும், நபர்கள் கற்பனையாகவும் உள்ளனவா?

**ம:** எதுவுமே உண்மையில்லை.

**கே:** உங்கள் பதிலை மதிப்பீடு செய்யும் அளவிற்கு நான் நிஜமாக இருக்கிறேன். மேலும் நான் ஒரு நபர்.

**ம:** தூங்கும் போது அல்ல.

**கே:** உள்ளே ஆழ்ந்துபோவது இல்லாமல்போவது அல்ல. தூங்கினாலும் நான் இருக்கிறேன்.

**ம:** ஒரு நபராக இருக்க நீ சுய உணர்வுடன் இருக்க வேண்டும். அவ்வாறு எப்போதும் இருக்கிறாயா?

**கே:** தூங்கும்போது இல்லை. மயக்கமடைந்த போதும், போதையில் இருக்கும்போதும் இல்லை.

**ம:** விழித்திருக்கும்போது நீ தொடர்ச்சியாக சுய உணர்வுடன் இருக்கிறாயா?

**கே:** இல்லை. சில சமயம் நான் மறதியுடனும், உள்ளுக்குள் ஆழ்ந்தும் இருக்கிறேன்.

**ம:** சுய விழிப்புணர்வின் இடைவெளிகளில் நீ ஒரு நபராக இருக்கிறாயா?

**கே:** ஆமாம், நான் தொடர்ந்து அதே நபர் தான். நான் நேற்றும், கடந்த வருடமும் எவ்வாறு இருந்தேனோ அது எனக்கு ஞாபகம் இருக்கிறது - அதே நபராகத்தான்.

**ம:** அப்படியானால் ஒரு நபராக இருக்க உனக்கு ஞாபகம் தேவை, அப்படித்தானே?

**கே:** ஆமாம்.

**ம:** ஞாபகம் இல்லையென்றால் நீ என்ன?

**கே:** முழுமையில்லாத ஞாபகம் முழுமையில்லாத நபரை உருவாக்குகிறது. ஞாபகம் இல்லை என்றால் நான் நபராக இருக்க முடியாது.

**ம:** உறுதியாக நீ ஞாபகம் இல்லாமல் இருக்கலாம். தூக்கத்தில் அவ்வாறு தான் இருக்கின்றாய்.

**கே:** உயிருடன் இருக்கும் அர்த்தத்தில். நபராக அல்ல.

**ம:** ஒரு நபராக நீ அவ்வப்போது மட்டுமே இருப்பதாக ஒப்புக் கொள்வதால், நீ நபராக இருப்பதாக உணரும் தருணங்களுக்கு இடையில் என்னவாக இருக்கிறாய் என்று சொல்ல முடியுமா?

**கே:** நான் இருக்கிறேன், ஆனால் நபராக அல்ல. இடை வேளைகளில் என்னைப் பற்றிய உணர்வு இல்லாததால் நான் இருப்பதாக மட்டுமே சொல்ல முடியும். ஆனால் நபராக அல்ல.

**ம:** அதைத் தனி நபரற்ற இருப்பு என்று சொல்லலாமா?

**கே:** உணர்வற்ற இருப்பு என்று சொல்வேன்; நான் இருக்கிறேன், ஆனால் இருப்பதாக எனக்குத் தெரியாது.

**ம:** 'நான் இருக்கிறேன், ஆனால் நான் இருப்பதாக எனக்குத் தெரியாது' என்று இப்போதுதான் சொன்னாய். உணர்வற்ற நிலையிலும் உன் இருப்பைப் பற்றி இவ்வாறு சொல்ல முடியுமா?

**கே:** இல்லை, முடியாது.

**ம:** 'எனக்குத் தெரியாது, எனக்கு உணர்வு இருக்கவில்லை' என்று ஞாபகமில்லாத அர்த்தத்தில் அதை இறந்த காலத்தில்தான் நீ விவரிக்க முடியும்.

**கே:** நான் உணர்வற்று இருந்ததால் எனக்கு எப்படி ஞாபகம் இருக்கும், என்ன ஞாபகம் இருக்கும்?

**ம:** நீ உண்மையாகவே உணர்வற்று இருந்தாயா அல்லது ஞாபகம் மட்டும் இல்லாமலா?

**கே:** எனக்கு எப்படித் தெரியும்?

**ம:** யோசி. நேற்றைய ஒவ்வொரு வினாடியும் உனக்கு ஞாபகம் இருக்கிறதா?

**கே:** இல்லை.

**ம:** அப்படியானால் நீ உணர்வற்று இருந்தாயா?

**கே:** இல்லை.

**ம:** அப்படியானால் நீ உணர்வுடன் இருந்தாய். ஆனாலும் உன்னால் ஞாபகம் வைத்திருக்க முடியவில்லை, அப்படித்தானே?

**கே:** ஆம்.

**ம:** தூக்கத்திலும் உனக்கு உணர்விருந்தது. ஞாபகம் மட்டும் இல்லை.

**கே:** இல்லை. எனக்கு உணர்வில்லை. நான் தூங்கிக் கொண்டு இருந்தேன். நான் உணர்வுள்ள மனிதனாக நடந்துகொள்ளவில்லை.

**ம:** உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** நான் தூங்கும் போது என்னைப் பார்த்தவர்கள் அவ்வாறு சொன்னார்கள்.

**ம:** அவர்களால் சொல்ல முடிந்தது எல்லாம் நீ கண்களை மூடிக் கொண்டு, இயல்பாக மூச்சு விட்டுக் கொண்டு, அமைதியாகப் படுத்திருந்தாய் என்பதுதான். அவர்களால் உனக்கு உணர்வு இருந்ததா, இல்லையா என்று சொல்ல முடியாது. உன் ஒரே அத்தாட்சி உன் சொந்த ஞாபகம் மட்டும்தான். மிகவும் உறுதி இல்லாத அத்தாட்சி அது.

**கே:** ஆமாம். நான் விழித்திருக்கும்போது தான் ஒரு நபராக இருக்கிறேன் என்று ஒத்துக் கொள்கிறேன். நடுவில் நான் என்னவாக இருக்கிறேன் என்று எனக்குத் தெரியாது.

**ம:** உனக்குத் தெரியாது என்பதாவது உனக்குத் தெரியும். விழித்திருக்கும் நேரங்களின் இடைவெளிகளில் நீ உணர்வற்று இருப்பதாகக் காண்பித்துக் கொள்வதால் இடைவெளிகளை விட்டு விடு. விழித்திருக்கும் நேரங்களை மட்டும் எடுத்துக் கொள்வோம்.

**கே:** நான் கனவிலும் அதே நபர் தான்.

**ம:** ஒப்புக் கொள்கிறேன். விழித்திருப்பதையும் கனவு காண்பதையும் ஒன்றாகக் எடுத்துக் கொள்வோம். வித்தியாசம் தொடர்ச்சியில் மட்டும்தான். உன் கனவுகள் ஒரே விதத்தில் தொடர்ச்சியாக, ஒவ்வொரு இரவும் அதே சுற்றுப்புறங்களையும் அதே மக்களையும் கொண்டு வந்தால் உனக்கு எது கனவு எது நனவு என்று தெரியாது. எனவே, இனிமேல் விழித்திருக்கும் நிலையைப் பற்றிப் பேசினால் கனவு நிலையையும் சேர்த்துக் கொள்வோம்.

**கே:** ஒப்புக் கொள்கிறேன். ஒரு உலகத்துடன் உணர்வுத் தொடர்புடைய ஒரு நபர் நான்.

**ம:** உலகமும் அதனுடன் நீ கொண்டுள்ள உணர்வுத் தொடர்பும் ஒரு நபராக நீ இருக்க அவசியமா?

**கே:** நான் ஒரு குகையில் அடைபட்டிருந்தாலும் ஒரு நபராகவேதான் இருப்பேன்.

**ம:** அது ஒரு உடலையும், குகையையும் குறிக்கிறது. அதோடு அவை இருக்கக் கூடிய ஒரு உலகத்தையும்.

**கே:** ஆமாம். உலகமும் உலகைப் பற்றிய விழிப்புணர்வும் நான் ஒரு நபராக இருக்க அவசியம்.

**ம:** இது நபரை உலகத்தின் பகுதியாக ஆக்குகிறது. அல்லது மாற்று எதிர் வகையில். அந்த இரண்டும் ஒன்றுதான்.

**கே:** விழிப்புணர்வு தனித்து நிற்கிறது. நபரும் உலகமும் விழிப்புணர்வில் தோன்றுகின்றன.

**ம:** நீ தோன்றுவதாகச் சொல்கிறாய். மறைவதாகவும் சொல்வாயா?

**கே:** இல்லை. என்னால் முடியாது. என்னையும் என் உலகத்தின் தோற்றத்தையும்தான் நான் அறிவேன். ஒரு நபராக 'இந்த உலகம் இல்லை' என்று என்னால் சொல்ல முடியாது. ஒரு உலகம் இல்லாமல் நான் அங்கு அதைச் சொல்ல இருக்க முடியாது.ஒரு உலகம் இருப்பதால்தான் 'ஒரு உலகம் இருக்கிறது' என்று என்னால் அங்கு சொல்ல முடிகிறது.

**ம:** அது வேறு மாதிரியாகவும் இருக்கலாம். உன்னால் தான் ஒரு உலகம் இருக்கிறது.

**கே:** எனக்கு அந்த வாக்கியம் அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது.

**ம:** அதன் பொருளற்ற தன்மை ஆராய்வதால் மறைந்துவிடும்.

**கே:** நாம் எங்கு தொடங்குவது?

**ம:** எனக்குத் தெரிந்ததெல்லாம் சார்ந்திருக்கும் எதுவும் நிஜமல்ல என்பதுதான். நிஜம் உண்மையாகச் சுதந்திரமானது. ஒரு நபரின் இருத்தல் உலகம் இருப்பதைச் சார்ந்தும், உலகத்தால் சூழப்பட்டும், வரையறுக்கப்பட்டும் இருக்கிறது. அதனால் அது நிஜமல்ல.

**கே:** உறுதியாக அது கனவல்ல.

**ம:** கனவும் கூட அடையாளம் காணப்பட்டு, மகிழ்வுடன் அனுபவிக்கப்பட்டு அல்லது உணரப்பட்டால்தான் இருக்கும். எதையெல்லாம் நீ நினைத்து உணர்கிறாயோ அதுவெல்லாம் இருக்கும். ஆனால் நீ எடுத்துக் கொள்ளும் விதத்தில் இல்லாமல் இருக்கலாம். நீ நபர் என்று நினைப்பது வேறுபட்ட ஒன்றாக இருக்கலாம்.

**கே:** என்னை என்னவாக அறிந்துள்ளேனோ அதுதான் நான்.

**ம:** உன்னை என்னவென்று நினைக்கிறாயோ அதுபோல இருப்பதாக உன்னால் ஒருபோதும் சொல்ல முடியாது. உன்னைப் பற்றிய உன் கருத்துக்கள் தினந்தோறும், கணம் தோறும் மாறுகின்றன. உன்னிடம் உள்ள மிகவும் மாறுகின்ற ஒன்று உன் சுய வடிவம். வழிப்போக்கர்கள்கூட அதை மாற்றிவிடலாம். ஒரு துக்கமான நிகழ்வு, வேலையை இழந்து விடுவது, ஒரு அவமரியாதை ஆகிய ஏதேனும் ஒன்றால் நீ நபர் என்று அழைக்கிற உன்னைப் பற்றிய உன் உருவகம் ஆழமாக மாறிவிடும். நீ என்னவென்று அறிய முதலில் நீ என்னவாக இல்லை என்று ஆராய வேண்டும். நீ என்னவாக இல்லை என்று அறிய உன்னை ஜாக்கிரதையாகக் கவனித்து, 'நான்' என்னும் அடிப்படை நிஜத்துடன் செல்லாத அனைத்தையும் ஒதுக்கி விட வேண்டும். நான் இந்த இடத்தில், இந்த நேரத்தில், இந்தப் பெற்றோருக்குப் பிறந்தேன், இப்போது நான் இன்ன பெயருடன் இருக்கிறேன், இங்கு வாழ்கிறேன், இன்னாரைத் திருமணம் செய்துள்ளேன், இன்னாருக்குத் தகப்பன், இன்னாரிடம் வேலை செய்கிறேன் என்பன போன்ற எதுவும் 'நான்' என்பதுடன் உள்ளார்ந்த ஒன்று அல்ல. நமது வழக்கமான மனப்பாங்கு 'நான் இன்னார்' என்பது. தொடர்ந்தும், விடாமுயற்சியுடனும் 'நான்' என்பதை 'இது' அல்லது 'அது' ஆகியவற்றிலிருந்து பிரி. 'இது'

அல்லது 'அது' என்றில்லாமல் வெறுமனே இருக்க, 'இருக்க' மட்டும் முயற்சி செய். நமது பழக்க வழக்கங்கள் அதற்கு எதிராகச் செல்லும். அதை எதிர்ப்பது சிலசமயம் நீண்ட காலம் எடுப்பது, கடினமானது. ஆனால் தெளிவான புரிந்துகொள்தல் மிகவும் உதவும். மன அளவில் உன்னைப் பற்றி எதிர்மறையாகத்தான் விவரித்துக் கொள்ள முடியும் என்று தெளிவாகப் புரிந்துகொண்டால் சீக்கிரமே உன் தேடல் முடிவிற்கு வந்து உன் எல்லையற்ற இருத்தலை அறிவாய்.



# 19. மெய் உள்ளபடியே இருப்பது

**கேட்பவர்:** நான்ஒரு ஓவியன். படங்கள் வரைந்து சம்பாதிக் கிறேன். ஆன்மீக நோக்கில்இதற்கு ஏதேனும்மதிப்பு உள்ளதா?

**மஹராஜ்:** நீ வரையும்போது எதைப்பற்றி நினைக்கிறாய்?

**கே:** நான் வரையும்போது ஓவியமும், நானும் மட்டுமே உள்ளோம்.

**ம:** நீ அங்கு என்ன செய்கிறாய்?

**கே:** நான் வரைகிறேன்.

**ம:** இல்லை. நீ வரைவதில்லை. நீ வரையப்படுவதைப் பார்த்துக் கொண்டு இருக்கிறாய். நீ கவனிக்க மட்டுமே செய்கிறாய். மற்ற அனைத்தும் தானாகவே நிகழ்கின்றன.

**கே:** படம் தானாகவே வரைந்துகொள்கிறதா? அல்லாமல் ஆழ்ந்த 'நான்' என்னும் ஒன்று அல்லது ஏதாவது கடவுள் வரைகிறாரா?

**ம:** விழிப்புணர்வே மிகப்பெரும் ஓவியர். இந்த முழு உலகமும் ஓவியம்.

**கே:** யார் இந்த உலக ஓவியத்தை வரைந்தது?

**ம:** ஓவியர் ஓவியத்தில் உள்ளார்.

**கே:** ஓவியம் ஓவியரின் மனதில் உள்ளது. ஓவியர் ஓவியத்தில் உள்ளார். அது ஓவியரின் மனதில் உள்ளது. அவர் ஓவியத்தில் உள்ளார். இந்த முடிவில்லாத நிலைகளும், பரிமாணங்களும் அபத்தமாக இல்லையா? நாம் மனதில் இருக்கும் ஓவியத்தைப் பற்றிப் பேச ஆரம்பிக்கும் கணத்தில், அந்த மனமே ஓவியத்தில் இருக்கும் போது, நாம் சாட்சிகளின் முடிவற்ற தொடர்ச்சியைப் பார்க்கிறோம். அதில் உயர்ந்த சாட்சி கீழான சாட்சியைப்

பார்க்கிறது. அது இரு கண்ணாடிகளுக்கு நடுவில் நின்றுகொண்டு கூட்டத்தைப் பார்த்து வியப்பதைப் போல் உள்ளது.

**ம:** மிகச் சரி, நீ தனித்து இருக்கிறாய். இரண்டு கண்ணாடிகள் உள்ளன. இரண்டிற்கும் இடையில் உன் வடிவமும், பெயர்களும் கணக்கற்றவை.

**கே:** நீங்கள் உலகத்தை எப்படிப் பார்க்கிறீர்கள்?

**ம:** நான் ஒரு ஓவியர் ஒரு ஓவியத்தை வரைவதைப் பார்க்கிறேன். ஓவியத்தை உலகம் என்றும், ஓவியரைக் கடவுள் என்றும் சொல்கிறேன். நான் இரண்டும் அல்ல. நான் உருவாக்குவதும் இல்லை. நான் உருவாக்கப்படவும் இல்லை. நான் அனைத்தையும் உள்ளடக்கியவன், எதுவும் என்னை உள்ளடக்கவில்லை.

**கே:** நான் ஒரு மரத்தை, ஒரு முகத்தை, ஒரு சூரிய அஸ்த்தமனத்தைப் பார்க்கும் போது படம் பூரணமாக உள்ளது. நான் என் கண்களை மூடினால் என் மனதில் உள்ள பிம்பம் மங்கலாகவும், குழப்பமாகவும் உள்ளது. என் மனம்தான் படங்களை உருவாக்குகிறது என்றால் பூவைப் பார்க்க நான் எதற்குக் கண்ணைத் திறக்க வேண்டும்? கண்ணை மூடும்போது ஏன் அதை உத்தேசமாகப் பார்க்க வேண்டும்?

**ம:** அது உன் அகக்கண்களை விட புறக்கண்கள் சிறப்பாக இருப்பதால்தான். உன் மனம் முழுவதும் வெளிப்புறமாகத் திரும்பி உள்ளது. உன் மன உலகத்தைக் கவனிக்கப் பழகிக் கொண்டால் அது கண்ணால் பார்ப்பதை விட வண்ணமயமாகவும், சரியாகவும் இருப்பதைப் பார்க்கலாம். இதற்குப் பயிற்சி தேவை. ஆனால் எதற்கு விவாதம் செய்ய வேண்டும்? நீ ஓவியத்தை உண்மையில் யார் வரைந்தாரோ அவரிடமிருந்துதான் வரவேண்டும் என்று கற்பனை செய்கிறாய். எப்போதும் நீ மூலத்தையும், காரணத்தையும் தேடுகிறாய். காரண காரியத் தன்மை மனதில்தான் உள்ளது; ஞாபகம் தொடர்ச்சி என்னும் ப்ரம்மையைக் கொடுக்கிறது. திரும்பத் திரும்ப நடப்பது காரண காரியத் தன்மையை உருவாக்குகிறது. திரும்பத் திரும்ப காரியங்கள் நடக்கும்போது நாம் ஒரு காரணத் தொடர்பு இருப்பதாக நினைக்கிறோம். அது ஒரு

மனப் பழக்கத்தை ஏற்படுத்துகிறது. ஆனால் பழக்கம் ஒரு தேவை அல்ல.

**கே:** நீங்கள் இப்போதுதான் உலகம் கடவுளால் படைக்கப் பட்டது என்று சொன்னீர்கள்.

**ம:** மொழி என்பது மனதின் ஒரு கருவி என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். அது மனதால், மனதிற்காக ஏற்படுத்தப்பட்டது. காரணத்தை ஒருமுறை ஒப்புக் கொண்டு விட்டால் கடவுள்தான் முடிவான காரணம்; உலகம் என்பது விளைவு. அவை வித்தியாசமானவை, ஆனால் தனித்தனியானவை அல்ல.

**கே:** மக்கள் கடவுளைப் பார்ப்பதைப் பற்றி பேசுகிறார்கள்.

**ம:** நீ உலகத்தைப் பார்க்கும் போது கடவுளைப் பார்க்கிறாய். கடவுளைப் பார்ப்பது உலகத்தைப் பார்ப்பதைவிட வேறானது அல்ல. கடவுளைப் பார்க்க வேண்டுமானால் கடவுளாகவே ஆக வேண்டும். 'நான்' என்னும் மிகச் சிறு பொறியின் வெளிச்சத்தில் எது கடவுளோ அந்த உலகத்தை நீ பார்க்கிறாய். அது வெளிப்படையாக மிகச் சிறியது. ஆனால் அறிதல் மற்றும் அன்பு செலுத்துதல் ஆகிய செயல்களில் அது முதலும் இறுதியுமாக இருப்பது.

**கே:** நான் கடவுளைப் பார்க்க உலகைப் பார்க்க வேண்டுமா?

**ம:** வேறு எப்படி? உலகம் இல்லை என்றால் கடவுள் இல்லை.

**கே:** என்ன மிஞ்சுகிறது?

**ம:** நீ பரிசுத்தமான இருத்தலாக மிஞ்சுகிறாய்.

**கே:** அப்போது உலகத்திற்கும், கடவுளுக்கும் என்ன நிகழ்கிறது?

**ம:** அவையும் பரிசுத்த இருத்தல், அவியக்தாவாக மிஞ்சுகின்றன.

**கே:** அதுவும், பரந்த பெருவெளியும் (பரமஹாஷ்) ஒன்றா?

**ம:** நீ அவ்வாறு சொல்லலாம். வார்த்தைகள் பொருட்டல்ல. ஏனெனில், அவை விளக்க முடியாது. 'இது அல்ல, அது அல்ல' (நேதி, நேதி) என்று சொல்லிப் பின்னோக்கித் திரும்புவதுதான் ஒரே வழி.

**கே:** நான் உலகத்தை எப்படிக் கடவுளாகப் பார்க்க முடியும்? உலகத்தைக் கடவுளாகப் பார்ப்பது என்பதின் அர்த்தம என்ன?

**ம:** அது ஒரு இருட்டு அறைக்குள் நுழைவதைப் போன்றது. நீ எதையும் பார்ப்பது இல்லை - நீ தொடலாம், ஆனால் நீ பார்க்க முடியாது, வர்ணங்கள் இல்லை, வடிவங்கள் இல்லை. ஜன்னலைத் திறந்தால் அறை வெளிச்சத்தால் நிரப்பப்படுகிறது. வர்ணங்களும் உருவங்களும் இருப்பிற்கு வருகின்றன. ஜன்னல் வெளிச்சத்தைக் கொடுக்கிறது. ஆனால் வெளிச்சத்திற்கு ஆதார மூலம் அதுவல்ல. சூரியன்தான் மூல ஆதாரம். அதைப்போல பொருள் இருட்டறையைப் போன்றது. விழிப்புணர்வு - ஜன்னல்-பொருள்மீது உணர்ச்சிகளையும் உணர்ந்தறிதல்களையும் வீசுகிறது. சூரியன்தான் உச்ச உயர்வு. அது பொருளுக்கும், ஒளிக்கும் மூல ஆதாரம். ஜன்னல் திறந்தோ மூடியோ இருக்கலாம்; ஆனால் சூரியன் எப்போதும் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. அது அறைக்கு எல்லா வித்தியாசத்தையும் கொடுக்கிறது. ஆனால் சூரியனுக்கு எதுவும் இல்லை. இருப்பினும் 'நான்' என்னும் மிகச்சிறிய ஒன்றிற்கு இவை எல்லாமே இரண்டாம்பட்சம். 'நான்' என்பது இல்லாமல் எதுவுமே இல்லை. எல்லா அறிவும் 'நான்' என்பதைப் பற்றியே. 'நான்' என்பதைப் பற்றிய தவறான கருத்து பந்தத்தை ஏற்படுத்தும். சரியான அறிவு சுதந்திரத்தையும் சந்தோஷத்தையும் அடையும்.

**கே:** 'நான்' என்பதும் 'அங்கு உள்ளது' என்பதும் ஒன்றா?

**ம:** 'நான்' என்பது உள்ளே குறிக்கிறது. 'அங்கு உள்ளது' என்பது வெளியே குறிக்கிறது. இரண்டும் இருத்தல் என்னும் உணர்வை அடிப்படையாகக் கொண்டவை.

**கே:** அதுவும், இருப்பு என்னும் அனுபவமும் ஒன்றா?

**ம:** இருப்பு என்பது, ஏதோ ஒன்றாக இருப்பது - ஒரு பொருளாக, ஒரு உணர்ச்சியாக, ஒரு எண்ணமாக, ஒரு கருத்தாக. எல்லா இருப்பவைகளும் குறிப்பிட்ட ஒவ்வொரு மாதிரியானவையே. ஒவ்வொரு இருத்தலும் மற்ற ஒவ்வொரு இருத்தலுடனும் ஒத்துப் போகும் தன்மையை உடையதால், இருத்தல் மட்டுமே பிரபஞ்ச மயமானது. இருப்புகள் மோதிக்கொள்ளும். இருத்தல் - ஒரு

போதும் மோதிக் கொள்ளாது. இருப்பு என்பது குறிப்பிட்ட ஒன்றாக ஆவது, மாற்றமடைவது, பிறப்பது, இறப்பது, மறுபடியும் பிறப்பது. ஆனால் இருத்தலில் அமைதியான சாந்தம் மட்டுமே இருக்கும்.

**கே:** *நான் உலகை உருவாக்கினால் அதை ஏன் மோசமாகப் படைத்தேன்?*

**ம:** ஒவ்வொருவரும் அவருடைய சொந்த உலகத்தில் வாழ்கிறார். எல்லா உலகங்களும் சமமாக நல்லவையோ, மோசமானவையோ அல்ல.

**கே:** *எது வித்தியாசத்தைத் தீர்மானிக்கிறது?*

**ம:** உலகத்தை உருவகப்படுத்தும் மனம் அது விரும்பும்படி வர்ணங்களைக் கொடுக்கிறது. நீ ஒருவரைச் சந்தித்தால் அவர் ஒரு அந்நியர். அவரை மணந்தால் அவர் உன்னில் ஒரு பகுதியாகி விடுகிறார். நீ சண்டைபோட்டு கொண்டால் அவர் உன் எதிரி ஆகி விடுகிறார். உன் மனப்பாங்குதான் அவர் உனக்கு என்னவாக இருக்கிறார் என்று தீர்மானிக்கிறது.

**கே:** *என் உலகம் அகச்சார்புடையதாக இருப்பதைப் பார்க்க முடிகிறது. அதனால் அது மாயத் தோற்றத்தைக் கொடுக்கிறதா?*

**ம:** அது அகச்சார்புடையதாக இருக்கும்வரை மாயத்தன்மை கொண்டதாகும் - அந்த அளவில் மட்டும். மெய் என்பது உள்ளபடியே இருப்பது.

**கே:** *உள்ளபடியே இருப்பது என்பது என்ன? நீங்கள் இந்த உலகம் அகச்சார்புடையது என்று சொன்னீர்கள். இப்போது உள்ளபடியே இருப்பதைப் பற்றிப் பேசுகிறீர்கள். எல்லாமும் அகச்சார்பு உடையவை அல்லவா?*

**ம:** எல்லாமும் அகச்சார்புடையவை. ஆனால் மெய் உள்ளபடியே இருப்பது.

**கே:** *எந்த அர்த்தத்தில்?*

**ம:** அது ஞாபகங்களையும், எதிர்பார்ப்புகளையும், ஆசைகளையும், அச்சங்களையும், விருப்பு வெறுப்புகளையும் (வாசனை

களையும், பழக்க வழக்கங்களையும்) சார்ந்து இருப்பதில்லை. எல்லாமும் அவை உள்ளவாறே பார்க்கப் படுகின்றன.

**கே:** அதைத்தான் நீங்கள் நான்காம்நிலை (துரியம்) என்று சொல்கிறீர்களா?

**ம:** எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள். அது கெட்டியானது, ஸ்திரமானது, மாற்றமில்லாதது, தோற்றமில்லாதது, முடிவில்லாதது, எப்போதும் புதியது, எப்போதும் மலர்ச்சியானது.

**கே:** எப்படி அதை அடைவது?

**ம:** ஆசையற்றும், அச்சமற்றும் இருப்பது உன்னை அங்கு கொண்டு போய்ச் சேர்க்கும்.



# 20. உச்ச உயர்வு அனைத்திற்கும் அப்பாற்பட்டது

**கேட்பவர்:** நீங்கள் மெய் என்பது ஒன்று என்கிறீர்கள். ஒருமைத் தன்மை, ஒற்றுமைத் தன்மை என்பவை தனி நபரின் குணாதிசயங்கள். அப்படியானால் மெய் என்பது பிரபஞ்சத்தை உடலாகக் கொண்ட ஒரு நபரா?

**மஹராஜ்:** நீ என்ன சொன்னாலும் அது சரி, தவறு ஆகிய இரண்டுமே ஆகும். வார்த்தைகள் மனதைக் கடந்து செல்ல முடியாது.

**கே:** நான் புரிந்துகொள்ளவே முயற்சிக்கிறேன். நீங்கள் எங்களிடம் நபர், மொத்த வெளிப்பாடு மற்றும் வெளிப்படாதது (வியக்தி, வியக்தா, அவியக்தா) ஆகியவற்றைப் பற்றிச் சொல்கிறீர்கள். தூய பிரக்ஞையின் ஒளி (பிரக்ஞா), சுயத்தின் (ஜீவாத்மா) மீது 'நான்' என்று குவிக்கப்படுகிறது, விழிப்புணர்வாக (சேத்தனா) மனதை (அந்தகரணாவை)ப் பிரகாசிக்கச் செய்கிறது. உயிராக (ப்ராணா) தேகத்திற்கு வலிவூட்டுகிறது. இவை எல்லாம் வார்த்தைகளுக்குச் சரி. ஆனால் என்னை நபராக வெளிப் பட்டதிலிருந்து பிரித்துப் பார்க்கும்போதும், வெளிப்பட்டதை வெளிப்படாததிலிருந்து பிரித்துப் பார்க்கும்போதும் குழப்பமாகி விடுகிறது.

**ம:** நபர் என்பது கருதப்படுகின்ற ஒன்று அல்ல. நீ ஒரு நபரைப் பார்க்கலாம். ஆனால் நீ நபர் அல்ல. நீ எப்போதும் சாட்சியாக ஒரு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும் தோன்றும் உச்ச உயர்வு. உச்ச உயர்வைப் பற்றிய தூய பிரக்ஞைக்கும், நபரின் எண்ணிறந்த விழிப்புணர்விற்கும் இடையில் நீ பாலமாக இருக்கிறாய்.

**கே:** நான் என்னைப் பார்க்கும்போது, இந்த உடலை உபயோகப்படுத்துபவர்களுக்குள்ளே சண்டையிட்டுக் கொள்ளும் பல நபர்களாகத் தெரிகிறேன்.

**ம:** அவை மனதின் பல்வேறு குணாதிசயங்களுடன் (சம்ஷ்காரங்களுடன்) ஒத்துப் போகின்றன.

**கே:** நான் அவற்றிற்குள் அமைதியை ஏற்படுத்த முடியுமா?

**ம:** எப்படி உன்னால் முடியும்? அவை மிகவும் முரண்பட்டிருக்கின்றன! அவற்றை அவை உள்ளபடியே பார் - வெறுமனே வழக்கமான எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகளாக, ஞாபகங்கள் மற்றும் உந்துதல்களின் கத்தையாக.

**கே:** இருப்பினும் அவை எல்லாம் 'நான்' என்று சொல்கின்றன.

**ம:** அது உன்னை அவற்றுடன் அடையாளப் படுத்திக் கொள்வதால்தான். உன் முன் தோன்றுபவை நீ ஆக முடியாது என்றும், அவை 'நான்' என்று சொல்ல முடியாது என்றும் நீ அறிந்துகொண்டால், நீ 'நபர்' என்று சொல்பவற்றிலிருந்தும், அவற்றின் நிர்பந்தங்களிலிருந்தும் விடுபடுவாய். 'நான்' என்னும் உணர்வு உனக்குச் சொந்தமானது. உன்னால் அதை விட்டு விட முடியாது. ஆனால் அதை எதன்மேலும் செலுத்தலாம் - நான் இளமையானவன், நான் பணக்காரன் என்று சொல்வதைப் போல. ஆனால் அந்தமாதிரியான சுய அடையாளங்கள் தவறானவை. அவைதான் பந்தத்திற்குக் காரணம்.

**கே:** இப்போது நான் நபர் இல்லை என்பதையும், ஆனால் எது நபரில் பிரதிபலிக்கப்படும்போது ஒரு இருத்தல் உணர்வைக் கொடுக்கிறதோ அதுதான் என்றும் புரிந்து கொண்டேன். இப்போது உச்ச உயர்வைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்? என்னை எந்த வழியில் உச்ச உயர்வாக அறிவேன்?

**ம:** விழிப்புணர்வின் ஆதாரம் விழிப்புணர்வில் ஒரு பொருளாக இருக்க முடியாது. ஆதாரத்தைத் தெரிந்துகொள்ள ஆதாரமாகவே இருக்க வேண்டும். நீ நபர் இல்லை என்றும், ஆனால் தூய, அமைதியான சாட்சி என்றும், பயமற்ற அந்தப் பிரக்ஞை உன்

இருத்தல் என்றும் நீ அறிந்து கொள்ளும்போது நீயே இருத்தலா கிறாய். அதுதான் ஆதாரம், தீராத சாத்தியக் கூறு.

**கே:** பல ஆதாரங்கள் இருக்கின்றனவா அல்லது ஒன்றே எல்லாவற்றிற்குமா?

**ம:** அது எந்தப் பக்கத்திலிருந்து நீ அதைப் பார்க்கிறாய் என்பதைப் பொறுத்தது. இந்த உலகத்தில் உள்ள பொருட்கள் பல. ஆனால் அவற்றைப் பார்க்கும் கண் ஒன்றுதான். கீழே இருப்பவர்களுக்கு மேலே இருப்பது ஒன்றாகவும், மேலே உள்ளவருக்குக் கீழே உள்ளவை பலவாகவும் எப்போதும் தோன்றும். ஒரு தாய் பல குழந்தைகள்.

**கே:** உருவங்களும் பெயர்களும் ஒரே கடவுளுக் குண்டானவையா?

**ம:** மறுபடியும் நீ எப்படி அதைப் பார்க்கிறாய் என்பதைப் பொறுத்தது. வார்த்தைகளில் சொல்லும் நிலையில் ஒவ்வொன்றும் சார்புடையவை. பூரணம் என்பது அனுபவிக்கப்பட வேண்டியது. விவாதிக்கப் படுவதல்ல.

**கே:** பூரணம் எவ்வாறு அனுபவிக்கப் படுகிறது?

**ம:** அது அடையாளம் கண்டுகொள்ளப்பட்டு, ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப்படும் ஒரு பொருள் அல்ல. அது தற்பொழுதிலும், உணர்விலும் உள்ளது. அதற்கு 'என்ன' என்பதைவிட 'எப்படி' என்பதில்தான் அதிக சம்பந்தம் உள்ளது. அது குணத்திலும், மதிப்பிலும் உள்ளது; எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பதால் அது எல்லாவற்றிலும் உள்ளது.

**கே:** அது ஆதாரம் என்றால் எதற்காக மற்றும் எப்படி அது தன்னை வெளிப்படுத்துகிறது?

**ம:** அது விழிப்புணர்வைப் பிறப்பிக்கிறது. மற்ற எல்லாமுமே விழிப்புணர்வில்தான் உள்ளன.

**கே:** ஏன் விழிப்புணர்வின் பல மையங்கள் உள்ளன?

**ம:** கணக்கற்ற வடிவங்களை உருவாக்குவதும், அழிப்பதுமாகப் பொருள் சார்ந்த பிரபஞ்சம் (மகாதஹாஷ்) எப்போதும் இயங்கிக்

கொண்டிருக்கிறது. எப்போதெல்லாம் ஒரு வடிவத்தில் உயிர் (பிராணா) செலுத்தப் படுகிறதோ, அப்போது பொருள் மீது பிரக்ஞை பிரதிபலிப்பதால் விழிப்புணர்வு (சேத்தனா) தோன்றுகிறது.

**கே:** உச்ச உயர்வு எவ்வாறு பாதிக்கப்படுகிறது?

**ம:** எது அதைப் பாதிக்க முடியும்? எவ்வாறு பாதிக்க முடியும்? ஆற்றின் மாறுபாடுகளால் அதன் மூலம் பாதிக்கப்படுவதில்லை. அதேபோல் ஆபரணத்தின் உருவத்தால் உலோகத்தின் தன்மை பாதிக்கப் படுவதில்லை. திரையில் தோன்றும் உருவத்தால் ஒளி பாதிக்கப் படுகிறதா? உச்ச உயர்வு எல்லாவற்றையும் சாத்திய மாக்குகிறது, அவ்வளவே.

**கே:** ஏன் சில காரியங்கள் நடக்கின்றன, சில நடப்பதில்லை?

**ம:** காரணத்தை அறிய முயற்சிப்பது மனதின் பொழுது போக்கு. காரணமும் காரியமும் இரண்டுபட்டவை அல்ல. ஒவ்வொன்றும் அதன் சொந்தக் காரணத்தைக் கொண்டுள்ளது.

**கே:** அப்படியானால் ஒன்றுக்கொன்று பயனுள்ள செயல் நடக்கச் சாத்தியமில்லையா?

**ம:** நான் சொல்வதெல்லாம் விழிப்புணர்வு எல்லாவற்றையும் உள்ளடக்கியது என்பதே. விழிப்புணர்வில் எல்லாமும் சாத்தியம். உன் உலகத்தில், உனக்குத் தேவையென்றால் நீ காரணங்களைக் கொண்டிருக்கலாம். மற்றவர், கடவுளின் விருப்பம் என்னும் ஒரே காரணத்துடன் திருப்தி அடையலாம். மூல காரணம் ஒன்றுதான்:'நான்' என்னும் உணர்வு.

**கே:** மொத்த வெளிப்பாட்டிற்கும் (வியக்தாவிற்கும்), வெளிப் படாததிற்கும் (அவியக்தாவிற்கும்) உள்ள தொடர்பு என்ன?

**ம:** வியக்தாவின் பார்வையில் உலகம் என்பது அறிந்தது. உச்ச உயர்வு அறியப்படாதது. அறியப்படாதது அறிந்ததைப் பிறப்பிக்கிறது. ஆனாலும் அறியப்பாடாததாகவே இருக்கிறது. அறிந்தது அளவற்றது. ஆனால் அறியப் படாதது அளவற்றவைகளின் அளவற்றது. எப்படி ஒரு ஒளிக்கற்றையைத் தூசியினால்

குறுக்கிட்டால் ஒழிய பார்க்க முடியாதோ, அதே போல் உச்ச உயர்வு ஒவ்வொன்றையும் அறியச் செய்கிறது, அறியப்படாததாக இருந்துகொண்டே.

**கே:** உச்ச உயர்வானது அணுக முடியாதது என்று அதற்கு அர்த்தமா?

**ம:**இல்லை, இல்லை. உச்ச உயர்வு அடைவதற்கு மிகவும் எளிதானது. ஏனெனில் அதுதான் உன் சொந்த இருத்தல். உச்ச உயர்வைத் தவிர வேறு எதைப்பற்றிச் சிந்திப்பதையும், ஆசைப் படுவதையும் நிறுத்திவிட்டால் போதும்.

**கே:** எதற்குமே, உச்ச உயர்விற்குக் கூட நான் ஆசைப்படாமல் இருந்தால்?

**ம:** அப்படியானால் நீ இறந்ததைப் போல.

**கே:**உலகம் ஆசைகளால் நிறைந்துள்ளது; ஒவ்வொருவரும் ஏதோ ஒன்றை வேண்டுகின்றனர். யார் ஆசைப்படுபவர்? நபரா அல்லது வியக்தாவா?

**ம:** வியக்தா. புனிதமான மற்றும் புனிதமற்ற எல்லா ஆசைகளும் சுயத்திலிருந்துதான் வருகின்றன; அவை எல்லாம் 'நான்' என்னும் உணர்வில் தொங்குகின்றன.

**கே:** புனிதமான ஆசைகள் (சத்ய காமா) நபரில், சத் - சித் - ஆனந்தத்தின் பேரின்ப குணாதிசய வெளிப்பாடாக இருப்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் புனிதமற்ற ஆசைகள் எதனால் வருகின்றன?

**ம:** எல்லா ஆசைகளும் மகிழ்ச்சிக்காகவே. அவற்றின் வடிவங்களும், தன்மைகளும் உளப் பாங்கை (அந்தகர்ணாவை)ப் பொருத்து உள்ளன. எங்கு தாமச குணம் மேலோங்கி இருக்கிறதோ அங்கு வக்கிரங்களை நாம் பார்க்கிறோம். ராஜச குணத்துடன் விருப்பங்கள் தோன்றுகின்றன. சாத்வீக குணத்தின் குறிக்கோளாக நல்லெண்ணம், வாஞ்சை, சந்தோசப்படுவதைவிட சந்தோசப் படுத்த வேண்டும் என்னும் உந்துதல் இருக்கும். ஆனால் உச்ச உயர்வு எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ளது. இருப்பினும் அதன்

அளவற்ற ஊடுருவும் திறத்தால் எல்லா நம்பத் தகுந்த ஆசைகளும் நிறைவேற்றப்படலாம்.

**கே:** *எந்த ஆசைகள் நம்பத் தகுந்தவை?*

**ம:** எந்த ஆசைகள் அவற்றை கொண்டிருப்பவரையோ அல்லது எதன் மீது பிரயோகிக்கப் படுகிறதோ அதையோ அழிக்கின்றனவோ அல்லது திருப்தி அடைந்தும் தணியவில்லையோ அவை சுய முரண்பாடுள்ளவை. அவற்றை நிறைவேற்ற முடியாது. அன்பு, நல்லெண்ணம், வாஞ்சை ஆகியவற்றால் உந்தப்படும் ஆசைகள் மட்டுமே அவற்றைக் கொண்டிருப்பவருக்கும், அவை எதன் மீது செலுத்தப்படுகிறனவோ அதற்கும் நன்மை அளிப்பவை. அவை முழுவதும் திருப்திப் படுத்தப்படுபவை.

**கே:** *புனிதமான மற்றும் புனிதமற்ற எல்லா ஆசைகளும் வலி மிகுந்தவைதான்.*

**ம:** அவை ஒரே மாதிரியானவை அல்ல. வலியும் ஒன்றே அல்ல. ஆசை வலி மிகுந்தது. கருணை ஒருபோதும் வலி உடையது அல்ல. முழுப் பிரபஞ்சமும் கருணையினால் பிறக்கும் ஆசையை நிறைவேற்ற முயற்சிக்கும்.

**கே:** *உச்ச உயர்வு தன்னை அறியுமா? நபரற்றது உணர்வுள்ளதா?*

**ம:** எல்லாவற்றிற்குமான ஆதாரம் எல்லாவற்றையும் கொண்டுள்ளது. அதிலிருந்து எது ஊற்றெடுத்தாலும் அது விதை வடிவத்தில் முன்பே அங்கு இருக்க வேண்டும். எப்படி ஒரு விதை எண்ணற்ற விதைகளில் கடைசியாகவும், கணக்கற்ற காடுகளுக் குண்டான அனுபவத்தையும், சாத்தியத்தையும் கொண்டுள்ளதோ அப்படி, அறியாதது, நிகழ்ந்த எல்லாவற்றையும், நிகழ்ந்திருக்கக் கூடியவற்றையும், நிகழக் கூடிய அல்லது நிகழப் போகிற எல்லா வற்றையும் கொண்டுள்ளது. உருவாகக் கூடிய முழுப் பரப்புமே திறந்தும், அணுகக் கூடியதாகவும் இருக்கிறது; கடந்த காலத்தவையும், எதிர் காலத்தவையும் சாசுவதமான தற்பொழுதில் உள்ளன.

**கே:** *நீங்கள் உச்ச உயர்வான அறியாததில் வாழ்கிறீர்களா?*

**ம:** வேறு எங்கு வாழ்கிறேன்?

**கே:** *எது உங்களை இவ்வாறு சொல்ல வைக்கிறது?*

**ம:** எந்த விதமான ஆசையும் ஒருபோதும் என் மனதில் தோன்றுவதில்லை.

**கே:** *அப்படியானால் நீங்கள் உணர்வற்றவரா?*

**ம:** கண்டிப்பாக இல்லை! நான் முழுவதும் உணர்வுடன் இருக்கிறேன். ஆனால் எந்த ஆசையும் அச்சமும் என் மனதில் நுழையாமல் இருப்பதால் பூரணமான நிசப்தம் இருக்கிறது.

**கே:** *யார் அந்த நிசப்தத்தை அறிவார்?*

**ம:** நிசப்தம் தன்னையே அறியும். அது பிரியங்களும், ஆசைகளும் இல்லாமல் போகும்போது இருக்கும் நிசப்தமான மனதின் நிசப்தம்.

**கே:** *நீங்கள் எப்போதாவது ஆசைப் பட்டிருக்கிறீர்களா?*

**ம:** ஆசைகள் வெறுமனே மனதில் உள்ள அலைகள். நீ ஒரு அலையைப் பார்க்கும்போதுதான் அதை அறிவாய். ஒரு ஆசை பலவற்றில் வெறுமனே ஒன்றுதான். அதைத் திருப்திப் படுத்த எனக்கு எந்த உந்துதலும் ஏற்படுவதில்லை. அதற்காக எந்தச் செயலும் செய்ய வேண்டியதில்லை. ஆசையிலிருந்து விடுதலை என்பது இதுதான்: அதைத் திருப்திப் படுத்த வேண்டும் என்னும் நிர்பந்தம் இல்லாமல் போவது.

**கே:** *ஏன் ஆசைகள் தோன்றுகின்றன?*

**ம:** ஏனெனில் நீ பிறந்துள்ளதாகவும், உன் உடலைக் கவனிக்காமல் விட்டுவிட்டால் இறந்து போய் விடுவாய் என்றும் நீ கற்பனை செய்கிறாய். உடலுடன் கூடிய இருத்தலுக்கான ஆசைதான் தொல்லைகளின் மூல காரணம்.

**கே:** *இருப்பினும் பல ஜீவர்கள் உடலை அடைகிறார்கள். கண்டிப்பாக அது தீர்மானிப்பதில் உள்ள சில தவறாக இருக்க முடியாது. அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும். அது என்னவாக இருக்க முடியும்?*

**ம:** தன்னை அறிய, ஆத்மாவிற்கு எதிராக அனாத்மா இருக்க வேண்டும். ஆசை அனுபவத்திற்கு வழி வகுக்கிறது. விவேகம்,

பற்றற்ற தன்மை, ஸ்வரூப ஞானம், முக்தி ஆகியவற்றிற்கு அனுபவம் வழி வகுக்கிறது. விடுதலை என்பது என்ன? நீ பிறப்பிற்கும், இறப்பிற்கும் அப்பாற்பட்டவன் என்று அறிவது. நீ யார் என்பதை மறந்து, உன்னை ஒரு இறக்கக் கூடிய உயிரினமாகக் கற்பனை செய்துகொள்வதால் நீ உனக்கு அவ்வளவு தொந்தரவுகளை உருவாக்கி உள்ளாய். அதிலிருந்து நீ ஒரு கெட்ட கனவிலிருந்து விழிப்பது போல் விழிக்க வேண்டும்.

விசாரமும் கூட உன்னை விழிக்கச் செய்யும். நீ துன்பதிற்காகக் காத்திருக்க வேண்டியதில்லை; சந்தோஷத்திற்கு உள்ளேயான விசாரம் சிறந்தது. ஏனெனில் மனம் அப்போது ஒத்திசைவுடனும், அமைதியாகவும் இருக்கும்.

**கே:** *சரியாக யார் முடிவான அனுபவிப்பவர் - வியக்தாவா அல்லது அவியக்தாவா (உச்ச உயர்வா)?*

**ம:** கண்டிப்பாக வியக்தாதான்.

**கே:** *அப்படியானால் ஏன் உச்ச உயர்வான அறியப்படாததை நுழைக்க வேண்டும்?*

**ம:** வியக்தாவை விளக்க.

**கே:** *ஆனால் வியக்தாவிற்கு அப்பால் ஏதாவது உள்ளதா?*

**ம:** வியக்தாவிற்கு வெளியே எதுவும் இல்லை. எல்லாமும் ஒன்றே. எல்லாமும் 'நான்' என்பதில் அடங்கி உள்ளன. விழித்த மற்றும் கனவு நிலைகளில் அது நபர். ஆழ்ந்த தூக்கத்திலும், துரியத்திலும் அது வியக்தா. துரியத்தின் உஷாரான கவனிப்பிற்கு அப்பால் உச்ச உயர்வின் மிக உயர்வான, நிசப்தமான அமைதி இருக்கிறது. ஆனால் எல்லாமும் சாரத்தில் ஒன்று; தோற்றத்தில் சார்ந்துள்ளவை. அறியாமையில் பார்ப்பவர் பார்த்ததாகிறார். அறிவு நுட்பத்தில் அவர்தான் பார்க்கும் செயல்.

ஆனால் எதற்காக உச்ச உயர்வைப் பொருட்படுத்த வேண்டும்? அறிபவரை அறி. எல்லாமும் அறியப்படும்.

## 21. நான் யார்?

**கேட்பவர்:** மெய்யைக் கடவுளாகவோ அல்லது பரிபூரண மனிதனாகவோ உருவகப்படுத்தி வணங்குமாறு அறிவுறுத்தப் படுகிறோம். மூளையைச் சார்ந்த விழிப்புணர்விற்கு மிகவும் கடினமாதலால் பூரணத்தை வணங்க முயற்சி செய்யவேண்டாம் என்று எங்களுக்குச் சொல்லப் படுகிறது.

**மஹராஜ்:** மெய் எளிமையானது, எல்லோருக்கும் கிடைக்கக் கூடியது. அதை நீ ஏன் சிக்கலாக்குகிறாய்? மெய் என்பது அன்பு செலுத்துவதும், அன்புக்குரியதும் ஆகும். அது எல்லாவற்றையும் உள்ளடக்கியது, ஏற்றுக் கொள்வது, புனிதப் படுத்துவது. மெய்யற்றதுதான் கடினமானது. பிரச்சனைகளுக்குக் காரண மானது. அது எப்போதும் தேவையோடு இருக்கிறது, எதிர் பார்க்கிறது, வேண்டுகிறது. மெய்யற்றதாய் இருப்பதால் அது காலியானது, எப்போதும் உறுதிப் படுத்துவதையும், மறுஒப்பு தலையும் தேடுகிறது. அது விசாரத்தைப் பார்த்து பயப் படுகிறது, தவிர்க்கிறது. ஒரு துணை எவ்வளவுதான் திராணி அற்றும் தற்காலிகமானதாகவும் இருந்தாலும் அதைத் தன்னோடு இனம் கண்டு கொள்கிறது. எது கிடைத்தாலும் அதை இழந்துவிட்டு மேலும் கேட்கிறது. அதனால் மனஉணர்வின் மேல் நம்பிக்கை வைக்காதே. நீ பார்க்கும், உணரும், எண்ணும் எதுவுமே அவ்வாறு இல்லை. பாவமும், புண்ணியமும், உயர்ந்தவையும், தாழ்ந்தவையும் கூட அவை தெரிவது போல இல்லை. சாதாரணமாக நல்லவையும், கெட்டவையும் பழக்க வழக்கத்தையும், வழிமுறைகளையும் பொறுத்தவை. வார்த்தைகள் உபயோகப் படுத்தப்படுவதைப் பொறுத்து அவை வரவேற்கவோ, வெறுக்கவோ படுகின்றன.

**கே:** நல்ல ஆசைகள், கெட்ட ஆசைகள் என்றும், உயர்ந்த ஆசைகள், தாழ்ந்த ஆசைகள் என்றும் இல்லையா?

**ம:** எல்லா ஆசைகளும் மோசமானவை. சில ஆசைகள் மற்றவைகளை விட மிகவும் மோசமானவை. எந்த ஆசையைக் கொண்டிருந்தாலும் அது துன்பத்தைத்தான் தரும்.

**கே:** ஆசையற்று இருக்கவேண்டும் என்னும் ஆசையுமா?

**ம:** ஆசை என்ற ஒன்று எதற்காக வேண்டும்? விடுதலையான நிலைக்கு ஆசைப்படுவது உன்னை விடுவிக்காது. எதுவுமே உன்னை விடுதலை அடையச் செய்யாது. ஏனெனில் நீ விடுதலை அடைந்தே இருக்கிறாய். உன்னை ஆசை அற்ற தெளிவான பார்வையில் நீ பார். அவ்வளவு தான்.

**கே:** தன்னை அறிய நீண்ட காலம் தேவைப் படுகிறது.

**ம:** காலம் எப்படி உனக்கு உதவும்? காலம் என்பது அடுத்தடுத்து வரும் கண நேரங்களின் தொடர்ச்சியே; ஒவ்வொரு கணமும் ஒன்றுமில்லாததில் இருந்து தோன்றுகிறது, ஒன்றுமில்லாததில் மறைகிறது, திரும்ப எப்போதும் தோன்றுவதில்லை. கடந்து போகும் ஒன்றின் மேல் எப்படி நிலையான ஒன்றை உன்னால் கட்ட முடியும்?

**கே:** எது நிலையானது?

**ம:** நிலையானதை அறிய உனக்குள் பார். உனக்குள் ஆழமாகச் சென்று, எது மெய்யானது என்று பார்.

**கே:** எனக்குள் எப்படிப் பார்ப்பது?

**ம:** எது நடந்தாலும் அது உனக்கு நடக்கிறது. நீ எதைச் செய்தாலும் செய்பவர் உனக்குள் இருக்கிறார். நீ நபர் என்று சொல்வதற்கான கருத்தைக் கண்டுபிடி.

**கே:** நான் வேறு என்னவாக இருக்க முடியும்?

**ம:** கண்டுபிடி. நீயே சாட்சி, அமைதியாகக் கவனிப்பவர் என்று நான் சொன்னாலும், உன் இருப்பிற்கான வழியை நீயே கண்டு பிடிக்காதவரை அது பொருளற்றது.

**கே:** ஒருவர் தன் இருப்பை எப்படிக் கண்டுபிடிப்பது என்பது தான் என் கேள்வி.

ம: எல்லாக் கேள்விகளையும் விட்டு விடு - நான் யார்? என்னும் கேள்வியைத் தவிர. நீ உள்ளாய் என்பதுதான் நீ உறுதியாக நம்பும் ஒரே நிஜம். 'நான்' என்பது உறுதி. 'நான் இது' என்பது அல்ல. மெய்யாக நீ யார் என்று கண்டுபிடிக்க முயற்சி செய்.

கே: கடந்த அறுபது வருடங்களாக நான் வேறு எதுவும் செய்வதில்லை.

ம: முயற்சி செய்வதில் என்ன தவறு? எதற்காக முடிவுகளை எதிர்பார்க்கிறாய்? முயற்சி செய்வதுதான் உன் இயல்பு.

கே: முயற்சி செய்வது வேதனையாக இருக்கிறது.

ம: நீ முடிவுகளை எதிர்பார்த்து அதை அவ்வாறு செய்கிறாய். முடிவை எதிர்பார்க்காமல் முயற்சி செய். பேராசை இல்லாமல் போராடு.

கே: கடவுள் ஏன் என்னை இவ்வாறு படைத்தார்?

ம: எந்தக் கடவுளைப் பற்றி நீ பேசுகிறாய்? கடவுள் என்பது என்ன? நீ இந்தக் கேள்வியைக் கேட்பதற்கான ஆதாரம் அவர் இல்லையா? 'நான்' என்னும் உணர்வு கடவுள். தேடுதல் என்பதும் கூட கடவுள். தேடுவதன் மூலம் நீ மனமோ, உடலோ அல்ல என்று அறிவாய். தனக்குள் இருக்கும் சுயத்தின் மேல் வைத்திருக்கும் அன்பு எல்லோருக்குள்ளும் இருக்கும் சுயத்தின் மேல் கொண்ட அன்பாகும். அந்த இரண்டும் ஒன்றே. உனக்குள் இருக்கும் விழிப்புணர்வும் எனக்குள் இருக்கும் விழிப்புணர்வும் வெளிப் படையாக இரண்டாகத் தோன்றினாலும், மெய்யாக ஒன்றுதான். அவை இணைபவை. அதுதான் அன்பு.

கே: நான் எப்படி அதைக் கண்டு பிடிப்பது?

ம: நீ இப்போது எதன் மீது அன்பு செலுத்துகிறாய்? 'நான்' என்பதன் மீது. உன் முழு மனதையும், இதயத்தையும் அதன் மீது செலுத்து. வேறு எதையும் நினைக்காதே. இயல்பாகவும், பிரயத் தனம் இல்லாமலும் இருக்கும்போது இதுதான் மிக உயர்ந்த நிலை. அதில் அன்பு என்பது அன்பைச் செலுத்துபவரும், அன்பைப் பெறுபவரும் ஆகும்.

**கே:** ஒவ்வொருவரும் வாழவும் இருக்கவும் வேண்டுகிறார்கள். இது சுய-அன்பு அல்லவா?

**ம:** எல்லா ஆசைகளும் சுயத்தையே மூலமாகக் கொண்டிருக்கின்றன. சரியான ஆசையைத் தேர்ந்தெடுப்பது என்பதுதான் முக்கியம்.

**கே:** எது சரி, எது தவறு என்பது பழக்க வழக்கங்களையும், மரபுகளையும் சார்ந்தது. சமுதாயங்களைப் பொறுத்து நிலைப்பாடுகள் வேறுபடுகின்றன.

**ம:** பாரம்பரியமான நிலைப்பாடுகளைத் தள்ளிவிடு. அவற்றை பம்மாத்து செய்பவர்களிடம் விட்டு விடு. உன்னை எது ஆசைகளில் இருந்தும், அச்சத்திலிருந்தும், தவறான கருத்துக்களிலிருந்தும் விடுவிக்கிறதோ அது நல்லது. பாவத்தைப் பற்றியும், புண்ணியத்தைப் பற்றியும் கவலைப் படும் வரை உனக்கு அமைதி கிடைக்காது.

**கே:** பாவ புண்ணியங்கள் சமுதாய அளவுகோல்கள் என்று ஒப்புக் கொள்கிறேன். ஆனால் ஆன்மீகப் பாவங்களும் புண்ணியங்களும் இருக்கலாம். நான் ஆன்மிகம் என்று சொல்வது பூரணத்தை (ABSOLUTE). பூரணமான பாவம், பூரணமான புண்ணியம் என்று ஏதாவது உண்டா?

**ம:** பாவமும், புண்ணியமும் ஒரு தனி நபரைக் குறித்தே சொல்லப்படுகின்றன. ஒரு பாவியான அல்லது புண்ணியமுடைய நபர் இல்லாமல் பாவம், அல்லது புண்ணியம் என்பவை என்ன? பூரணத்தின் நிலையில் நபர்கள் கிடையாது; தூய பிரக்ஞைக் கடல் பாவமானதோ, புண்ணியமானதோ அல்ல. பாவமும் புண்ணியமும் ஒன்றோடு ஒன்று எப்போதும் சார்புடையவை.

**கே:** நான் அம்மாதிரியான தேவையில்லாத கருத்துக்களிலிருந்து விடுபட முடியுமா?

**ம:** உன்னை ஒரு நபராகக் கருதிக் கொண்டிருக்கும் வரை முடியாது.

**கே:** எந்தக் குறிப்பை வைத்து நான் பாவ புண்ணியங்களுக்கு அப்பாற்பட்டவன் என்று அறிவது?

**ம:** எல்லா ஆசைகளிலிருந்தும், அச்சங்களிலிருந்தும் விடுபட்டு இருப்பதாலும், நபராக இருப்பதான கருத்திலிருந்து விடுபட்டு இருப்பதாலும். 'நான் பாவி', 'நான் பாவி அல்ல' என்னும் கருத்துக்களை ஊக்குவிப்பது பாவம். ஒருவரை குறிப்பிட்ட ஒன்றுடன் அடையாளம் காண்பதுதான் பாவம். வியக்தாதான் மெய். தனிப்பட்டது தோன்றி மறையும். 'நான்' என்பது தனித்துவமற்ற 'இருத்தல்'. 'நான் இது' என்பது தனிநபர் (PERSON). தனி நபர் என்பது சார்புடையது. 'தூய இருத்தல்' - அடிப்படையானது.

**கே:** கண்டிப்பாகத் தூய இருத்தல் உணர்வற்றது அல்ல. பாகுபாடுகள் அற்றதும் அல்ல. எப்படி அது பாவ புண்ணியங்களுக்கு அப்பால் இருக்கும்? தயவு செய்து அதற்கு புத்திக் கூர்மை உள்ளதா இல்லையா என்பதை எங்களுக்குச் சொல்லுங்கள்.

**ம:** இந்தக் கேள்விகள் எல்லாம் உன்னை ஒரு தனி நபராகக் கருதிக் கொள்வதால் ஏற்படுபவை. உன் தனிப்பட்ட தன்மையைக் கடந்து பார்.

**கே:** நபராக இருப்பதை நிறுத்து என்று நீங்கள் சொல்வதற்கு என்ன அர்த்தம்?

**ம:** உன் இருத்தலை நான் நிறுத்தச் சொல்லவில்லை - அது உன்னால் முடியாது. நான் உனக்குச் சொல்வதெல்லாம் நீ பிறந்ததாகவும், உனக்குப் பெற்றோர்கள் இருப்பதாகவும், நீ ஒரு உடல் என்றும், நீ இறந்து விடுவாய் என்றும் இது போல பலவற்றைக் கற்பனை செய்வதை நிறுத்து என்றுதான். வெறுமனே முயற்சி செய். ஆரம்பி - நீ நினைப்பதைப் போல் அது கடினமானது அல்ல.

**கே:** ஒருவரைத் தனிப்பட்டவராக நினைப்பது நபரற்ற தன்மையின் பாவம்.

**ம:** மறுபடியும் தனிப்பட்ட கருத்து! நீ ஏன் நபரற்ற தன்மையை உன் பாவ புண்ணியக் கருத்துக்களால் மாசு படுத்தப் பார்க்கிறாய்? அது பொருந்தாது. நபரற்ற தன்மையை நல்லது, கெட்டது என்னும் கருத்துக்களால் விவரிக்க முடியாது. அது இருப்பு - நுண்அறிவு - அன்பு - எல்லாமே பூரணம். அதுபோல உச்ச உயர்வான நிலையில்

அது பூரணமாக உள்ளது. அங்கு பாவத்திற்கு என்ன சாத்தியம்? புண்ணியம் என்பது பாவத்திற்கு எதிரானது மட்டுமே.

**கே:** நாம் இறைத்தன்மையுடைய புண்ணியத்தைப் பற்றிப் பேசுகிறோம்.

**ம:** உண்மையான புண்ணியம் இறைத்தன்மை உடையது. மெய்யாக நீ என்னவோ அதுதான் உன் புண்ணியம். ஆனால் பாவத்திற்கு எதிரானதாக நீ சொல்லும் புண்ணியம் பயத்தினால் ஏற்படும் பணிவினால் வருவது.

**கே:** பிறகு ஏன் நல்லவனாக இருக்க எல்லா முயற்சியும்?

**ம:** அது உன்னை இயங்க வைக்கிறது. நீ கடவுளைக் காணும் வரையில் மேலும் மேலும் பயணிக்கிறாய். பிறகு கடவுள் உன்னை தனக்குள் எடுத்துக்கொள்கிறார் - அவரைப் போல உன்னை ஆக்குகிறார்.

**கே:** ஒரே செயல் ஓரிடத்தில் சரியானதாகவும் மற்றோரிடத்தில் பாவமானதாகவும் கருதப் படுகிறது. எது அதைப் பாவமான தாக்குகிறது?

**ம:** நீ உன் நல் அறிவிற்கு எதிராக எதைச் செய்கிறாயோ அது பாவமானது.

**கே:** அறிவு ஞாபகத்தைச் சார்ந்தது.

**ம:** உன்னை ஞாபகத்தில் இருத்திக் கொள்வது புண்ணியம். உன்னை மறப்பது பாவம். இவை எல்லாம் ஆன்மாவிற்கும், பொருளுக்கும் இடையே உள்ள மனம் அல்லது உளவியல் இணைப்பாக முடிகின்றன. நாம் அந்த இணைப்பை 'அந்தகர்ணா' என்று சொல்லலாம். அந்தகர்ணா முதிர்ச்சி இல்லாமலும், முன்னேறாமலும், மிகவும் பின் தங்கியும் இருக்கும் போது மாயைகளில் சிக்குறும். அது அளவிலும் நுட்பத்திலும் வளரும் போது தூய பொருட் தன்மைக்கும், தூய ஆன்மாவிற்கும் சரியான இணைப்பாக மாறி, பொருளுக்கு அர்த்தத்தையும், ஆன்மாவை வெளிப்படுத்துவதாகவும் ஆகிறது.

மகாதகாஷ ும், பரமகாஷ ும் இருக்கின்றன. இவற்றிற்கு இடையே சித்தகாஷ் உள்ளது. அதுவே பிரபஞ்ச இதயமுமாகும் (பிரேமகாஷ்). புத்திசாலித்தனமான அன்பு இவை இரண்டையும் ஒன்றாக்குகிறது.

**கே:** சிலர் முட்டாள்களாகவும், சிலர் புத்திசாலிகளாகவும் இருக்கின்றனர். வேறுபாடு அவர்களின் உளப்பாங்கில் உள்ளது. பண்பட்டவர்கள் மிகுந்த அனுபவங்களைக் கொண்டுள்ளனர். எப்படி ஒரு குழந்தை உண்டு, உறங்கி, விளையாடி வளர்கிறதோ அப்படி ஒரு மனிதனின் உளப்பாங்கு, அவனுடைய ஆன்மாவிற்கும் உடலுக்கும் பாலமாக இயங்கக் கூடியதாகும் வரை அவனுடைய எல்லாச் சிந்தனைகள், உணர்ச்சிகள், செயல்கள் ஆகியவற்றால் வடிவமைக்கப்படுகிறது. எப்படி ஒரு பாலம் கரைகளுக்கு இடையே போக்குவரத்தை அனுமதிக்கிறதோ அப்படி உளப்பாங்கு ஆதாரத்தையும், அதன் வெளிப்பாட்டையும் ஒன்று சேர்க்கிறது.

**ம:** அதை அன்பு என்று சொல். அந்தப் பாலம் அன்பு.

**கே:** முடிவாக எல்லாமும் அனுபவங்களே. நாம் சிந்திப்பது, உணர்வது, செய்வது எல்லாமுமே அனுபவம்தான். அதற்குப் பின்னால் அனுபவிப்பவர் இருக்கிறார். எனவே நமக்குத் தெரிந்த எல்லாமும், அனுபவிப்பவர் மற்றும் அனுபவம் ஆகிய இரண்டையும் கொண்டுள்ளது. ஆனால் உண்மையில் இரண்டுமே ஒன்றுதான் - அனுபவிப்பவர் மட்டுமே அனுபவம். இருப்பினும் அனுபவிப்பவர் அனுபவத்தை வெளியே இருப்பதாக எடுத்துக் கொள்கிறார். அதேபோல ஆன்மாவும் உடலும் ஒன்றே; அவை இரண்டுபோல் தோன்ற மட்டுமே செய்கின்றன.

**ம:** ஆன்மாவிற்கு இரண்டாவதாக எதுவும் இல்லை.

**கே:** அப்படியானால் இரண்டாவது யாருக்குத் தோன்றுகிறது? இருமைத் தன்மை உளப் பாங்கின் குறைபாட்டினால் தூண்டப் படுவதால் ஏற்படும் மாயை என்று எனக்குத் தோன்றுகிறது. உளப் பாங்கு குறைபாடற்று இருந்தால் இருமைத் தன்மை இருக்காது.

**ம:** நன்றாகச் சொன்னாய்.

**கே:** இருப்பினும் என்னுடைய எளிய கேள்வியை நான் திரும்பக் கேட்க வேண்டியுள்ளது: யார் பாவத்திற்கும் புண்ணியத்திற்கும் வித்தியாசத்தை ஏற்படுத்துவது?

**ம:** யார் ஒரு உடலைக் கொண்டிருக்கிறாரோ அவர் உடலால் பாவம் செய்கிறார். யார் ஒரு மனதைக் கொண்டிருக்கிறாரோ அவர் மனதால் பாவம் செய்கிறார்.

**கே:** கண்டிப்பாக வெறுமனே மனதையும் உடலையும் கொண்டிருப்பது பாவம் செய்ய நிர்பந்திக்காது. அதன் வேரில் ஏதாவது மூன்றாவது காரணம் இருக்க வேண்டும். நான் திரும்பத் திரும்ப பாவ புண்ணிய கேள்விக்கே வருகிறேன். ஏனெனில் தற்காலத்தில் இளம் வயதினர், பாவம் என்று ஒன்று கிடையாது என்றும், ஒருவர் திருப்தி அடையாமல் இருக்க வேண்டியதில்லை என்றும், அந்த கணத்தின் ஆசையை உடனே தொடர வேண்டும் என்றும் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் பாரம் பரியத்தையோ, அதிகாரத்தையோ ஒத்துக் கொள்வதில்லை. அவர்கள்மேல் உறுதியான, நேர்மையான எண்ணம் மட்டுமே தாக்கம் ஏற்படுத்த முடியும்.

அவர்கள் ஏதாவது செய்யாமல் தவிர்த்தால் அது காவல் துறைக்குப் பயந்துதான் இருக்குமே ஒழிய, ஒழுங்காக இருக்க வேண்டும் என்னும் தீர்மானத்தால் அல்ல. சந்தேகமில்லாமல் அவர்கள் சொல்வதில் ஏதோ இருக்கிறது. ஏனெனில் நம் மதிப்பீடுகள் இடத்திற்கு இடம், நேரத்திற்கு நேரம் மாறுகின்றன என்று நாம் பார்க்கலாம். உதாரணத்திற்கு, இக்காலத்தில் போரில் கொல்வது உயர்வானதாகக் கருதப் படுகிறது. அடுத்த நூற்றாண்டில் அதுவே ஒரு கொடூரமான குற்றமாகக் கருதப் படலாம்.

**ம:** பூமியோடு நகர்கின்ற மனிதன் கண்டிப்பாகப் பகலையும் இரவையும் காண்பான். சூரியனோடு தங்குகிறவனுக்கு இருள் என்பதே தெரியாது. என் உலகம் உங்களுடையது அல்ல. நான் பார்க்கிற படி, நீங்கள் ஒரு நாடகத்தில் நடிக்கிறீர்கள். நீங்கள் வந்து போவதில் மெய்த்தன்மை இல்லை. மேலும் உங்களுடைய பிரச்சனைகள் மிகவும் மெய்யற்றவை.

**கே:** நாங்கள் தூக்கத்தில் நடப்பவர்களாகவோ, அல்லது பயங்கரக் கனவு காண்பவர்களாகவோ இருக்கலாம். நீங்கள் அதற்கு எதுவும் செய்ய முடியாதா?

**ம:** நான் செய்து கொண்டுதான் இருக்கிறேன்: "உன்னையும் மற்றவர்களையும் வேதனைப் படுத்துவதை நிறுத்து. துன்பப் படுவதை நிறுத்து. விழி" என்று சொல்வதற்காக, உன் கனவு போன்ற நிலைக்குள் நான் நுழைகிறேன்.

**கே:** பிறகு ஏன் நாங்கள் விழிக்கவில்லை?

**ம:** நீ விழிப்பாய். என்னைக் குறுக்கிடக் கூடாது. என்னுடைய முயற்சி வீணாகாது. அதற்குச் சிறிது காலம் பிடிக்கும். உன் கனவை நீ கேள்வி கேட்க ஆரம்பித்தால் விழிப்பு வெகு தூரத்தில் இருக்காது.



# 22. வாழ்தல் என்பது அன்பு. அன்பே வாழ்க்கை

**கேட்பவர்:** யோகப் பயிற்சி என்பது எப்போதும் விழிப்புடன் செய்யப்படுவதா? அல்லது அது விழிப்பில்லாமல் விழிப்புணர் விற்குக் கீழே இருக்குமா?

**மஹராஜ்:** ஆரம்ப நிலையில் இருப்பவர்களுக்கு யோகப் பயிற்சி பெரும்பாலும் மிகுந்த முயற்சியுடன் செய்வதாக இருக்கும். அதற்கு உறுதியான மனப்பாங்கு தேவை. ஆனால் பல வருடங்களுக்கு அதைத் தீவிர ஈடுபாட்டுடன் செய்பவர்கள் விழிப்புணர்வுடனோ, இல்லாமலோ எப்போதும் மெய்ஞானம் பெற விழைவார்கள். விழிப்புணர்வற்ற சாதான மிகவும் பயனுள்ளது. ஏனெனில் அது தன்னிச்சையானது, ஸ்திரமானது.

**கே:** சில காலம் தீவிர ஈடுபாடுடைய யோகா மாணவனாக இருந்து பிறகு ஊக்கங்கெட்டு எல்லா முயற்சிகளையும் கைவிட்டு விட்ட மனிதனின் நிலை என்ன?

**ம:** ஒரு மனிதன் செய்வதைப் போலும், செய்யாமல் இருப்பதைப் போலும் தோன்றுவது ஏமாற்றக்கூடியது. அவனுடைய சோம்பலான தோற்றம் வலிமையைச் சேகரிப்பதற்காக இருக்கலாம். நமது நடத்தைக்கான காரணங்கள் மிகவும் நுட்பமானவை. ஒன்றை வெறுத்து ஒதுக்கவோ அல்லது புகழவோ ஒருவர் அவசரப்படக் கூடாது. யோகா என்பது வியக்தியில் வியக்தா செய்யும் வேலை. வியக்தி செய்வதெல்லாம் வியக்தாவின் பதில் வினையே.

**கே:** இருப்பினும் வியக்தி உதவுகிறது.

**ம:** அது எவ்வளவு உதவ முடியும், எப்படி முடியும்? அதற்கு உடலின் மேல் சிறிது கட்டுப்பாடு உள்ளது. அது உடலின்

தோற்றத்தையும் மூச்சு விடுவதையும் முன்னேற்றலாம். மனதின் எண்ணங்கள் மீதும், உணர்ச்சிகள் மீதும் அதற்குச் சிறிதளவே கட்டுப்பாடு உள்ளது. ஏனெனில் அதுவே மனம். வியக்தா வியக்தியைக் கட்டுப் படுத்தும். வியக்தி பணிவதற்கான புத்திசாலித் தனத்துடன் இருக்கும்.

**கே:** வியக்தாதான் மனிதனின் ஆன்மிக முன்னேற்றத்திற்கு முழுக் காரணம் என்றால் வியக்தி ஏன் சிலாக்கியப்படுத்தப் படுகிறது? ஊக்குவிக்கப் படுகிறது?

**ம:** அமைதியாக இருப்பதாலும், ஆசையிலிருந்தும் அச்சத்தி லிருந்தும் விடுபட்டு இருப்பதாலும் வியக்தி உதவலாம். வியக்திக்குச் சொல்லப்படும் புத்திமதி எல்லாம், வேண்டாம், நிறுத்து, செய்யாதே, விட்டுவிடு, தியாகம் செய், சரணடை, பொய்யைப் பொய்யாகப் பார் என்பதுபோன்ற மறுதலிக்கும் விதமாகவே இருப்பதை நீ கவனிக்கலாம். மெய்யைப் பற்றி கொடுக்கப் படும் சிறிதளவு விளக்கம் கூட 'இது அல்ல, அது அல்ல' (நேதி, நேதி) என்னும் மறுதலிப்பாகவே உள்ளது. எல்லாத் தீர்க்கமானவையும் மெய்யைச் சார்ந்து இருப்பதைப் போல, எல்லா நேர்மறை யானவைகளும் வியக்தாவைச் சார்ந்தவையே.

**கே:** உள்ளபடியான அனுபவத்தில் வியக்தாவையும், வியக்தியையும் எவ்வாறு வேறுபடுத்திப் பார்ப்பது?

**ம:** வியக்தா உத்வேகத்திற்கு ஆதாரம். வியக்தி ஞாபகத்தால் நடத்தப் படுகிறது. எல்லா ஞாபகங்களும் எங்கோ ஓரிடத்திலிருந்து ஆரம்பித்தாலும் மூலத்தைக் கண்டுபிடிக்க முடியாது. எனவே வியக்தி எப்போதும் அறுதியிடப் பட்டது. ஆனால் வியக்தாவை வார்த்தைகளுக்குள் கொண்டு வர முடியாது. மாணவர்களின் தவறு என்னவென்றால் அனுமானிக்கக் கூடியவை அனைத்தும் கடந்து போகக்கூடியவை, எனவே மெய்யற்றவை என்பதை மறந்துவிட்டு அவர்கள் அகத்தை கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரக் கூடியதாகக் கற்பனை செய்வதுதான். இன்னதென்று அறிந்து உணரக்கூடியதை எது சாத்தியமாக்குகிறதோ அதுதான் மெய். அதை உயிர் என்றோ, பிரம்மன் என்றோ அல்லது உனக்கு எப்படிக் கூப்பிடப் பிடிக்கிறதோ அப்படிக் கூப்பிட்டுக் கொள்.

**கே:** உயிருக்கு தன்னை வெளிப்படுத்திக் கொள்ள கண்டிப்பாக ஒரு உடல் வேண்டும் அல்லவா?

**ம:** உடல் வாழ வேண்டும் என்று விரும்புகிறது. உயிர் உடலை வேண்டுவது இல்லை; உடலுக்குத்தான் உயிர் அவசியம்.

**கே:** உயிர் அதை வேண்டும் என்றே செய்கிறதா?

**ம:** அன்பு வேண்டும் என்றே இயங்குகிறதா? ஆம் மற்றும் இல்லை. வாழ்க்கை என்பது அன்பு. அன்பே வாழ்க்கை. அன்பைத் தவிர வேறு எது உடலை ஒன்றாக வைத்திருக்கிறது? ஆசை என்பது நம் மேல் வைத்திருக்கும் அன்பைத் தவிர வேறு என்ன? அச்சம் என்பது பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்னும் உந்துதல் தவிர வேறு என்ன? அறிவு என்பது உண்மையின் மேல் கொண்டுள்ள அன்பைத்தவிர வேறு என்ன? வழிகளும், வடிவங்களும் தவறாக இருக்கலாம். ஆனால் ஆதாரமான காரணம் எப்போதும் அன்புதான் - என் மேலும், என்னுடையதின் மேலும் கொண்டுள்ள அன்பு. நானும், என்னுடையதும் சிறியதாக இருக்கலாம். அல்லது வெடித்து இந்தப் பிரபஞ்சத்தையே அணைத்துக் கொள்ளலாம். ஆனால் அன்பு நிலைத்து இருக்கிறது. பொருள் மட்டுமே மாறுகிறது.

**கே:** கடவுளின் பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பது இந்தியாவில் பொதுவாகக் காணப்படுகிறது. அதில் ஏதாவது புண்ணியம் இருக்கிறதா?

**ம:** ஒரு பொருள் அல்லது ஒரு நபரின் பெயர் தெரிந்திருந்தால் அதைக் கண்டு பிடிப்பது சுலபம். கடவுளை அவரின் பெயரைச் சொல்லி அழைப்பதால் அவரை உன்னிடம் வர வைக்கிறாய்.

**கே:** என்ன வடிவத்தில் அவர் வருவார்?

**ம:** நீ எதிர்பார்ப்பதைப் போல. நீ அதிர்ஷ்டம் இல்லாதவனாக இருந்து, ஒரு புனித ஆத்மா அதிர்ஷ்டத்திற்கான ஒரு மந்திரத்தைக் கொடுத்து அதை நீ நம்பிக்கையோடும் பக்தியோடும் திரும்பத் திரும்ப உச்சரித்தாயானால் உன் துரதிர்ஷ்டம் மாறும். உறுதியான நம்பிக்கை விதியை விட வலிமையானது. விதி என்பது பெரும் பாலும் எதிர்பாராத காரணங்களின் விளைவு. அதனால் தளர்வாகப்

பின்னப்பட்டது. உறுதியும், நல்ல நம்பிக்கையும் அதை எளிதில் வென்று விடும்.

**கே:** மந்திரத்தை உச்சரிக்கும் போது என்ன நடக்கிறது?

**ம:** சுயத்தை உள்வாங்கிக்கொள்ளும் ஒரு வடிவத்தை மந்திரத்தின் சப்தங்கள் உருவாக்குகின்றன. சுயம் எந்த வடிவத்தை வேண்டுமானாலும் எடுத்து, அதன் மூலம் இயங்கும். சுயம், இயக்கத்தின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. மந்திரம் என்பது அடிப்படையாக இயங்குகின்ற சக்தி. அது உன் மேலும், உன் சுற்றுப் புறத்தின் மேலும் செயல் புரிகிறது.

**கே:** மந்திரம் என்பது பாரம்பரியமானது. அப்படித்தான் அது இருக்க வேண்டுமா?

**ம:** தொன்று தொட்டு சில வார்த்தைகளுக்கும், அவை தொடர்பான சக்திகளுக்கும் ஒரு இணைப்பு உருவாக்கப் பட்டுள்ளது. கணக்கற்ற தடவை அவற்றைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதனால் அந்தச் சக்தி வலிவூட்டப்படுகிறது. அது ஒரு பயணிக்கும் பாதை போன்றது. அது ஒரு எளிமையான வழி - நம்பிக்கை மட்டுமே தேவை. உன்னை உன் குறிக்கோளில் கொண்டு போய்ச் சேர்க்க அதற்கான வழியை நீ நம்ப வேண்டும்.

**கே:** சில ஆழ்ந்த சிந்தனை செய்பவர்களைத் தவிர ஐரோப்பாவில் மந்திரத்தை உச்சரிக்கும் வழக்கம் கிடையாது. நவீன மேற்கத்திய வருக்கு இதனால் என்ன பயன்?

**ம:** அவர் மிகவும் கவரப்பட்டால் ஒழிய ஒரு பயனும் இல்லை. அவருக்குச் சரியான முறை என்னவென்றால் தானே எல்லா அறிவிற்கும் அடிப்படை - புலன்களுக்கும், மனதிற்கும் நடக்கும் அனைத்தின் மாற்ற முடியாத மற்றும் நிலைத்திருக்கின்ற ஞானம் என்னும் எண்ணத்தைக் கைக்கொள்ள வேண்டும். அப்படி எல்லா நேரமும் விழிப்புடனும், உஷாராகவும் அதை அவர் மனதில் வைத்திருந்தால் விழிப்பற்ற நிலையின் கட்டுக்களை உடைத் தெறிந்து தூய்மையான உயிர், ஒளி மற்றும் அன்பாக வெளிப் படுவார். 'நான் சாட்சி மட்டுமே' என்னும் கருத்து மனதையும், உடலையும் தூய்மைப்படுத்தி அறிவின் கண்களைத் திறக்கும். பிறகு

மனதின் மாயத்தோற்றத்திற்கு அப்பால் சென்று அவர் மனம் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபடும். எப்படிப் பனிக்கட்டி தண்ணீராகி, தண்ணீர் ஆவியாகி, ஆவி காற்றில் கரைந்து ஆகாசத்தில் மறைகிறதோ, அப்படி உடல், தூய விழிப்புணர்வில் (சித்தகாசத்தில்), பிறகு எல்லா இருப்பனவற்றிற்கும் இல்லாதவற்றிற்கும் அப்பால் உள்ள தூய இருப்பில் (பரமகாசத்தில்) கரைந்துவிடும். பரமகாசம் இருப்பிற்கும், இல்லாததிற்கும் அப்பால் உள்ளது.

**கே:** மெய்ஞானம் பெற்றவரும் சாப்பிடுகிறார், நீர் அருந்துகிறார், தூங்குகிறார். எது அவரை அவ்வாறு செய்கிறது?

**ம:** எந்தச் சக்தி பிரபஞ்சத்தை இயக்குகிறதோ, அதே சக்தி அவரையும் இயக்குகிறது.

**கே:** எல்லாமும் ஒரே சக்தியால் இயக்கப்பட்டால் என்ன வித்தியாசம்?

**ம:** இதுதான்: மற்றவர்கள் அனுபவப்படாமல் கேட்க மட்டுமே செய்தவற்றை ஞானி முழுதும் அறிவார். அறிவார்ந்து மற்றவர்கள் நம்பினாற்போல் தோன்றினாலும் அவர்கள் செயலில் தாங்கள் தளைபட்டிருப்பதைக் காட்டிக் கொடுத்துக் கொண்டு இருப்பார்கள். ஆனால் ஒரு ஞானி எப்போதும் சரியாக நடந்து கொள்வார்.

**கே:** ஒவ்வொருவரும் 'நான்' என்கிறார்கள். ஞானியும் 'நான்' என்கிறார். வித்தியாசம் எங்கு உள்ளது?

**ம:** 'நான்' என்னும் வார்த்தையின் பொருளில் வித்தியாசம் உள்ளது. 'நானே உலகம், உலகம் என்னுடையது' என்னும் அனுபவம் ஞானியிடம் மிகவும் சரி. - அவர் எல்லா உயிர் வாழ்வனகூடவும் ஒத்திசைவோடும், இணைந்தும் சிந்திக்கிறார், உணர்கிறார், செயல்படுகிறார். அவருக்கு மெய்ஞானம் அடைதல் என்பதைப் பற்றிய கோட்பாடோ, நடைமுறையோ தெரியாமல் கூட இருக்கலாம். அவர் மதம் மற்றும் தத்துவம் பற்றிய கருத்துக்கள் இல்லாமலேயே பிறந்து வளர்ந்திருக்கலாம். ஆனால் அவருடைய புரிதலிலோ, அன்பிலோ மிகச் சிறிய குறை கூட இருக்காது.

**கே:** நான் உடையில்லாமலும், பசியுடனும் இருக்கும் ஒரு பிச்சைக்காரனைச் சந்தித்து, 'நீ யார்?' என்று கேட்டால் 'நான் தான் உச்ச உயர்வான சுயம்' என்று அவர் பதில் சொல்லலாம். அதற்கு நான், 'நன்று. நீங்கள் உச்ச உயர்வு என்பது போதும். உங்களுடைய தற்போதைய நிலையை மாற்றிக் கொள்ளுங்கள்' என்று நான் சொன்னால் அவர் என்ன செய்வார்?

**ம:** 'எந்த நிலையை? மாற்றம் தேவைப்படும் என்ன உள்ளது? என்னிடம் என்ன தவறு?' என்று அவர் கேட்பார்.

**கே:** அவர் அவ்வாறு ஏன் சொல்ல வேண்டும்?

**ம:** ஏனெனில் அவர் இனிமேற்கொண்டு தோற்றங்களினால் கட்டுப்பட்டவர் அல்ல. அவர் தன்னைப் பெயரோடும், உருவத்தோடும் அடையாளப்படுத்திக் கொள்வதில்லை. அவர் ஞாபகத்தை உபயோகப்படுத்துகிறார். ஞாபகம் அவரை உபயோகப்படுத்துவதில்லை.

**கே:** எல்லா அறிவும் ஞாபகத்தை அடிப்படையாகக் கொண்டவைதானே?

**ம:** கீழான அறிவு - ஆம். மேல் நிலை அறிவு, மெய்யைப் பற்றிய அறிவு, மனிதனின் ஸ்வரூபத்தின் ஆதாரத்திலேயே இயல்பாக உள்ளது.

**கே:**நான் எதைப் பற்றி உணர்வுட ன் இருக்கிறேனோ அது நான் இல்லை என்று சொல்லலாமா அல்லது நான் விழிப்புணர்வு நிலையேவா?

**ம:** நீ மெய்யறியும் தேடலில் உள்ளவரை, உட்பொருள் இல்லாத, தூய்மையான விழிப்புணர்வுதான் நீ என்னும் கருத்தைக் கொண்டிருப்பது நல்லது. விழிப்புணர்வு நிலையைத் தாண்டிச் செல்வதுதான் உச்ச உயர்வான நிலை.

**கே:** மெய்யறிதலுக்கான ஆசை விழிப்புணர்வு நிலையிலிருந்து தோன்றுகிறதா? அல்லது அதற்கு அப்பால் இருந்தா?

**ம:** விழிப்புணர்வு நிலையிலிருந்துதான். எல்லா ஆசைகளும் ஞாபகத்திலிருந்துதான் தோன்றுகின்றன. அவை விழிப்புணர்வு

நிலையின் எல்லையில்தான் உள்ளன. அப்பால் என்ன உள்ளதோ அது எல்லா முயற்சிகளையும் கடந்தது. விழிப்புணர்வைக் கடந்து போக வேண்டும் என்னும் ஆசையே விழிப்புணர்வில் தான் உள்ளது.

**கே:** கடந்து உள்ளதின் ஏதாவது சுவடோ, பதிவோ விழிப்புணர்வு நிலையின் மேல் உள்ளதா?

**ம:** இல்லை. எதுவும் இருக்க முடியாது.

**கே:** அப்படியானால் இரண்டிற்குமான இணைப்பு என்ன? பொதுவான எதுவுமே இல்லாத இரண்டு நிலைகளுக்கும் இடையில் ஒரு பாதையை எவ்வாறு காண்பது? தூய்மையான விழிப்புணர்வு (சிதாகாசம்) இரண்டிற்கும் இடையிலான இணைப்பு ஆகாதா?

**ம:** சிதாகாசமும்கூட விழிப்புணர்வின் ஒரு படிவம் தான்.

**கே:** அப்படியானால் விழிப்புணர்விற்கு அப்பால் என்ன உள்ளது? வெறுமையா?

**ம:** வெறுமை மறுபடியும் விழிப்புணர்வு நிலையையே குறிக்கிறது. நிறைவும், வெறுமையும் ஒன்றை ஒன்று சார்புடைய சொற்கள். மெய் உண்மையிலேயே அப்பால் உள்ளது - விழிப்புணர்விற்கு அப்பால் மட்டுமல்ல. எந்த விதமாக இருந்தாலும், அந்த எல்லாவிதமான பந்தங்களுக்கும் அப்பால். 'நிலை' என்னும் வார்த்தையுடன்தான் பிரச்சனை வருகிறது. மெய் என்பது ஏதோ ஒன்றின் ஒரு நிலை அல்ல - அது மனம் அல்லது விழிப்புணர்வின் நிலை அல்லது உளவியலின் ஒரு நிலை அல்ல - அல்லது ஆரம்பமும் முடிவும் உள்ள, இருப்பது மற்றும் இல்லாமல் இருப்பதுமான ஏதோ ஒன்று அல்ல. எல்லா எதிர் எதிரானவைகளும் அதில் உள்ளடங்கி உள்ளன- ஆனால் அது எதிர் எதிரானவைகளின் செயல்பாட்டில் இருப்பது. நீ அதை ஒரு மாற்றத்தின் முடிவாக எடுத்துக் கொள்ளக்கூடாது. விழிப்புணர்வு மேற்கொண்டு இல்லாத போதும் அது அதுவேதான். பிறகு 'நான் மனிதன்' அல்லது 'நான் கடவுள்' என்னும் வார்த்தைகளுக்கு அர்த்தம் இல்லை. நிசப்தத்திலும், இருட்டிலும் மட்டும்தான் அதைக் கேட்கவோ, பார்க்கவோ முடியும்.

# 23. பகுத்தறிவு பற்றற்ற தன்மைக்கு வழி வகுக்கும்

**மஹராஜ்:** அதிகமாக மழை பெய்வதால் நீங்கள் நனைந்து விட்டீர்கள். என் நாட்டில் எப்போதும் நல்ல சீதோஷ்ணம்தான். அங்கு இரவோ, பகலோ, வெப்பமோ, குளிரோ கிடையாது. கவலைகளோ, வருத்தங்களோ அங்கு என்னை பாதிப்பதில்லை. என் மனம் எண்ணங்களற்று இருக்கிறது. ஏனெனில் எண்ணங்கள் இருக்க எந்த ஆசையும் அதில் இல்லை.

**கேட்பவர்:** இரண்டு உலகங்கள் இருக்கின்றனவா?

**ம:** உனக்கு மட்டும்தான் உன் உலகம் தெரிகிறது. என்னைப் பொருத்தவரை ஒரே ஒரு உலகம்தான் இருக்கிறது. நீ உன் உலகத்தைப் பற்றி எதை என்னிடம் சொன்னாலும் நான் உன்னிப் பாகவும், ஆர்வத்துடனும் அதைக் கேட்பேன். இருப்பினும் ஒரு கணம் கூட உன் உலகம் இல்லை என்பதையும், நீ கனவு காண்கிறாய் என்பதையும் நான் மறக்க மாட்டேன்.

**கே:** என் உலகத்திலிருந்து உங்கள் உலகத்தை எது வித்தியாசப் படுத்துகிறது?

**ம:** என் உலகம் அடையாளம் காணக்கூடிய குணாதிசயங்கள் அற்றது. அதைப் பற்றி நீ ஒன்றும் சொல்ல முடியாது. நான் என் உலகம். என் உலகம் நான். அது முழுமையானது மற்றும் குறை பாடற்ற முழுநிறைவானது. ஒவ்வொரு பதிவும் அழிக்கப்படும். ஒவ்வொரு அனுபவமும் நிராகரிக்கப்படும். எனக்கு எதுவும் தேவை இல்லை - நான் கூட. ஏனெனில் என்னை நான் இழக்க முடியாது.

**கே:** கடவுள் கூடவா தேவையில்லை?

**ம:** இந்தக் கருத்துக்கள் மற்றும் வேறுபாடுகள் எல்லாம் உன் உலகத்தில்தான் இருக்கின்றன. என்னுடையதில் இது போன்ற எதுவும் இல்லை. என் உலகம் தனித்தது, எளிமையானது.

**கே:** அங்கு எதுவும் நடப்பதில்லையா?

**ம:** உன் உலகத்தில் எது நடந்தாலும் அங்கு மட்டும்தான் நடக்கிறது. அங்குதான் அது செல்லுபடியாகும்; மற்றும் எதிர் வினையைத் தூண்ட முடியும். என் உலகத்தில் எதுவுமே நடப்பதில்லை.

**கே:** உங்கள் உலகத்தை நீங்கள் அனுபவப்படுவது என்னும் உண்மையே எல்லா அனுபவங்களிலும் உள்ளார்ந்திருக்கும் இருமைத் தன்மையை உணர்த்துகிறது.

**ம:** வார்த்தைகளில் - ஆமாம். ஆனால் உன் வார்த்தைகள் என்னை அடைவதில்லை. என்னுடையது வார்த்தைகள் அற்ற உலகம். உன் உலகத்தில் பேசப்படாததற்கு இருத்தல் இல்லை. என்னுடையதில் வார்த்தைகளுக்கும், அவற்றின் பொருளுக்கும் இருத்தல் இல்லை. உன் உலகத்தில் எதுவும் தங்குவதில்லை. என்னுடையதில் எதுவும் மாறுவதில்லை. என் உலகம் மெய்யானது. உன்னுடையது கனவால் ஆனது.

**கே:** இருப்பினும் நாம் பேசிக்கொண்டிருக்கிறோம்.

**ம:** உன் உலகத்தில்தான் பேச்சு இருக்கிறது. என்னுடையதில் சாசுவதமான நிசப்தம்தான் இருக்கிறது. என் நிசப்தம் பாடுகிறது, என் வெற்றிடம் நிறைந்துள்ளது. எனக்கு பற்றாக்குறை எதுவும் இல்லை. நீ அங்கு வந்தால் ஒழிய என் உலகத்தை அறிய முடியாது.

**கே:** நீங்கள் மட்டுமே தனியாக அங்கு உள்ளதுபோல் தோன்றுகிறது.

**ம:** வார்த்தைகள் பயன்படாதபோது தனித்து அல்லது தனித்து இல்லாமல் என்று எப்படி நீ சொல்லமுடியும்? ஆமாம், நான் தனித்து இருக்கிறேன். ஏனெனில் நானே எல்லாமும்.

**கே:** நீங்கள் எப்போதாவது என் உலகத்திற்குள் வருவீர்களா?

**ம:** வருவது, போவது என்றால் எனக்கு என்ன? இவை எல்லாம் வார்த்தைகள். நான் இருக்கிறேன். நான் எங்கிருந்து வந்தேன்? எங்கு செல்வது?

**கே:** உங்கள் உலகத்தால் எனக்கு என்ன பயன்?

**ம:** நீ உன் உலகத்தை மிக உன்னிப்பாகக் கவனித்து, நுட்பமாக ஆராய வேண்டும். திடீரென்று ஒரு நாள் நீ உன்னை என் உலகத்தில் இருப்பதைப் பார்ப்பாய்.

**கே:** அதனால் நாங்கள் அடையும் பலன் என்ன?

**ம:** நீ பலன் ஒன்றும் அடைவதில்லை. உன்னுடையது அல்லாததை விட்டு விட்டு, நீ எப்போதும் இழக்காததை - உன் சுயத்தை - நீ காண்பாய்.

**கே:** உங்கள் உலகத்தை ஆள்பவர் யார்?

**ம:** இங்கு ஆள்பவரும் ஆளப்படுபவரும் இல்லை. எந்த வகையிலும் இருமைத்தன்மை என்பது இல்லை. நீ வெறுமனே உன் சொந்தக் கருத்துக்களை முன் வைக்கிறாய். உன் சாஸ்திரங்களுக்கும், கடவுள்களுக்கும் இங்கு அர்த்தம் இல்லை.

**கே:** இருப்பினும் உங்களுக்குப் பெயரும், உருவமும் இருக்கிறது. நீங்கள் விழிப்புணர்வையும், செயல்பாட்டையும் காண்பிக் கிறீர்கள்.

**ம:** உன் உலகத்தில் நான் அவ்வாறு தோன்றுகிறேன். என் உலகத்தில் என் இருத்தல் மட்டுமே உள்ளது. வேறு ஒன்றும் இல்லை. உடைமைகள், அளவு மற்றும் தரம் பற்றி நிறையக் கருத்துக் களை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். நான் முற்றிலும் கருத்துக் களற்று இருக்கிறேன்.

**கே:** என் உலகத்தில் தொல்லைகள், தொந்தரவுகள், ஏமாற்றங்கள் ஆகியன உள்ளன. நீங்கள் ஏதோ மறைமுகமான வருமானத்தினால் வாழ்வதுபோல் தெரிகிறது. நானோ வாழ மிகவும் சிரமப்பட வேண்டி இருக்கிறது.

**ம:** உனக்குப் பிடித்த மாதிரி செய். உன் உலகத்தை விட்டுவிட்டு என்னுடையதிற்கு வர உனக்குச் சுதந்திரம் இருக்கிறது.

**கே:** மாறுவதை எப்படிச் செய்வது?

**ம:** உன் உலகத்தை உள்ளவாறு பார். நீ கற்பனை செய்யும் வண்ணம் பார்க்காதே. பகுத்தறிவு பற்றற்ற தன்மைக்கு வழிவகுக்கும்; பற்றற்ற தன்மை சரியான செயலை உறுதி செய்யும்; சரியான செயல் உன் மெய்யான இருத்தலுக்கு உள்முகப் பாலம் அமைக்கும். முழுமூச்சான முயற்சிக்குச் செயல்தான் அத்தாட்சி. உனக்குச் சொன்னவற்றைப் பிசகாமலும் உண்மையாகவும் செய். எல்லாத் தடைகளும் கரைந்து விடும்.

**கே:** நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்களா?

**ம:** உன் உலகத்தில் நான் மிகவும் மிகவும் துயர் அடைபவன். விழித்து எழுவது, சாப்பிடுவது, பேசுவது, மறுபடியும் தூங்குவது - என்ன ஒரு சங்கடம்!

**கே:** அப்படியானால் நீங்கள் உயிர் வாழக்கூட விரும்ப வில்லையா?

**ம:** வாழ்வது, இறப்பது - என்ன ஒரு அர்த்தமில்லாத வார்த்தைகள்! நீ என்னை உயிர் வாழ்பவனாகப் பார்க்கும் போது நான் இறந்தவன். என்னை நீ இறந்தவனாக நினைக்கும் போது உயிர் வாழ்பவன். எவ்வளவு குழப்பத்தில் இருக்கிறாய் பார்!

**கே:** எவ்வளவு அக்கறையில்லாமல் நீங்கள் இருக்கிறீர்கள்! எங்கள் உலகின் எல்லாத் துன்பங்களும் உங்களுக்கு ஒன்றுமே இல்லை.

**ம:** கவலைப்படாதே. நான் உங்களுடைய துன்பங்களைப் பற்றி நன்கு அறிவேன்.

**கே:** அப்படியானால் அவற்றிற்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?

**ம:** நான் செய்ய வேண்டியது ஒன்றும் இல்லை. அவை வந்து போகின்றன.

**கே:** நீங்கள் உங்கள் கவனத்தை அவற்றின்மேல் செலுத்தும் செயலால் அவை போகின்றனவா?

**ம:** ஆமாம். துன்பம் உடல் சார்ந்தோ, உணர்ச்சி சார்ந்தோ, மனம் சார்ந்தோ இருக்கலாம்; ஆனால் அவை எப்போதுமே தனிப் பட்டவை. பேரிடர்கள் கணக்கில்லாத தனி நபர்களுக்கு ஏற்படுவதின் மொத்தம். அவை இல்லாமல் போகப் பல காலம் எடுத்துக் கொள்ளும். ஆனால் இறப்பு என்பது எப்போதும் ஒரு பேரிடர் அல்ல.

**கே:** ஒரு மனிதன் கொல்லப்பட்டாலும் கூடவா?.

**ம:** அது கொல்பவனுக்குத்தான் பேரிடர்.

**கே:** இருப்பினும், என்னுடையதும் உங்களுடையதுமான இரு உலகங்கள் இருப்பதாகத் தெரிகிறது.

**ம:** என்னுடையது மெய்யானது. உன்னுடையது மனதால் ஆனது.

**கே:** ஒரு பாறையையும், அதில் ஒரு துளையையும், அந்தத் துளையில் ஒரு தேரையையும் கற்பனை செய்வோம். தேரை அதன் வாழ்க்கையை அலைக்கழிக்கப்படாமல், தொந்தரவில்லாமல் பரிபூரணமான ஆனந்தத்தில் கழிக்கலாம். பாறைக்கு வெளியில் உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது. அந்தத் தேரைக்கு வெளி உலகத்தைப் பற்றிச் சொன்னால் 'அவ்வாறு ஒன்று கிடையாது. என் உலகம் அமைதியினாலும் ஆனந்தத்தாலும் ஆனது. உன் உலகம் வார்த்தை உருவம் மட்டுமே. அதற்கு இருப்பு இல்லை' என்று சொல்லும். உங்களிடமும் அதே போல்தான். நீங்கள் எங்கள் உலகம் இல்லை என்று சாதாரணமாகச் சொல்லும் போது நமக்குள் கலந்துரையாடலுக்கு முகாந்திரம் இல்லை. அல்லது வேறு ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நான் ஒரு மருத்துவரிடம் சென்று எனக்கு வயிறு வலிக்கிறதென்று சொல்கிறேன். அவர் என்னைப் பரிசோதித்து 'நீ நலமுடன் இருக்கிறாய்' என்கிறார். நான் 'ஆனால் வலிக்கிறது' என்கிறேன். அவர் 'உன் வலி மனதால் ஆனது' என்று சொல்கிறார். நான் 'என் வலி மனதால் ஆனது என்று அறிவதால் எனக்குப் பயன் இல்லை. நீங்கள் மருத்துவர். என்னை குணம் அடையச் செய்யுங்கள். உங்களால் முடியவில்லை என்றால் நீங்கள் என் மருத்துவர் அல்ல' என்கிறேன்.

**ம:** மிகவும் சரி.

**கே:** நீங்கள் இரயில் பாதையை அமைத்து விட்டீர்கள். ஆனால் ஒரு பாலம் இல்லாததால் எந்த இரயிலும் கடக்க முடியவில்லை. பாலத்தைக் கட்டுங்கள்.

**ம:** பாலத்திற்கு அவசியம் இல்லை.

**கே:** உங்கள் உலகத்திற்கும் என்னுடையதிற்கும் ஏதாவது ஒரு இணைப்பு இருக்க வேண்டும்.

**ம:** ஒரு கற்பனையான உலகத்திற்கும், ஒரு நிஜமான உலகத்திற்கும் ஒரு இணைப்பு தேவை இல்லை. ஏனெனில் அப்படி ஒன்று இருக்க முடியாது.

**கே:** அப்படியானால் நாங்கள் என்ன செய்வது?

**ம:** உன் உலகத்தை ஆராய்ந்து பார். உன் புத்தியை அதில் செலுத்து. அதை நன்கு பரீட்சி. அதைப் பற்றிய ஒவ்வொரு கருத்தையும் கூர்ந்து ஆய்வு செய். அது போதும்.

**கே:** உலகம் ஆராய்வதற்கு மிகப் பெரியது. எனக்குத் தெரிந்த தெல்லாம் நான் இருக்கிறேன் என்பதும், உலகம் இருக்கிறது என்பதும், உலகம் எனக்குத் தொந்தரவு கொடுக்கிறது, நான் உலகத்திற்குத் தொந்தரவு கொடுக்கிறேன் என்பதும்தான்.

**ம:** என் அனுபவம், எல்லாமும் பேரின்பம் என்பது. ஆனால் பேரின்பத்திற்கான ஆசை துக்கத்தை உருவாக்குகிறது. அவ்வாறு பேரின்பம் துக்கத்தின் விதையாகிறது. துக்கத்தாலான முழுப் பிரபஞ்சமும் ஆசையினால் பிறப்பது. ஆனந்தத்திற்கான ஆசையை விட்டுவிடு. அப்போது நீ துக்கம் என்றால் என்ன என்பதை அறியக்கூட மாட்டாய்.

**கே:** சுகம் ஏன் துக்கத்தின் விதையாக இருக்க வேண்டும்?

**ம:** ஏனெனில் சுகத்திற்காக நீ பல பாவங்களைச் செய்கிறாய். பாவத்தின் பலன் துக்கமும், மரணமும்.

**கே:** உலகத்தினால் எங்களுக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லை, அது ஒரு கொடுந்துன்பம் மட்டுமே என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

அது அவ்வாறு இல்லை என்று நான் நினைக்கிறேன். கடவுள் அவ்வளவு முட்டாளல்ல. சாத்தியமானதை நிஜத்திற்குக் கொண்டுவரச் செய்யக்கூடிய, பொருளை உயிருள்ளதாக்கக்கூடிய, விழிப்புணர்வற்றதை முழுப் பிரக்ஞைக்குக் கொண்டுவரக்கூடிய ஒரு பெரும் நிறுவனமாக இந்த உலகம் எனக்குத் தோன்றுகிறது. உச்ச உயர்வை அறிய நமக்கு எதிர் எதிரானவைகளைப் பற்றிய அனுபவம் தேவை. எவ்வாறு ஒரு கோவிலைக் கட்ட நமக்கு கல்லும் காரையும், மரமும் கம்பியும், கண்ணாடியும் ஓடுகளும் தேவையோ அப்படி ஒரு மனிதனை ஒரு தெய்வீக ஞானி ஆக்க, பிறப்பு இறப்பின் எஜமானனாக்க, ஒருவருக்கு எல்லா அனுபவங்களும் தேவை. எப்படி ஒரு பெண் சந்தைக்குச் சென்று எல்லா வகையான மளிகைச் சாமான்களையும் வாங்கி, வீட்டிற்கு வந்து, வேக வைத்து, சமைத்து, தன் கணவருக்கு உணவு படைக்கிறாளோ அப்படி நாம் நம்மை வாழ்க்கை என்னும் தீயில் நன்கு வேகவைத்து நம் கடவுளுக்குப் படைக்கிறோம். இந்த உலகம் ஒரு சந்தை. அதில் நமக்கு என்ன வேண்டுமோ அதை வாங்குகிறோம்.

**ம:** நன்று. நீ அப்படி நினைத்தால் அதன்படி நட. உன் கடவுளுக்கு நன்கு படை.

**கே:** ஒரு குழந்தை பள்ளிக்குச் சென்று பலவற்றை கற்கிறது. பிற்காலத்தில் அதற்கு அவற்றால் எந்தப் பயனும் இல்லை. ஆனால் படிக்கும் போது அது வளர்கிறது. அதுபோல நாம் பல எண்ணி லடங்காத அனுபவங்களைப் பெற்று அவற்றை மறக்கிறோம். ஆனால் இடைப்பட்ட காலத்தில் நாம் எப்போதும் வளர்கிறோம். காட்டு மிராண்டித்தனமான மனிதனிலிருந்து பண்பட்ட மனிதனாக, பிறகு மாமனிதனாக, பிறகு மகாத்மாவாக நாம் தொடர்ந்து எப்போதும் வளர்கிறோம். ஞானி என்பவர் யார்? அவர் மெய்யைப் பற்றிய நுண் அறிவு உடையவர். இந்த என்னுடைய உலகம் விபத்து அல்ல. அதற்கு அர்த்தம் இருக்கிறது. அதற்குப் பின்னால் ஒரு திட்டம் இருக்க வேண்டும். என் கடவுள் ஒரு திட்டம் வைத்துள்ளார்.

**ம:** உலகம் மெய்யற்றது என்றால், திட்டமும் அதை உருவாக்கியவரும் மெய்யற்றவை.

**கே:** மறுபடியும் நீங்கள் உலகத்தை மறுக்கிறீர்கள். நமக்கிடையில் எந்தப் பாலமும் இல்லை.

**ம:** பாலம் தேவை இல்லை. நீ பிறந்துள்ளதாக நினைப்பதில் உன்னுடைய தவறு உள்ளது. நீ ஒருபோதும் பிறக்கவில்லை. ஒருபோதும் இறக்கப் போவதும் இல்லை. ஆனால் நீ ஒரு குறிப்பிட்ட தேதியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பிறந்துள்ள தாகவும், ஒரு குறிப்பிட்ட உடல் உனக்குச் சொந்தமானதாகவும் நீ நம்புகிறாய்.

**கே:** உலகம் இருக்கிறது. நான் உள்ளேன். இவை எல்லாம் உண்மைகள்.

**ம:** உன்னை கவனித்துக் கொள்வதற்கு முன் நீ உலகத்தைப் பற்றி ஏன் கவலைப்படுகிறாய்? நீ உலகத்தைக் காப்பாற்ற வேண்டும், அப்படித்தானே? உன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் முன் நீ உலகத்தைக் காப்பாற்ற முடியுமா? காப்பாற்றுதல் என்றால் என்ன? எதிலிருந்து காப்பது? மாயையிலிருந்து. முக்தி என்பது உள்ளதை உள்ளவாறு பார்ப்பது. உண்மையில் நான் என்னை எவருடனும் எதனுடனும் தொடர்புபடுத்திப் பார்ப்பதில்லை. ஒரு சுயத்தினுடன் கூட அல்ல - அந்தச் சுயம் என்னவாக இருந்தாலும். நான் வரையறுக்கப்படாமல் எப்போதும் இருக்கிறேன். நான் உள்ளேன் - உள்ளும் புறமும், மிக நெருக்கமாகவும் அணுக முடியாத தொலைவிலும்.

**கே:** அந்த நிலைக்கு எப்படி வந்தீர்கள்?

**ம:** என் குருவின் மீது நான் வைத்திருந்த நம்பிக்கையினால். அவர் ‘நீ மட்டுமே உள்ளாய்’ என்று என்னிடம் சொன்னார். நான் அவரைச் சந்தேகிக்கவில்லை. நான் வெறுமனே அவர் சொன்னது தீர்க்கமான உண்மை என்று அறியும் வரை அந்தப் புதிரை விடுவிக்க முயன்று கொண்டே இருந்தேன்.

**கே:** திரும்பத் திரும்பச் செய்வதால் கிடைக்கும் திட நம்பிக்கையாலா?

**ம:** சுயம் அறிவதால் கிடைக்கும் திட நம்பிக்கையால். நான் விழிப்புணர்வுடனும் தீர்க்கமாக மகிழ்ச்சியுடனும் இருப்பதையும்,

தவறுதலாகத்தான் சத் - சித் ஆனந்தத்தை - உடலுக்கும் உடல் சார்ந்தது இருக்கும் உலகத்திற்கும் உடையதாக நினைத்ததையும் கண்டு பிடித்தேன்.

**கே:** நீங்கள் படித்தவர் அல்ல. நீங்கள் அதிகம் வாசிக்கவில்லை. நீங்கள் படித்ததோ, கேட்டதோ ஒன்றை ஒன்று முரண்படவில்லை. நான் நன்கு படித்தவன். நிறைய வாசித்திருக்கிறேன். புத்தகங்களும் ஆசிரியர்களும் ஒருவரை ஒருவர் முரண்படுவதை நான் காண்கிறேன். ஆகையால் நான் படிப்பதோ, கேட்பதோ எதுவாக இருந்தாலும் அதை ஒரு சந்தேக நிலையிலேயே எடுத்துக் கொள்கிறேன். 'அது அவ்வாறு இருக்கலாம். அல்லது அவ்வாறில் லாமல் இருக்கலாம்' என்பதுதான் என் முதல் எதிர்வினை. என் மனம் எது உண்மை, எது உண்மையில்லை என்று தீர்மானிக்க முடியாததால் நான் சந்தேகங்களால் கைவிடப்படுகிறேன். யோகாவில் சந்தேகப்படும் மனம் மிகவும் பயனற்றது.

**ம:** இதைக் கேட்பதற்குச் சந்தோசமாக இருக்கிறது; என் குருவும் கூட ஒவ்வொன்றையும் தீர்க்கமாகச் சந்தேகப் பட கற்றுக் கொடுத்தார். அவர் சொன்னார்: 'எல்லாவற்றையும் மறு - உன்னைத் தவிர' என்று. ஆசையின் மூலமாக நீ உலகத்தை அதன் இன்ப துன்பங்களோடு உருவாக்கி உள்ளாய்.

**கே:** அது துன்பத்தோடும் இருக்க வேண்டுமா?

**ம:** வேறெப்படி? அதன் இயல்பிலேயே இன்பம் அளவானது மற்றும் நிலையற்றது. துக்கத்தினால் ஆசை பிறக்கிறது, துக்கத்திற்குள் அது நிறைவைத் தேடுகிறது, மனத் தோல்வியினாலும், நம்பிக்கை அற்றுப் போவதாலும் ஏற்படுகின்ற துக்கத்தில் அந்தத் தேடல் முடிகிறது. துக்கம் இன்பத்தின் பின்புலம். எல்லா இன்பத் தேடுதலும் துக்கத்தில் பிறக்கின்றன.

**கே:** நீங்கள் சொல்வதெல்லாம் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் சில உடல் ரீதியான அல்லது மனோ ரீதியான தொல்லை வரும் போது என் மனம் சோர்ந்தும் மரத்தும் போகிறது. அல்லது நிவாரணத்தைத் தீவிரமாகத் தேடுகிறது.

ம: அதனால் என்ன? மனம்தான் சோர்ந்தோ அல்லது அமைதியுற்றோ இருக்கும். நீ அல்ல. எல்லா விதமானவையும் இந்த அறையில் நடக்கின்றன. நான் அவற்றை நிகழ்த்துகிறேனா? அவை தானாக நடக்கின்றன. அதே போல்தான் உன்னிடமும் - விதியின் சுருள் தானே விரிந்து தவிர்க்க முடியாததை நிகழ்த்துகிறது. நீ நிகழ்வுகளின் போக்கை மாற்ற முடியாது. ஆனால் உன் மனப் பாங்கை மாற்றலாம். எது உண்மையிலேயே முக்கியம் என்றால் மனப் பாங்குதான். வெறும் நிகழ்வு அல்ல. உலகம் ஆசைகள் மற்றும் அச்சங்களின் தாய்வீடு. நீ அதில் அமைதியைக் காண முடியாது. அமைதிக்கு நீ உலகத்திற்கு அப்பால் செல்ல வேண்டும். உலகத்தின் மூல காரணம் சுயத்தின் மேல் கொண்டுள்ள அன்பு. அதன் காரணமாக நாம் இன்பத்தைத் தேடுகிறோம். துக்கத்தைத் தவிர்க்கிறோம். சுயத்தின் மேல் கொண்டுள்ள அன்பை சுயத்தின் அன்பாக மாற்று. அப்போது காட்சி மாறிவிடும். எல்லா ஆசைகளின் மொத்தமும் பிரம்மா, உருவாக்குபவர். உலகம் அவை நிறைவேற கருவி. ஆன்மாக்கள் அவை ஆசைப்படும் இன்பங்களை எடுத்துக் கொண்டு கண்ணீரை விலையாகக் கொடுக்கின்றன. காலம் எல்லாக் கணக்குகளையும் நேர் செய்கிறது. சம நிலைச் சட்டம் முடிவாக ஆட்சி செய்கிறது.

**கே:** உயர்ந்த மனிதனாக மாற ஒருவர் முதலில் மனிதனாக இருக்க வேண்டும். மனிதத் தன்மை கணக்கற்ற அனுபவங்களின் விளைவு. ஆசை அனுபவங்களுக்கு வழி வகுக்கிறது. ஆதலால் அது ஏற்படும் நேரத்திலும், ஏற்படும் நிலையிலும் ஆசை சரியானதே.

**ம:** இவை எல்லாம் ஒரு வகையில் உண்மையே. ஆனால் நீ போதுமான அளவிற்குச் சேர்த்துவிட்டபோது கட்ட ஆரம்பிக்க வேண்டும். அப்போது பகுத்தறிவும், பற்றற்ற தன்மையும் (விவேக வைராக்கியம்) கண்டிப்பாகத் தேவை. எல்லாமும் சரி பார்க்கப்பட வேண்டும். வேண்டாதது இரக்கமில்லாமல் அழிக்கப்பட வேண்டும். என்னை நம்பு. அதிக அளவில் அழிக்கப்பட வேண்டி இருக்காது. ஏனெனில் மெய்யில் எதற்கும் மதிப்பு கிடையாது. ஆசையற்று இருக்க முழு ஆர்வத்துடன் இரு - அவ்வளவே.

# 24. கடவுள் - எல்லாமும் செய்பவர், ஞானி - எதுவும் செய்யாது இருப்பவர்

**கேட்பவர்:** சில மகாத்மாக்கள் (ஞானம் அடைந்தவர்கள்) இந்த உலகம் ஒரு விபத்தோ அல்லது கடவுளின் விளையாட்டோ அல்ல; ஆனால் பிரபஞ்சம் முழுவதும் விழிப்புணர்வை எழச் செய்வதற்கும், வளரச்செய்வதற்குமான ஒரு வலிய திட்டத்தின் விளைவும், வெளிப்பாடுமாகும் என்கின்றனர். உயிரற்றதில் இருந்து உயிருள்ளதற்கு, விழிப்புணர்வு அற்றதில் இருந்து விழிப்புணர் விற்கு, அறியாமையில் இருந்து பிரகாசமான புத்திசாலித்தனத்திற்கு, சந்தேகத்திலிருந்து தெளிவிற்கு - இந்த இலக்கில்தான் உலகம் இடைவிடாமலும், தளராமலும் சென்று கொண்டு இருக்கிறது. ஆனாலும் இந்தப் பிரபஞ்சம் இயக்கமற்று இருக்கும் போது ஓய்வானதாகவும், இருண்டாற்போன்ற கணங்களும் உள்ளன. ஆனால் ஓய்வு முடிவிற்கு வந்து விழிப்புணர்வின் மேல் வேலை தொடர்கிறது. எங்களது பார்வையில் இந்த உலகம் துயரம் நிறைந்ததாகவும் எல்லா வழிகளிலும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் தப்பித்துச் செல்லவேண்டிய இடமாகவும் தெரிகிறது. ஞானிகளுக்கு இந்த உலகம் நல்லதாகவும், நல்ல நோக்கம் கொண்டதாகவும் இருக்கிறது. இந்த உலகம் மனதால் உருவாக்கப் பட்டது என்பதையும் முடிவில் எல்லாமும் ஒன்றே என்பதையும் அவர்கள் மறுப்பதில்லை. ஆனால் இந்த அமைப்பிற்கு ஒரு அர்த்தம் உள்ளதென்றும், அதிஉன்னதமான ஒரு நோக்கத்திற் காகச் செயல்படுவதையும் அவர்கள் பார்த்துச் சொல்கிறார்கள். நாம் கடவுளின் செயல் என்று சொல்வது ஒரு விளையாட்டுத் தனமான தெய்வத்தின் ஏறுமாறான மனம் போன போக்கு அல்ல. ஆனால் அது அன்பு, அறிவு, ஆற்றல் ஆகியவை அவசியமாக வளர்வதற்கான வெளிப்பாடு; உயிர் மற்றும் விழிப்புணர்வின் அளவில்லாத சாத்தியக் கூறுகளை உருவாக்குவது.

எவ்வாறு தோட்டக்காரர் ஒரு சிறு விதையிலிருந்து பூக்களைச் சரியான நிலைக்கு வளர்க்கிறாரோ அதுபோல கடவுள் அவருடைய தோட்டத்தில், மனிதனை மாமனிதனாகவும், அறிந்தவனாகவும், அன்பு செழுத்துபவனாகவும், அவருடன் இயங்குபவனாகவும் மற்றவற்றுடன் வளர்க்கிறார்.

கடவுள் (ஈஸ்வரன்) ஓய்வு எடுக்கும் போது (பிரளயத்தின் போது) யாருடைய வளர்ச்சி முற்றுப் பெறவில்லையோ அவர்கள் சிறிது காலத்திற்குச் சுய நினைவு அற்று இருப்பார்கள். ஆனால் எல்லா நிலைகளையும், விழிப்புணர்வின் உட்பொருளையும் கடந்த பரிபூரணமானவர்கள் இந்தப் பிரபஞ்ச நிசப்தத்தை அறிந்திருப் பார்கள். புதுப் பிரபஞ்சம் தோன்றும் நேரம் வரும்போது தூங்குபவர்கள் விழித்துக் கொண்டு அவர்கள் வேலை தொடங்கும். உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் முதலில் விழித்துக் கொண்டு குறைந்த வளர்ச்சியுடையவர்களுக்கு ஏதுவானவற்றைத் தயார் செய்வார்கள். அதனால் வளர வேண்டியவர்கள் தாங்கள் வளர்வதற்காகத் தங்களுக்குப் பொருந்தக் கூடிய படிவத்தையும், வழிமுறைகளையும் கண்டுகொள்வார்கள்.

இவ்வாறு கதை போகிறது. உங்களுடைய போதனையில் உள்ள வேறுபாடு இது: நீங்கள் இந்த உலகத்தால் பயனில்லை. அதனால் அதை ஒதுக்கி வைக்க வேண்டும் என்று சொல்கிறீர்கள். அவர்கள், உலகத்தின் மேல் தோன்றும் விருப்பமின்மை ஒரு கடந்து போகும் நிலை: அவசியமானது, ஆனால் தற்காலிகமானது, அது விரைவில், எல்லாவற்றையும் ஊடுருவும் அன்பாகவும், கடவுளுடன் இயங்கும் உறுதியான முனைப்பாகவும் மாற்றப்படும் என்கிறார்கள்.

**மஹராஜ்:** நீ சொல்வது எல்லாம் வெளியே நோக்கும் (பரவிருத்தி) பாதைக்குச் சரி. உள்நோக்கும் (நிவிர்த்தி) பாதைக்குத் தன்னை இல்லாமல் செய்வது அவசியம். நான் நிற்பது ஒன்றுமே இல்லாத பரமகாசத்திற்குள். வார்த்தைகள் அங்கு சென்று அடைவதில்லை; எண்ணங்களும் கூட. மனதிற்கு அது முழுவதும் இருளும் நிசப்தமுமே. பிறகு விழிப்புணர்வு எழும்ப ஆரம்பித்து சிதாகாசத்தை எழச் செய்கிறது. அது ஞாபகங்களாலும் கற்பனை களாலும் கட்டப்பட்ட மகாதஹாசத்தை பரிணமிக்கச் செய்கிறது.

உலகம் உருவான பிறகு நீ சொல்வதுபோல் இருக்கலாம். குறிக் கோள்களைக் கற்பனை செய்வது, அவற்றை அடைய முயல்வது, வாய்ப்புகளையும் வழிமுறைகளையும் தேடுவது, கற்பனையான பார்வையையும், ஆற்றலையும், தைரியத்தையும் வெளிப்படுத்துவது ஆகியவை மனதின் இயல்பு.

இவை எல்லாம் இறைத் தன்மை கொண்டவை. அவற்றை நான் மறுக்கவில்லை. ஆனால் நான் ஸ்திரமாக இருக்கும் நிலையில் வேற்றுமைகள் எதுவுமே இல்லை, பொருள்களும் இல்லை, அவற்றை உருவாக்கும் மனமும் இல்லை. நான் அடைய வேண்டிய இடத்தை அங்கு அடைகிறேன். எது நடந்தாலும் அது என்னைப் பாதிப்பது இல்லை - ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றின் மேல் வினை புரிகின்றன, அவ்வளவே. ஞாபகங்களிலிருந்தும் எதிர்பார்ப்புகளிலிருந்தும் விடுபட்டவனாய் நான் மலர்ச்சியுடனும், விகல்பமில்லாமலும், முழு உள்ளத்தோடும் இருக்கிறேன். மனம் ஒரு பெரிய வேலைக்காரன் (மகா கர்த்தா). அதற்கு ஓய்வு தேவை. தேவை ஏதும் இல்லாமல் நான் பயமற்றவனாய் இருக்கிறேன். யாரைப் பார்த்து பயப்பட வேண்டும்? பிரிவு என்பதே இல்லை, நாம் தனித் தனியானவர்கள் அல்ல. உச்ச உயர்வான மெய்ப் பொருள் ஒன்று மட்டும்தான் உள்ளது. அதில் தனித்துவமானவையும் தனித்துவமற்றவையும் ஒன்றே.

**கே:** நான் வேண்டுவதெல்லாம் இந்த உலகத்திற்கு உதவ வேண்டும் என்பதே.

**ம:** நீ உதவ முடியாது என்று யார் சொல்வது? உதவி என்றால் என்ன என்றும், என்ன தேவை என்றும் நீ உன் மனதில் உருவகப் படுத்திக் கொண்டுவிட்டாய். நீ என்ன செய்ய வேண்டும் என்பதற்கும், என்ன செய்யமுடியும் என்பதற்கும் இடையிலும், தேவைக்கும், திறமைக்கும் இடையிலுமான ஒரு முரண்பாட்டில் நீ சிக்கிக் கொண்டு விட்டாய்.

**கே:** நாங்கள் ஏன் அவ்வாறு செய்கிறோம்?

**ம:** உன் மனதில் ஒரு வடிவத்தைக் கற்பனை செய்துகொண்டு அதில் உன்னை அடையாளம் கண்டு கொள்கிறாய். தன்னுடைய

திருப்திக்காக ஒரு உலகத்தை மனதில் உருவாக்கச் செய்யத் தூண்டுவது ஆசையின் இயல்பு. ஒரு சிறிய ஆசை கூட நீண்ட வரிசையான செயல்களைத் துவக்கும். அப்படியானால் வலிமை யான ஆசையைப் பற்றி என்ன சொல்ல? ஆசை ஒரு பிரபஞ் சத்தையே உருவாக்கலாம்; அதன் சக்தி விந்தையானது. எப்படி ஒரு தீக் குச்சி பெரிய காட்டையே எரித்துவிடுமோ அப்படி ஒரு ஆசை பரிணமிப்புகளைத் தீயிட்டு விடும்.

படைப்பின் நோக்கமே ஆசைகளை நிறைவேற்றுவதுதான். ஆசை உயர்ந்ததாகவோ, தாழ்ந்ததாகவோ இருக்கலாம். ஆனால் ஆகாசம் சமநிலையானது - அதை ஒருவர் தான் விரும்பியதைக் கொண்டு நிரப்பிக் கொள்ளலாம். நீ எதற்கு ஆசைப்படுவது என்பதில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். நீ யாருக்கு உதவ வேண்டும் என்று நினைக்கின்றாயோ அவர்கள் தங்களுடைய ஆசைகளுக்காக அவரவர் உலகத்தில் இருக்கிறார்கள்; அவர்களுடைய ஆசைகள் மூலமாக அல்லாமல் அவர்களுக்கு வேறு எப்படியும் உதவ முடியாது. நீ அவர்களை சரியான ஆசைகளோடு இருக்கக் கற்றுத் தரலாம். அதனால் அவர்கள் மேல்நிலைக்கு வந்து, இன்ப துன்பங்களுக்குக் காரணமாக இருக்கின்ற ஆசைகளால் ஆன உலகங்களை உருவாக்கவும், திரும்ப உருவாக்கவும் ஏற்படும் உந்துதல்களில் இருந்து விடுபடலாம்.

**கே:** நிகழ்ச்சி முடியும் ஒரு நாள் வரத்தான் செய்யும். ஒரு மனிதன் இறப்பான்; ஒரு பிரபஞ்சம் முடிவுக்கு வரும்.

**ம:** எப்படி ஒரு மனிதன் உறங்கும் போது எல்லாவற்றையும் மறந்துவிட்டு மற்றொரு நாளுக்குள் விழிக்கிறானோ அல்லது இறந்துவிட்டு மற்றொரு உயிரில் வெளிப்படுகிறானோ அப்படி ஆசையாலும், அச்சத்தாலும் ஆன உலகங்கள் கரைந்து காணாமல் போகின்றன. பிறகு மீண்டும் தோன்றுகின்றன. ஆனால் பிரபஞ்ச சாட்சியான உச்ச உயர் நிலை எப்போதும் தூங்குவதும் இறப்பதும் இல்லை. சாசுவதமாக மகா இதயம் துடிக்கிறது. ஒவ்வொரு துடிப்பிலும் ஒரு புதிய பிரபஞ்சம் உருவாகிறது.

**கே:** அது உணர்வு உடையதா?

**ம:** அது மனம் உருவகப்படுத்தும் அனைத்திற்கும் அப்பாற்பட்டது இருத்தலுக்கும், இல்லாமல் இருப்பதற்கும் அப்பாற்பட்டது. அது ஒவ்வொன்றுக்கும் உடன்படுவது மற்றும் மறுதலிப்பது, கடந்தது மற்றும் உள் இருப்பது, உருவாக்குவது மற்றும் அழிப்பது, கற்பனை செய்ய முடியாதபடி மெய்யானது.

**கே:** கடவுளும், மகாத்மாவும் ஒன்றா அல்லது வேறானவையா?

**ம:** அவர்கள் ஒன்றே.

**கே:** சில வித்தியாசங்கள் இருக்க வேண்டும்.

**ம:** கடவுள் எல்லாமும் செய்பவர், ஞானி எதுவும் செய்யாதவர். கடவுள் தானாக 'நான்தான் எல்லாம் செய்கிறேன்' என்று சொல்வதில்லை. அவரைப் பொருத்தவரை அதனதன் இயல்பிற்கு ஏற்ப காரியங்கள் நடக்கின்றன. ஞானியைப் பொருத்தவரை எல்லாம் கடவுளால் நடத்தப்படுகின்றன. அவர் கடவுளுக்கும் இயற்கைக்கும் இடையில் வித்தியாசம் எதையும் பார்ப்பதில்லை. கடவுளும் ஞானியும், அசைவனவற்றின் அசையாத மையமாகவும், மாறுபவைகளின் சாசுவதமான சாட்சியாகவும் தங்களை அறிவார்கள். மையம் என்பது சூன்யமான ஒரு புள்ளி; சாட்சி என்பது தூய்மையான விழிப்புணர்வின் ஒரு புள்ளி. அவர்கள் தங்களை ஒன்றுமில்லாதவர்கள் என்று அறிவார்கள். அதனால் எதுவும் அவர்களைக் கட்டுப்படுத்தாது.

**கே:** உங்களுடைய தனிப்பட்ட அனுபவத்தில் இது எப்படி இருக்கிறது? நீங்கள் எப்படி உணர்கிறீர்கள்?

**ம:** நான் ஒன்றுமே இல்லாததால் நான் எல்லாமுமே. ஒவ்வொன்றும் நானே; ஒவ்வொன்றும் என்னுடையதே. அசைவதைப் பற்றி நான் நினைத்தால் எப்படி என் உடம்பு அசைகிறதோ, அப்படி காரியங்கள் அவற்றைப் பற்றி நினைத்தால் நடக்கின்றன. நான் எதையும் செய்வதில்லை என்பதைப் புரிந்து கொள். அவை நடப்பதை நான் வெறுமனே பார்க்கிறேன்.

**கே:** காரியங்கள் நீங்கள் எவ்வாறு நடக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அப்படி நடக்கின்றனவா அல்லது அவை எவ்வாறு நடக்கின்றனவோ அவ்வாறு நீங்கள் விரும்புகிறீர்களா?

**ம:** இரண்டுமே. நான் ஏற்றுக் கொள்கிறேன்; ஏற்றுக் கொள்ளப் படுகிறேன். அனைத்துமே நான், நானே அனைத்தும். நானே உலகமாய் இருப்பதால் எனக்கு உலகத்தைப் பார்த்து பயமில்லை. எல்லாமுமாக இருப்பதால் நான் எதைப் பார்த்து பயப்பட வேண்டும்? தண்ணீரைப் பார்த்து தண்ணீருக்குப் பயமில்லை; தீயைப் பார்த்து தீயிற்குப் பயமில்லை. பயத்தை உணரவோ அல்லது அபாயத்திற்கு உட்படவோ நான் ஒன்றுமே இல்லையாதலால் எனக்குப் பயம் என்பது இல்லை. எனக்கு வடிவம் இல்லை. பெயரும் இல்லை. ஒரு பெயருடனும் வடிவத்துடனும் இணைத்துக் கொள்வதுதான் அச்சத்தை உருவாக்குகிறது. நான் பந்தப் படாதவன். நான் ஒன்றுமே இல்லை. ஆதலால் ஒன்றுமில்லாதது ஒன்றையும் பார்த்துப் பயப்படாது. மாறாக, ஒன்று ஒன்றுமில்லாததைத் தொடும்போது அது ஒன்றுமில்லாததாகி விடுவதால் ஒவ்வொன்றும் ஒன்றுமில்லாததிற்குப் பயப்படுகின்றன. அது அடிப்பாகம் இல்லாத கிணற்றைப் போன்றது, எது அதற்குள் விழுந்தாலும் மறைந்துவிடும்.

**கே:** *கடவுள் ஒரு நபர் அல்லவா?*

**ம:** நீ உன்னை ஒரு நபராக நினைக்கும் வரை அவரும் ஒரு நபர்தான். நீ எப்போது எல்லாமும் ஆகிறாயோ அப்போது அவரை நீ எல்லாமுமாகப் பார்ப்பாய்.

**கே:** *மனப்பாங்கை மாற்றிக்கொள்வதன் மூலம் நான் நிஜத்தை மாற்ற முடியுமா?*

**ம:** மனப்பாங்கு நிஜம். உதாரணத்திற்கு கோபத்தை எடுத்துக் கொள். நான் கோபத்துடன் அறைக்குள் மேலும் கீழும் நடந்து கொண்டு இருக்கலாம்; அதே சமயம் நான் என்ன என்று, அறிவு மற்றும் அன்பின் ஒரு மையம் என்று, தூய்மையான இருப்பின் ஒரு அணு என்று தெரிந்தால் எல்லாம் அடங்கி மனம் நிசப்தத்தில் அடங்கிவிடுகிறது.

**கே:** *இருப்பினும் நீங்கள் சிலசமயம் கோபப் படுகிறீர்கள்.*

**ம:** நான் யாருடன் எதற்காகக் கோபப் படுவது? கோபம் வந்த பிறகு என்னை ஞாபகப் படுத்திக் கொண்டால் கரைந்து விடுகிறது.

அது எல்லாம் 'குண'ங்களின் (அண்டப் பொருளின் தன்மை) விளையாட்டு. என்னை அவற்றுடன் அடையாளப்படுத்திக் கொண்டால் நான் அவற்றின் அடிமை. நான் தனித்து நின்றால் அவற்றின் எஜமான்.

**கே:** உங்கள் மனப்பாங்கால் உலகத்தில் தாக்கத்தை ஏற்படுத்த முடியுமா? உலகத்திலிருந்து உங்களைப் பிரித்துக்கொள்வதால் அதற்கு உதவும் எல்லா வாய்ப்புகளையும் இழந்து விடுகிறீர்கள்.

**ம:** அது எப்படி? எல்லாமும் நானே - எனக்கு நான் உதவிக் கொள்ள முடியாதா? நான் என்னைக் குறிப்பிட்ட ஒருவருடன் அடையாளப் படுத்திக் கொள்வதில்லை. ஏனெனில் நானே எல்லாமும் - குறிப்பிட்ட ஒருவரும், பிரபஞ்சமும்.

**கே:** அப்படியானால் உங்களால் தனிப்பட்ட ஒருவனான எனக்கு உதவமுடியுமா?

**ம:** உள்ளிருந்து நான் உனக்கு எப்போதும் உதவிக் கொண்டு இருக்கிறேன். நானும் நீயும் ஒன்றே - அது எனக்குத் தெரியும், உனக்குத் தெரியாது. அது மட்டும்தான் வித்தியாசம். அது நிலைக்காது.

**கே:** முழு உலகத்திற்கும் எப்படி உங்களால் உதவ முடியும்?

**ம:** காந்தி இறந்து விட்டார். ஆனால் அவர் மனம் இந்த உலகத்தில் ஊடுருவி இருக்கிறது. ஞானியின் எண்ணம் மனிதகுலம் முழுவதும் ஊடுருவி இடையறாது நன்மைக்காக இயங்குகிறது. உள்ளிருந்து வந்து அடையாளமற்று இருப்பதால் அது மிகவும் வலிமையான தாகவும் நிர்பந்திப்பதாகவும் இருக்கிறது. அப்படித்தான் உலகம் மேம்படுகிறது - உள்ளே உள்ளது வெளியே உள்ளதற்கு உதவுவதாகவும், வாழ்த்துவதாகவும். எப்படி ஒரு ஆறு கடலில் கலக்கும் போது பெயர், உருவம் ஆகியவற்றை இழந்து தண்ணீர் மட்டும் மிஞ்சி கடலுடன் ஒன்றாகிவிடுகிறதோ அப்படி ஞானி இறக்கும்போது இல்லாமல் ஆகிவிடுகிறார். ஒரு ஞானி பிரபஞ்ச மனதுடன் இணையும் போது அவருடைய நல்ல தன்மைகளும், நுண்அறிவும் மனித குலத்தின் பொக்கிஷமாகி, ஒவ்வொரு மனிதரையும் உயர்த்துகிறது.

**கே:** நாங்கள் எங்கள் தனித்தன்மையுடன் இணைக்கப்பட்டு உள்ளோம். மற்றவர்களைப்போலில்லாமல் இருக்கும் எங்கள் தனித்தன்மையை மிகவும் மதிக்கிறோம். நீங்கள் இதை மறுப்பது போல் தெரிகிறது. உங்களுடைய குணமற்ற தன்மையால் எங்களுக்கு என்ன பயன்?

**ம:** தோன்றாதவை, தோன்றியவை, மொத்த வெளிப்பாடு, நபர் (நிர்குணா, சகுணா, வியக்தா, வியக்தி); இவை எல்லாம் வெறும் வார்த்தைகள், கருத்து நிலைகள், மனதின் பாங்குகளே. அவற்றில் மெய்த்தன்மை இல்லை. மெய் நிசப்தத்தில்தான் உணரப்படும். நீ உன்னுடைய தனிநபர்த்தன்மையுடன் ஒட்டிக் கொண்டுள்ளாய். ஆனால் நீ பிரச்சனையுடன் இருக்கும்போதுதான் உன் நபர்த்தன்மையை உணர்கிறாய். பிரச்சனை இல்லாமல் இருக்கும் போது உன்னைப் பற்றி நீ நினைப்பது இல்லை.

**கே:** குணமற்ற தன்மையின் பயன்களைப் பற்றி நீங்கள் எனக்கு எதுவும் சொல்லவில்லை.

**ம:** நீ விழிப்பதற்குக் கண்டிப்பாகத் தூங்க வேண்டும். நீ பிறப்பதற்கு இறக்க வேண்டும். புது வடிவம் எடுக்க உருக வேண்டும். கட்டுவதற்கு இடிக்க வேண்டும். உருவாகுவதற்கு முன்பு இல்லாமல் ஆக வேண்டும். உச்ச உயர்வானது பிரபஞ்சக் கரைப்பான். அது எல்லாப் பாத்திரங்களையும் அரித்துவிடும். அது எல்லாத் தடைகளையும் எரித்துவிடும். ஒவ்வொன்றையும் தீர்க்கமாக மறுக்காவிட்டால் இருப்பவைகளின் கொடுமை தீர்க்கமாக இருக்கும். உச்ச உயர்வானது மிகச் சிறந்த சமநிலைப் படுத்தி; அது கட்டற்ற நிலையில், உயிர்வாழ்தலை மிகச் சரியாகவும் துல்லியமாகவும் சமப்படுத்துகிறது. அது உன்னைக் கரைக்கிறது; அதனால் உன்னுடைய மெய்த் தன்மையை மறுபடியும் உறுதிப் படுத்துகிறது.

**கே:** எல்லாமும் அதன் சுய நிலையில் நன்று. ஆனால் தினசரி வாழ்க்கையில் எப்படி அது நடக்கிறது?

**ம:** தினசரி வாழ்க்கை என்பது செயல்படுவது. நீ விரும்பு கிறாயோ இல்லையோ, செயல்பட்டாக வேண்டும். உனக்காகச்

செய்யும் எல்லாம் மேலும் மேலும் சேர்ந்து வெடிக்கும் நிலைக்கு வந்துவிடும். ஒரு நாள் வெளியே வந்து உனக்கும் உன் உலகத்திற்கும் இடையூறு செய்யும். நீ எல்லோருடைய நன்மைக்காகவும் உழைக்கிறாய் என்று உன்னையே ஏமாற்றிக்கொள்ளும்போது அது நிலைமையை மேலும் மோசமாக்குகிறது. ஏனெனில் மற்றவர்களுக்கு எது நல்லது என்று உன் சொந்தக் கருத்துக்களால் நீ வழிநடத்தப்படக் கூடாது. மற்றவர்களுக்கு எது நல்லது என்று தனக்குத் தெரியும் என்று சொல்லும் மனிதன் அபாயகரமானவன்.

**கே:** அப்படியானால் ஒருவர் எப்படி இயங்குவது?

**ம:** உனக்காகவோ அல்லது மற்றவர்களுக்காகவோ அல்லாமல் வேலைக்காகவே. பிரயோஜனமாகச் செய்யும் ஒவ்வொரு வேலையும் அதனுடைய சொந்த காரணத்தையும் அர்த்தத்தையும் கொண்டிருக்கும். ஒன்றுக்கு மற்ற எதையும் காரணமாகச் செய்யாதே. பிணைக்காதே. கடவுள் மற்ற ஒன்றுக்கு உழைக்க ஒன்றை உருவாக்கவில்லை. ஒவ்வொன்றும் அதற்காகவே படைக்கப்பட்டிருக்கிறது. அதற்காகவே உருவாக்கப்பட்டிருப்பதால் அது மற்றவற்றில் குறுக்கிடுவதில்லை. நீ மக்களையும் பொருட்களையும் அவற்றிற்கு அன்னியமானவற்றிற்காக உபயோகப் படுத்துகிறாய். அதனால் உலகத்தோடும் உன்னோடும் கடும் பிரச்சனைகளை உருவாக்கிக் கொள்கிறாய்.

**கே:** நம் மெய்யான ஸ்வரூபம் நம்முடன் எப்போதும் உள்ளதாகச் சொல்கிறீர்கள். அதை ஏன் நாங்கள் அறியவில்லை?

**ம:** ஆம்; நீ எப்போதும் மெய்யான ஸ்வரூபத்துடன்தான் உள்ளாய். ஆனால், உன் கவனம் முழுவதும் பௌதீக அல்லது மனதால் ஆன பொருட்களின் மேல் மட்டுமே உள்ளது. எப்போது உன் கவனம் ஒரு பொருளை விட்டு விலகி மற்றொன்றின் மேல் நிலைபெறாமல் இருக்கிறதோ அந்த இடைவெளியில் நீ தூய இருத்தலாக உள்ளாய். பகுத்தறிவினாலும், பற்றற்ற தன்மையினாலும் (விவேக - வைராக்கியப் பயிற்சியினால்) உணர்வுகள் மற்றும் மனோ நிலைகளை இழப்பாய். இழந்து தூய இருத்தலானது இயல்பான நிலையாக வெளிப்படும்.

**கே:** இந்த பிரிவுபட்ட உணர்வை எப்படி முடிவிற்குக் கொண்டுவருவது?

**ம:** மனதை 'நான்' என்பதின் மீது, இருத்தல் என்னும் உணர்வின் மீது குவிப்பதால் 'நான் இன்னார்' என்பது கரைகிறது. 'நான் ஒரு சாட்சி மாத்திரமே' என்பது மிஞ்சுகிறது. அதுவும் 'நான் எல்லாமுமே' என்பதில் கரைந்து விடுகிறது. பிறகு எல்லாம் ஒன்றாகிவிடுகிறது. அந்த ஒன்று - அதாவது நீ - என்னிலிருந்து தனியானது அல்ல. தனியான 'நான்' என்னும் கருத்தை விட்டு விடு. அப்போது 'யாருடைய அனுபவம்' என்னும் கேள்வி எழாது.

**கே:** நீங்கள் உங்கள் அனுபவத்திலிருந்து பேசுகிறீர்கள். நான் அதை எப்படி என்னுடையதாக்க முடியும்?

**ம:** நாம் வேவ்வேறானவர்கள் என்று நீ நம்புவதால் என் அனுபவத்தை உன் அனுபவத்திலிருந்து வேறுபட்டதாகச் சொல்கிறாய். ஆனால் நாம் அப்படிப் பின்னமானவர்கள் அல்ல. மிக ஆழ்ந்த நிலையில் என் அனுபவம் உன் அனுபவமே. உன்னுள் ஆழமாக மூழ்கு. அப்போது அதைச் சுலபமாகவும் எளிதாகவும் கண்டுகொள்வாய். 'நான்' என்னும் திசையில் செல்.



# 25. "நான்" என்பதைப் பிடித்துக் கொள்

**கேட்பவர்:** நீங்கள் எப்போதாவது மகிழ்ச்சியாகவோ அல்லது துக்கமாகவோ இருந்திருக்கிறீர்களா? உங்களுக்குச் சந்தோசமும் துக்கமும் என்னவென்று தெரியுமா?

**மஹராஜ்:** நீ என்னவென்று வேண்டுமானாலும் கூறிக் கொள். எனக்கு அவை எல்லாம் மனதின் நிலைகளே. நான் மனம் அல்ல.

**கே:** அன்பு என்பது மனதின் ஒரு நிலையா?

**ம:** அன்பு என்றால் என்னவென்று பொருள் கொள்கிறாய் என்பதைப் பொறுத்தது அது. ஆசை என்பது மனதின் ஒரு நிலையே. ஆனால் ஒருமைத் தன்மையை அறிந்து அடைவது மனதைக் கடந்தது. என்னைப் பொருத்தவரை எதுவும் அதுவாகவே இருப்பாக இருப்பதில்லை. எல்லாமும் சுயம். எல்லாமும் நானே. என்னை எல்லோரிடத்திலும் பார்ப்பது, எல்லோரையும் என்னிடத்தில் பார்ப்பதுதான் நிச்சயமாக அன்பு எனப்படுவது.

**கே:** நான் எதையாவது மகிழ்ச்சி அளிப்பதாகப் பார்த்தால் அதை நாடுகிறேன். யார் அதை வேண்டுவது? சுயமா அல்லது மனமா?

**ம:** கேள்வி தவறு. 'யார்' என்பது இங்கு இல்லை. இங்கு ஆசை, பயம், கோபம் ஆகியன உள்ளன. அதனால் மனம் 'இது நான்', 'இது என்னுடையது' என்று சொல்கிறது. 'நான்' அல்லது 'என்னுடையது' என்று சொல்லக்கூடியது என்று எதுவுமே இல்லை. ஆசை என்பது மனதின் ஒரு நிலை; அது மனதால் உணரப்பட்டு பெயரிடப் படுவது. மனதால் உணரப் படாமலோ, பெயரிடப்படாமலோ ஆசை எவ்வாறு இருக்க முடியும்?

**கே:** ஆனால் பெயரிடப்படாமல் உணர மட்டுமே கூடிய ஏதாவது ஒன்று உண்டா?

**ம:** ஆம். பெயரிடுதல் மனதைத் தாண்டிச் செல்ல முடியாது. ஆனால் உணர்தல் என்பது விழிப்புணர்வு நிலையே.

**கே:** ஒருவர் இறக்கும் போது என்ன நடக்கிறது?

**ம:** ஒன்றும் நடப்பதில்லை. ஏதோ ஒன்று இருந்தது ஒன்றுமில்லாததாகிறது. ஒன்றுமே இருக்கவில்லை. ஒன்றுமே மிஞ்சவில்லை.

**கே:** கண்டிப்பாக உயிரோடு இருப்பதற்கும், இறந்த நிலைக்கும் ஒரு வேறுபாடு உள்ளது. நீங்கள் உயிரோடு இருப்பதை இறந்ததைப் போலவும், இறந்ததை உயிரோடு இருப்பதைப் போலவும் பேசுகிறீர்கள்.

**ம:** ஏன் ஒருவர் இறப்பதைப் பார்த்துப் புலம்புகிறாய்? ஆனால் ஒவ்வொரு நாளும் லட்சக் கணக்கானவர்கள் இறப்பதைப் பற்றி சிறிதும் கவலைப்படுவதில்லை. பிரபஞ்சங்கள் முழுவதும் ஒவ்வொரு கணமும் வடிவமைக்கப்பட்டு வெடித்துக் கொண்டிருக்கின்றன. நான் அதற்காக அழ வேண்டுமா? எனக்கு ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது: இருக்கும் ஒவ்வொன்றும் விழிப்புணர்வில் வாழ்கிறது, இயங்குகிறது. அதன் இருத்தல் விழிப்புணர்வில் உள்ளது. நான் அந்த விழிப்புணர்விற்கு உள்ளும், அதற்கு அப்பாலும் உள்ளேன் - அதற்கு உள்ளே சாட்சியாகவும் (சித்), அதற்கு வெளியே 'இருத்தல்' (சத்) ஆகவும்.

**கே:** உங்கள் குழந்தை நோயுற்று இருக்கும் போது நீங்கள் கண்டிப்பாக அக்கறை கொள்வீர்கள் அல்லவா?

**ம:** நான் பதற்றப்பட மாட்டேன். தேவையானவற்றைச் செய்வேன். நான் எதிர்காலத்தைப் பற்றி கவலைப்படுவதில்லை. ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஏற்றவாறு செயல்படுவது என் இயல்பாக இருக்கிறது. என்ன செய்வது என்று யோசித்து நான் நிற்பது இல்லை. நான் செயல்பட்டு மேற்கொண்டு செல்கிறேன். விளைவுகள் என்னைப் பாதிப்பது இல்லை. அவை நல்லவையா

அல்லது மோசமானவையா என்று கூட நான் அக்கறை கொள்வதில்லை. அவை எப்படி இருப்பினும் அவ்வாறே உள்ளன - அவை திரும்பி என்னிடம் வந்தால் அவற்றைப் புதிதாக எதிர்கொள்வேன். இல்லையென்றால் சில சமயம் அவற்றைப் புதிதாகக் கையாள்வது நிகழ்கிறது. நான் செய்வது எதிலும் ஒரு நோக்கம் இல்லை. ஒவ்வொன்றும் அவை நிகழும் விதத்தில் நிகழ்கின்றன - அவற்றை நான் நிகழ்த்துவதால் அல்ல. ஆனால் அவை நான் இருப்பதால் நடக்கின்றன. மெய்மையில் எதுவும் ஒருபோதும் நிகழ்வதில்லை. மனம் அமைதி இல்லாமல் இருக்கும் போது சிவனை நடனமாடச் செய்கிறது - அலைபாயும் ஏரித் தண்ணீர் அதில் பிரதிபலிக்கும் நிலவை நடனமாடச் செய்வது போல. இவை எல்லாம் தவறான கருத்துக்களால் ஏற்படும் தோற்றங்களே.

**கே:** கண்டிப்பாக நீங்கள் பலவற்றையும் அறிவீர்கள். அவற்றின் தன்மைப்படி நடந்து கொள்கிறீர்கள். நீங்கள் குழந்தையைக் குழந்தையாகவும், முதியவர்களை முதியவர்களாகவும்தான் பாவிக்கிறீர்கள்.

**ம:** உப்பின் சுவை எப்படி பெரும் கடலில் ஊடுருவிக் கலந்தும், ஒவ்வொரு துளி கடல் நீரும் ஒரே உப்புச் சுவையைக் கொண்டும் இருக்கிறதோ அப்படி ஒவ்வொரு அனுபவமும் மெய்மையை எனக்கு உணர்த்துகிறது, என் இருத்தலை எப்போதும் புத்தம் புதிதாக அறிந்து கொள்வது போல்.

**கே:** என் உலகத்தில் நீங்கள் இருப்பது போல், நான் உங்கள் உலகத்தில் இருக்கிறேனா?

**ம:** கண்டிப்பாக, நீயும் நானும் இருக்கிறோம் - ஆனால் விழிப்புணர்வில் ஒரு புள்ளியாக; நாம் விழிப்புணர்விலிருந்து தனித்தவர்கள் அல்ல. இதை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும்: இந்த உலகம் விழிப்புணர்வு என்னும் சரத்தில் தொங்குகிறது; விழிப்புணர்வு இல்லையேல் உலகம் இல்லை.

**கே:** விழிப்புணர்வில் பல மையங்கள் இருக்கின்றன; அத்தனை உலகங்கள் உள்ளனவா?

**ம:** உதாரணத்திற்குக் கனவை எடுத்துக்கொள். ஒரு மருத்துவ மனையில் பல நோயாளிகள் இருப்பார்கள், எல்லோரும் தூங்கிக் கொண்டும், கனவு கண்டுகொண்டும், ஒவ்வொருவரும் தன் தனிப்பட்ட கனவைக் கண்டுகொண்டு, மற்றவர்களின் கனவுடன் தொடர்பில்லாமல் அவற்றால் பாதிக்கப் படாமல் இருப்பார்கள் - நோயுற்று இருப்பது என்னும் ஒரு பொதுவான தன்மையைத் தவிர. அதைப்போல சர்வ சாமான்ய அனுபவ ரூபத்தாலான உண்மையான உலகத்திலிருந்து நம் கற்பனையால் பிரிந்து, நம்மைத் தனிப்பட்ட ஆசைகள் மற்றும் அச்சங்கள், உருவகங்கள் மற்றும் எண்ணங்கள், கற்பனைகள் மற்றும் கருத்துக்கள் ஆகிய மேகங்களால் சூழப்பட்டு இருக்கிறோம்.

**கே:** இது எனக்குப் புரிகிறது. ஆனால் அதிக அளவிலான விதங்களில் தனிப்பட்ட உலகங்கள் இருப்பதற்கு என்ன காரணம்?

**ம:** விதங்கள் ஒன்றும் அதிகம் இல்லை. எல்லாக் கனவுகளும் ஒரு பொதுவான உலகின்மேல் பதிக்கப் பட்டவையே. ஒன்றை ஒன்று குறிப்பிட்ட அளவிற்கு மாற்றவும், பாதிக்கவும் செய்கின்றன. இருப்பினும், அடிப்படையான ஒருமைத்தன்மை இயங்குகிறது. எல்லாவற்றிக்கும் மூல காரணமாக சுயத்தை மறத்தல் இருக்கிறது, 'நான் யார்' என்பதை அறியாமல்.

**கே:** மறப்பதற்கு முன் தெரிந்திருக்க வேண்டும். மறப்பதற்கு முன் எனக்கு என்னை யார் என்று தெரியுமா?

**ம:** ஆமாம். சுயத்தை மறப்பது என்பது சுயத்தை அறிவதில் பொதிந்து இருக்கிறது. ஒரு உயிரின் இரு தன்மைகள்தான் விழிப்புணர்வுடன் இருப்பதும், விழிப்புணர்வு இல்லாமல் இருப்பதும். அவை இரண்டும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்தே இருக்கின்றன. நீ உலகத்தை அறிய சுயத்தை மறக்கிறாய் - சுயத்தை அறிய உலகத்தை மறக்கிறாய். உலகம் என்பது என்ன? நினைவு களின் ஒரு தொகுப்பே. அர்த்தமுள்ள ஒன்றின் மேல் தொக்கிக் கொள். 'நான்' என்னும் விழிப்புணர்வைப் பிடித்துக்கொள். மற்ற எல்லாவற்றையும் விட்டு விடு. இது தான் 'சாதனா' என்பது. மெய்யறிதலில் பிடித்துக் கொள்ள எதுவும் இல்லை; மறப்பதற்கும்

எதுவும் இல்லை. எல்லாமும் அறியப்படும், எதுவுமே ஞாபகத்தில் இருக்காது.

**கே:** சுயத்தை மறப்பதற்கு என்ன காரணம்?

**ம:** காரணம் ஒன்றும் இல்லை. ஏனெனில் ஞாபகத்தில் உள்ளவற்றை மறப்பது என்பது இல்லாததால் மனதின் நிலைகள் ஒன்றை ஒன்று தொடர்ந்து வருகின்றன. ஒவ்வொன்றும் முந்தய ஒன்றை இல்லாமல் செய்கின்றன. சுயத்தை ஞாபகத்தில் வைத்திருப்பது ஒரு மனோ நிலை. சுயத்தை மறப்பது மற்றொரு நிலை. அவை இரவும் பகலும் போல மாறுகின்றன. மெய்மை இவை இரண்டிற்கும் அப்பாற் பட்டது.

**கே:** மறப்பதற்கும், அறியாமல் இருப்பதற்கும் கண்டிப்பாக ஒரு வித்தியாசம் இருக்க வேண்டும். அறியாமல் இருப்பதற்குக் காரணம் தேவையில்லை. மறப்பது என்பது முன்பே அறிந்ததையும், மறப்பதற்கான உந்துதல் அல்லது திறமையையும் அடிப்படை யாகக் கொண்டது. அறியாமல் இருப்பதற்கு என்னால் காரணம் கண்டு பிடிக்க முடியாது என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். ஆனால் மறப்பது என்பதற்கு ஆதாரம் ஒன்று இருக்க வேண்டும்.

**ம:** தெரியாமல் இருப்பது என்ற ஒன்று கிடையாது. மறத்தல் என்பது மட்டுமே உள்ளது. மறப்பதில் என்ன தவறு? ஞாபகம் வைத்திருப்பதைப் போலவே மறப்பதும் சாதாரணமானது.

**கே:** தன்னை மறப்பது ஒரு பேரழிவு இல்லையா?

**ம:** தன்னையே தொடர்ந்து நினைத்துக் கொண்டிருப்பதைப் போன்றே மோசமானது. மறப்பது, மறக்காமல் இருப்பது ஆகிய இரு நிலைகளுக்கும் அப்பால் ஒரு நிலை உள்ளது - உள்ளபடியான நிலை. ஞாபகம் வைத்திருப்பது, மறப்பது - இவை எல்லாம், சிந்தனை வயப்பட்ட, வார்த்தைகள் வயப்பட்ட மனதின் நிலைகளே. பிறத்தல் என்னும் கருத்தை உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். நான் பிறந்ததாகச் சொன்னார்கள். எனக்கு அது ஞாபகம் இல்லை. நான் இறப்பேன் என்று சொல்கிறார்கள். அதை நான் எதிர்பார்ப்பதில்லை. நான் மறந்து விட்டதாகவோ அல்லது

கற்பனா சக்தி இல்லாதவன் என்றோ நீ சொல்வாய். ஆனால் நடக்காத ஒன்றை ஞாபகம் வைத்துக் கொள்ளவோ, நடக்க முடியாத ஒன்றை எதிர்பார்க்கவோ என்னால் முடியாது. உடல்கள் பிறக்கின்றன, உடல்கள் இறக்கின்றன. ஆனால் எனக்கு அதனால் என்ன? உடல்கள் விழிப்புணர்வில் வந்து போகின்றன. விழிப்புணர்வே என்னுள் அதன் வேர்களைக் கொண்டிருக்கிறது. நான் உயிர். மனமும் உடலும் என்னுடையவை.

**கே:** இந்த உலகத்தின் வேராக சுயம் மறத்தல் உள்ளதாகச் சொல்கிறீர்கள். நான், மறப்பதற்கு நினைவு வைத்திருக்க வேண்டும். நான் எதை ஞாபகம் வைத்துக் கொள்ளவில்லை? நான் இருப்பதை நான் மறக்கவில்லை.

**ம:** இந்த 'நான்' என்பதுகூட மாயையின் ஒரு பகுதியாக இருக்கலாம்.

**கே:** அது எப்படி அவ்வாறு இருக்கும்? நான் இல்லை என்று நீங்கள் எப்படி நிரூபிக்க முடியும்? அப்படியே நான் இல்லை என்று ஒப்புக்கொள்ள வைத்தாலும் நான் உள்ளேன்.

**ம:** மெய்யை நிரூபிக்கவோ, மறுதலிக்கவோ முடியாது - மனதால் முடியாது, மனதிற்கு அப்பால் தேவை இல்லை. மெய்யில் 'எது மெய்' என்ற கேள்வி எழாது. தோன்றியவையும் (சகுணா) தோன்றா தவையும் (நிர்குணா) வேறு வேறு அல்ல.

**கே:** அப்படியானால் எல்லாம் மெய்யே.

**ம:** நானே எல்லாமும். என்னைப் போல எல்லாமும் மெய். எனக்கு அப்பால் எதுவும் மெய் இல்லை.

**கே:** இந்த உலகம் ஒரு தவறின் விளைவு என்று நான் கருத வில்லை.

**ம:** முழு ஆராய்ச்சிக்குப் பிறகுதான் நீ அவ்வாறு சொல்ல முடியும். அதற்கு முன்னாள் அல்ல. மெய் அல்லாதவற்றை நீ விட்டு விட்டால் எது மிஞ்சுகிறதோ அதுதான் மெய்.

**கே:** ஏதாவது மிஞ்சுமா?

**ம:** மெய் மிஞ்சுகிறது. ஆனால் வார்த்தைகளால் தவறாகப் புரிந்து கொள்ளாதே.

**கே:** கணக்கற்ற காலமாக, கணக்கற்ற பிறவிகளாக நான் என் உலகத்தை உருவாக்கி, மேம்படுத்தி, அழகுபடுத்தி வருகிறேன். அது பூரணமானதோ, மெய் அற்றதோ இல்லை. அது ஒரு செயல்முறை.

**ம:** நீ தவறாகப் புரிந்து கொண்டு உள்ளாய். உன்னைத் தவிர இந்த உலகத்திற்கு இருப்பு என்பது இல்லை. ஒவ்வொரு கணத்திலும் அது உள்ளது; ஆனால் உன் பிரதிபலிப்பாக. நீ உருவாக்குகிறாய். நீ அழிக்கிறாய்.

**கே:** மறுபடியும் உருவாக்குகிறேன். மேம்படுத்துகிறேன்.

**ம:** மேம்படுத்த அது குறைவுடையது என்று நிரூபிக்க வேண்டும். ஒருவன் வாழ்வதற்கு இறக்க வேண்டும். இறப்பதன் மூலம் அல்லாமல் மறுபிறவி என்பது கிடையாது.

**கே:** உங்கள் பிரபஞ்சம் முழுமையானதாக இருக்கலாம். ஆனால் என்னுடைய தனிப்பட்ட பிரபஞ்சம் மேம்பட்டுக் கொண்டு இருக்கிறது.

**ம:** உன்னுடைய தனிப்பட்ட பிரபஞ்சம் அதுவாகவே இருப்பது இல்லை. அது மெய்யின் குறிப்பிட்ட அளவான, திரிக்கப்பட்ட பார்வையே ஆகும். பிரபஞ்சம் மேம்படுத்தப்பட வேண்டிய தில்லை. உன்னுடைய பார்வைக் கோணம்தான் மேம்படுத்தப் பட வேண்டியது.

**கே:** நீங்கள் எவ்வாறு அதைப் பார்க்கிறீர்கள்?

**ம:** அது உலகம் என்னும் நாடகம் நடக்கும் மேடை. செயல் பாட்டின் தரம்தான் முக்கியம்; நடிகர்கள் என்ன சொல்கிறார்கள் அல்லது என்ன செய்கிறார்கள் என்பது முக்கியம் இல்லை. ஆனால் எவ்வாறு சொல்கிறார்கள் அல்லது செய்கிறார்கள் என்பதுதான் முக்கியம்.

**கே:**எனக்கு நாடகம் (லீலை) என்னும் கருத்து பிடிக்கவில்லை. மாறாக, நான் இந்த உலகத்தை ஒரு வேலை செய்யும் இடமாகவும், நாம் எல்லோரும் அதைக் கட்டுபவர்களாகவும் ஒப்பிடுகிறேன்.

**ம:** நீ அதை மிகவும் முக்கியமாக எடுத்துக் கொள்கிறாய். நாடகம் என்பதில் என்ன தவறு? நீ பூரணமாக இல்லாதவரைதான் உனக்கு நோக்கம் இருக்கும். அதுவரைக்கும் முழுமை, பூரணம் என்பது நோக்கம். ஆனால், நீ உன்னுள் முழுமையாக இருந்தால், உள்ளேயும் வெளியிலும் பூரணமாக ஒன்று சேர்ந்து இருந்தால், நீ பிரபஞ்ச ஆனந்தத்தில் திளைக்கலாம்; அதற்காகப் பிரயத்தனப் படவேண்டியது இல்லை. பிளவுற்றவர்களுக்கு நீ மிகவும் கடினப் பட்டு உழைப்பதாகத் தோன்றும். அது அவர்களுக்கு ஏற்படும் மாயத் தோற்றம். விளையாட்டு வீரர்கள் மிகவும் முயற்சி செய்வதாகத் தோன்றும். இருப்பினும் அவர்களின் ஒரே குறிக்கோள் விளையாடுவதும், காண்பிப்பதும் ஆகும்.

**கே:** அப்படியானால் கடவுள் வெறுமனே வேடிக்கை செய்து கொண்டு இருப்பதாகவும், அவர் குறிக்கோள் இல்லாத செயல் செய்துகொண்டிருப்பதாகவும் சொல்கிறீர்களா?

**ம:** கடவுள் உண்மையும், நல்லவரும் மட்டும் அல்ல. அவர் அழகானவரும் கூட (சத்தியம், சிவம், சுந்தரம்). அவர் அழகை உருவாக்குவது அவ்வாறு செய்வதின் மகிழ்ச்சிக்காக.

**கே:** அப்படியானால் அழகு அவருடைய நோக்கம்!

**ம:** நீ ஏன் நோக்கத்தைப் புகுத்துகிறாய்? நோக்கம் என்பது இயக்கத்தையும், மாறுதலையும், முழுமையற்றதையும் குறிக்கிறது. கடவுள் அழகிற்காக ஏதும் செய்வதில்லை. அவர் எது செய்தாலும் அது அழகே. ஒரு பூ அழகாக இருக்க முயற்சி செய்வதாக நீ சொல்வாயா? அது அதன் இயல்பிலேயே அழகானது. அதைப்போல முழுமையே கடவுள்; முழுமைக்கு முயற்சிப்பது அல்ல கடவுள்.

**கே:** நோக்கம் தன்னை அழகில் நிறைவு படுத்திக்கொள்கிறது.

**ம:** அழகு என்பது என்ன? ஆனந்தமாக எவை எல்லாம் உணரப்படுகின்றனவோ அவை எல்லாம் அழகானவை. ஆனந்தம்தான் அழகின் சாரம்.

**கே:** நீங்கள் சத் - சித் - ஆனந்தத்தைப் பற்றிச் சொல்கிறீர்கள். நான் இருக்கிறேன் என்பது வெளிப்படை. நான் அதை அறிவேன்

என்பதும் வெளிப்படை. நான் சந்தோஷமாக இருக்கிறேன் என்பது மட்டும் வெளிப்படையாகவே இல்லை. என் சந்தோசம் எங்கே போய்விட்டது?

**ம:** உன் இருத்தலைப் பற்றி முழுக் கூர்நோக்குடன் இரு. அப்போது நீ விழிப்புணர்வோடு ஆனந்தத்தில் இருப்பாய். நீ உன் மனதை உன்னை விட்டு வெளியில் கொண்டுசென்று நீ எது இல்லையோ அதில் வைத்திருப்பதால் நீ நலமாக இருக்கும் உணர்வற்று இருக்கிறாய்.

**கே:** நம் முன் இரு பாதைகள் இருக்கின்றன - ஞான மார்க்கம், போக மார்க்கம். இரண்டுமே விடுதலையைத் தருகின்றன.

**ம:** போகத்தை எப்படி மார்க்கம் என்று சொல்கிறாய்? எப்படி போகம் முழுமையைத் தரும்?

**கே:** முற்றும் துறந்தவர் (யோகி) மெய்யை அறிவார். முழுமையான போகியும் அதை அடைவார்.

**ம:** அது எப்படி? அவை இரண்டும் முரண்பட்டவை அல்லவா?

**கே:** உச்சக் கடைசியானவை சந்திக்கின்றன. முழுமையான போகியாக இருப்பது முழுமையான யோகியாக இருப்பதைவிடக் கடினம். நான் ஒரு சாதாரணமானவன். என்னால் எது முக்கியம் என்று தீர்மானிக்க முடியாது. யோகியும் போகியும் முடிவாக சந்தோஷத்தைத் தேடுகின்றனர். யோகி நிலையானதையும், போகி நிலையற்றதையும். பெரும்பாலும் போகி, யோகியை விடக் கடினமாக முயற்சிக்கிறார்.

**ம:** நீ முயற்சியும் உழைக்கவும் செய்து பெறும் சந்தோசத்திற்கு என்ன மதிப்பு? உண்மையான சந்தோசம் தானாகவும், முயற்சி இல்லாமலும் வருவது.

**கே:** எல்லோரும் சந்தோசத்தை நாடுகின்றனர். வழிகள் மட்டுமே வேறு. சிலர் உள்ளுக்குள் தேடுவதால் யோகிகள் என்று போற்றப் படுகிறார்கள். சிலர் வெளியில் தேடுவதால் போகிகள் என்று தூற்றப் படுகிறார்கள். இருப்பினும் ஒருவருக்கு ஒருவர் தேவை.

ம: மகிழ்ச்சியும் வேதனையும் மாறி மாறி வருகின்றன. சந்தோசம் என்பது அசைக்க முடியாதது மற்றும் நிலையானது. நீ எதைத் தேடி அடைய முடியுமோ அது உண்மையானது அல்ல. எதை நீ எப்போதும் இழக்கவில்லையோ அதைக் கண்டுபிடி. எதை உன்னிடமிருந்து அன்னியமாக்க முடியாதோ அதையும் கண்டு பிடி.



## 26. நபர்த்தன்மை ஒரு தடை

**கேட்பவர்:** உலகம் ஒரு யோகப் பயிற்சி கொடுக்கும் பள்ளியாகவும், வாழ்க்கையே யோகப் பயிற்சியாகவும் எனக்குத் தோன்றுகிறது. ஒவ்வொருவரும் முழு நிறைவிற்குக் கடுமையாக முயற்சிக்கின்றனர். யோகா என்பது முயற்சி இல்லையா? சாதாரண மனிதர்கள் என்று சொல்லப்படுபவர்களிடத்திலும், அவர்களின் சாமான்ய வாழ்க்கையிலும் அவமதித்து ஒதுக்கத்தக்கது ஒன்றும் இல்லை. அவர்களும் யோகியைப் போலக் கடும் முயற்சி செய்து துன்பப்படுகிறார்கள். ஆனால் தங்களுடைய உண்மையான நோக்கத்தைப் பற்றிய விழிப்புணர்வு மட்டும் அவர்களுக்குக் கிடையாது.

**மஹராஜ்:** உன் சாமான்ய மனிதர்கள் எந்தக் கோணத்தில் யோகிகள்?

**கே:** அவர்களுடைய முடிவான குறிக்கோள் ஒன்றுதான். யோகிகள் துறப்பதனால் (தியாகத்தினால்) அடைவதைப் பொதுவான மனிதன் போகத்தினால் அடைகிறான். போக மார்க்கம் விழிப்புணர்வு அற்றது. அதனால் திரும்பத் திரும்பவும் செய்யப் படுவதாகவும், நீண்டதாகவும் இருக்கிறது. யோக மார்க்கம் குறிக்கோளுடன் செய்யப்படுவது மற்றும் தீவிரமானது. அதனால் அது வேகமானதாக இருக்கலாம்.

**ம:** யோக, போக காலங்கள் மாறி, மாறி வரலாம். முதலில் போகி. பிறகு யோகி. மறுபடியும் போகி. மறுபடியும் யோகி.

**கே:** அதன் நோக்கம் என்ன?

**ம:** வலிமையற்ற ஆசைகளை உள்முகப் பார்வையாலும், தியானத்தலும் களைந்துவிடலாம். ஆனால் வலிமையான, ஆழமாக வேரூன்றிய ஆசைகள் நிறைவேற்றப்பட வேண்டும். அவற்றின்

பழங்கள் இனிப்பாகவோ, கசப்பாகவோ இருந்தாலும் அவற்றை ருசித்தாக வேண்டும்.

**கே:** பிறகு ஏன் யோகிகளைப் புகழ வேண்டும்? போகிகளைத் தூற்ற வேண்டும்? எல்லோருமே ஒருவிதத்தில் யோகிகளே.

**ம:** மனித மதிப்பீட்டு அளவுகளில் குறிக்கோளைக் கொண்ட முயற்சி பாராட்டப்படுகிறது. உண்மையில் யோகிகளும், போகிகளும் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கும், வாய்ப்புகளுக்கும் தகுந்தவாறு அவர்களுடைய இயல்புப்படி நடந்துகொள்கிறார்கள். யோகியின் வாழ்க்கை மெய்யை அறிய வேண்டும் என்னும் ஒரே ஒரு ஆசையால்தான் ஆளப்படுகிறது. போகி பல எஜமானர் களுக்குப் பணிபுரிகிறார். ஆனால் ஒரு போகி ஒரு யோகியாக மாறுவார். யோகி போகத்தில் மூழ்கிவிடுவார். இறுதி முடிவு ஒன்றே.

**கே:** விழிப்புணர்வு நிலையில் ஒரு முழுமையான திருப்பம் மற்றும் நிலைமாற்றம் என்னும் மெய்ஞானம் அடைவது என்னும் ஒன்று உள்ளது என்று கேள்விப்பட்டிருக்க வேண்டியது அவசியம் என்று புத்தர் கூறியுள்ளார். மெய்ஞானம் அடைவதைப் பற்றிய நல்ல வார்த்தைகளை ஒரு வண்டி நிறைய உள்ள பஞ்சில் ஒரு தீப்பொறி பட்டதற்கு ஒப்பிடுவார்கள். மெதுவாக, ஆனால் விடாப்பிடியாக மொத்தமும் சாம்பலாகிவிடும். அதைப் போல மெய்ஞானம் அடைதலைப் பற்றிய நல்ல வார்த்தைகள் சீக்கிரமோ, பின்னரோ ஒரு உருமாற்றத்தைக் கொண்டுவரும்.

**ம:** ஆமாம் முதலில் கேட்பது, பிறகு ஞாபகப்படுத்திக் கொள்வது, பிறகு மனப்பாடம் செய்வது என்று தொடரும். நாம் நன்கு பரிட்சயமான சூழ்நிலையில் இருக்கிறோம். அந்த வார்த்தைகளைக் கேட்ட மனிதன் யோகியாகிறான். மற்றவர்கள் தங்கள் போகத்தைத் தொடர்கிறார்கள்.

**கே:** ஆனால் வெறுமனே சலிப்பூட்டுகின்ற சுவையில்லாத உலக வாழ்க்கையை வாழ்வது, இறப்பதற்காகப் பிறப்பது என்னும் வாழ்க்கையை வாழ்வது, எப்படி ஆறு அதனால் சேகரிக்கப் பட்ட தண்ணீரின் பெரும் அளவால் கடலில் கலக்கும் வழியைக்

கண்டுபிடிக்கிறதோ அப்படி அதன் பெரும் அளவால் மனிதனை முன்னேற்றுகிறது என்று நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள்.

**ம:** உலகத்திற்கு முன்பே விழிப்புணர்வு இருக்கிறது. விழிப்புணர்வில் உலகம் உருவாகிறது. விழிப்புணர்வில் நீடிக்கிறது. தூய விழிப்புணர்வில் அது கரைகிறது. எல்லாவற்றிற்கும் அடிப்படையாக நான் என்னும் உணர்வு உள்ளது. உலகம் உள்ளது என்னும் மனோ நிலை இரண்டாம் பட்சமானது. ஏனெனில் இருப்பதற்காக எனக்கு உலகம் தேவையில்லை. உலகத்திற்கு நான் தேவை.

**கே:** வாழ வேண்டும் என்னும் ஆசை மிகப் பெரிய ஒன்று.

**ம:** அதைவிடப் பெரியது வாழ வேண்டும் என்னும் ஆசையிலிருந்து சுதந்திரம்.

**கே:** கல்லிற்கு இருக்கும் சுதந்திரமா?

**ம:** ஆமாம். கல்லிற்கு இருக்கும் சுதந்திரம், அதற்கும் மேலே மிக அதிகமாக. அளவற்ற, விழிப்புணர்வுள்ள சுதந்திரம்.

**கே:** அனுபவங்களைச் சேகரிக்க நபர்த்தன்மை தேவையா?

**ம:** நீ இப்போது இருப்பதைப் பொருத்தவரையில் நபர்த்தன்மை ஒரு தடை மட்டுமே. குழந்தைக்குத் தன்னை உடலுடன் அடையாளம் கண்டுகொள்வது பயன் தரலாம். ஆனால் உண்மையான வளர்ச்சி உடல் என்னும் தடையைத் தவிர்ப்பதில் இருக்கிறது. சாதாரணமாக உடல் சார்ந்த ஆசைகளை ஒருவர் வாழ்வின் ஆரம்ப காலத்தில் கடந்துவிட வேண்டும். சுகங்களை அனுபவிக்கும் போகியும் அவன் அனுபவித்தவற்றின்மேல் மிகுவிருப்பம் கொண்டிருக்கக் கூடாது. பழக்கம், திரும்பத் திரும்பச் செய்யும் இச்சை யோகியையும், போகியையும் வீணாகப் போக வைக்கும்.

**கே:** நீங்கள் ஏன் எப்போதும் தனி நபரை (வியக்தியை) முக்கியமில்லாதவராக ஒதுக்குகிறீர்கள். மனிதரின் தனித்தன்மை என்பது நமது வாழ்க்கையின் அடிப்படை நிஜம். அது முழு மேடையையும் ஆக்கிரமிக்கிறது.

**ம:** நீ ஞாபகங்களால் உருவாக்கப்பட்ட ஆசைகளினால் தூண்டப்பட்ட ஒரு பழக்கம் மட்டுமே என்று உனக்குத் தெரியாதவரையில் உன்னை ஒரு நபர் என்றுதான் நினைப்பாய் - வாழ்கின்ற, உணர்கின்ற, சிந்திக்கின்ற, செயல் துடிப்புள்ள, மந்தமான, சந்தோசப்படுகின்ற அல்லது துயரப்படுகின்ற நபராக. 'இது அவ்வாறா?', 'நான் யார்?' 'இவை எல்லாவற்றிற்குப் பின்னாலும், அப்பாலும் என்ன உள்ளது?' என்று உன்னையே கேள்வி கேட்டுக் கொள். அப்போது விரைவில் உன் தவறை உணர்வாய். அறியும் போது இல்லாமல் போய்விடும் என்பது ஒரு தவறின் இயல்பு.

**கே:** வாழ்க்கையை, வாழும் யோகத்தை இயற்கை யோகா ( நிசர்க யோகா) என்று நாம் சொல்லலாம். அது ரிக் வேதத்தில் உயிரை மனதுடன் மணம் புரிவது என்று விளக்கப்பட்டுள்ள ஆதி யோகத்தை நினைவு படுத்துகிறது.

**ம:** சிந்தித்து, முழுப் பிரக்ஞையோடு வாழும் வாழ்க்கையே நிசர்க யோகா.

**கே:** உயிருக்கும் மனதிற்கும் திருமணம் என்பதன் அர்த்தம் என்ன?

**ம:** உடனுக்குடன் தன்னிச்சையாகத் தோன்றுகின்ற விழிப்புணர்வில் வாழ்வது, பிரயத்தனமற்ற வாழ்தலைப் பற்றிய விழிப்புணர்வு, தன் வாழ்க்கையில் முழுவதும் நிறைவாக இருப்பது - இவை எல்லாம் அதில் உள்ளர்த்தமாக உள்ளன.

**கே:** ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் மனைவி சாரதா தேவி அம்மையார் அதிகப்படியாகப் பிரயத்தனப்படும் சீடர்களைத் திட்டுவாராம். அவர்களை பழுப்பதற்கு முன்பே மரத்திலிருந்து பறிக்கப்படும் மாம்பழத்திற்கு ஒப்பிடுவாராம். 'ஏன் அவசரப் படுகிறீர்கள், முழுவதும் முதிர்ந்து, கனிந்து, இனிப்பாகும் வரை பொறுத்திருங்கள்' என்பாராம்.

**ம:** அவர் எவ்வளவு சரி, பாருங்கள்! விடியற்காலத்தை மதியம் என்று பலர் எடுத்துக் கொள்கிறார்கள். ஒரு கணப்பொழுது அனுபவத்தை முழு மெய்யறிதலாக எடுத்துக் கொண்டு, சிறிதளவு

பெற்றதையும் அதிகப்படியான கர்வத்தால் அழித்து விடுகிறார்கள். எவ்வளவுதான் முன்னேறிய சாதகராக இருந்தாலும் பணிவும் மௌனமும் அவசியம். முற்றிலும் பழுத்த ஞானி மட்டுமே முழுவதும் தன்னிச்சையாகத் தன்னை வெளிப்படுத்த முடியும்.

**கே:** சில யோகப் பள்ளிகளில் ஒளி பெற்ற பிறகு மாணவனை 7 அல்லது 12, 15, 25 வருடங்கள் கூட மௌனமாக இருக்கச் சொல்வார்கள் போலத் தெரிகிறது. பகவான் ஸ்ரீரமண மகரிஷி கூட தான் உபதேசிக்க ஆரம்பிப்பதற்கு முன்பு 20 வருடங்கள் பேசாமல் இருந்திருக்கிறார்.

**ம:** ஆமாம். உள்ளிருக்கும் பழம் கனிய வேண்டும். அதுவரையிலும் பிரக்ஞையில் வாழ்வது என்னும் ஒழுங்கு தொடர வேண்டும். முழுவதும் செயல் புரியாமல் போகும் வரை இந்தப் பயிற்சி படிப்படியாக மேலும் மேலும் நுட்பமானதாக ஆகும்.

**கே:** ஜே.கிருஷ்ணமூர்த்தியும் கூட பிரக்ஞையில் ஸ்திரமாக வாழ்வதைப் பற்றிப் பேசுகிறார்.

**ம:** அவர் எப்போதும் உச்ச முடிவையே குறி வைக்கிறார். முடிவாக விழிப்புணர்விற்கும் (மணமகள்), உயிருக்கும் (மணமகள்) நடக்கும் திருமணத்தால் ஏற்படும் ஆதி யோகத்தில் தான் எல்லா யோகங்களும் லயிக்கின்றன. முடிவாக இருத்தலும், விழிப்புணர்வும் (சத் - சித்) ஆனந்தத்தில் இணைகின்றன. ஆனந்தம் உதயமாக செயல்பாடு, சந்திப்பு, இருமையில் ஒருமை உள்ளதை உறுதிப் படுத்துவது ஆகியவை அவசியம்.

**கே:** நிர்வாணத்தை அடைய ஒருவர் உயிருடன் வாழ்பவை களிடம் செல்ல வேண்டும் என்று புத்தர் கூட கூறியுள்ளார். விழிப்புணர்வு வளர உயிர் தேவை.

**ம:** உலகமே தொடர்பாலானது - அது விழிப்புணர்வில் வெளிப்படும் எல்லாத் தொடர்புடையவைகளின் மொத்தம். பிரபஞ்ச விழிப்புணர்வு (புருஷா), வெளிப்பட்டதை (ப்ரகிருதியை)த் தொட்டால் விழிப்புணர்வு விளைகிறது. அந்த விழிப்புணர்வு ஞாபகத்தாலும், எதிர்பார்ப்புகளாலும் கறைபடும் போது பந்தமாகிறது. தூய அனுபவம் கட்டுப் படுத்தாது. ஆசைக்கும்

அச்சத்திற்கும் நடுவில் சிக்குண்ட அனுபவம் தூய்மை அற்றது; அது கர்மாவை உருவாக்குகிறது.

**கே:** ஒருமையில் (அத்வைதத்தில்) சந்தோசம் இருக்க முடியுமா? எல்லாச் சந்தோசங்களும் கண்டிப்பாகத் தொடர்புகளையும் அதனால் இருமையையும் குறிப்பதில்லையா?

**ம:** இருமையில் எந்தத் தவறும் இல்லை - அது முரண்பாட்டை உருவாக்காத வரையில். பல்வேறு கூறுகளும், விதங்களும், சச்சரவும், மோதலும் இல்லாதவரை ஆனந்தம்தான். தூய விழிப்புணர்வில் ஒளி உள்ளது. அரவணைப்பிற்குத் தொடர்பு வேண்டியுள்ளது. இருத்தலின் ஒருமையில் அன்பின் இணைப்பு உள்ளது. அன்புதான் இருமைத் தன்மையின் அர்த்தமும் நோக்கமும் ஆகும்.

**கே:** நான் ஒரு தத்துப் பிள்ளை. என் சொந்த அப்பாவை எனக்குத் தெரியாது. என் அம்மா நான் பிறந்த போது இறந்து விட்டார். கடவுளின் திட்டப்படி என் வளர்ப்புத் தந்தை, குழந்தை இல்லாத வளர்ப்புத் தாயை சந்தோசப்படுத்த என்னைத் தத்து எடுத்துக் கொண்டார். அவர் ஒரு எளிமையான மனிதர்- லாரி உரிமையாளர், டிரைவர். என் தாய் வீட்டைப் பார்த்துக் கொள்கிறார். எனக்கு இப்போது 24 வயதாகிறது. கடந்த இரண்டரை ஆண்டுகளாக அமைதி இன்றி பயணம் செய்து கொண்டு, மெய்யைத் தேடிக் கொண்டு இருக்கிறேன். நான் ஒரு நல்ல வாழ்க்கையை, புனித வாழ்க்கையை வாழ விரும்புகிறேன். அதற்கு என்ன செய்ய வேண்டும்?

**ம:** வீட்டிற்குப் போ. உன் தந்தையின் தொழிலைப் பொறுப்பெடுத்துக் கவனி. உன் பெற்றோர்களை அவர்களுடைய வயதான காலத்தில் கவனித்துக் கொள். உனக்காகக் காத்திருக்கும் பெண்ணை மணந்து கொள். விசுவாசத்துடன் இரு. எளிமையாய் இரு. அடக்கத்துடன் இரு. உன் நற்பண்புகளை மறைத்து மௌனமாக வாழ். ஐந்து புலன்களும், மூன்று குணங்களும் யோகத்தின் எட்டு படிகள். 'நான்' என்பது மகா மந்திரம். உனக்குத் தெரிய வேண்டியவற்றை அவற்றிலிருந்து கற்றுக் கொள்ளலாம்.

விழிப்புடன் இரு. இடைவிடாமல் விசாரத்தில் ஈடுபடு. அவ்வளவே.

**கே:** ஒருவர் வாழ்க்கையை வாழ்ந்தாலே விடுதலை கிடைக்குமென்றால் ஏன் எல்லோரும் விடுதலை அடையவில்லை?

**ம:** எல்லோரும் விடுதலை அடைந்தவர்களே. நீ என்னவாக வாழ்கிறாய் என்பது முக்கியமல்ல. ஆனால் எவ்வாறு வாழ்கிறாய் என்பதுதான் முக்கியம். ஞானமடைவதைப் பற்றிய கருத்து மிகவும் முக்கியம். அப்படி ஒன்று சாத்தியம் என்பது தெரிந்தாலே ஒருவருடைய முழுப் பார்வையும் மாறி விடும். அது மரத் தூள் குவியலில் பட்ட எரிகின்ற தீக் குச்சியைப் போன்றது. எல்லா மாபெரும் குருநாதர்களும் வேறொன்றும் செய்யவில்லை. உண்மையின் ஒரு பொறி ஒரு மலையளவு பொய்யை எரித்துவிடும். இதற்கு நேரெதிரானதும் சரியே. உண்மை என்னும் சூரியன் உடலுடன் சுய அடையாளப் படுத்தப் படுதல் என்னும் மேகத்தால் மறைக்கப் பட்டிருக்கிறது.

**கே:** இந்த ஞானம் அடைதல் என்னும் நல்ல செய்தியைப் பரப்புவது மிகவும் முக்கியம் போல் தெரிகிறது.

**ம:** அதைப் பற்றி கேட்பதே ஞானம் அடைவதற்கான ஒரு சாத்தியம் ஆகும். குருவைச் சந்திப்பதே விடுதலைக்கு உத்திரவாதமளிக்கும். முழுமைத் தன்மை உயிர் கொடுப்பது மற்றும் படைப்புத் திறன் உடையது..

**கே:** ஞானம் அடைந்தவர் எப்போதாவது 'நான் ஞானம் அடைந்துவிட்டேன்' என்று நினைப்பாரா? மக்கள் அவரை உயர்வாகப் பேசும்போது அவர் வியப்படைய மாட்டாரா? அவர் தன்னைச் சாதாரண மனிதராகக் கருத மாட்டாரா?

**ம:** சாதாரணமாகவோ, அசாதாரணமாகவோ அல்ல. அவர் தீவிரமான விழிப்புடனும், பாசத்துடனும் இருப்பார். சுய விளக்கங்களிலும், சுய அடையாளங்களிலும் ஆழ்ந்து போகாமல் தன்னை எப்போதும் விழிப்புடன் பார்ப்பார். தன்னை உலகத்திலிருந்து வேறாகப் பார்க்க மாட்டார். அவரேதான் உலகம். தொடர்ந்து தன் செல்வங்களை தானம் கொடுக்கும் ஒரு

செல்வந்தரைப் போல அவர் முற்றிலும் தன்னைத் துறப்பவர். அவர் பணக்காரர் அல்ல. ஏனெனில் அவரிடம் ஒன்றும் இல்லை; அவர் ஏழை அல்ல. ஏனெனில் அவர் நிறையக் கொடுக்கிறார். அவர் வெறுமனே பொருளற்றவர். அவ்வளவுதான். அதே போல ஞானம் அடைந்த மனிதர் அகந்தை அற்றவர்; தன்னை எதனுடனும் அடையாளப் படுத்திக் கொள்ளும் சக்தியை இழந்துவிட்டவர். அவர் ஒரு பார்வையாளர். அவருக்கு ஒரு இடம் கிடையாது. அவர் காலத்தையும் இடத்தையும், உலகத்தையும் கடந்தவர். இதன் அர்த்தம் புரியாது, ஏனெனில் அவர் வார்த்தைகளுக்கும் எண்ணங்களுக்கும் அப்பாற்பட்டவர்.

**கே:** நன்று. எனக்கு இது ஆழமான புதிர். நான் ஒரு எளிமையான மனிதன்.

**ம:** நீதான் ஆழமான, சிக்கலான, புதிரான, புரிந்துகொள்ளக் கடினமானவன். உன்னோடு ஒப்பிட்டால் தெளிவாகத் தெரியும் எளிமையே நான். உள் - வெளி, உன்னுடையது - என்னுடையது, நல்லது - கெட்டது என்னும் எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லாமல், என்ன இருக்கிறதோ அது நான். உலகம் என்னவோ அது நான்; நான் என்னவோ அது உலகம்.

**கே:** எப்படி ஒவ்வொரு மனிதனும் தன் சொந்த உலகத்தை உருவாக்கும்படி ஆகிறது?

**ம:** பலபேர் தூங்கும் போது ஒவ்வொருவரும் தன் சொந்தக் கனவைக் காண்கிறார்கள். விழிக்கும்போதுதான் பல வித்தியாச மான கனவுகள் பற்றிய கேள்வி எழுகிறது. அவை எல்லாவற்றையும் கனவாக, கற்பனை செய்யப்பட்ட ஏதோ ஒன்றாகப் பார்த்தால் கேள்விகள் எல்லாம் கரைந்துவிடும்.

**கே:** கனவுகளும் கூட ஒரு அடித்தளத்தைக் கொண்டுள்ளன.

**ம:** ஞாபகத்தில்தான். அப்படி என்றாலும் எது ஞாபகத்தில் உள்ளதோ அது மற்றுமொரு கனவே. மெய்யற்றதைப் பற்றிய ஞாபகம் மெய்யற்றதைத் தவிர வேறு ஒன்றை உருவாக்காது. ஞாபகத்தைப் பொருத்தவரை தவறு ஏதும் கிடையாது. எது

மெய்யற்றது என்றால் அதன் உள்ளடக்கமே. உண்மைகளை ஞாபகத்தில் வைத்திரு. கருத்துக்களை மறந்து விடு.

கே; எது நிஜம்?

**ம:** தூய பிரக்ஞையில் தெரிந்து கொள்ளப்படுவது, ஆசைகளாலும் அச்சங்களாலும் பாதிக்கப்படாதது எதுவோ அதுதான் நிஜம்.



# 27. ஆரம்பம் இல்லாதது எப்போதும் ஆரம்பிக்கும்

**கேட்பவர்:** முன்பு ஒரு நாள் நான் துறத்தல், அனுபவித்தல் (யோகம், போகம்) என்னும் இரு வழிகளைப் பற்றிக் கேட்டேன். பார்க்கின்றபோது இரண்டிற்கும் பெரிய வித்தியாசம் இல்லை போல் தெரிகிறது - யோகி அனுபவிப்பதைத் துறக்கிறார். போகி துறப்பதற்காக அனுபவிக்கிறார். யோகி முதலில் துறக்கிறார். போகி முதலில் அனுபவிக்கிறார்.

**மஹராஜ்:** அதனால் என்ன? யோகியை அவருடைய யோகத்திலும், போகியை அவருடைய போகத்திலும் விட்டுவிடு.

**கே:** போக மார்க்கம் மேலானதாகத் தெரிகிறது. யோகி மரத்திலிருந்து முத்துவதற்கு முன்பே பறித்துக் கூடையில், வைக்கோலின் மேல் வைக்கப்பட்டிருக்கும் மாம்பழத்தைப் போன்று தெரிகிறார். காற்று இல்லாமலும், அதிகச் சூட்டினாலும் அது பழுத்துவிடும். ஆனால் உண்மையான மணமும், ருசியும் இருக்காது. மரத்திலேயே விடப்பட்ட மாம்பழம் அளவிலும், நிறத்திலும், சுவையிலும் முழுதாக வளரும், எல்லா வகையிலும் மகிழ்ச்சியாக. ஆனாலும் யோக மார்க்கம் எல்லாப் பாராட்டுதல் களையும், போக மார்க்கம் எல்லா வசைகளையும் பெறுகின்றன. என்னைப் பொருத்தவரையில் இரண்டில் போக வழியே மேலானதாகத் தெரிகிறது.

**ம:** எது அவ்வாறு உன்னைச் சொல்லச் செய்கிறது?

**கே:** நான் யோகிகளையும், அவர்களின் மிகப் பெரிய முயற்சி களையும் கவனித்திருக்கிறேன். அவர்கள் மெய்ஞானம் அடைந்தாலும்கூட அதில் சிறிது கசப்பும், துவர்ப்பும் இருக்கிறது.

அவர்கள் தங்களுடைய பெரும்பாலான நேரங்களில் மெய்மறந்த நிலையில் இருப்பதாகவும், அவர்கள் பேசும்போது வெறுமனே தங்களுடைய தர்மசாஸ்திரத்தைப் பற்றிப் பேசுவதாகவும் தெரிகிறது. அந்த மாதிரியான ஞானிகள் பூக்கள் மாதிரியானவர்கள். முழுமையான சிறு பூக்கள் - தங்களைச் சுற்றி சிறு வட்டத்திற்கு நறுமணத்தைப் பரப்புபவை. வேறு சிலரோ காட்டைப் போன்றவர்கள் - செழுமையான, வித விதமான, அடர்த்தியான, ஆச்சரியங்கள் நிறைந்த, தாங்களே ஒரு உலகமானவர்கள். இந்த வித்தியாசத்திற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும்.

**ம:** நீதான் இவ்வாறு சொல்கிறாய். உன்னைப் பொருத்த வரையில் ஒருவர் அவருடைய யோகத்தில் சிக்கிக்கொள்வதாகவும், மற்றவர் போகத்தில் செழிப்பதாகவும் சொல்கிறாய்.

**கே:** அப்படி இல்லையா? யோகி வாழ்க்கையைப் பார்த்துப் பயப்பட்டு அமைதியைத் தேடுகிறார். போகியோ சாகசமிக்கவரா கவும், ஊக்கம் நிறைந்தவராகவும், முன் நோக்கிச் செல்பவராகவும் இருக்கிறார். யோகி ஒரு குறிக்கோளில் கட்டுண்டு இருக்கிறார். போகியோ எப்போதும் ஆய்வு செய்யத் தயாராக இருக்கிறார்.

**ம:** இது அதிகமாக வேண்டுபவர் அல்லது சிறிதளவில் திருப்தி அடைபவரின் கேள்வி. யோகி பேராவல் உடையவர். ஆனால் போகியோ வெறுமனே சாகசமிக்கவர். நீ குறிப்பிடும் போகி வளமானவராகவும், சுவாரசியமிக்கவராகவும் தெரிவார். ஆனால் உண்மையில் அப்படி இல்லை. யோகி கத்தியின் முனையைப் போலக் கூர்மையானவர். ஆழமாகவும், சுலபமாகவும் வெட்ட, மெய்யற்றதின் பல அடுக்குகளைத் தவறில்லாமல் துளைத்துச் செல்ல அவர் அவ்வாறு இருக்க வேண்டும். போகி பல வழிபாட்டுத் தளங்களில் வணங்குகிறார். யோகியோ தன்னுடைய உண்மையான சுயத்திற்கு மட்டுமே சேவை செய்பவர்.

யோகியையும், போகியையும் எதிர் எதிராகப் பார்ப்பதில் எந்தவிதப் பயனும் இல்லை. வெளியே செல்லும் வழி (பரவிருத்தி) கண்டிப்பாகத் திரும்பும் வழிக்கு ( நிவிருத்திக்கு) முன்னால் உள்ளது. தீர்ப்பு சொல்ல அமர்ந்து மதிப்பெண் இடுவது

கேலிக்குரியது. ஒவ்வொன்றும் முடிவான பூரணத்துவத்திற்குப் பங்களிக்கின்றன. மெய் - அறிவு - பேரின்பம் (சத் - சித் - ஆனந்தம்) என மெய்மைக்கு மூன்று தன்மைகள் இருப்பதாகச் சிலர் சொல்வார்கள். மெய்யைத் தேடுபவர் யோகி ஆகிறார். ஞானத்தைத் தேடுபவர் ஞானி ஆகிறார். மகிழ்ச்சியைத் தேடுபவர் செயல்படும் மனிதர் ஆகிறார். ஏனெனில் செயல் இல்லாமல் மகிழ்ச்சி என்பது இருக்காது.

**கே:** இருமையற்ற தன்மையின் (அத்வைதத்தின்) பேரின்பத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

**ம:** அந்தப் பேரின்பம் ஒரு மாபெரும் அமைதித்தன்மையின் இயல்பை அதிகமாக உடையது. சுகமும், துக்கமும், சரியான மற்றும் தவறான செயல்களின் விளைவுகளே.

**கே:** எது வித்தியாசப் படுத்துகிறது?

**ம:** வித்தியாசம் கொடுப்பதிலும், எடுப்பதிலும் இருக்கிறது. அணுகுமுறை எதுவாக இருந்தாலும் முடிவில் எல்லாமும் ஒன்றாகின்றன.

**கே:** குறிக்கோளில் வித்தியாசம் இல்லாமல் இருந்தால் ஏன் பல்வேறு அணுகுமுறைகளில் வேறுபாடு ஏற்படுத்த வேண்டும்?

**ம:** ஒவ்வொருவரையும் அவருடைய இயல்புப்படி நடக்க விடு. எப்படி இருந்தாலும் முடிவான குறிக்கோள் அடையப்படும். உன்னுடைய வேறுபாடுகளும், பாகுபாடுகளும் மிகவும் சரியானவையே. ஆனால் அவை என்னைப் பொறுத்தவரை இல்லை. எப்படி கனவைப் பற்றிய விளக்கம் எவ்வளவுதான் விலாவரியாகவும், துல்லியமாகவும் இருந்தாலும் அவற்றிற்கு எந்தவிதமான அடிப்படையும் இல்லையோ அப்படி உன்னுடைய படிவம் உன் யூகத்திற்குத்தான் பொருந்தும். நீ ஒரு கருத்தில் தொடங்குகிறாய். அதே கருத்தின் வேறு வடிவத்தில் முடிக்கிறாய்.

**கே:** நீங்கள் எவ்வாறு பார்க்கிறீர்கள்?

**ம:** எல்லாமும் எனக்கு ஒன்றுதான். ஒரேவிதமான விழிப்புணர்வுதான் (சித்), இருத்தலாகவும் (சத்), ஆனந்தமாகவும்

தோன்றுகிறது. இயக்கத்திலிருக்கும் விழிப்புணர்வு நிலைதான் ஆனந்தம். இயக்கமில்லாத விழிப்புணர்வு நிலைதான் இருத்தல்.

**கே:** நீங்கள் இயங்குபவைக்கும், இயங்காதவைக்கும் ஒரு வித்தியாசத்தைச் சொல்கிறீர்கள்.

**ம:** வேறுபாடில்லாமை மௌனத்தில் வெளிப்படும். வார்த்தைகள் வித்தியாசத்தை உருவாக்குகின்றன. குணமற்றதற்கு (நிர்குணாவிற்குப்) பெயரில்லை. எல்லாப் பெயர்களும் குண முள்ளவைகளையே (சகுணாவையே) குறிக்கின்றன. வார்த்தை களுக்கு அப்பாற்பட்டவைகளை வார்த்தைகளால் விவரிக்கப் போராடுவது பயனற்றது. சிதானந்தம் என்பது உள்ளார்ந்த மாறாத இருத்தல் (புருஷா), விழிப்புணர்வு என்பது வெளிப்புறமான மாறக்கூடிய பொருள் (பிரகிருதி). முழு நிறைவில்லாத புருஷா என்பது பிரகிருதி. பூரணமான பிரகிருதி என்பது புருஷா. முடிவிலும் ஆரம்பத்திலும் எல்லாமும் ஒன்றே.

எல்லா வேறுபாடுகளும் மனதில் (சித்தத்தில்) உள்ளவையே. பிரக்ஞையில் (சித்தில்) ஒன்றும் இல்லை. இயக்கமும், ஓய்வும் மனதின் நிலைகளே. அவை அவற்றின் எதிர் நிலைகள் இல்லாமல் இருக்க முடியாது.

எதுவுமே தானாக இயங்குவதில்லை. தானாக ஓய்வதில்லை. பூரணமான இருப்பை மனதால் உருவாக்கப்பட்ட குணாதிசயங் களால் விவரிப்பது மாபெரும் தவறு. எதுவுமே தானாக இருப்பில் இருப்பதில்லை.

**கே:** நீங்கள் ஓய்வை உச்ச உயர் நிலையுடன் ஒத்ததாக அடையாளப்படுத்துவது போலத் தெரிகிறது.

**ம:** மனதின் ஒரு நிலையாக ஓய்வு உள்ளது. மற்றும் ஆத்மாவின் நிலையாகவும் ஓய்வு உள்ளது. முந்தையது வந்து போகக் கூடியது. ஆனால் உண்மையான ஓய்வு என்பது செயல்பாட்டின் மையம். துரதிர்ஷ்டவசமாக மொழி மனதின் ஒரு கருவி. அது எதிர்மறை யாகத்தான் வேலை செய்யும்.

**கே:** ஒரு சாட்சியாக, நீங்கள் இயங்குகிறீர்களா அல்லது ஓய்வெடுக்கிறீர்களா?

**ம:** சாட்சியாகக் காணுதல் என்பது ஒரு அனுபவம். ஓய்வு என்பது அனுபவத்திலிருந்து விடுதலை.

**கே:** அலைகளின் ஆர்ப்பரிப்பும், ஆழத்தின் அமைதியும் ஒன்றாகக் கடலில் இருப்பதுபோல் அவை சேர்ந்து இருக்க முடியாதா?

**ம:** ஞானத்திற்கு அப்பால் அனுபவம் என்று ஒன்று இல்லை. அனுபவம் என்பது இருமை நிலை. மெய்யை நீ ஒரு அனுபவமாகப் பேச முடியாது. இதைப் புரிந்துகொண்டால் இருத்தலையும், உருவாக்கத்தையும் வேறு வேறாகவும், எதிர் எதிரானவையாகவும் பார்க்க மாட்டாய். உள்ளபடியே அவை ஏக ரூபமானவை மற்றும் பிரிக்க முடியாதவை, ஒரே மரத்தின் வேரும் கிளைகளும் போல. அவை இரண்டும் 'நான்' என்னும் உணர்வு விழிக்கும்போது எழும்பும் விழிப்புணர்வின் வெளிச்சத்தில்தான் இருக்க முடியும். இதுதான் அடிப்படை நிஜம். இதைத் தவறவிட்டால் நீ எல்லா வற்றையும் தவற விட்டு விடுவாய்.

**கே:** இருத்தல் என்னும் உணர்வு அனுபவத்தின் உருவாக்கமா? 'தத் - சத்' {(அது -மெய்) (இந்த இரண்டு சமஸ்கிருத வார்த்தைகளும் உச்ச உயர்வான மெய்மையாகிய ப்ரம்மத்தைக் குறிப்பவை)} என்னும் மகா வாக்கியம் வெறும் கற்பனையான குறியீடுதானா?

**ம:** பேசப் படுவது எல்லாம் வெறும் பேச்சு மட்டுமே. எண்ணப்படுவது எல்லாம் எண்ணம் மட்டுமே. உண்மையான் அர்த்தம் அனுபவிக்கக் கூடியதாக இருந்தாலும், விளக்கப்பட முடியாதது. மஹா வாக்கியம் மெய்யானது. ஆனால் உன் கருத்துக்கள் மெய்யற்றவை. ஏனெனில் எல்லாக் கற்பனைகளும், கருத்துக்களும் மெய்யற்றவை.

**கே:** 'நான் ப்ரம்மம்' என்னும் திட நம்பிக்கையும் மெய்யற்றதுதானா?

**ம:** ஆமாம். திட நம்பிக்கை மனதின் ஒரு நிலை. 'ப்ரம்மத்தில்' 'நான்' என்பதும், 'இருக்கிறேன்' என்பதும் இல்லை. எப்படி சூரியன் உதிக்கும்போது நட்சத்திரங்கள் மறைந்துவிடுகின்றனவோ, அப்படி 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வு எழும்போது 'ப்ரம்மம்'

மறைந்துவிடுகிறது. ஆனால் சூரியனுடன் எப்படி ஒளி வருகிறதோ அப்படி சுயம் என்னும் உணர்வுடன் சிதானந்தம் அடையப் பெறுகிறது. ஆனந்தத்தின் காரணத்தை 'நான் அல்லாததுடன்' அடையாளம் காண்பதால் பந்தம் தொடங்குகிறது.

**கே:** *உங்களுடைய தினசரி வாழ்க்கையில் உங்களுடைய உண்மையான நிலையைப் பற்றிய விழிப்புணர்வு எப்போதும் உள்ளதா?*

**ம:** விழிப்புணர்வுடனோ அல்லது விழிப்புணர்வு இல்லாமலோ அல்ல. எனக்குத் திட நம்பிக்கைகள் தேவை இல்லை. நான் தைரியத்துடன் வாழ்கிறேன். தைரியம் என் வாழ்வின் சாரம். அது உயிரின் மேல் கொண்டுள்ள அன்பு. நான் ஞாபகங்களும், எதிர்பார்ப்புகளும் அற்றவன். நான் என்னவாக உள்ளேன் என்றும், நான் என்னவாக இல்லை என்றும் பொருட்படுத்தாதவன். சுய விளக்கங்களுக்கு நான் பழக்க அடிமை கிடையாது. 'ஸோஹம்' (நான் அது) 'அஹம் ப்ரம்மாஸ்மி' ( நான் உச்ச உயர்வு) என்பவை எனக்குப் பயனற்றவை. ஒன்றுமில்லாததாக இருக்கவும், உலகத்தை அது உள்ளவாறே ஒன்றுமில்லாததாகப் பார்க்கவும் எனக்குத் தைரியம் உள்ளது. இரு மிகவும் எளிமையானது. முயற்சித்துப் பார்.

**கே:** *ஆனால் எது உங்களுக்குத் தைரியத்தைக் கொடுக்கிறது?*

**ம:** உன் கருத்துக்கள் மிகவும் தவறானவை! தைரியத்தை யாராவது கொடுக்க வேண்டுமா? மன உளைச்சலை இயல்பான நிலையாகவும், தைரியம் இயல்பற்றதாகவும் உன் கேள்வி குறிக்கிறது. அது முற்றிலும் வேறு மாதிரி. மன உளைச்சலும், நம்பிக்கையும் கற்பனையில் பிறந்தவை. நான் அவற்றிலிருந்து விடுபட்டவன். நான் எளிமையானவன். சார்ந்து இருக்க எனக்கு எதுவும் தேவையில்லை.

**கே:** *உங்களை நீங்கள் அறியாவிட்டால் உங்களுடைய இருப்பால் உங்களுக்கு என்ன பயன்? நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அதனால் சந்தோசமாக இருப்பதற்கு நீங்கள் என்னவென்று உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.*

**ம:** இருத்தல் அறிதலாக ஒளிர்கிறது. அறிதல் அன்பால் அரவணைக்கப் படுகிறது. இவையெல்லாம் ஒன்றே. பிரிவினை களைக் கற்பனை செய்துகொண்டு, உன்னைக் கேள்விகளால் தொல்லைப் படுத்திக் கொள்கிறாய். நியதிகளால் உன்னை மிகவும் வருத்திக் கொள்ளாதே. தூய இருத்தல் விவரிக்க முடியாதது.

**கே:** ஒன்று அறியக் கூடியதாகவும், அனுபவித்து ஆனந்த மடையக்கூடியதாகவும் இல்லை என்றால் அதனால் எனக்கு எந்தப் பயனும் இல்லை. எல்லாவற்றிற்கும் முன்பாக அது என் அனுபவத்தின் ஒரு பகுதியாக வேண்டும்.

**ம:** நீ மெய்யை அனுபவம் என்னும் நிலைக்குத் தாழ்வாகக் கொண்டு வருகிறாய். அனுபவத்திற்கு அதுவே ஆதாரமாக இருக்கும்போது, மெய் எப்படி அனுபவத்தைச் சார்ந்து இருக்கும்? அனுபவம் இருக்கிறது என்னும் உண்மையிலேயே மெய் இருக்கிறது, அனுபவத்தின் தன்மையில் அல்ல. அனுபவம் என்பது மனதின் ஒரு நிலையே. ஆனால் இருத்தல் என்பது கண்டிப்பாக மனதின் ஒரு நிலை அல்ல.

**கே:** மறுபடியும் நான் குழம்பிப் போகிறேன். இருத்தல் என்பது அறிதல் என்பதிலிருந்து வேறுபட்டதா?

**ம:** வேறுபாடு என்பது ஒரு தோற்றம் எவ்வாறு கனவு என்பது காண்பவரிலிருந்து தனித்து இல்லையோ, அவ்வாறு அறிதல் என்பது இருத்தல் என்பதிலிருந்து வேறுபட்டது அல்ல. கனவுதான் கனவு காண்பவர், அறிவுதான் அறிவைக் கொண்டுள்ளவர். வேறுபாடு வெறும் வார்த்தையில் மட்டுமே உள்ளது.

**கே:** இப்போது சத்தும், சித்தும் ஒன்றெனத் தெரிகிறது. ஆனால் ஆனந்தத்தைப் பற்றி என்ன சொல்வது? இருத்தலும், விழிப்புணர்வும் எப்போதும் ஒன்றாகவே இருக்கின்றன. ஆனால் ஆனந்தம் எப்போதாவது மின்னுகிறது.

**ம:** ஸ்திரமான இருத்தல்தான் ஆனந்தம்; ஸ்திரமற்ற நிலைதான் உலகமாகத் தோன்றுகிறது. அத்வைதத்தில் (இருமையற்ற நிலையில்) ஆனந்தம் உள்ளது. துவைதத்தில் (இருமையில்) அனுபவம் உள்ளது. எது வந்து போகிறதோ அது சுகம் மற்றும் துக்கம்

என்னும் இருமைகளைக் கொண்டுள்ள அனுபவம். பேரானந்தம் அறியப்படுவது அல்ல. ஒருவர் எப்போதும் பேரானந்தத்தில்தான் இருக்கிறார். பேரானந்தம் உடையவராக அல்ல. பேரானந்தம் ஒரு குணம் அல்ல.

**கே:** நான் கேட்க வேண்டிய மற்றொரு கேள்வி உள்ளது. சில யோகிகள் அவர்களுடைய குறிக்கோளை அடைகிறார்கள். ஆனால் அதனால் மற்றவர்களுக்கு எந்தப் பயனும் இல்லை. அவர்களுக்கு மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளத் தெரியாது அல்லது முடியாது. யாரால் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியுமோ அவர்கள் மற்றவர்களுக்குத் தீட்சை கொடுக்கிறார்கள். வேறுபாடு எங்கு உள்ளது?

**ம:** வேறுபாடு எதுவும் இல்லை. உன் அணுகுமுறை தவறானது. உதவ வேறு யாரும் கிடையாது. ஒரு பணக்காரன் தன் செல்வம் முழுவதையும் தன் குடும்பத்திற்குக் கொடுத்துவிட்டால் அவனிடம் பிச்சைக்காரனுக்குக் கொடுக்க ஒரு காசுகூட இருக்காது. அதுபோல ஞானி தன் எல்லாச் சக்திகளையும், உடைமைகளையும் துறந்து விடுவார். அவரைப் பற்றி எதுவுமே சொல்ல முடியாது. கண்டிப்பாக எதுவும் சொல்ல முடியாது. அவரால் யாருக்கும் யாருக்கும் உதவ முடியாது. ஏனெனில் அவர் ஒவ்வொருவருமாக உள்ளார். அவர் ஏழை மற்றும் ஏழையின் ஏழ்மை. திருடன் மற்றும் அவனுடைய திருட்டுத்தனம். அவர் தனித்து வேறுபட்டு இல்லாதிருக்கும்போது அவரால் எப்படி உதவ முடியும்? உலகத்திலிருந்து வேறுபட்டு இருப்பதாக யார் நினைக்கிறார்களோ அவர்கள் உலகத்திற்கு உதவட்டும்.

**கே:** ஆனாலும் துவைதம் (இருமை), துன்பம், உதவிக்கான தேவை ஆகியன இருக்கின்றன. அதைக் கனவு என்று ஒதுக்கித் தள்ளுவது எந்தவிதப் பயனையும் தராது.

**ம:** கனவிலிருந்து விழிப்பதுதான் உதவக் கூடியது.

**கே:** ஒரு எழுப்பக் கூடியவர் தேவை.

**ம:** அவரும் கனவில்தான் இருக்கிறார். விழிப்பூட்டுபவர் முடிவின் ஆரம்பத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். சாசுவதமான கனவுகள் எதுவும் இல்லை.

**கே:** அது ஆரம்பமில்லாது இருக்கும்போது கூடவா?

**ம:** ஒவ்வொன்றும் உன்னுடனே ஆரம்பிக்கிறது. வேறு என்ன ஆரம்பமில்லாதது?

**கே:** நான் பிறந்தபோது ஆரம்பமானேன்.

**ம:** அவ்வாறுதான் உனக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. அது அப்படியா? நீ ஆரம்பமானதைப் பார்த்தாயா?

**கே:** நான் தற்பொழுது இக்கணத்தில்தான் ஆரம்பித்தேன். மற்ற எல்லாம் ஞாபகங்களே.

**ம:** மிகச் சரி. ஆரம்பமில்லாதது எப்போதும் ஆரம்பிக்கும். அதேமாதிரி நான் சாசுவதமாகக் கொடுத்துக்கொண்டே இருக்கிறேன். ஏனெனில் என்னிடம் எதுவும் கிடையாது. ஒன்றுமில்லாததாக இருப்பது, ஒன்றும் இல்லாமல் இருப்பது, ஒன்றையும் தனக்காக வைத்திருக்காமல் இருப்பது மிகப்பெரிய கொடை, மிக உயர்ந்த வள்ளல் தன்மை.

**கே:** அங்கு தன்மேல் அக்கறை இருக்காதா?

**ம:** நான் சுய அக்கறை உடையவன்தான். ஆனால் சுயமே எல்லாமும். நடைமுறையில் அது நன்மதிப்பாக, தோல்வியுறாத, பிரபஞ்ச அளவினதாக வடிவமெடுக்கிறது. அதை நீ எல்லாவற்றிலும் ஊடுருவும், எல்லாவற்றையும் மீட்கின்ற, அன்பு எனச் சொல்லலாம். அப்படிப்பட்ட அன்பு செயல்படும் உணர்வில்லாமல் மிக உயர்ந்த நிலையில் இயங்கும்.

# 28. எல்லாத் துன்பங்களும் ஆசையினால் பிறப்பவையே

**கேட்பவர்:** நான் ஒரு தூர தேசத்திலிருந்து வருகிறேன். நான் சில உள் அனுபவங்களைக் கொண்டு இருக்கிறேன். குறிப்புகளை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுகிறேன்.

**மஹராஜ்:** கண்டிப்பாகச் செய்யலாம். உனக்கு உன்னைத் தெரியுமா?

**கே:** நான் உடலோ, மனமோ அல்ல என்று தெரியும்.

**ம:** அவ்வாறு உன்னை எது சொல்ல வைக்கிறது?

**கே:** நான் உடலுக்குள் இருப்பதாக உணரவில்லை. நான் எல்லா இடங்களிலும் இருப்பதாக அறிகிறேன். மனதைப் பொருத்தவரை அதை என்னால், நிறுத்த முடியும். இது நான் மனம் அல்ல என்று என்னை உணர வைக்கிறது.

**ம:** நீ உன்னை உலகில் எல்லா இடங்களிலும் இருப்பதாக உணரும் போது நீ உலகத்திலிருந்து தனித்து இருகிறாயா அல்லது நீயே உலகமா?

**கே:** இரண்டுமே. சில சமயங்களில் என்னை மனமாகவோ, உடலாகவோ உணர்வதில்லை. ஆனால் எல்லாவற்றையும் பார்க்கும் ஒரு கண்ணாக உணர்கிறேன். அதில் ஆழமாகப் போகும்பொழுது நான் பார்க்கும் எல்லாமாக என்னைப் பார்க்கிறேன். அப்போது உலகமும் நானும் ஒன்றாகிறோம்.

**ம:** மிக நன்று. ஆசைகளைப் பற்றி என்ன சொல்கிறாய்? உனக்கு ஏதாவது ஆசை இருக்கிறதா?

**கே:** ஆமாம், சிறியதாகவும் மேலெழுந்தவாரியாகவும் அவை வருகின்றன.

**ம:** அவற்றை நீ என்ன செய்கிறாய்?

**கே:** நான் என்ன செய்ய முடியும்? அவை வருகின்றன, போகின்றன. நான் அவற்றை வேடிக்கை பார்க்கிறேன். சிலசமயம் என் உடலும் மனமும் அவற்றை நிறைவேற்ற ஈடுபடுகின்றன.

**ம:** எந்த ஆசைகள் நிறைவேற்றப் படுகின்றன?

**கே:** அவை நான் வாழும் உலகத்தின் ஒரு பகுதி - எப்படி மரங்களும் மேகங்களும் அங்கு இருக்கின்றனவோ அப்படி.

**ம:** அவை சில முழுமையற்றதன் குறியீடாகத் தெரியவில்லையா?

**கே:** எதற்காக அவை அவ்வாறு இருக்க வேண்டும்? அவை உள்ளபடி அவை இருக்கின்றன, நான் உள்ளபடி நான் இருக்கிறேன். ஆசைகள் தோன்றுவதும், மறைவதும் எப்படி என்னைப் பாதிக்கும்? என் மனதின் வடிவத்தையும், அதன் உள்ளடக்கத்தையும் பாதிக்கத்தான் செய்கின்றன.

**ம:** மிக நன்று. உன்னுடைய தொழில் என்ன?

**கே:** நான் ஒரு நன்னடத்தைக் கண்காணிப்பு அதிகாரி.

**ம:** அப்படி என்றால் என்ன அர்த்தம்?

**கே:** இளம் குற்றவாளிகளை அவர்களின் நடத்தையைக் கண் காணிக்கப்படும் விதமாக சிறைக்கு வெளியே விட்டு விடுவார்கள். அவர்களுடைய நடத்தையைக் கவனிக்கவும், அவர்களுக்குப் பயிற்சியும், வேலையும் கிடைக்க உதவவும் சிறப்பான அதிகாரிகள் உள்ளனர்.

**ம:** நீ வேலை செய்தே ஆகவேண்டுமா?

**கே:** யார் வேலை செய்கிறார்கள்? வேலை நடக்கிறது.

**ம:** உனக்கு வேலை தேவையா?

க: பணத்திற்காக எனக்கு அது தேவை. உயிரோடு இருப்பவர்களுடன் தொடர்பு கொள்ள வைப்பதால் அது எனக்குப் பிடித்திருக்கிறது.

ம: எதற்காக அவர்கள் உனக்குத் தேவை?

கே: அவர்களுக்கு நான் தேவைப் படலாம். அவர்களுடைய விதி நான் இந்த வேலையை எடுத்துக் கொள்ளும்படி ஆக்கியது. எல்லாம் ஓரே உயிர்தானே.

ம: உன் தற்போதைய நிலைக்கு எப்படி வந்தாய்?

கே: ஸ்ரீ ரமண மகரிஷியின் வழிகாட்டுதல்கள் என்னை இந்த வழியில் செலுத்தின. பிறகு திரு. டக்லஸ் ஹார்டிங் என்பவரை நான் சந்தித்தேன். அவர் 'நான் யார்' என்னும் விசாரத்தை எப்படிச் செய்வது என்று எனக்குக் காண்பித்து உதவினார்.

ம: அது திடீரென்று தோன்றியதா அல்லது படிப்படியாகவா?

கே: அது திடீரென்றுதான் தேன்றியது. மறந்த ஒன்று ஞாபகத்திற்கு வருவது போன்று அல்லது விழிப்புணர்வின் ஒளி திடீரென்று மிளிர்ந்தது போல. 'எவ்வளவு எளிது; எவ்வளவு தெளிவு; நான் என்னவென்று என்னை நினைத்தேனோ அதுவல்ல! நான் அறியப் பட்டதும் அல்ல; அறிபவனும் அல்ல. நான் அறிதல் மட்டுமே' என்று நான் சொன்னேன்.

ம: அறிதல் கூட இல்லை. ஆனால் எது இவை எல்லாவற்றையும் சாத்தியமாக்குகிறதோ அது.

கே: அன்பு என்பது என்ன?

ம: வித்தியாசமானவன் மற்றும் வெவ்வேறானவன் என்னும் உணர்வு இல்லாதிருந்தால் அதை அன்பு என்று சொல்லலாம்.

கே: ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஏற்படும் அன்பிற்கு ஏன் இவ்வளவு அதிகமான முக்கியத்துவம்

ம: ஏனெனில் அதில் இருக்கும் சந்தோஷம் வெளிப்படையாக முக்கியமாகத் தெரிகிறது.

**கே:** எல்லா அன்பிலும் அது அவ்வாறு இல்லையா?

**ம:** இருக்க வேண்டிய அவசியம் இல்லை. அன்பு வலியை உருவாக்கலாம். அப்போது அதைப் பிரிவு என்று சொல்லலாம்

**கே:** சந்தோசம் என்பது என்ன?

**ம:** அகத்திற்கும் புறத்திற்கும் இடையே உள்ள ஒத்திசைவு - சந்தோசம். மற்றபடி, புற காரணங்களுடன் ஏற்படுத்திக் கொள்ளும் சுய அடையாளம் தான் துன்பம்

**கே:** சுய அடையாளம் இது போல எப்படி ஏற்படுகிறது?

**ம:** சுயம் அதன் இயல்பில் தன்னை மட்டுமே அறியும். அனுபவம் இல்லாமையால் அது எதையெல்லாம் கண்டு உணர்கிறதோ அவற்றை எல்லாம் தான் என்று எடுத்துக் கொள்கிறது. பல முறை அடிபட்டு, அது பகுத்தறிதலுடனும் (விவேகத்துடனும்), பற்றற்றும் (வைராக்கியத்துடனும்) இருக்கக் கற்றுக் கொள்கிறது. செயல்படாத நிலை (உபரதி) ஏற்படும்போது, ஒரு வலிமையான உள் உந்துதல் (முமுக்சுத்துவம்) அதன் ஆதாரத்தைத் தேட வைக்கிறது. அப்போது சூட்சும உடலின் தீபம் ஏற்றப்பட்டு அனைத்தும் தெளிவாகவும் ஆத்ம பிரகாசத்துடனும் பிரகாசிக்கும்.

**கே:** துன்பத்திற்கு என்ன உண்மையான காரணம்?

**ம:** தனி நபர்த்தன்மையுடன் (வியக்தித்துவத்துடன்) ஏற்படுத்திக் கொள்ளும் சுய அடையாளம்தான் காரணம். உணர்ச்சிகள் எவ்வளவுதான் வலிமையாக இருந்தாலும் அவற்றால் துன்பம் வராது. மனம்தான் தவறான கருத்துக்களால் குழம்பிப் போய், 'நான் இது', 'நான் அது' என்னும் எண்ணங்களுக்குப் பழக்க அடிமையாகி, இழப்புகளுக்கு அஞ்சி, ஆதாயங்களுக்கு ஏங்கி, தோற்கும்போது துன்பப்படுகிறது.

**கே:** என் நண்பன் ஒருவன் ஒவ்வொரு இரவும் பயங்கரமான கனவுகளைக் காண்கிறான். தூங்கப் போவது அவனைப் பயமுறுத்தும். எதுவும் அவனுக்கு உதவவில்லை.

**ம:** மெய்யாலுமே நல்லவர்களாக இருப்பவர்களின் அருகாமையில் இருப்பது (சத்சங்கம்) அவருக்கு உதவும்.

**கே:** வாழ்க்கையே ஒரு சிம்மசொப்பனம்

**ம:** உத்தமர்களுடனான நட்பு (சத்சங்கம்), உடல் மற்றும் மனோ ரீதியான அனைத்து பாதிப்புகளுக்கும் உயர்வான மருந்து.

**கே:** சாதாரணமாக அப்படி ஒரு நட்பைக் கண்டுபிடிப்பது கடினம்.

**ம:** உனக்குள் தேடு. உன் சொந்த சுயம்தான் உனக்குச் சிறந்த நண்பன்

**கே:** வாழ்க்கை ஏன் இவ்வளவு முரண்பாடுகள் நிறைந்ததாக இருக்கிறது?

**ம:** அது மனதின் தற்பெருமையை உடைக்க உதவுகிறது. நாம் எவ்வளவு ஏழைகளாகவும் வலிமையற்றும் இருக்கிறோம் என்று தெரிந்து கொள்ளவேண்டும். நாம் எவ்வாறு இருக்கிறோம், என்ன தெரிந்து கொண்டிருக்கிறோம், என்ன வைத்திருக்கிறோம், என்ன செய்கிறோம் என்னும் கற்பனைகளால் நம்மை ஏமாற்றிக் கொள்ளும் வரை நாம் ஒரு துக்கமான சூழ்நிலையில்தான் இருப்போம். முற்றிலுமான சுய மறுப்பினால் மட்டுமே நம் மெய்யான இருத்தலைக் கண்டுபிடிக்க முடியும்.

**கே:** சுயமறுப்பிற்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம்?

**ம:** சுயம் அறிதலுக்கு எவ்வளவோ அவ்வளவு. பொய்யான சுயத்தை விட்டு விட்டால்தான் மெய்யான சுயத்தை அறிய முடியும்.

**கே:** நீங்கள் பொய்யான சுயம் என்று சொல்வது எனக்கு மிகவும் மெய்யாகத் தெரிகிறது. எனக்குத் தெரிந்த சுயம் அது ஒன்றுதான். நீங்கள் மெய்யான சுயம் என்று சொல்வது வெறும் கோட்பாடு, ஒரு மாதிரியாகப் பேசப் படுவது, மனதின் உருவாக்கம், ஒரு கவர்ச்சியான பொய்த்தோற்றம். என்னுடைய இயல்பான சுயம் அழகானது அல்ல என்று ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அது எனக்கே சொந்தமான ஒரே சுயம். எனக்கு வேறு சுயம் இருப்பதாக நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள் அதைப் பார்க்கிறீர்களா? அது உங்களுக்கு மெய்யானதா அல்லது நீங்களே பார்க்க முடியாத ஒன்றை என்னை நம்பச் சொல்கிறீர்களா?

**ம:** அவசரமாக முடிவுகளுக்குத் தாவ வேண்டாம். பருப் பொருளால் ஆனது மெய்யானதாக இருக்க வேண்டியதில்லை. உணர்ச்சிகளை அடிப்படையாகக்கொண்டு, ஞாபகத்தால் வடிமைக்கப் பட்ட அனுபவங்கள் ஒரு உணர்ந்தறிபவரைக் குறிப்பால் உணர்த்துகின்றன. அவருடைய தன்மையைப் பரிசீலிக்க நீ ஒருபோதும் அக்கறை கொள்ளவில்லை. அதற்கு உன் முழு கவனத்தையும் செலுத்தி, அன்பான கரிசனத்துடன் ஆராய். அப்போது உன்னைப் பற்றிய குறுகிய பிம்பத்தில் முற்றிலும் உன் கவனத்தைச் செலுத்திக் கொண்டு இருப்பதால் நீ கனவிலும் நினைத்துப் பார்த்திராத, உன் சுயத்தின் விஷ்வரூபமான வியாபித்தலைக் கண்டுபிடிப்பாய்.

**கே:** என்னைச் சரியாகப் பரிசீலிக்க நான் சரியான மனநிலையில் இருக்க வேண்டும்.

**ம:** நீ தயாராகவும், தீவிரத்துடனும், விடாமுயற்சியுடனும், உண்மையாலுமே ஆர்வத்துடனும் இருக்க வேண்டும். உன்னைப் பற்றி நல்ல அபிப்பிராயத்தை நீ நிரம்பக் கொண்டிருக்க வேண்டும்.

**கே:** நான் சுயநலக்காரன்தானே?

**ம:** இல்லை. நீ தீய, தவறான கடவுள்களை வணங்குவதால் எப்போதும் நீ உன்னையும், உன்னுடையதையும் சதா காலமும் அழித்துக் கொண்டு இருக்கிறாய். எல்லா வகையிலும் சுயநலத்தோடு இரு - சரியான முறையில். நீ நன்றாக இருக்க விரும்பு. உனக்கு எது நல்லதோ அதற்காகப் பாடுபடு. உனக்கும் உன் சந்தோசத்திற்கும் இடையில் குறுக்கிடும் எதையும் பொருட்படுத்தாதே. எல்லாமுமாக இரு - எல்லாவற்றையும் நேசி - மகிழ்ச்சியோடு இரு - மகிழ்ச்சியைக் கொடு. இதைவிடப் பெரிய சந்தோசம் இல்லை.

**கே:** அன்பில் ஏன் இத்தனை துன்பம்?

**ம:** எல்லாத் துன்பமும் ஆசையினால் பிறப்பவை. உண்மையான அன்பு ஒருபோதும் ஏமாற வைக்காது. எப்படி ஐக்கிய உணர்வு ஏமாற்றும்? வெளிப்படுத்துவதற்கான ஆசைதான் ஏமாற்றலாம். அப்படிப்பட்ட ஆசை மனதினுடையது. எல்லா மனம் சார்ந்தவை களைப் போல ஏமாறுவது தவிர்க்க முடியாதது.

**கே:** *அன்பில் பாலியல் உணர்விற்கு என்ன பங்கு?*

**ம:** அன்பு என்பது ஒரு இருத்தலின் ஒரு நிலை. பாலியல் உணர்வு ஒரு சக்தி. அன்பு புத்திசாலித்தனமானது. பாலியல் உறவு கண்மூடித் தனமானது. அன்பு மற்றும் பாலியல் உணர்வின் உண்மை இயல்பைப் புரிந்து கொண்டால் முரண்பாடும் குழப்பமும் இருக்காது.

**கே:** *அன்பில்லாமல் நிறைய பாலியல் உறவுகள் இருக்கின்றன.*

**ம:** அன்பில்லாமல் இருந்தால் எல்லாமே தீங்கானவைதான். அன்பில்லாத வாழ்க்கையே தீங்கானதுதான்.

**கே:** *எது என்னை அன்பானவன் ஆக்கும்?*

**ம:** நீயே அன்புதான் - பயப்படாமல் இருந்தால்.



# 29. வாழ்வதுதான் வாழ்க்கையின் ஒரே பயன்பாடு

**கேட்பவர்:** *யோகாவில் தோற்பது என்றால் என்ன? யார் யோகாவில் தோல்வி அடைகிறார்கள் (யோக பிரஸ்தா)?*

**மஹராஜ்:** அது முழுவதும் செய்து முடிக்கப்படாததைக் குறிக்கிறது. யார் யோகாவைச் சில காரணங்களால் முடிக்க முடியவில்லையோ அவர்களை யோகாவில் தோற்றவர்கள் என்று சொல்லலாம். அந்த மாதிரியான தோல்வி தற்காலிகமானதே. ஏனெனில் தோற்கடிக்கப் படுவது என்பது யோகாவில் இல்லை. இந்தச் சண்டை உண்மைக்கும் பொய்யிற்கும் நடப்பதால் உண்மை எப்போதும் வெல்லும். பொய்யிற்கு வாய்ப்பே இல்லை.

**கே:** *யார் தோற்கிறார்கள்? வியக்தியா ( நபரா) அல்லது வியக்தாவா (பிரபஞ்ச அளவில் வெளிப்படுவதா)?*

**ம:** கேள்வி தவறாகக் கேட்கப் பட்டுள்ளது. குறுகிய காலத் திலோ, அல்லது நாளடைவிலோ தோல்வி என்னும் பேச்சுக்கே இடமில்லை. ஒரு தெரியாத தேசத்தில் நீண்ட, கடினமான சாலையில் பயணிப்பது போன்றது அது. கணக்கற்ற அடிகளில் கடைசியாக எடுத்து வைக்கும் அடிதான் சேரவேண்டிய இடத்தில கொண்டு போய்ச் சேர்க்கும். இருப்பினும் முந்தய எல்லா அடிகளையும் தோல்வி என்று கருத மாட்டாய். ஒரு தடையைக் கடக்க சிறிது திரும்ப வேண்டி இருந்தாலும் ஒவ்வொரு அடியும் உன்னை உன் இலக்கிற்கு அருகில் கொண்டு போய்ச் சேர்த்திருக்கும். உள்ளபடியே, ஒவ்வொரு அடியும் உன்னை உன் இலக்கிற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும். ஏனெனில் எப்போதும் நகர்ந்து கொண்டே இருப்பது, கற்றுக் கொள்வது, கண்டு பிடிப்பது, வளர்வது ஆகியவை உன் சாசுவதமான விதி. வாழ்வது தான்

வாழ்க்கையின் ஒரே பயன்பாடு. வியக்தா தன்னை வெற்றி, தோல்வியுடன் அடையாளப்படுத்திக் கொள்ளாது. இது அல்லது அதுவாக ஆவது என்னும் கருத்தே நினைத்துப் பார்க்க முடியாதது. வெற்றியும் தோல்வியும் சார்புடைய சமாச்சாரங்கள் என்றும், ஒன்றை ஒன்று சார்ந்தவை என்றும், அவை உயிர் வாழ்தலின் பாவும் ஊடையும் ஆகும் என்றும் வியக்தா அறியும். இரண்டிலிருந்தும் கற்றுக் கொண்டு அவற்றிற்கு அப்பால் செல். கற்றுக் கொள்ளவில்லை என்றால் மறுபடியும் செய்.

**கே:** *நான் என்ன கற்றுக் கொள்வது?*

**ம:** எந்தச் சந்தேகமும் இல்லாமல் உறுதியுடன் வாழ்வதை. இதற்கு உன் சொந்த, உண்மையான ஸ்வரூபம் தளர்வுறாதது, பயமில்லாதது, எப்போதும் வெற்றி அடைவது என்று நீ அறிந்து கொள்ள வேண்டும். உன் கற்பனையைத் தவிர வேறு எதுவுமே உன்னைத் தொந்தரவு செய்ய முடியாது என்று நீ தீர்க்கமாகப் புரிந்து கொண்டால், உன் அபிலாசைகள் மற்றும் அச்சங்கள், உருவகங்கள் மற்றும் கருத்துக்கள் ஆகியவற்றை நீ ஒதுக்கிவிட்டு சத்தியத்துடன் மட்டுமே வாழ்வாய்.

**கே:** *சிலர் யோகாவில் ஜெயிப்பதற்கும் மற்றவர்கள் தோற்பதற்கும் என்ன காரணம்? அது வலிமையற்ற விதியா, அல்லது வெறுமனே திடீரென்று ஏற்படுவதா?*

**ம:** யாரும் யோகாவில் தோற்பது இல்லை. முன்னேற்றத்தின் வேகம்தான் கணக்கில் எடுத்துக் கொள்ளப் படுகிறது. அது ஆரம்பத்தில் மெதுவாகவும், முடிவில் வேகமாகவும் இருக்கும். ஒருவர் முழுமையாக முதிர்ந்துவிட்டால் சுயம் அறிதல் என்பது வெடிக்கும். அது தன்னிச்சையாகவோ அல்லது சிறு தூண்டு தலினாலோ நடக்கும். விரைவாக நடப்பது மெதுவாக நடப்பதை விடச் சிறந்தது அல்ல. மெதுவாகப் பழுப்பதும், விரைவாக மலர்வதும் மாறிமாறி நடக்கும். இரண்டுமே இயற்கையானவை மற்றும் சரியானவை.

இருப்பினும் இவை எல்லாம் மனதில்தான் இவ்வாறு உள்ளன. என்னைப் பொறுத்தவரையில் இது போன்ற எதுவுமே இல்லை.

விழிப்புணர்வு என்னும் பிரமாண்டமான கண்ணாடியில் பிம்பங்கள் தோன்றி மறைகின்றன. ஞாபகம் என்பது மட்டுமே அவற்றிற்கு மெய்த்தன்மையைக் கொடுக்கிறது. ஞாபகம் என்பது பருப்பொருள் - அழிக்கப்பட வேண்டியது, கண நேரமே நீடித்திருப்பது. இது போன்ற மெலிதான அஸ்திவாரத்தின் மேல் நாம் தெளிவில்லாத, தற்காலிகமான, கனவு போன்ற தனிப்பட்ட இருத்தல் என்னும் புரிதலை உருவாக்குகிறோம். 'நான் இன்னார்' என்னும் இந்தத் தெளிவில்லாத அனுமானம், தூய பிரக்ஞையின் மாறாத தன்மையை மறைக்கிறது. துன்பப்படவும், இறப்பதற்கும் நாம் பிறந்துள்ளோம் என்று நம்மை நம்ப வைக்கிறது.

**கே:** எப்படி ஒரு குழந்தை வளர்வது என்பது தானாக நடக்கிறதோ அப்படி இயற்கையின் ஒரு பகுதியாக இருப்பதால் மனிதன் முன்னேற்றம் அடைகிறான். எதற்காகப் பிரயத்தனப் படவேண்டும்? யோகாவிற்கு என்ன தேவை?

**ம:** முன்னேற்றம் எப்போதும் உள்ளது. இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் முன்னேற்றத்திற்குப் பங்களிக்கின்றது. ஆனால் இது அறியாமையின் முன்னேற்றம். அறியாமையின் வட்டங்கள் விரிவடைத்து கொண்டே போகலாம். இருப்பினும் கட்டுண்டே இருக்கிறது. நாளடைவில் சரியான தருணத்தில் யோகாவைக் கற்றுத்தரவும், பயிற்சி செய்ய ஊக்குவிக்கவும் ஒரு குரு தோன்றுவார். பிறகு முதிர்ச்சி ஏற்படும். அதன் பயனாக அறிவுச் சூரியன் உதிப்பதால் கால காலமாக இருக்கின்ற அறியாமை என்கிற இரவின் இருள் கரையும். ஆனால் மெய்யாக எதுவுமே நடை பெறுவது இல்லை. சூரியன் எப்போதும் உள்ளது. அதற்கு இரவு என்பது கிடையாது. 'நான் உடல்' என்னும் கருத்தால் குருடாக்கப் பட்ட மனம் அதன் மாயக் கயிற்றை முடிவில்லாமல் திரிக்கிறது.

**கே:** எல்லாமுமே இயற்கையான செயல் என்றால் முயற்சிக்கு அவசியம் என்ன?

**ம:** முயற்சியும் கூட அதன் ஒரு பகுதி. அறியாமை மூர்க்கத் தனமாகவும், அர்த்தமற்றதாகவும் ஆகி, குணாதிசயம் வக்கிரம் ஆகும் போது முயற்சியும், அதன் வலியும் தவிர்க்க முடியாதவை

ஆகின்றன. இயற்கைக்குப் பூரணமாகக் கீழ்ப்படிந்தால் முயற்சி என்பது இருக்காது. ஆன்மீக வாழ்க்கையின் விதை நிசப்தத்திலும் நமக்குத் தெரியாமலும் குறிப்பிட்ட காலம் வரையில் வளரும்.

**கே:** நாம் சில மாமனிதர்கள் அவர்களுடைய வயதான காலத்தில் குழந்தைத்தனமாகவும், சில்லறைத்தனமாகவும், சண்டை போடுகிற வர்களாகவும், கீழ்த்தரமாகவும் மாறிவிடுவதைப் பார்க்கிறோம். அவர்கள் அந்த அளவிற்கு எப்படி மோசமாக முடியும்?

**ம:** அவர்கள் தங்கள் உடலை முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் சரியான யோகிகள் அல்ல. அல்லது அவர்கள் தங்கள் உடல் இயற்கையாக வலுவிழந்து அழிவதைப் பொருட்படுத்தாமல் இருப்பார்கள். அனைத்துக் காரணிகளையும் அறியாமல் ஒருவர் முடிவெடுக்கக் கூடாது. எல்லாவற்றிற்கும் மேலாக உயர்வு தாழ்வு பற்றி ஒருவர் தீர்மானிக்கக் கூடாது. இளமை என்பது ஞானத்தை விட உடல் பலத்தை (ப்ராணாவை) அடிப்படையாகக் கொண்டது.

**கே:** ஒருவருக்கு வயதாகலாம். ஆனால் ஏன் உஷார்த் தன்மையையும், பகுத்தறியும் தன்மையையும், பற்றற்ற தன்மை யையும் இழக்க வேண்டும்?

**ம:** விழிப்புணர்வும், விழிப்புணர்வு இல்லாமையும் உடலில் இருக்கும் போது மூளையின் நிலைமையைப் பொறுத்து இருக்கிறது. ஆனால் வியக்தா இந்த இரண்டிற்கும் அப்பாலும், மூளைக்கு அப்பாலும், மனதிற்கு அப்பாலும் உள்ளது. உபகரணத்தின் பழுதை அதை உபயோகிப்பவரின் பழுதாகக் கருதக்கூடாது.

**கே:** ஞானம் அடைந்தவர் தகாத காரியம் எதையும் செய்ய மாட்டார் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அவர் எப்போதும் மிகச் சிறந்த முறையில் முன்னுதாரணமாக நடந்து கொள்வார்.

**ம:** யார் முன்னுதாரணத்தை அமைப்பது? ஒரு ஞானமடைந்தவர் தேவையில்லாமல் ஏன் மரபைக் கடைப்பிடிக்க வேண்டும்? அவர் கணிக்கப் படக் கூடியவராக ஆகும் கணத்தில் சுதந்திரமாக இருக்க முடியாது. அந்தக் கணத்தில் என்ன தேவையோ அதை நிறைவேற்று வதிலும், அந்த சூழ்நிலையின் தேவைக்குக் கீழ்ப்படிவதிலும் அவருடைய சுதந்திரம் இருக்கிறது. மனதில் தோன்றுவதை எல்லாம்

செய்யக்கூடிய சுதந்திரம் உண்மையிலேயே ஒரு தளை. ஆனால் செய்ய வேண்டியதைச் செய்யவும், சரியானதைச் செய்ய முடிவதும் தான் உண்மையான சுதந்திரம்.

**கே:** இருப்பினும் யார் ஞானம் அடைந்தவர் அல்லது அடைய வில்லை என்று அறிந்து கொள்ள ஒரு வழிமுறை இருக்க வேண்டும். அப்படி மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்த முடியாவிட்டால் அவரால் என்ன பயன்?

**ம:** தன்னை அறிந்தவருக்கு அதைப் பற்றி எந்தச் சந்தேகமும் இருக்காது. மற்றவர்கள் அதைக் கண்டுகொள்கிறார்களா இல்லையா என்பதைப் பற்றியும் அவருக்கு அக்கறை இருக்காது. ஒருவர் தான் ஞானம் அடைந்ததை வெளியில் தெரிவிப்பது என்பது மிக அரிது. அவரைச் சந்தித்தவர்கள் அதிர்ஷ்டசாலிகள். ஏனெனில் அவர்களுடைய நிரந்தர நன்மைக்காக அதை வெளிப்படுத்துகிறார்.

**கே:** சுற்று முற்றும் பார்க்கும் போது நடைபெறும் தேவையில்லாத துன்பங்களின் அளவைப் பார்த்து ஒருவர் வாயடைத்துப் போகிறார். உதவ முடிந்தவர்களுக்கு அதற்கு வாய்ப்பு கிடைப்பதில்லை. யாருக்கு உதவி கிடைக்கவில்லையோ அவர்களுக்கு ஓய்வு கிடைப்பது இல்லை. ஒரு மருத்துவமனை முழுவதும் மக்கள் அரற்றிக் கொண்டும், புரண்டுகொண்டும் இருப்பதைக் கற்பனை செய்து பாருங்கள். உங்களுக்கு அவர்களைக் கொன்று அவர்களின் சித்திரவதையை முடிவிற்குக் கொண்டுவரும் அதிகாரத்தைக் கொடுத்தால் நீங்கள் அவ்வாறு செய்ய மாட்டீர்களா?

**ம:** நான் செய்வேன்.

**கே:** ஆனால் அவர்களுடைய விதி துன்பப்பட வேண்டும் என்று இருந்தால் நீங்கள் எப்படி அதில் குறுக்கிட முடியும்?

**ம:** என்ன நடக்கிறதோ அதுதான் அவர்களின் விதி. விதியை மாற்ற முடியாது. ஒவ்வொருவருடைய வாழ்க்கையும் அவர்கள் பிறந்தபோதே தீர்மானிக்கப் படுகிறது என்று சொல்கிறாயா? என்ன ஒரு வினோதமான கருத்து! அது அப்படியானால் அவ்வாறு தீர்மானிக்கும் சக்தி யாரும் துன்பப் படாமல் பார்த்துக் கொள்ளும்.

**கே:** காரண காரியத்தைப் பற்றி என்ன சொல்வது?

**ம:** ஒவ்வொரு கணமும் அதன் முழுக் கடந்த காலத்தைக் கொண்டிருக்கிறது. அதன் முழு எதிர் காலத்தை உருவாக்குகிறது.

**கே:** ஆனால் கடந்த காலமும் எதிர் காலமும் இருக்கின்றனவே?

**ம:** மனதில் மட்டுமே. காலம் மனதில்தான் இருக்கிறது. இடமும் மனதில்தான் இருக்கிறது. காரண காரிய விதியும் ஒரு மாதிரியான சிந்தனைதான். மெய்யாக எல்லாமும் இங்கேயே, இப்போதே இருக்கின்றன. எல்லாமும் ஒன்றே. பல்வேறான தன்மையும், வெவ்வேறானவையும் மனதில்தான் உள்ளன.

**கே:** இருப்பினும் தீராத வியாதி உடைய உடலை அழித்தாவது துன்பத்தைப் போக்க வேண்டும் என்பதை நீங்கள் ஆதரிப்பது போல் தெரிகிறது.

**ம:** மறுபடியும் நீ வெளியிலிருந்து பார்க்கிறாய். நான் உள்ளுக் குள்ளிருந்து பார்க்கிறேன். நான் துன்பப்படுபவரைப் பார்ப்ப தில்லை. நான்தான் துன்பப்படுபவர். எனக்கு உள்ளுக்குள் இருந்து அவரைத் தெரியும். எது சரியோ அதைத் தன்னிச்சையாகவும், இயல்பாகவும் செய்வேன். நான் எந்த விதிமுறையையும் பின்பற்றுவதில்லை. எந்த விதிமுறையையும் வகுப்பதில்லை. நான் வாழ்க்கையுடன் மிதந்து செல்கிறேன் - நம்பிக்கையுடனும், தேவையானவற்றைச் செய்துகொண்டும்.

**கே:** இருப்பினும் நீங்கள் உங்களை அடுத்துள்ள சூழ்நிலைகளை முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் யதார்த்தமான மனிதராக இருக்கிறீர்கள்.

**ம:** வேறு எவ்வாறு நான் இருக்கவேண்டும் என்று எதிர்பார்க் கிறாய்? வாழும் முறை தெரியாதவனாகவா?

**கே:** இருப்பினும் உங்களால் மற்றவர்களுக்குச் சிறப்பாக உதவ முடியாது.

**ம:** கண்டிப்பாக நான் உதவ முடியும். நீயும் உதவ முடியும்.

ஒவ்வொருவரும் உதவ முடியும். ஆனால் துன்பம் எல்லா நேரமும் இடைவிடாமல் உருவாக்கப்படுகிறது. ஒருவர் தான்

மட்டுமே தனக்குள் இருக்கும் துக்கத்தின் வேர்களை அழிக்க முடியும். மற்றவர்கள் துக்கத்தைக் குறைக்க முடியுமே தவிர, மனித குலத்தின் மிக மிகக் கீழான முட்டாள்தனமான அதன் காரணத்தை அகற்ற முடியாது.

**கே:** இந்த முட்டாள்தனம் முடிவிற்கு வருமா?

**ம:** தனி மனிதனுக்குள் - கண்டிப்பாக. எந்தக் கணத்திலும். மனித குலத்திற்குள் - பலப் பல வருடங்களுக்குப் பிறகு. படைக்கப் பட்டுள்ளவைகளில் - எக்காலத்திலும் நடக்காது. ஏனெனில் படைப்பே அறியாமையில்தான் வேர் கொண்டுள்ளது. பொருள் தன்மையே அறியாமைதான். தெரிந்து கொள்ளாமல் இருப்பதும், தனக்குத் தெரியவில்லை என்று தெரியாமல் இருப்பதும் முடிவில்லாத துன்பத்திற்குக் காரணம்.

**கே:** அவதாரங்களைப் பற்றியும் உலக இரட்சகர்களைப் பற்றியும் கேள்விப் பட்டிருக்கிறோம்.

**ம:** அவர்கள் காப்பாற்றினார்களா? அவர்கள் வந்தார்கள். சென்றார்கள். உலகம் உழன்று கொண்டுதான் இருக்கிறது. கண்டிப்பாக அவர்கள் நிறையச் செய்தார்கள். மனித மனதில் புதுப் பரிமாணங்களைத் திறந்தார்கள். ஆனால் உலகத்தைக் காப்பாற்றுவதைப் பற்றிப் பேசுவது மிகையானது.

**கே:** அப்படியானால் உலகத்திற்கு மீட்சி என்பது இல்லையா?

**ம:** எந்த உலகத்தை நீ காப்பாற்ற வேண்டுகிறாய்? உன்னால் உருவகிக்கப்பட்ட உலகத்தையா? அதை நீயே காப்பாற்றிக் கொள். என் உலகத்தை நீ காண்பி. நான் அதைக் கையாண்டு கொள் கிறேன். நான் காப்பாற்றவோ, காப்பாற்றாமல் இருக்கவோ சாத்தியப்படும் என்னிலிருந்து தனிப்பட்ட உலகத்தைப் பற்றி எனக்குத் தெரியாது. உலகத்தை உன்னிடமிருந்து காப்பாற்ற வேண்டி இருக்கும்போது நீ அதைக் காப்பாற்ற வேண்டியதில்லை. காட்சியிலிருந்து வெளியேறி, காப்பாற்ற ஏதாவது மீதமிருக்கிறதா என்று பார்.

**கே:** ஒருவர் இல்லாமல் உலகம் இருக்காது; எனவே அதற்குச் செய்யக்கூடிய ஒரே செயல் நாடகத்தை முடித்து விடுவது என்னும்

கருத்தை நீங்கள் வலியுருத்துவதாகத் தெரிகிறது. இது வழி அல்ல. இந்த உலகம் என்னால் உருவாக்கப் பட்டதாக இருந்தால் கூட இந்த அறிவு அதைக் காப்பாற்றாது. அது விளக்க மட்டுமே செய்கிறது. நான் ஏன் அவ்வளவு மோசமான உலகத்தை உருவாக்க வேண்டும்; அதை மாற்ற நான் என்ன செய்ய வேண்டும் என்னும் கேள்வி நீடிக்கிறது. அதை எல்லாம் மறந்துவிடு; உன் சுய மகிமையை சிலாகித்துக் கொள் என்று நீங்கள் சொல்வது போல் தெரிகிறது. கண்டிப்பாக நீங்கள் அவ்வாறு அர்த்தப்படுத்தவில்லை. வியாதியைப் பற்றிய விளக்கமும், அதன் காரணங்களும் அதைக் குணப்படுத்தாது. நமக்குத் தேவை சரியான மருந்து.

**ம:** விளக்கமும் காரணங்களும் சோம்பேறித்தனத்தாலும் முட்டாள்தனத்தாலும் உண்டான வியாதிக்கு தீர்வு. எப்படி சத்துக் குறைவு என்னும் வியாதி எந்தச் சத்து குறைவோ அதைக் கொடுப் பதால் சரியாகுமா அப்படி, வாழ்தலின் வியாதிகள் பகுத்தறிதல் மற்றும் பற்றற்ற தன்மையால் (விவேக வைராக்கியத்தால்) சரிசெய்யப்படும்.

**கே:** மிகச் சரியாக இருப்பதைப் போதித்து நீங்கள் உலகத்தைக் காப்பாற்ற முடியாது. மக்கள் எவ்வாறு உள்ளனரோ அவ்வாறே இருக்கின்றனர். அவர்கள் துன்பப் படத்தான் வேண்டுமா?

**ம:** அவர்கள் உள்ளபடியே இருக்கும் வரை துன்பத்திலிருந்து விடுதலை கிடையாது. தனித்தனியே பிரிந்திருக்கும் உணர்வை நீக்கு. அப்போது முரண்பாடு இருக்காது.

**கே:** அச்சிடப் பட்ட கருத்து தாளும், மையுமாக இருக்கலாம். அதன் அர்த்தம்தான் முக்கியம். உலகத்தை அதன் மூலக் கூறுகளா கவும், அதன் தன்மைகளாகவும் ஆராய்ந்தால் மிக முக்கியமான ஒன்றான அதன் அர்த்தத்தைத் தவற விட்டு விடுவோம். எல்லாவற்றையும் நீங்கள் கனவு என்று சொல்வது ஒரு பூச்சியின் கனவிற்கும், ஒரு கவிஞரின் கனவிற்கும் உள்ள வித்தியாசத்தை ஒதுக்கித்தள்ளிவிடுகிறது. எல்லாமும் கனவு என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் எல்லாமும் சமமானவை அல்ல.

**ம:** கனவுகள் சமமானவை அல்ல. ஆனால் கனவு காண்பவர் ஒருவரே. கனவில் நான்தான் பூச்சி, நான்தான் கவிஞர். ஆனால்

மெய்யாக நான் இரண்டுமே அல்ல. நான் எல்லாக் கனவுகளுக்கும் அப்பாற்பட்டவன். நான் எல்லாக் கனவுகளும் தோன்றி மறைகின்ற ஒளி. நான் கனவுகளுக்கு உள்ளேயும் வெளியேயும் இருக்கிறேன். எப்படி தலைவலி உள்ளவருக்கு வலியைத் தெரியும்; ஆனால் தான் வலி அல்ல என்றும் தெரியுமோ அப்படி எனக்கு கனவைப் பற்றியும், நான் கனவு காண்கிறேன் என்றும், நான் கனவு காண்பதில்லை என்றும் தெரியும் - எல்லாம் ஒரே சமயத்தில். நான் என்னவோ அதுவேதான் - கனவிற்கு முன்பும், கனவு காணும் போதும், கனவிற்குப் பிறகும். ஆனால் கனவில் என்ன காண்கிறேனோ அது நான் அல்ல.

**கே:** இவை எல்லாம் கற்பனை. ஒருவர் கனவு காண்பதாகக் கற்பனை செய்கிறார். மற்றொருவர் கனவு காணவில்லை என்று கற்பனை செய்கிறார். இரண்டும் சமமில்லையா?

**ம:** சமம் மற்றும் சமமில்லை. கனவு காணாதிருப்பதை இரண்டு கனவுகளுக்கு இடையே உள்ள இடைவெளி என்பதாக எடுத்துக் கொண்டால் அதுவும் கனவின் ஒரு பகுதியே. கனவு காணாதிருப்பதை உறுதியாகக் கடைப்பிடித்து, மெய்மையில் காலமற்று ஆழ்ந்திருப்பது கனவோடு சம்பந்தப் பட்டது அல்ல. அந்த அர்த்தத்தில் நான் கனவு காண்பதில்லை - ஒருபோதும் காணப் போவதுமில்லை.

**கே:** கனவும், கனவிலிருந்து தப்பிப்பதும் கற்பனை என்றால் வெளியேற என்னதான் வழி?

**ம:** வழி ஒன்றும் தேவை இல்லை. வெளியேறும் வழியும் கனவின் ஒரு பகுதி என்று நீ பார்க்கவில்லையா? நீ செய்ய வேண்டியது எல்லாம் கனவைக் கனவாக எடுத்துக் கொள்வது மட்டுமே.

**கே:** நான் எல்லாவற்றையும் கனவு என்று ஒதுக்கித் தள்ளினால் அது என்னை எங்கு கொண்டுபோய்ச் சேர்க்கும்?

**ம:** உன்னை எங்கே கொண்டுபோய்ச் சேர்த்தாலும் அது கனவாகத்தான் இருக்கும். கனவிற்கு அப்பால் செல்வது என்னும் கருத்தே ப்ரம்மை. எதற்காக எங்கேயும் செல்ல வேண்டும்? நீ உலகம் என்று சொல்லுகின்ற கனவைக் காண்கிறாய் என்பதை

உணர்ந்து, வெளியேறும் வழிகளைத் தேடுவதை நிறுத்து. கனவு உன் பிரச்சனை அல்ல. உன் பிரச்சனையே நீ கனவின் மற்ற பகுதிகளை விட்டு விட்டு ஒரு பகுதியை மட்டும் விரும்புவதே. எல்லாவற்றையும் நேசி அல்லது எதையுமே நேசிக்காதே. குற்றம் சொல்வதை நிறுத்து. நீ கனவைக் கனவாகப் பார்த்தால் நீ செய்ய வேண்டிய அனைத்தையும் செய்துவிட்டாய்.

**கே:** கனவு காண்பது சிந்திப்பதால் வருவதா?

**ம:** எல்லாமுமே கற்பனைகளின் விளைவுதான். நிர்விகல்ப சமாதி (கருத்துக்கள் அற்ற) நிலையில் எதுவுமே உணரப்படாது. 'நான்' என்பதுதான் அடிப்படைக் கருத்து. அது தூய விழிப்புணர்வுத் தன்மையை அழித்துவிடும், அதை கடவுள் மற்றும் அவர் உலகத்தை நிர்மானிக்கின்ற கணக்கற்ற அனுபவங்களும், உணர்ந்தறிபவைகளும், உணர்ச்சிகளும், கருத்துக்களும் தொடரும். 'நான்' என்பது சாட்சியாக இருக்கிறது - ஆனால் கடவுளின் சித்தத்தால் ஒவ்வொன்றும் நடக்கிறது.

**கே:** ஏன் என் சித்தத்தால் அல்ல?

**ம:** மறுபடியும் உன்னை கடவுள் மற்றும் சாட்சி என்று பிரித்து விட்டாய். இரண்டுமே ஒன்றுதான்.



## 30. இப்போதே நீ சுதந்திரமானவன்

**கேட்பவர்:** மனிதனைப் பற்றியும், பிரபஞ்சத்தைப் பற்றியும் நிறைய கோட்பாடுகள் உள்ளன. உருவாக்கல் கோட்பாடு, மாயைக் கோட்பாடு, கனவுக் கோட்பாடு - இப்படிப் பல. எது உண்மை?

**மஹராஜ்:** அனைத்தும் சரியே, அனைத்தும் தவறே. உனக்கு எது சிறந்தது எனப் பிடிக்கிறதோ, அதை எடுத்துக்கொள்.

**கே:** நீங்கள் கனவுக் கோட்பாட்டை ஆதரிப்பதாகத் தோன்றுகிறது.

**ம:** இவை வார்த்தைகளை எல்லாம் ஒன்றாகச் சேர்க்கும் வழிமுறை. சிலர் ஒரு வழியை ஆதரிக்கிறார்கள். சிலர் வேறு வழியை ஆதரிக்கிறார்கள். கோட்பாடுகள் சரியோ, தவறோ அல்ல. அவை விளக்கமுடியாததை விளக்க முயலும் முயற்சிகள். கோட்பாடு முக்கியமல்ல. அதைப் பரிசோதிக்கும் வழிதான் முக்கியம். கோட்பாட்டைச் சோதிப்பதுதான் அதைப் பயனுள்ளதாக்கும். உனக்குப் பிடித்த எந்தக் கோட்பாட்டை வேண்டுமானாலும் பரிட்சித்துப் பார் - நீ உண்மையாலுமே அக்கறையும், நேர்மையும் உடையவனாக இருந்தால், மெய்யை அடைவது நிச்சயம். உயிர்வாழ்கின்ற ஒருவனாக நீ பொறுத்துக் கொள்ளமுடியாத, வலிமிகுந்த சூழ்நிலையில் சிக்கிக் கொண்டு, வெளியே வர வழி தேடுகின்றாய். உன் சிறையிலிருந்து வெளியே வர பல திட்டங்கள் கொடுக்கப் பட்டாலும் ஒன்றுகூட உண்மையானது அல்ல. ஆனால் அவற்றில் சிறிதளவு பிரயோஜனம் உள்ளது - நீ மிகவும் மெய்யார்வத்துடன் இருந்தால். மெய்யார்வம்தான் விடுதலை அளிக்கும் - கோட்பாடு அல்ல.

**கே:** கோட்பாடு தவறுதலாக வழிநடத்தலாம்- மெய்யார்வம் குருட்டுத்தனமாக இருக்கலாம்.

**ம:** உன் அக்கறையுடனான ஈடுபாடு உனக்கு வழி காட்டும். சுதந்திரத்தின் மீதும், பூரணமான முழுமையின் மீதும் கொண்டுள்ள தீவிர பற்றுதல் உன்னை எல்லாக் கோட்பாடுகளையும், வழிமுறை களையும் கை விட்டுவிட்டு, அறிவுநுட்பத்துடனும், புத்திசாலித் தனத்துடனும், துடிப்பான அன்புடனும் வாழச் செய்யும். கோட் பாடுகள் ஆரம்ப நிலைகளாகச் சரி. ஆனால் கைவிடப்பட வேண்டும் - எவ்வளவு சீக்கிரமாக விட முடியுமோ அவ்வளவு நல்லது.

**கே:** ஒரு யோகி, மெய்ஞானம் அடைய எட்டு நிலை யோகா தேவை இல்லை என்று சொல்கிறார். உறுதியான மனப்பாங்கு (சங்கல்ப சக்தி) மட்டுமே போதும் என்கிறார். சாதிக்க மற்றவர்களுக்குப் பல ஆண்டுகள் ஆவதை பிரயத்தனமில்லாமலும், விரைவாகவும் அடைய தூய மன உறுதியின் வலிமையின் மேல் முழு நம்பிக்கையுடன் கவனத்தைக் குவித்தால் போதுமானது என்கிறார்.

**ம:** கவனத்தைக் குவிப்பது, முழு நம்பிக்கை, தூய மனஉறுதி - இந்த மாதிரியான பெருமதிப்புள்ள சொத்துக்கள் மூலம் ஒருவர் மிக விரைவில் மெய்ஞானம் அடைந்து விடுவார். அதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லை. இந்த மனோஉறுதி யோகா, முதிர்ந்த, ஒரே ஒரு ஆசையைத் தவிர எல்லா ஆசைகளையும் துறந்த ஞானத் தேடல் உடையவருக்குச் சரி. மன உறுதி என்பது உள்ளமும், புத்தியும் ஸ்திரமாய் இருப்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அம்மாதிரியான நிலைத்த முயற்சியால் எல்லாமும் அடையப் பெறும்.

**கே:** அந்த யோகி, முடிவில்லாத முயற்சியையும், செயல் பாட்டையும், கற்றலையும் விளைவிக்கின்ற வெறும் நோக்கத்தின் மேல் கொண்டுள்ள உறுதியைச் சொல்லவில்லை என்று நினைக்கிறேன். குறிக்கோளின்மேல் மனத்திட்பத்தை நிலையாக வைத்திருந்தால் வேறு செயல்பாடோ, முயற்சியோ தேவை இல்லை என்றுதான் அவர் சொல்லியிருந்தார். வெறுமனே குறிக்கோளின் மேல் மனத்திட்பம் உள்ளது என்னும் உண்மையே குறிக்கோளை ஈர்த்துவிடும்.

**ம:** மனத்திட்பம் அல்லது நிலையான நோக்கம் அல்லது மனதின் ஒருமித்த தன்மை - இப்படி எந்தப் பெயரை நீ கொடுத்தாலும் மனமார்ந்த ஈடுபாடு, பாசங்கற்ற தன்மை, நேர்மை ஆகியவற்றிற்குத் தான் திரும்புவாய். நீ மிகமிக மனமார்ந்த ஈடுபாட்டுடன் இருந்தால் நீ ஒவ்வொரு நிகழ்வையும், உன் வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் உன் குறிக்கோளை நோக்கித் திருப்புவாய். உன் நேரத்தையும் சக்தியையும் மற்றவற்றின் மேல் வீணாகச் செலவிட மாட்டாய். உன் குறிக்கோளுக்கு உன்னை முற்றிலும் அர்ப்பணிப்பாய். அதை மனத்திட்பம் என்றோ, அன்பு என்றோ, எளிய நேர்மை என்றோ சொல்லலாம். நாம் உள்ளும் புறமும் போர் செய்துகொண்டு இருக்கின்ற சிக்கலான ஜீவன்கள். நாம் நம்மையே எப்போதும் முரண்பட்டுக் கொண்டு இருக்கின்றோம், நேற்று செய்த வேலையை இன்று ஒழித்து வீணாக்கி விடுகிறோம். நாம் சிக்கிக் கொண்டிருப்பதில் எந்த அதிசயமும் இல்லை. சிறிதளவு நேர்மைகூட நிறைய வித்தியாசத்தை ஏற்படுத்தும்.

**கே:** எது மிகவும் வலிமையானது - ஆசையா அல்லது விதியா?

**ம:** ஆசை விதியை வடிவமைக்கிறது.

**கே:** மேலும் விதி ஆசையை வடிவமைக்கிறது. என் ஆசைகளை, நாம் விதி என்று சொல்கின்ற பரம்பரைத் தன்மை மற்றும் சூழ்நிலைகள், சந்தர்ப்பங்கள் மற்றும் எதிர்பாராத நிகழ்வுகள் ஆகியவை கட்டுப் படுத்துகின்றன.

**ம:** ஆமாம், நீ அவ்வாறு சொல்லலாம்.

**கே:** எப்போது நான் விரும்புவதை ஆசைப் பட சுதந்திரமானவன்?

**ம:** இப்போதே நீ சுதந்திரமானவன். நீ எதற்கு ஆசைப்படச் விரும்புகிறாய்? அதற்கு இப்போதே ஆசைப்படு.

**கே:** ஆசைப்பட எனக்குச் சுதந்திரம் உள்ளது. ஆனால் அந்த ஆசைக்காகச் செயல்பட எனக்குச் சுதந்திரம் இல்லை. மற்ற உந்துதல்கள் என்னை வீணாகச் செய்துவிடும். என் ஒப்புதல் இருந்தாலும் என்னிடமுள்ள ஆசைகள் வலிமையானவை அல்ல. நான் விரும்பாத ஆசைகள் வலிமையானவை.

**ம:** நீ உன்னையே ஏமாற்றிக் கொண்டு இருக்கலாம். மரியாதை பெறுவதற்காக நீ உன் உண்மையான ஆசைகளை மேலோட்டமாக வைத்துக் கொண்டு, அங்கீகரிக்கும் ஆசைகளை நீ வெளிப் படுத்துகிறாய்.

**கே:** அது நீங்கள் சொல்வதுபோல் இருக்கலாம். ஆனாலும் அதுவும் மற்றொரு கோட்பாடுதான். உண்மையில் நான் எதை ஆசைப் படவேண்டும் என்று நினைக்கிறேனோ அதை ஆசைப்பட எனக்குச் சுதந்திரம் இருப்பதாக நான் உணரவில்லை. மேலும் நான் சரியாக ஆசைப்படுவதாகத் தோன்றும்போது நான் அதற்கேற்றவாறு செயல்படுவது இல்லை.

**ம:** எல்லாமுமே மனதின் வலிமையற்ற தன்மையினாலும் புத்தியின் பிரிவுபட்ட தன்மையினாலும்தான். ஒன்று சேர்த்து, உன் மனதை வலிமையுடையதாக்கு. அப்போது உன் எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகள், சொற்கள் மற்றும் செயல்கள் உன் மனோ திடத்தின் போக்கின்படி இயைந்து போவதைப் பார்ப்பாய்.

**கே:** மறுபடியும் பூரணத்தன்மைக்கான புத்திமதி! மனதை ஒருமுகப் படுத்துவதும் வலிமையாக்குவதும் சுலபமான காரியம் அல்ல. ஒருவர் எப்படி ஆரம்பிப்பது? எங்கேயிருந்து ஆரம்பிப்பது?

**ம:** நீ எங்கு இருக்கிறாயோ அங்கேயே ஆரம்பிக்கலாம். நீ இப்போதே இருக்கிறாய். நீ அதிலிருந்து வெளியே வர முடியாது.

**கே:** ஆனால் நான் இங்கு, இப்போது என்ன செய்ய முடியும்?

**ம:** உன் இருத்தலைப்பற்றி இப்போதே அறியலாம்.

**கே:** அவ்வளவுதானா?

**ம:**அவ்வளவுதான். அதற்கு மேல் ஒன்றும் இல்லை.

**கே:**என்னுடைய விழிப்பு நிலையிலும், கனவிலும் என்னைப் பற்றிய பிரக்ஞையுடன் இருக்கிறேன். அது ஒன்றும் எனக்கு மிகவும் உதவவில்லை.

**ம:** நீ உன் சிந்தனை, உணர்வுகள், செயல்கள் ஆகியவற்றைப் பற்றிய பிரக்ஞையுடன் இருப்பாய். உன் இருத்தலைப் பற்றிய பிரக்ஞை உனக்கு இருக்கவில்லை.

**கே:** நான் புதிதாக உள்ளே கொண்டுவரவேண்டிய தன்மை என்ன?

**ம:** தூய்மையான சாட்சித் தன்மை என்னும் மனோ பாவம், நிகழ்வுகளை அவற்றில் பங்கு கொள்ளாமல் கவனித்துக் கொண்டு இருப்பது.

**கே:** அது என்மேல் என்ன விளைவை ஏற்படுத்தும்?

**ம:** வலிமையற்ற மனம் என்பது புத்திசாலித்தனமும் புரிதலும் இல்லாமல் இருப்பதால் வருவது. புரிதலற்று இருப்பது அறியாமையின் விளைவு. தூய பிரக்ஞையோடு இருப்பதற்கு மனமார்ந்து முயற்சிப்பதால் உன் மனதை ஒன்றிணைத்து வலிமை அடையச் செய்வாய்.

**கே:** நான் என்ன நடக்கிறது என்பதைப் பற்றி முழுமையாக பிரக்ஞையுடன் இருக்கலாம். இருப்பினும் அதில் எந்தவிதத்திலும் தாக்கத்தை ஏற்படுத்த முடியாது.

**ம:** நீ சொல்வது தவறு. என்ன நடக்கிறதோ அது உன் மனதின் உருவகம். ஒரு வலிமையற்ற மனம் அது ஏற்படுத்தும் உருவகங்களைக் கட்டுப் படுத்த முடியாது. எனவே உன் மனதையும் அதன் உருவகங்களையும் பற்றிய விழிப்புடன் இரு. உனக்குத் தெரியாததை நீ கட்டுப் படுத்த முடியாது. மற்றபடி அறிவு வலிமையைக் கொடுக்கிறது. நடைமுறையில் இது மிகவும் சுலபமானது. உன்னைக் கட்டுப் படுத்திக்கொள்ள உன்னை அறி.

**கே:** நான் என்னை அடக்க முடியலாம். ஆனால் என்னால் உலகத்தின் தாறுமாறான தன்மையைக் கையாள முடியுமா?

**ம:** உன் மனம் உருவாக்கும் குழப்பத்தைத் தவிர வேறு குழப்பம் உலகத்தில் இல்லை. அது உன்னால் சுயமாக உருவாக்கப் பட்டது. எந்த அர்த்தத்தில் என்றால் அதன் மையத்தில், ஒருவர் மற்ற பொருட்களிலிருந்து வித்தியாசமான மற்றும் தனியான பொருள் என்னும் தவறான கருத்து உள்ளது. உண்மையில் நீ ஒரு பொருளும் அல்ல, தனியானவனும் அல்ல. நீ அளவில்லாத முடிவற்ற சாத்தியக் கூறு; தீராத சாத்தியக் கூறுடையவன். நீ இருப்பதால் எல்லாமும்

இருக்கின்றன. உன்னுடைய இருத்தலின் உருவாக்கக் கூடிய அளவற்ற வல்லமையின் ஒரு சிறு பகுதி வெளிப்பாடுதான் உலகம்.

**கே:** நான் முற்றிலும் சுகங்களின்மேல் கொண்ட ஆசையாலும், துக்கத்தின்மேல் உள்ள அச்சத்தாலும் தூண்டப்படுவதாகப் பார்க்கிறேன். என் ஆசைகள் எவ்வளவுதான் உன்னதமானவையாக இருந்தாலும், என் அச்சங்கள் நியாமானவையாக இருந்தாலும், சுகம் மற்றும் துக்கம் என்னும் இரு துருவங்களுக்கு நடுவேதான் என் வாழ்க்கை ஊசலாடுகிறது.

**ம:** துக்கம் மற்றும் சந்தோசம், ஆசை மற்றும் அச்சத்தின் ஆதாரத்திற்குச் செல். கூர்ந்து நோக்கு, ஆராய், புரிந்துகொள்ள முயற்சி செய்.

**கே:** ஆசையும், அச்சமும் உடல் மற்றும் மனதினால் ஏற்படுத்தப் படும் உணர்வுகளே. சுலபமாகக் கவனிக்கக் கூடிய வகையில் அவை அங்கு உள்ளன. ஆனால் அவை ஏன் அங்கு உள்ளன? நான் ஏன் சுகத்திற்கு ஆசைப் படவும், துக்கத்திற்கு அச்சப்படவும் வேண்டும்?

**ம:**சுகமும், துக்கமும் மனதின் நிலைகளே. நீ உன்னை மனமாக நினைக்கும் வரையில், அதாவது உடல்-மனமாக நினைக்கும் வரையில் நீ இது மாதிரியான கேள்விகளைக் கேட்கத்தான் செய்வாய்.

**கே:** நான் உடல் மட்டும் அல்ல என்று அறிந்துகொண்டால், ஆசையிலிருந்தும் அச்சத்திலிருந்தும் விடுபட்டு விடுவேனா?

**ம:** ஒரு உடலும், அதைக் காப்பாற்ற ஒரு மனமும் இருக்கும் வரையில் ஈர்ப்பும் எதிர்ப்பும் வேலை செய்யும். செயல்கள் நடக்கும் புற வெளியில் அவை இருக்கும். ஆனால் அவற்றிற்கும் உனக்கும் எந்த சம்பந்தமும் இருக்காது. உன் கவனம் வேறு எங்கோ ஒன்றில் குவிந்திருக்கும். நீ அச்சப்பட மாட்டாய்.

**கே:** இருப்பினும் அவை அங்கு இருக்கும். ஒருவர் எப்போதும் முழுமையாகச் சுதந்திரமாக இருக்கவே முடியாதா?

**ம:** நீ இப்போது கூட முழுமையாகச் சுதந்திரமானவன்தான். நீ கர்மா என்று சொல்வதுகூட வாழ வேண்டும் என்னும் உன் சொந்த

மன விருப்பத்தின் விளைவுதான். எங்கும் இருக்கின்ற இறப்பின் பயங்கரத்தை வைத்து இந்த மனத்திட்பம் எவ்வளவு வலிமையானது என்பதை நீ தீர்மானிக்கலாம்.

**கே:** மக்கள் அடிக்கடி மகிழ்ச்சியுடன் சாகிறார்கள்.

**ம:** மாற்றுவழி இறப்பை விட மோசமாக இருந்தால் மட்டுமே. ஆனால் அந்தமாதிரியான இறப்பதற்குத் தயாரான மனோ நிலை, வாழ்வதற்கான ஆசை உதிக்கும் அதே ஆதாரத்திலிருந்துதான் உருவாகிறது - உயிரை விட ஆழமான ஒரு ஆதாரம் அது. ஒரு வாழும் உயிரினமாக இருப்பது ஒன்றும் உச்ச முடிவான நிலை அல்ல- அதற்கு அப்பாற்பட்ட ஒன்று உள்ளது - அதைவிட மிக அருமையான, இருத்தலோ அல்லது இருத்தலற்றதோ அல்லாத, உயிர் வாழ்வதோ அல்லது உயிர் வாழாததோ அல்லாத ஒன்று, வினோதமான அல்லது புதிரான ஏதோ ஒன்று அது. காலம் மற்றும் வெளி(இடம்) ஆகியவற்றின் அளவான தன்மையைக் கடந்த, தூய்மையான பிரக்ஞை நிலை அது. மனம்-உடல் மட்டுமே ஒருவர் என்னும் மாயையான கருத்து கைவிடப்பட்டால் இறப்பு அதன் கொடூரத்தை இழந்து, வாழ்வதின் ஒரு பகுதியாகி விடும்.



# 31. கவனத்தைக் குறைத்து மதிப்பிடாதே

**கேட்பவர்:** உங்களைப் பார்க்கும்போது நீங்கள் எல்லோரையும் போல ஏழ்மையும், வயோதிகமும் தரும் எல்லாப் பிரச்சனை களையும் எதிர் கொள்ளும், குறைவான வசதியுடைய ஒரு ஏழை போல் தெரிகிறீர்கள்.

**மஹராஜ்:** நான் பணக்காரனாக இருந்தால் அது என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தும்? நான் என்னவோ அதுதான் நான். வேறு என்னவாக நான் இருக்க முடியும்? நான் பணக்காரனும் அல்ல, ஏழையும் அல்ல. நான் நான்தான்.

**கே:** இருப்பினும் நீங்கள் சந்தோசத்தையும், துக்கத்தையும் அனுபவிக்கிறீர்கள்.

**ம:** இவற்றை நான் விழிப்புணர்வில் அனுபவிக்கிறேன். ஆனால் நான் விழிப்புணர்வும் அல்ல, அதன் உள்ளடக்கமும் அல்ல.

**கே:** நம் உண்மையான இருத்தலில் நாம் அனைவரும் சமமே என்று நீங்கள் சொல்கிறீர்கள். உங்கள் அனுபவம் எங்கள் அனுபவத் திலிருந்து எதனால் மிகவும் வேறுபடுகிறது?

**ம:** என் ப்ரத்தியட்சமான அனுபவம் வித்தியாசமானது அல்ல. என் மதிப்பீடும் மனப்பாங்கும்தான் வித்தியாசமானது. நீ பார்ப் பதைப் போலவே நானும் அதே உலகத்தைத்தான் பார்க்கிறேன். ஆனால் அதே விதத்தில் அல்ல. அதைப் பற்றி ரகசியமானது ஒன்றும் இல்லை. தன்னைப் பற்றிய கருத்தைக் கொண்டுதான் ஒவ்வொரு வரும் உலகத்தைப் பார்க்கிறார்கள். நீ உன்னை எவ்வாறு புரிந்து கொள்கிறாயோ அவ்வாறுதான் உலகத்தையும் பார்ப்பாய். நீ உலகத்திலிருந்து தனிப்பட்டவன் என்று உன்னைக் கருதினால், உலகம் உன்னிலிருந்து தனிப்பட்டதாகத்தான் தோன்றும்.

அப்போது நீ ஆசையையும் அச்சத்தையும் அனுபவிப்பாய். நான் என்னிலிருந்து உலகத்தைத் தனித்துப் பார்ப்பது இல்லை. அதனால் எனக்கு ஆசைப் படவோ, அச்சப் படவோ எதுவும் இல்லை.

**கே:** உலகத்திற்கு நீங்கள் ஒரு ஒளிவிளக்காக இருக்கிறீர்கள். ஒவ்வொருவரும் அப்படி அல்ல.

**ம:** நான் என்னை உள்ளவாறு அறிந்து கொண்டதைத் தவிர எனக்கும் மற்றவர்களுக்கும் எந்த விதமான வித்தியாசமும் இல்லை. நான் எல்லாமுமே. எனக்கு அது உறுதியாகத் தெரியும்; உனக்குத் தெரியவில்லை.

**கே:** எனவே நாம் வித்தியாசப்படுகிறோம்.

**ம:** இல்லை. நாம் வித்தியாசப்படுவது இல்லை. வித்தியாசம் மனதில் மட்டும் தான் உள்ளது. அதுவும் தற்காலிகமாகத்தான். நான் உன்னைப் போலத்தான் இருந்தேன். நீயும் என்னைப் போல் ஆகலாம்.

**கே:** கடவுள் பல்வேறு தன்மைகள் கொண்ட உலகத்தைப் படைத்துள்ளார்.

**ம:** பல்வேறு தன்மைகள் உனக்குள் மட்டுமே உள்ளன. உன்னை நீ உள்ளவாறு பார். அப்போது உலகத்தை அது உள்ளவாறு பார்ப்பாய் - மெய்மையின் ஒரே தொகுப்பாக, பகுக்க முடியாததாக, விவரிக்க முடியாததாக. உன் உருவாக்கும் திறன் அதன்மேல் ஒரு படத்தை விழச் செய்கிறது. உன் எல்லாக் கேள்விகளும் அந்தப் படத்தைக் குறித்தே உள்ளன.

**கே:** ஒரு திபெத்திய யோகி, கடவுள் ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக இந்த உலகத்தைப் படைத்து, ஒரு திட்டப்படி அதை இயக்குகிறார் என்று எழுதி உள்ளார். அந்தக் காரணம் நல்லது. திட்டம் புத்திசாலித்தனமானது.

**ம:** இவை எல்லாம் தற்காலிகமானவை. நான் சாசுவதமானதைப் பற்றிப் பேசுகிறேன். கடவுளும், அதன் பிரபஞ்சங்களும் வரலாம், போகலாம். அவதாரங்கள் ஒன்றை ஒன்று முடிவில்லாமல் தொடரலாம். முடிவில் நாம் ஆதாரத்திற்கே திரும்புவோம். நான்

எல்லாக் கடவுள்களுக்கும், அவற்றின் இருந்த, இருக்கின்ற, இருக்கப் போகின்ற பிரபஞ்சங்களுக்குமான காலத்திற்கு அப்பாற்பட்ட ஆதாரத்தைப் பற்றித்தான் பேசுகிறேன்.

**கே:** நீங்கள் அவை எல்லாவற்றையும் அறிவீர்களா? நீங்கள் அவற்றை ஞாபகம் வைத்துள்ளீர்களா?

**ம:** சில சிறுவர்கள் விளையாட்டாக ஒரு நாடகத்தை அரங்கேற்றும் போது, அதில் பார்ப்பதற்கும், ஞாபகம் வைத்துக் கொள்ளவும் என்ன இருக்கிறது?

**கே:** ஏன் மனிதகுலம் பாதி ஆணாகவும், பாதி பெண்ணாகவும் உள்ளது?

**ம:** அவர்களின் மகிழ்ச்சிக்காக. அவர்களுக்கிடையே சந்தோசம் இருக்க, வெளிப்படாதது (அவியக்தா) வெளிப்பட்டதாகிறது (வியக்தாவாகிறது). என்னுடைய குருவின் கருணையினால் நான் வெளிப்படாததையும், வெளிப்பட்டதையும் சமமான பார்வையில் பார்க்கமுடிகிறது. இரண்டுமே எனக்கு ஒன்றுதான். வாழ்க்கையில் வெளிப்பட்டது வெளிப்படாததுடன் கலந்துவிடுகிறது.

**கே:** எப்படி வெளிப்பட்டது வெளிப்படாததிலிருந்து வெளிப்படுகிறது?

**ம:** இரண்டுமே ஒரே மெய்மையின் இயல்புகள்தான். ஒன்று மற்றொன்றிற்கு முந்தையது என்று சொல்வது சரி அல்ல. இந்தக் கருத்துக்கள் எல்லாம் விழித்த நிலையைச் சேர்ந்தவை.

**கே:** எது விழித்த நிலையைக் கொண்டுவருகிறது?

**ம:** எல்லாப் படைப்புகளுக்கும் வேராக ஆசை உள்ளது. ஆசையும் கற்பனையும் ஒன்றை ஒன்று வளர்த்தவும், ஸ்திரப் படுத்தவும் செய்கின்றன. நான்காம் நிலை (துரியா) என்பது தூய சாட்சித்தன்மை, பற்றுதலற்ற பிரக்ஞை, உள்ளடக்கமற்றது, மற்றும் நிசப்தமானது. அது, தனக்குள் எது இருந்தாலும் அதனால் பாதிக்கப் படாத வெளியைப் போன்றது. உடல் மற்றும் மனம் சார்ந்த தொல்லைகள் அதைச் சென்று அடைய மாட்டா - அவை 'அங்கு' புறத்தில் இருக்கும். ஆனால் சாட்சித் தன்மை எப்போதும் 'இங்கு' இருக்கும்.

**கே:** எது மெய்யானது - புறப்பொருட்களா அல்லது அகம் சார்ந்தவையா? நான் புறப் பொருள் சார்ந்த பிரபஞ்சம் தான் மெய்யானது என்றும், என் அகம் சார்ந்த உளப்பாங்கு மாறக் கூடியது மற்றும் தற்காலிகமானது என்றும் நம்புகிறேன். நீங்கள் உள்ளே உள்ள அகத்தின் தன்மையை மெய்யானதாகவும், ஸ்திரமான, புற உலகத்தின் மெய்த்தன்மையை மறுப்பதாகவும் தோன்றுகிறது.

**ம:** அகம் சார்ந்தது மற்றும் புறம் சார்ந்தது - இரண்டுமே மாறக் கூடியவை மற்றும் கடந்து போகக் கூடியவை. அவற்றில் எதுவும் மெய்யானது இல்லை. கடந்து போகக் கூடியதில் இருக்கும், ஒவ்வொரு அனுபவத்திலும் இருக்கும் மாறாத காரணியான, நிலையானதைக் கண்டு பிடி.

**கே:** இந்த மாறாத காரணி என்ன?

**ம:** நான் அதற்குப் பல்வேறு பெயர்களைக் கொடுப்பதும், அதைப் பல வழிகளில் சுட்டிக் காட்டுவதும், பார்க்கும் திறன் உனக்கே இருந்தால் ஒழிய பெரிய அளவில் உனக்கு உதவாது. நான் எவ்வளவுதான் ஆர்வத்துடன் சுட்டிக் காட்டிப் பார்க்கச் சொன்னாலும், நீ பார்வை மங்கிய மனிதனாக இருந்தால் மரத்தில் இருக்கும் கிளியைப் பார்க்க முடியாது. அதிகபட்சமாக உன்னால் என் சுட்டிக் காட்டும் விரலைத் தான் பார்க்க முடியும். முதலில் உன் பார்வையைச் சரிப் படுத்து. வெறுமனே விழிக்காமல் பார்க்கக் கற்றுக் கொள். அப்போது நீ கிளியைக் காண்பாய். அத்துடன் உனக்குப் பார்க்க உண்மையான ஆர்வம் இருக்க வேண்டும். மெய்யறிவைப் பெற உனக்குத் தெளிவும், முனைப்பும் தேவை: மனம் மற்றும் இதயத்தின் முதிர்ச்சி தேவை. அவை, நீ எவ்வளவு தான் சிறிய அளவில் புரிந்து கொண்டு இருந்தாலும் அவற்றைத் தினசரி வாழ்க்கையில் ஈடுபாட்டுடன் செயல்படுத்துவதால் வருபவை. யோகாவில் விட்டுக் கொடுத்தல் என்பது இல்லை.

நீ பாவ காரியம் செய்ய விரும்பினால், முழுமனதுடனும், வெளிப்படையாகவும் செய். மெய்யார்வமிக்க சாதுக்களுக்கு நற்செயல்கள் எப்படியோ அப்படி பாவகாரியங்களும் மெய்யார்வ மிக்க பாவிகளுக்குக் கற்றுக் கொடுக்கும். பாவத்தையும், புண்ணி

யத்தையும் கலப்பதுதான் பேரழிவானது. விட்டுக் கொடுத்தல் போல வேறு எதுவும் தடை செய்யாது. ஏனெனில் அது ஈடுபாடு இல்லாததைக் காண்பிக்கிறது. ஈடுபாடு இல்லாமல் எதுவும் செய்ய முடியாது.

**கே:** நான் சிக்கனத்தை அங்கீகரிக்கிறேன். ஆனால் நடைமுறையிலோ ஆடம்பரமாக வாழ்கிறேன். சுகங்களைத் நாடுவதும், துக்கத்தைத் தவிர்ப்பதுமான பழக்கம் என்னுள் ஆழமாகப் பதிந்திருப்பதால் என் எல்லா நல்ல குறிக்கோள்களும், கோட்பாடுகள் என்னும் அளவில் உயிருடன் இருக்கின்றன. ஆனால் நடைமுறை வாழ்க்கையில் அவை இடம் பிடிப்பதில்லை. நான் மெய்யார்வத்துடன் இல்லை என்று என்னிடம் சொல்வது எந்தப் பயனையும் தராது. ஏனெனில் மெய்யார்வமுள்ளவனாக என்னை எப்படி மாற்றுவது என்று எனக்குத் தெரியாது.

**ம:** நீ மெய்யார்வமுடையவனோ, மெய்யார்வமற்றவனோ அல்ல. மனோநிலைகளுக்குப் பெயரிடுவது என்பது நீ ஒத்துக் கொள்வதையோ அல்லது ஒத்துக் கொள்ளாததையோ வெளிப் படுத்தத்தான் பயன்படும். பிரச்சினை உன்னுடையது அல்ல. அது உன் மனதினுடையது மட்டுமே. மனதோடு உடன்படாமல் இருப்பதிலிருந்து ஆரம்பி. நீ மனம் அல்ல. அதன் பிரச்சனைகள் உன்னுடையவை அல்ல என்று தீர்மானமாக உன்னை ஞாபகப்படுத்திக் கொள்.

**கே:** 'நான் மனம் அல்ல, அதன் பிரச்சனைகளை நான் பொருட்படுத்துவது இல்லை' என்று எனக்குள் சொல்லிக் கொண்டு இருக்கலாம். ஆனால் மனமும் அதன் பிரச்சனைகளும் அப்படியே இருக்கின்றன. நான் போதுமான அளவிற்குத் திட நம்பிக்கையுடன் இல்லாததால்தான் இப்படி என்றும், நான் மேலும் திட நம்பிக்கை யுடன் இருக்க வேண்டும் என்றும் தயவு செய்து சொல்லாதீர்கள். அது எனக்குத் தெரியும், அதை நான் ஒப்புக் கொள்கிறேன். உங்களைக் கேட்பதெல்லாம் அதை எப்படிச் செய்வது என்பதுதான்.

**ம:** நீ அதைக் கேட்கவாவது செய்கிறாய்! ஆரம்பிப்பதற்கு இதுவே நல்லது. சிந்தித்துக் கொண்டே இரு. ஆராய், ஒரு வழியைக்

கண்டுபிடிக்க மெய்யார்வத்துடன் இரு. உன் இருத்தலைப் பற்றிய மாறாத கவனத்துடன் இரு. உன் மனதைக் கவனி, முழுக் கவனத்தையும் அதற்குக் கொடு. பலன்களை விரைவில் அடையப் பார்க்காதே; உன் கவனத்திற்குள் வரக்கூடிய எதுவும் இல்லாமல் இருக்கலாம். உனக்குத் தெரியாமலே உன் மனப்பாங்கு ஒரு மாற்றத்திற்கு உட்படும். உன் சிந்தனையில் அதிகத் தெளிவு இருக்கும், உன் உணர்ச்சிகளில் அதிக உதவும் தன்மை இருக்கும், உன் செயல்களில் தூய்மை இருக்கும். இவற்றை நீ குறிக்கோளாகக் கொள்ள வேண்டியதில்லை. நீ எதிர்பார்க்காத மாற்றங்கள் உன் கவனத்திற்குள் வரும். நீ இப்போது இருக்கும் நிலை உன் கவனமில்லாததின் விளைவு. உனக்குள் நிகழும் மாற்றங்கள் உன் கவனத்தினால் வருபவை.

**கே:** *வெறும் கவனம் என்னும் இந்த ஆராய்ச்சி எப்படி எல்லா மாற்றங்களையும் ஏற்படுத்தும்?*

**ம:** இதுவரையிலும் உன் வாழ்க்கையில் தாமச குணமும், ராஜச குணமும் மேலோங்கி இருந்தன. கவனம், உஷார்த்தன்மை, பிரக்ஞை, தெளிவு, உயிரோட்டம், வீரியம் ஆகிய யோகாவினால் சாத்வீகத்துடன் உன் முழு ஒருமைத்தன்மை ஏற்படும். தாம சத்தையும் ராஜசத்தையும் நேர்படுத்தி, வலுவிழக்கச் செய்வதும், சுயத்தின் உண்மையான தன்மைக்கு ஏற்றவாறு நபர்த்தன்மையைச் சீரமைப்பதும் சாத்வீகத்தின் இயல்பு. சாத்வீகம், சுயத்தின் விழிப்புடனும், கீழ்ப்படிதலுடனும் எப்போதும் இருக்கும் நம்பகமான பணியாள்.

**கே:** *அதை நான் வெறுமனே கவனத்துடன் இருந்தால் அடைவேனா?*

**ம:** கவனத்தைக் குறைத்து மதிப்பிடாதே. கவனம் என்றால் மனமார்ந்த ஈடுபாடு, அன்பு, அறிந்துகொள்தல், கண்டுபிடித்தல் அல்லது உருவாக்குதலைக் குறிக்கும். அதற்கு நீ உன் இதயத்தை அதில் ஊற்ற வேண்டும். அதுதான் முழுக் கவனம் என்பது. எல்லா ஆசீர்வாதங்களும் அதிலிருந்து ஊற்றெடுக்கும்.

**கே:** *நீங்கள் 'நான்' என்பதில் கவனத்தைச் செலுத்தச் சொல்கிறீர்கள். இதுவும் கவனத்தின் ஒரு வடிவமா?*

**ம:**ஆமாம். வேறு என்ன? உன் சிதறாத கவனத்தை உன் வாழ்க்கையின் மிக முக்கியமான 'நான்' என்பதின் மேல் செலுத்து. உன் தனிப்பட்ட பிரபஞ்சத்திற்கு நீதான் மையம். மையத்தை அறியாமல் வேறு எதை நீ அறியமுடியும்?

**கே:** ஆனால் நான் எப்படி என்னை அறியமுடியும்? என்னை அறிய நான் அதிலிருந்து தனித்து இருக்க வேண்டும். ஆனால் என்னிலிருந்து தனித்து இருப்பது நான் ஆக இருக்க முடியாது. எனவே என்னை நான் அறியமுடியாதுபோல் தோன்றுகிறது. என்னை என்னவாக நான் எடுத்துக்கொள்கிறேனோ அப்படித்தான் அறிய முடியும்.

**ம:** மிகச் சரி. எப்படி உன் முகத்தைப் பார்க்க முடியாமல் அதன் பிரதிபலிப்பை மட்டுமே கண்ணாடியில் பார்க்க முடியுமோ அப்படி, தூய பிரக்ஞை என்னும் கறை படாத கண்ணாடியில் பிரதிபலிக்கும் உன் பிம்பத்தை மட்டுமே நீ பார்க்க முடியும்.

**கே:** நான் எப்படி அந்தக் கறைபடாத கண்ணாடியைப் பெறுவது?

**ம:** கறைகளை நீக்குவதன் மூலம்தான். கறைகளைத் தேடிப் பார்த்து அவற்றை நீக்கு. அதுதான் விவேக வைராக்கியம். பண்டைக் காலத்து போதனைகள் மிகவும் செல்லுபடி ஆகக் கூடியவை.

**கே:** பார்ப்பது மற்றும் நீக்குவது என்பது என்ன?

**ம:** தூய கண்ணாடியின் இயல்பு நீ அதைப் பார்க்க முடியாது என்பதே. கறைகளை மட்டுமே உன்னால் பார்க்க முடியும் அதிலிருந்து விலகி விடு, அதை விட்டு விடு, அது தேவை இல்லாதது என்று அறிந்து கொள்.

**கே:** பார்க்கக் கூடிய எல்லாமுமே கறைகளா?

**ம:** ஆமாம். எல்லாமும் கறைகளே.

**கே:** முழு உலகமுமே கறையா?

**ம:** ஆம், அப்படித்தான்.

**கே:** எவ்வளவு பயங்கரம்? அப்படியானால் இந்த உலகம் மதிப்பற்றதா?

**ம:** அது மிகுந்த மதிப்பு உடையது. அதற்கு அப்பால் போவதன் மூலம் நீ உன்னை அறிவாய்.

**கே:** அது எடுத்தவுடன் ஏன் முதலில் வரவேண்டும்?

**ம:** அது முடியும்போது அதை நீ அறிவாய்.

**கே:** அது எப்போதாவது முடியுமா?

**ம:** ஆம்; உன்னைப் பொருத்தவரையில்.

**கே:** அது எப்போது ஆரம்பித்தது?

**ம:** தற்போது.

**கே:** அது எப்போது முடியும்?

**ம:** தற்போது.

**கே:** அது தற்போது முடியவில்லை.

**ம:** நீ அதற்கு விடவில்லை.

**கே:** நான் அதை விட வேண்டுகிறேன்.

**ம:** நீ விடுவதில்லை. உன் வாழ்க்கை முழுவதும் அதனுடன் பிணைக்கப் பட்டுள்ளது. உன் கடந்தகாலம் மற்றும் எதிர் காலம், உன் ஆசைகள் மற்றும் அச்சங்கள் அனைத்தும் இந்த உலகத்தில் வேர் கொண்டு உள்ளன. உலகம் இல்லாமல் நீ எங்கே இருக்கிறாய்? நீ யார்?

**கே:** ஆனால் அதைச் சரியாகக் கண்டுபிடிக்கத்தான் நான் வந்துள்ளேன்.

**ம:** நான் உனக்கு இதைத்தான் சரியாகச் சொல்கிறேன்: உனக்கு அப்பாற்பட்டதில் ஸ்திரமாக இரு. அப்போது எல்லாமும் தெளிவாகவும், சுலபமாகவும் ஆகும்.

# 32. உயிர்வாழ்தலே உச்ச உயர்வான குரு

**கேட்பவர்:** நாங்கள் இருவரும் தூர தேசங்களிலிருந்து வருகிறோம். எங்களில் ஒருவர் பிரிட்டனைச் சேர்ந்தவர். மற்றவர் அமெரிக்கர். நாங்கள் பிறந்த பிரதேசங்கள் வீழ்ந்துகொண்டு இருக்கின்றன. நாங்கள் இளைஞர்கள். ஆதலால் கவலைப் படுகிறோம். வயதானவர்கள் தாங்கள் இயல்பாக இறக்கும் நம்பிக்கையுடன் இருக்கிறார்கள். ஆனால் இளைஞர்களுக்கு அந்த நம்பிக்கை இல்லை. எங்களில் சிலர் கொல்வதை மறுக்கலாம். ஆனால் யாருமே மறுப்பதால் கொல்லப்படுவதைத் தடுக்க முடியாது. எங்கள் வாழ்நாளில் இந்த உலகத்தைச் சரி செய்ய முடியுமா?

**மஹராஜ்:** இந்த உலகம் அழிந்துவிடும் என்று எது உன்னை நினைக்க வைக்கிறது?

**கே:** அழிப்பதற்கான ஆயுதங்கள் நம்ப முடியாத அளவிற்குச் சக்தி வாய்ந்தவைகளாக ஆகிவிட்டன. கூடவே நம் உற்பத்தித் திறன் இயற்கையையும், கலாச்சார, சமுதாய மதிப்பீடுகளையும் அழிப்பதாகவே உள்ளது.

**ம:** நீ தற்காலத்தைப் பற்றிப் பேசுவதாகத் தெரிகிறது. இவ்வாறு தான் எப்போதும் எல்லா இடத்திலும் இருந்ததா? ஆனால் மோசமான சூழ்நிலை தற்காலிகமானதாகவும் அந்தந்தப் பகுதிகளைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். அவை முடிந்துவிட்டால் மறக்கப்பட்டு விடும்.

**கே:** வரக்கூடிய பேரழிவு நம்பமுடியாத அளவிற்குப் பெரியது. நாம் ஒரு வெடிக்கும் சூழ்நிலைக்கு மத்தியில் வாழ்வதுபோல் இருக்கிறது.

**ம:** ஒவ்வொரு மனிதனும் தனியாகத் துன்பப்படுகிறான்; தனியாகச் சாகிறான். எண்ணிக்கைகள் பொருட்டல்ல மற்றும் இரண்டாம் பட்சமானவை. ஒருவர் சாகும் பொது இருக்கும் சாவின் அளவு தான் ஒரு லட்சம் பேர் சாகும் போதும் இருக்கும்.

**கே:** இயற்கை லட்சக் கணக்கானவர்களைக் கொல்கிறது. ஆனால் அது என்னை மிரட்டுவதில்லை. அது அர்த்தமற்றோ அல்லது புதிர்த் தன்மையுடனோ இருக்கலாம். ஆனால் கொடூரம் இருக்காது. என்னை எது மிரளச் செய்கிறது என்றால் மனிதனால் உருவாக்கப்பட்ட துன்பங்கள், அழிவுகள், சிதைவுகள்தான். இயற்கை அதன் ஆக்கத்திலும் அழிப்பிலும் பெருந்தன்மையாக இருக்கிறது. ஆனால் மனிதனின் செயல்களில் பைத்தியக்காரத் தனமும், கீழ்த்தரமும் இருக்கின்றன.

**ம:** சரி. எனவே, துன்பமும் இறப்பும் உன் பிரச்சனை இல்லை. ஆனால் அதன் அடியில் உள்ள பைத்தியக்காரத்தனமும், கீழ்த்தரமும் தான் உன் பிரச்சனை. கீழ்த்தரமும் பைத்தியக்காரத்தனத்தின் ஒரு வடிவம் அல்லவா? பைத்தியக்காரத்தனம் புத்தியின் தவறான உபயோகத்தால் வருவது அல்லவா? மனித குலத்தின் பிரச்சனைகள் புத்தியின் இந்தத் தவறான உபயோகத்தால் வருபவை. இயற்கை மற்றும் பரம்பொருளின் பொக்கிஷங்கள் அனைத்தும் தன் புத்தியைச் சரியாக உபயோகிக்கும் மனிதனுக்குத் திறந்திருக்கும்.

**கே:** புத்தியைச் சரியாக உபயோகிப்பது என்பது என்ன?

**ம:** அச்சமும் பேராசையும் புத்தியைத் தவறாக உபயோகிக்க வைக்கின்றன. புத்தியைச் சரியாக உபயோகிப்பது என்பது அதை அன்பிற்கும், உயிருக்கும், உண்மைக்கும், அழகிற்கும் சேவை புரியப் பயன் படுத்துவதில் உள்ளது.

**கே:** சொல்வது செய்வதை விட எளிது. உண்மை, மனிதகுலம், உன்னதமான ஆசீர்வாதம் ஆகியவற்றின் மேல் அன்பு கொள்வது என்பது எவ்வளவு பெரிய செயல்! இந்த உலகத்தைச் சரி செய்ய நமக்கு அவை மிக அதிக அளவில் தேவை. யார் அதை நமக்குக் கொடுப்பார்கள்?

**ம:** மெய் மற்றும் அன்பு, புத்திசாலித்தனம் மற்றும் உன்னதமான ஆசீர்வாதம் ஆகியவற்றை கடவுள் மற்றும் மனிதனை மன்றாடி ஒரு முடிவற்ற காலம் வரை நீ எங்கேயாவது தேடலாம் - எல்லாமும் வீண். நீ உனக்கு உள்ளே தேட வேண்டும்; உன்னிடமிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும். இதுதான் கடுமையான விதி. முகத்தை மாற்றாமல் பிம்பத்தை மாற்ற முடியாது. உன் உலகம் உன்னுடைய பிரதிபலிப்புதான் என்பதை முதலில் அறிந்துகொண்டு பிம்பத்தில் குறை கண்டு பிடிப்பதை நிறுத்து. உன்னைக் கவனி. மனதளவிலும் உணர்வளவிலும் உன்னைச் சரி செய்வதைத் தொடர்ந்து பௌதீக அளவில் உலகம் தானாகச் சரியாகும். பொருளாதார, சமூக, அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றி நிறையப் பேசுகிறாய். சீர்திருத்தங்களை விட்டுவிடு. சீர்திருத்துபவரை முதலில் கவனி. முட்டாளாகவும், பேராசையுடனும், கொடூரமாகவும் இருக்கும் மனிதன் எந்த மாதிரியான உலகத்தைப் படைக்க முடியும்?

**கே:** நாம் இதயம் மாற வேண்டும் என்று காத்திருந்தால் முடிவற்ற காலம் காத்திருக்க வேண்டும். உங்களுடையது பூரணமாகச் சரியாக இருக்கும் தன்மைக்கான ஆலோசனை. அதுவே ஏமாற்றத்திற்கான ஆலோசனையும் கூட. நாம் எல்லோரும் பூரணமாகச் சரியாக இருந்தால் உலகமும் பூரணமாகச் சரியாக இருக்கும் என்பது என்ன ஒரு உபயோகமில்லாத உண்மைத்தத்துவம்!

**ம:** நான் அவ்வாறு சொல்லவில்லை. உன்னை மாற்றுவதற்கு முன்னால் உலகத்தை மாற்ற முடியாது என்றுதான் நான் சொன்னேன். ஒவ்வொருவரையும் மாற்றுவதற்கு முன்னால் என்று நான் சொல்லவில்லை. மற்றவர்களை மாற்றுவது என்பது தேவையும் அல்ல, மாற்றவும் முடியாது. உன்னை மாற்றிக் கொண்டால் வேறு எந்த மாற்றமும் தேவை இல்லை என்று கண்டு கொள்வாய். திரைப் படத்தை மாற்ற நீ படச்சுருளைத்தான் மாற்றுவாய். சினிமாத் திரையைத் தாக்க மாட்டாய்.

**கே:** நீங்கள் எப்படி உங்களைப் பற்றி இவ்வளவு உறுதியாக இருக்கிறீர்கள்? நீங்கள் சொல்வது உண்மை என்று எப்படி உங்களுக்குத் தெரியும்?

**ம:** நான் உறுதியாக இருப்பது என்னைப் பற்றி அல்ல. உன்னைப் பற்றித் தான் உறுதியாக இருக்கிறேன். உனக்கு எது தேவை என்றால் உனக்கு உள்ளே மட்டுமே கண்டுபிடிக்கக் கூடியதை வெளியில் தேடுவதை நிறுத்துவதே. நீ செயல்படுவதற்கு முன் உன் பார்வையைச் சரிப்படுத்து. நீ தீவிரமான குழம்பிய அறிவால் துன்பப்படுகிறாய். உன் மனதைத் தெளிவாக்கு, இதயத்தைத் தூய்மைப்படுத்து, வாழ்க்கையைப் புனிதப்படுத்து - இதுதான் உன் உலகத்தை மாற்ற விரைவான வழி.

**கே:** நிறைய ஞானிகளும் துறவிகளும் வாழ்ந்து மறைந்திருக் கிறார்கள். அவர்கள் என் உலகத்தை மாற்றவில்லை.

**ம:** அவர்களால் எப்படி முடியும்? உன் உலகம் அவர்களுடையது அல்ல. அவர்களுடைய உலகம் உன்னுடையதாக முடியாது..

**கே:** கண்டிப்பாக எல்லோருக்கும் பொதுவான ஒரு நிதர்சனமான உலகம் உள்ளது.

**ம:** பொருள்களாலும், சக்தியாலும் ஆன உலகமா? அப்படியே பொருள்களாலும், சக்திகளாலும் ஆன பொதுவான உலகம் இருந்தாலும் அது நாம் வாழும் உலகம் அல்ல. அப்படிப்பட்ட உலகத்தைப் பற்றி நாம் கவலைப்படுவதில்லை. நம்முடையது உணர்ச்சிகள் மற்றும் கருத்துக்கள், ஈர்ப்பு மற்றும் எதிர்ப்புகள், மதிப்பீடுகள், குறிக்கோள்கள் மற்றும் ஊக்கப்படுத்துதல்கள் ஆகியவற்றாலான ஒரு மனோ உலகம் ஆகும். உயிரியல் தன்மைப் படி நமக்குச் சிறிதளவே தேவை. நமது பிரச்சனைகள் வேறுவித மானவை. ஆசைகளாலும், அச்சங்களாலும் தவறான கருத்துக் களாலும் ஏற்படும் பிரச்சனைகளை மனதளவில்தான் தீர்க்க முடியும். உன் மனதை நீ வெல்ல வேண்டும். அதற்கு நீ அதைக் கடந்து அப்பால் செல்ல வேண்டும்.

**கே:** மனத்தைக் கடந்து அப்பால் செல்வது என்றால் என்ன அர்த்தம்?

**ம:** நீ உன் உடலைக் கடந்து அப்பால் சென்றிருக்கிறாய் அல்லவா? நீ ஜீரணிப்பதையும், இரத்த ஓட்டத்தையும், கழிவுகளின் வெளியேற்றத்தையும் உன்னிப்பாகக் கவனிப்பது இல்லை

அல்லவா? இவையெல்லாம் தானாக நடைபெறுகின்றன. அதே போன்று மனம், கவனிப்பு தேவை இல்லாமல் தானாக இயங்க வேண்டும். மனம் பழுதில்லாமல் இயங்கினால் ஒழிய இது சாத்தியமில்லை. நாம் பெரும்பாலான நேரங்களில் மனம் மற்றும் உடல் பற்றிய பிரக்ஞையுடன் இருக்கிறோம். ஏனெனில் அவை இடைவிடாமல் உதவியைக் கேட்கின்றன. உடலும் மனமும் கவனிப்பு தேவை என்பதற்காக அலறுவதுதான் வலியும் துன்பமும். உடலைக் கடந்து அப்பால் போவதற்கு நீ ஆரோக்யமாக இருக்க வேண்டும். மனத்தைக் கடந்து அப்பால் போவதற்கு உன் மனம் முற்றிலும் சரியாக இயங்க வேண்டும். நீ ஒரு சிக்கலைப் பின்னால் வைத்துக் கொண்டு கடந்து போக முடியாது. அந்தச் சிக்கல் உன்னை வீழ்த்தி விடும். 'குப்பைகளை நீக்கு' என்பது பிரபஞ்ச விதி. சரியான விதியும் கூட.

**கே:** நீங்கள் எப்படி மனதைக் கடந்து சென்றீர்கள் என்று நான் கேட்கலாமா?

**ம:** என் குருவின் அருளினால்.

**கே:** அவர் அருள் என்ன வடிவத்தை எடுத்தது?

**ம:** சத்தியம் எதுவோ அதை எனக்குச் சொன்னார்.

**கே:** அவர் என்ன சொன்னார்?

**ம:** நான் உச்ச உயர்வான மெய்மை ( நான் ப்ரம்மம்) என்று அவர் சொன்னார்.

**கே:** அதற்கு நீங்கள் என்ன செய்தீர்கள்?

**ம:** நான் அவரை நம்பினேன். அதை சொன்னதை உறுதியாக ஞாபகம் வைத்துக் கொண்டு இருந்தேன்.

**கே:** அவ்வளவுதானா?

**ம:** ஆமாம், அவரை ஞாபகம் வைத்திருந்தேன். அவர் சொன்னதை ஞாபகம் வைத்திருந்தேன்.

**கே:** இதுவே போதுமா?

**ம:** எனக்கு வேறு எதன்மீதும் விருப்பம் இல்லை. நான் உறுதியான ஞாபகத்தை வைத்திருந்தேன். என் மனம் எப்போதும் குரு மற்றும் அவருடைய மந்திரத்தின் ஞாபகத்தில் மூழ்கி இருந்தது.

**கே:** இதுவே போதும் என்று சொல்கிறீர்களா?

**ம:** மேலும் என்ன செய்ய வேண்டி இருக்கிறது? குருவையும், அவர் வார்த்தைகளையும் ஞாபகம் வைத்திருப்பது என்பது மிகப் பெரிய காரியம். உனக்கு என்னுடைய அறிவுரை இதைவிடச் சுலபமானது - வெறுமனே உன்னை ஞாபகம் வைத்துக் கொள். 'நான்' என்னும் ஞாபகம் உன் மனத்தைச் சரிப் படுத்தவும், அதைக் கடந்து செல்லவும் போதும். சிறிதளவு நம்பிக்கையைக் கொண்டிரு. நான் உன்னைத் தவறாக வழிநடத்த மாட்டேன். எதற்காக நான் அப்படிச் செய்ய வேண்டும்? உன்னிடமிருந்து எனக்கு ஏதாவது தேவையா? நீ நன்றாக இருக்க வேண்டும் என்று நான் வாழ்த்துகிறேன். அதுதான் என் இயல்பு. நான் உன்னை ஏன் தவறாக வழிநடத்த வேண்டும்?

ஒரு ஆசையை நிறைவேற்ற உன் மனதை அதன் மேல் வைத்திருக்க வேண்டும் என்று பொதுஅறிவு கூட உனக்குச் சொல்லும். உன் சத்ய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் உன் இருத்தலைப் பற்றிய ரகசியங்கள் வெளிப்படும் வரை உன் மனதில் உன்னை எப்போதும் வைத்திருக்க வேண்டும்.

**கே:** தன்னைப் பற்றிய நினைப்பு ஏன் ஒருவருக்கு மெய்யறிதலைக் கொண்டுவர வேண்டும்?

**ம:** ஏனெனில் அவை ஒரே நிலையின் இரு தன்மைகள். தன்னைப் பற்றிய நினைப்பு மனதில் உள்ளது. மெய் அறிதல் மனதைக் கடந்தது. கண்ணாடியில் உள்ள பிம்பம் கண்ணாடிக்கு அப்பால் உள்ள முகத்தினுடையது.

**கே:** மிக்க நன்று. ஆனால் அதன் பிரயோஜனம் என்ன?

**ம:** மற்றவர்களுக்கு உதவ ஒருவர் தனக்கு உதவி தேவைப் படாமல் இருக்க வேண்டும்.

**கே:** எனக்குத் தேவைப்படுவது நான் சந்தோசமாக இருக்க வேண்டும் என்பதே.

**ம:** மற்றவர்களுக்கு சந்தோசத்தை ஏற்படுத்த சந்தோசமாக இரு.

**கே:** மற்றவர்கள் தங்களை அவர்களே பார்த்துக் கொள்ளட்டும்.

**ம:** நீ தனியானவன் அல்ல. உன்னால் பகிரப் பட முடியாத சந்தோசம் செயற்கைத்தனமானது. பகிர்ந்து கொள்ளக் கூடியது மட்டுமே உண்மையானது மற்றும் விரும்பத்தக்கது.

**கே:** நன்று. ஆனால் எனக்கு ஒரு குரு தேவையா? நீங்கள் எனக்குச் சொல்வது எளிமையாகவும் ஒத்துக் கொள்ளக் கூடியதாகவும் இருக்கிறது. நான் அதை ஞாபகம் வைத்துக் கொள்வேன். இது உங்களை என் குருவாக மாற்றாது.

**ம:** ஒரு மனிதனைத் துதிப்பது முக்கியமல்ல. காரியத்தின் மேல் உனக்கு இருக்கும் ஆர்வத்தின் ஸ்திரமும், ஆழமும்தான் முக்கியம். உயிர்வாழ்தலே ஒரு உச்ச உயர்வான குரு; அதன் பாடங்களில் கவனத்துடனும் அதன் ஆணைகளுக்குக் கீழ்ப்படிதலுடனும் இரு. அவை தோன்றும் ஆதாரத்தைத் தனிநபர்ப்படுத்தினால் வெளிப் புறத்தில் ஒரு குரு உனக்கு இருப்பார். அவற்றை வாழ்க்கையிலிருந்து நேரடியாக எடுத்துக் கொண்டால் குரு உள்ளேயே இருப்பார். உனக்கு உள்ளேயோ, வெளியேயோ இருக்கும் குருவின் வார்த்தைகளை ஞாபகம் வைத்திரு, அதிசயப் படு, திரும்பத்திரும்ப நினை, அவற்றுடன் வாழ், அவற்றை நேசி. அவற்றிற்குள்ளே வளர், அவற்றோடு வளர், அவற்றை உனக்குச் சொந்தமாக்கு. எல்லா வற்றையும் அவற்றிற்குள் போடு. அந்த வார்த்தைகளில் உன் புத்தியை ஆழ்ந்திருக்கச் செய். எல்லாமும் உனக்குக் கிடைக்கும். நான் அதைத்தான் செய்தேன். என் நேரம் முழுவதையும் என் குருவிடமும், அவர் எனக்குச் சொன்னவற்றிற்கும் செலவிட்டேன்.

**கே:** நான் தொழில் முறையில் ஒரு எழுத்தாளன். எனக்கு குறிப்பிட்டவாறு ஏதாவது அறிவுரை சொல்லமுடியுமா?

**ம:** எழுதுவது என்பது புத்திசாலித்தனமும், திறமையும் சேர்ந்தது ஆகும். புத்திசாலித்தனத்தை வளர்; திறமையை அதிகப் படுத்து.

ஆசைப்பட எது தகுதியானதோ அதற்கு ஆசைப்படு. சரியாக ஆசைப்படு. எப்படி ஒரு கூட்டத்திற்குள் மக்களுக்குள் புகுந்து உன் வழியைக் கண்டுபிடிப்பாயோ அதைப் போல நிகழ்வுகளுக்கு நடுவில் உன் பொதுவான குறிக்கோளைத் தவற விடாமல் உன் வழியைக் கண்டுபிடி. நீ நம்பிக்கையுடன் இருந்தால் அது சுலபம்.

**கே:** பலமுறை நீங்கள் நம்பிக்கையுடன் இருப்பதின் அவசியத்தைக் குறிப்பிடுகிறீர்கள். ஆனால் நாங்கள் ஒரே ஒரு விருப்பம் மட்டுமே உடையவர்கள் அல்ல. ஆசைகள் மற்றும் தேவைகள், இயல்பான குணங்கள் மற்றும் அவற்றின் உந்துதல்கள் ஆகியவற்றின் ஒட்டு மொத்தம் நாங்கள். அவை ஒன்றின் மேல் ஒன்று தொடர்ந்து ஏற்படுகின்றன. சிலசமயம் ஒன்றும் சிலசமயம் மற்றொன்றும் வீரியமாக இருக்கின்றன. ஆனால் நீண்ட நேரம் அல்ல.

**ம:** உங்களிடம் தேவைகள் இல்லை. ஆசைகள் மட்டுமே உள்ளன.

**கே:** சாப்பிட, குடிக்க, உடலைக் காப்பாற்ற, உயிர் வாழக் கூடவா தேவைகள் இல்லை?

**ம:** உயிர் வாழ்வதற்கான ஆசைதான் ஒரே அடிப்படை ஆசை. மற்ற எல்லா ஆசைகளும் அதைச் சார்ந்து இருக்கின்றன.

**கே:** நாம் வாழ்கிறோம் - ஏனெனில் வாழ்ந்தாக வேண்டும்.

**ம:** நாம் வாழ்கிறோம் - ஏனெனில் உணர்வுபூர்வமான இருத்தலுக்காக.

**கே:** எங்கும் இருக்கும் ஒன்று தவறாக இருக்க முடியாது.

**ம:** தவறு அல்ல. அதனதன் இடத்திலும், காலத்திலும் எதுவுமே தவறு அல்ல. ஆனால் உண்மையைப் பற்றியும், மெய்மையைப் பற்றியும் அக்கறை கொள்ளும்போது ஒவ்வொன்றையும் விசாரத்திற்கு உட்படுத்த வேண்டும், உன் வாழ்தலையும் கூட. புலன் மற்றும் புத்தி பூர்வமான அனுபவங்களை அவசியம் என்று கருதினால் உன் விசாரத்தை சுகத்திற்கான தேடல் என்ற அளவில் சுருக்கிக் கொள்வாய்.

**கே:** நான் ஆனந்தத்தைத் தேடுகிறேன். சுகத்தை அல்ல.

**ம:** மனம் மற்றும் உடல் சுகங்களைத் தவிர, வேறு என்ன ஆனந்தம் உனக்குத் தெரியும்?

**கே:** வேறு ஏதாவது இருக்கிறதா?

**ம:** நீயே கண்டுபிடி. ஒவ்வொரு உந்துதலையும் வினவு. எந்த ஆசையையும் சரியானது என்று எடுத்துக் கொள்ளாதே. மனம் மற்றும் பௌதீக உடைமைகளைத் துறந்துவிடு. எல்லாச் சுயக் கவலைகளிலிருந்தும் விடுபடு. ஆத்ம சோதனைக்காகத் திறந்திரு.

**கே:** வெறுமனே துறவி அல்லது ஞானியின் அருகாமையில் வசிப்பது ஞான விடுதலைக்கு உகந்தது என்பதும், வேறு வழிமுறைகள் தேவை இல்லை என்பதும் இந்திய ஆன்மீக வழிமுறைகளின் ஒரு பகுதி. மக்கள் உங்கள் அருகாமையில் வசிக்க ஏதுவாக நீங்கள் ஏன் ஒரு ஆசிரமத்தை உருவாக்கக் கூடாது?

**ம:** நான் ஒரு அமைப்பை உருவாகும் கணத்திலேயே அதன் கைதி ஆகிவிடுவேன். உள்ளபடிக்கு நான் அனைவருக்கும் கிடைக்கக் கூடியவன். பொதுவான கூரையும், உணவும் மக்களை அதிகமாக வரவேற்காது. 'அருகாமையில் வசிப்பது' என்பது ஒரே காற்றை சுவாசிப்பது அல்ல. அது நம்பி, கீழ்ப்படிந்து, ஆசிரியரின் நல்ல நோக்கத்தை வீணாக்காமல் இருப்பதாகும். குருவை உன் உள்ளத்தில் எப்போதும் வைத்து அவருடைய அறிவுரைகளை ஞாபகம் வைத்திரு. இதுதான் குருவுடன் உண்மையான சத்சங்க மாகும். உடலளவில் அருகாமையில் இருப்பது முக்கியமே இல்லை. உன் குருவின் மேல் உனக்குள்ள நம்பிக்கையையும், அன்பையும் வெளிப்படுத்துவதாக உன் முழு வாழ்க்கையையும் மாற்று. இதுதான் உண்மையான சத்சங்கம்.

# 33. தானாகவே ஒவ்வொன்றும் நடக்கின்றது

**கேட்பவர்:** ஒரு ஞானி இறப்பாரா?

**மஹராஜ்:** அவர் உயிருடன் இருப்பதற்கும், இறப்பிற்கும் அப்பாற்பட்டவர். நாம் தவிர்க்கமுடியாததாக எடுத்துக் கொள்ளும் பிறப்பும், இறப்பும் அவருக்கும் தோன்றும் - ஆனால் அசையாததில் இருக்கும் அசைவதை, மாற்றமில்லாததில் இருக்கும் மாற்றத்தை, முடிவில்லாததில் இருக்கும் முடிவை வெளிப்படுத்தும் ஒரு வழியாக. ஞானிக்கு, எதுவும் பிறப்பதோ, இறப்பதோ இல்லை என்றும், எதுவும் நிலையாக இருப்பதில்லை, எதுவும் மாறுவதில்லை என்றும், எல்லாமும் காலமற்று உள்ளவாறே உள்ளன என்றும் வெளிப்படையாகத் தெரியும்.

**கே:** ஞானி அப்பால் உள்ளார் என்று நீங்கள் சொல்கிறீர்கள். எதற்கு அப்பால்? அறிவிற்கு அப்பாலா?

**ம:** அறிவு அதன் எழுச்சியையும், வீழ்ச்சியையும் கொண்டுள்ளது. விழிப்புணர்வு இருத்தலுக்குள் வருகிறது. இருத்தலை விட்டு வெளியேறும். இது தினமும் நடப்பதும், கவனிக்கப் படுவதும் ஆகும். நாம் சில சமயங்களில் விழிப்புணர்வுடனும், சில சமயங்களில் விழிப்புணர்வு இல்லாமலும் இருப்பதை அறிவோம். நாம் விழிப்புணர்வில்லாமல் இருக்கும் போது அது நமக்கு ஒரு அஞ்ஞான மயமாகவோ அல்லது ஒரு வெறுமையாகவோ தோன்றும். ஒரு ஞானி தன்னை விழிப்புணர்வு உள்ளவராகவோ, விழிப்புணர்வு இல்லாதவராகவோ அறிய மாட்டார். அவர் தூய விழிப்புணர்வில் ஆழ்ந்திருப்பார். ஆனால் மனதின் மூன்று நிலைகளுக்கும், அதன் உள்ளடக்கத்திற்கும் ஒரு சாட்சியாகத் தன்னை அறிவார்.

**கே:** இந்த சாட்சி பாவம் எப்போது ஆரம்பிக்கும்?

**ம:** ஒரு ஞானியைப் பொருத்தவரை எதற்குமே ஆரம்பம் இல்லை. முடிவும் இல்லை. எப்படி உப்பு தண்ணீரில் கரைகிறதோ அப்படி எல்லாமும் தூய விழிப்புணர்வில் கரைகின்றன. ஞானம் சாசுவதமாக அஞ்ஞானத்தை மறுக்கிறது. அஞ்ஞானத்தைப் புரிந்து கொள்வதுதான் ஞானம். இதற்கு அப்பால் இருப்பதை விவரிக்க முடியாது.

**கே:** 'நான் உடல்' என்னும் உறுதியான நிலை எனக்குள் இருக்கிறது. நான் அஞ்ஞானத்தால் பேசுகிறேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் ஒருவர் தன்னை உடலாக, உடல் மனமாக, மனோ உடலாக, அல்லது தூய மனமாக உணரும் நிலை எப்போது ஆரம்பித்தது?

**ம:** விழிப்புணர்வின் ஆரம்பத்தைப் பற்றி நீ பேசமுடியாது. காலத்தின் ஆரம்பத்தைப் பற்றிய கருத்துக்கள் விழிப்புணர்வில்தான் இருக்கின்றன. ஒன்றின் ஆரம்பத்தைப் பற்றி அர்த்தத்துடன் பேச நீ அதிலிருந்து வெளியே வர வேண்டும். அப்படி நீ வெளியே வந்த கணத்தில் அப்படி ஒன்று இல்லை என்றும், அப்படி ஒன்று எப்போதும் இருக்கவில்லை என்றும் அறிவாய். மெய் மட்டுமே உள்ளது. அதில் எந்த 'ஒன்றுமே' அதன் சொந்த இருத்தலைக் கொண்டிருக்காது. எப்படி அலைகளைக் கடலிலிருந்து பிரிக்க முடியாதோ அப்படி தோன்றி இருப்பவை அனைத்தும் இருத்தலில் வேர் கொண்டு உள்ளன.

**கே:** கருத்து என்னவென்றால் நான் இங்கு, இப்போது உங்களைக் கேட்கின்றேன்: 'நான் உடல்' என்னும் உணர்வு எப்போது தோன்றியது? நான் பிறந்தபோதா? அல்லது இன்று காலையிலா?

**ம:** இப்போது!

**கே:** ஆனால் நான் நேற்றும் அதைக் கொண்டிருந்ததாக எனக்கு ஞாபகம்.

**ம:** நேற்றைப் பற்றிய ஞாபகமும் இப்போதுதான் உள்ளது.

**கே:** ஆனால் கண்டிப்பாக நான் காலத்தில் இருக்கிறேன். எனக்கு ஒரு கடந்த காலமும் ஒரு எதிர்காலமும் உள்ளது.

**ம:** அவ்வாறுதான் நீ கற்பனை செய்கிறாய் - இப்போது.

**கே:** ஆரம்பம் என்று ஒன்று கண்டிப்பாக இருக்க வேண்டும்.

**ம:** இப்போது.

**கே:** முடிவைப் பற்றி என்ன சொல்வது?

**ம:** எதற்கு ஆரம்பம் இல்லையோ அது முடிவுறாது.

**கே:** ஆனால் என் கேள்வியைப் பற்றி விழிப்புணர்வுடன் இருக்கிறேன்.

**ம:** மெய்யற்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது. அதை மெய்யற்றது என்று புரிந்து கொள்ள வேண்டும்.

**கே:** எனக்கு அந்தக் கேள்வி உண்மையானது.

**ம:** எப்போது உனக்கு உண்மையாகத் தோன்றியது? இப்போதுதானே?

**கே:** ஆமாம். அது மிகவும் உண்மையாகத் தோன்றுகிறது - இப்போது

**ம:** உன் கேள்வியில் உள்ள மெய்த்தன்மை என்ன? அது மனதின் ஒரு நிலை. மனதின் எந்த நிலையும் மனதை விட மெய்யாக இருக்க முடியாது. மனம் மெய்யானதா? அது பல நிலைகளின் தொகுப்பு தான். ஒவ்வொரு நிலையும் அமைதியற்றது மற்றும் தற்காலிக மானது. எப்படி, அமைதியற்ற, தற்காலிகமான நிலைகளின் தொடர்ச்சியை மெய்யானது என்று கருதுவது?

**கே:** ஒரு மாலையில் கோர்க்கப் பட்டுள்ள முத்துக்கள் போல நிகழ்வுகள் தொடர்கின்றன - எக்காலத்திலும்.

**ம:** அவை எல்லாம் 'நான் உடல்' என்னும் அடிப்படைக் கருத்தால் கோர்க்கப்பட்டுள்ளன. ஆனால் இதுவுமே ஒரு மனோ நிலை. இதுவும் நீடித்து இருக்காது. இதுவும் மற்ற நிலைகளைப் போல வந்து போகிறது. விசாரம் செய்யாததனால் மட்டுமே உடல் - மனம்

என்னும் ப்ரம்மை உள்ளது. விசாரம் இல்லாமை என்னும் நூலில்தான் மனதின் எல்லா நிலைகளும் கோர்க்கப்பட்டுள்ளன. அது ஒரு மூடிய அறையில் உள்ள இருட்டு போல. அது வெளிப் படையாக அங்கே உள்ளது. ஆனால் கதவைத் திறந்தால் அது எங்கு போகிறது? அது எங்கும் போவதில்லை. ஏனெனில் அது ஆரம்பத்திலேயே அங்கு இல்லை. மனதின் எல்லா நிலைகளும், எல்லாப் பெயர்கள் மற்றும் இருப்பவைகளின் வடிவங்களும் விசாரம் இல்லாமை, அலசி ஆராயாமை, கற்பனை, மற்றும் எதையும் எளிதில் நம்புகிற குணம் ஆகியவற்றில் வேர்கொண்டுள்ளன. 'நான்' என்று சொல்வது சரி. ஆனால் 'நான் இது', 'நான் அது' என்று சொல்வது விசாரமில்லாமை, பரீட்சிக்காமை, மனதின் வலிமை இல்லாமை, சோம்பேறித்தன்மை ஆகியவற்றின் அறிகுறி.

**கே:** எல்லாமுமே வெளிச்சம் என்றால் இருள் எப்படித் தோன்றியது? வெளிச்சத்திற்கு நடுவில் எப்படி இருள் இருக்க முடியும்?

**ம:** வெளிச்சத்திற்கு நடுவில் இருள் இல்லை. சுயத்தை மறப்பதுதான் இருள். நாம் மற்றவற்றில், சுயம் அற்றதில் ஈர்க்கப் பட்டால் சுயத்தை மறக்கிறோம். இதில் இயற்கைக்கு மாறானது எதுவும் இல்லை. ஆனால் ஏன் அதிகப் படியான பற்றுதலினால் சுயத்தை மறக்க வேண்டும்? அனுபவிப்பவர், அவருடைய அனுபவம் ஆகிய இரண்டிற்கும் எப்போதும் ஆதாரமாக இருப்பது சுயம் என்று ஒருபோதும் மறக்காமல் இருப்பதில் ஞானம் இருக்கிறது.

**கே:** என்னுடைய தற்போதைய நிலையில் 'நான் உடல்' என்னும் கருத்து தானாகவே வருகிறது. ஆனால் 'நான் தூய இருத்தல்' என்னும் கருத்தை உண்மையான ஆனால் அனுபவிக்காத கருத்தாக மனதின்மேல் திணிக்க வேண்டி உள்ளது.

**ம:** ஆமாம். சாதனா என்பது ஒருவரை வலுக்கட்டாயமாக அவருடைய தூய 'இருத்தல்' என்பதிலும், விஷேசமான எதுவுமாகவும் அல்ல, ஒரு பிரபஞ்சத்தை உருவாக்கி உள்ள விஷேசமான பகுதிகளின் கூட்டுத்தொகையாக அல்ல, எல்லா விஷேசமான பகுதிகளின் மொத்தமாகவும் அல்ல என்பதை

ஞாபகப் படுத்துவதிலும் உள்ளது. எல்லாமும் மனதில்தான் இருக்கின்றன. உடலும்கூட மனதில், அளவற்ற எண்ணிக்கையில் உள்ள புலன் உணர்வுகளின் தொகுப்பாக உள்ளது. ஒவ்வொரு உணர்வும்கூட ஒரு மனோ நிலை. 'நான் உடல்' என்று நீ சொன்னால் அதைக் காண்பி.

**கே:** இதோ இங்கு உள்ளது.

**ம:** நீ அதைப் பற்றி நினைத்தால் மட்டுமே. மனமும் உடலும் இடைவேளை உள்ள நிலைகளே. இந்த நிலைகளின் வெளிப் பாட்டின் மொத்தம் இருத்தல் என்னும் மாயையை உருவாக்குகிறது. நிலையற்றதில் உள்ள நிலையானது என்ன, மெய்யற்றதில் உள்ள மெய்யானது என்ன என்று விசாரி. இதுதான் சாதனா.

**கே:** நிஜம் என்னவென்றால் நான் என்னை உடலாக நினைத்துக் கொண்டு இருக்கிறேன்.

**ம:** உன்னைப் பற்றி நன்றாக நினை. உடல் என்னும் கருத்தை உள்ளே கொண்டுவராதே. அங்கு தொடர்ந்தபடி உணர்ச்சிகள், உணர்ந்தறிதல்கள், ஞாபகங்கள், கருத்துக்கள் ஆகியவையே உள்ளன. உடல் என்பது பல்வேறாகப் பிரிந்துள்ளவைகளை ஒன்றாகப் பார்க்கும் நம் இயல்பால் ஏற்படுத்தப்பட்ட மனத் தோற்றம்; இதில் தவறு என்று சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

**கே:** 'நான் உடல்' என்று நினைப்பது மனதின் குறைபாடு என்று சொல்லப்படுகிறது.

**ம:** இவ்வாறு ஏன் பேசவேண்டும்? இம்மாதிரி சொல்வது பிரச்சனைகளைத்தான் உண்டுபண்ணும். சுயம்தான் எல்லா வற்றிற்கும் ஆதாரம். மற்றும் எல்லாமும் இறுதியாகச் சேரும் இடம். எதுவும் வெளிப்புறமானது அல்ல.

**கே:** உடல் என்னும் கருத்தால் தோற்றுப் போனால் அது தவறு அல்லவா?

**ம:** உடல் பற்றிய கருத்தில் தவறு இல்லை. 'நான் உடல்' என்னும் கருத்து கூட தவறு இல்லை. ஆனால் ஒருவரை ஒரு உடல் என்னும் கருத்துக்குள் மட்டுமே அடக்கிக் கொள்வதுதான் தவறு. மெய்யாக

எல்லா இருப்பவைகளும், ஒவ்வொரு வடிவமும் என்னுடையதே; என் விழிப்புணர்விற்குள் இருப்பவையே. நான் யார் என்று என்னால் சொல்ல முடியாது. ஏனென்றால் வார்த்தைகள் நான் என்னவாக இல்லை என்று மட்டும்தான் விவரிக்க முடியும். நான் இருக்கிறேன். நான் இருப்பதால் எல்லாமும் இருக்கின்றன. ஆனால் நான் விழிப்புணர்விற்கு அப்பால் இருக்கிறேன். அதனால் விழிப்புணர்வில் நான் என்ன என்று என்னால் சொல்ல முடியாது. ஆனாலும் நான் இருக்கிறேன். 'நான் யார்' என்னும் கேள்விக்குப் பதில் இல்லை. எந்த அனுபவமும் அதற்குப் பதில் அளிக்க முடியாது. ஏனெனில் சுயம் எல்லா அனுபவங்களுக்கும் அப்பாற்பட்டது.

**கே:** இருப்பினும் 'நான் யார்' என்னும் கேள்வி சிறிதளவாவது உபயோகமானதே.

**ம:** அதற்கு விழிப்புணர்வில் பதில் இல்லை. அதனால் அந்தக் கேள்வி விழிப்புணர்வைக் கடந்து போக உதவுகிறது.

**கே:** நான் இங்கு இருக்கிறேன் - இந்தக் கணத்தில். இதில் மெய்யானது என்ன, மெய்யற்றது என்ன? என் கேள்வி தவறானது என்று தயவு செய்து சொல்லாதீர்கள். என் கேள்வியைச் சந்தேகப்படுவது எனக்குக் கஷ்டத்தைக் கொடுக்கும்.

**ம:** உன் கேள்வி தவறானது அல்ல. அவசியமற்றது. 'இங்கு, இப்போது நான் இருக்கிறேன்' என்று நீ சொன்னாய். அதோடு நிறுத்து. இது மெய்யானது. ஒரு நிஜத்தைக் கேள்வியாக மாற்றாதே. அங்கு உன் தவறு இருக்கிறது. நீ அறிந்தவனும் அல்ல. அறியாதவனும் அல்ல. நீ மனமும் அல்ல; பொருளும் அல்ல. உன்னை மனம் மற்றும் பொருள் வடிவத்தில் விவரிக்க முயலாதே.

**கே:** சற்று முன்னர் ஒரு பையன் ஒரு பிரச்சனையுடன் உங்களிடம் வந்தான். நீங்கள் சில வார்த்தைகள் சொன்னீர்கள். அவன் சென்றுவிட்டான். அவனுக்கு உதவினீர்களா?

**ம:** நிச்சயமாக.

**கே:** நீங்கள் எப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்கிறீர்கள்?

**ம:** உதவுவது என் இயல்பு.

**கே:** அதை எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?

**ம:** தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அது தானாகவே நடக்கிறது.

**கே:** இருப்பினும் நீங்கள் ஒன்று சொன்னீர்கள். அது எதை அடிப்படையாகக் கொண்டது?

**ம:** மக்கள் என்னிடம் என்ன சொல்கிறார்களோ அதை. ஆனால் நீதான் அதற்கு அத்தாட்சி கேட்கிறாய். எனக்குத் தேவை இல்லை. சரி செய்வது என் இயல்பில் இருக்கிறது. அதுதான் சத்தியம், சிவம், சுந்தரம்.

**கே:** ஒருவர் உங்களிடம் வந்து ஆலோசனை கேட்கிறார். நீங்களும் சொல்கிறீர்கள். எங்கிருந்து அது வந்தது? எந்தச் சக்தியினால் அது வேலை செய்கிறது?

**ம:** அவருடைய சொந்த இருத்தல் அவர் மனதில் இயங்கி, ஒரு எதிர்வினையைத் தூண்டுகிறது.

**கே:** அதில் உங்களுடைய பங்கு என்ன?

**ம:** எனக்குள் அந்த மனிதனும், அவருடைய சுயமும் சேர்ந்து வருகிறார்கள்.

**கே:** சுயம் ஏன் நீங்கள் இல்லாமல் அவருக்கு உதவக் கூடாது?

**ம:** ஆனால் நான்தான் சுயம்! நீ என்னைத் தனித்தவனாகக் கற்பனை செய்கிறாய். அதனால்தான் இந்தக் கேள்வி. 'என் சுயம்', 'அவர் சுயம்' என்று கிடையாது. சுயம் இருக்கிறது - எல்லோருக்கு மான ஒரே சுயம். பல்வேறான பெயர்கள் மற்றும் உருவங்களாலும், மனம் மற்றும் உடல்களாலும் தவறாக வழி நடத்தப்பட்டு நீ பல சுயங்களைக் கற்பனை செய்கிறாய். நாம் இருவருமே ஒரே சுயம்தான். ஆனால் நீ அதற்குப் பயப்படுவதுபோல் தோன்றுகிறது. இந்தத் தனித்த சுயம் (ஜீவாத்மா), பிரபஞ்ச சுயம் (விஷ்வாத்மா) பற்றிப் பேசுவது ஆரம்பக் கற்றல் நிலை. அதைக் கடந்து செல். இருமையில் சிக்கிக் கொள்ளாதே.

**கே:** உதவி தேவைப் படும் மனிதனுக்கே வருவோம். அவர் உங்களிடம் வந்தால் என்ன செய்வீர்கள்?

**ம:** அவர் வந்தால் கண்டிப்பாக உதவி கிடைக்கும். ஏனெனில் அவர் உதவி பெற விதித்திருப்பதால்தான் வருவார். அதில் விநோத மானது எதுவும் இல்லை. நான் சிலருக்கு உதவி மற்றவர்களுக்கு மறுக்க முடியாது. வரும் அனைவரும் உதவி பெறுவார்கள். அதுதான் விதிமுறை. அது கிடைக்கும் வடிவம்தான் தேவைக்கேற்ப வேறுபடும்.

**கே:** அவர் ஆலோசனை பெற உங்களிடம் ஏன் வர வேண்டும்? அவருக்குள்ளேயே அது கிடைக்காதா?

**ம:** அவர் கவனிக்க மாட்டார். அவர் மனம் வெளிப்புறமாகத் திரும்பி உள்ளது. ஆனால் நிஜமாக எல்லா அனுபவங்களும் மனதில் தான் உள்ளன. அவர் என்னிடம் வருவதும், உதவி பெறுவதும்கூட அவருக்குள்ளேயே இருக்கிறது. அவருக்குள்ளேயே ஒரு பதிலைக் கண்டுபிடிக்காமல் அவர் வெளிப்புறமாக ஒரு பதிலைக் கற்பனை செய்து கொள்கிறார். எனக்கு நான் என்று, நபர் என்று, கொடுப்பது என்று ஒன்றும் இல்லை. எல்லாமும் மனதில் தற்காலிகமான ஒரு சிமிட்டல். நான் அளவற்ற சாந்தம் மற்றும் அமைதி. அதில் எதுவும் தோன்றுவது இல்லை. ஏனெனில் தோன்றும் எல்லாமும் மறையும். மெய்யாக யாரும் உதவி வேண்டி வருவதும் இல்லை. யாரும் உதவி செய்வதும் இல்லை. யாரும் உதவி பெறுவதும் இல்லை. இவை எல்லாமுமே விழிப்புணர்வில் ஒரு காட்சி மட்டுமே.

**கே:** இருப்பினும், உதவக்கூடிய சக்தி உள்ளது. அந்தச் சக்தியை வெளிப்படுத்தக் கூடிய ஒருவரோ அல்லது ஒன்றோ இருக்கிறது. அதைக் கடவுள் என்றோ, சுயம் என்றோ, பிரபஞ்ச மனம் என்றோ சொல்லலாம். பெயரைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. நிஜமான நிலைதான் முக்கியமானது.

**ம:** இந்தப் புரிதல் உடல் - மனதினுடையது. தூய மனம் உள்ளவற்றை உள்ளவாறு பார்க்கிறது - விழிப்புணர்வில் உள்ள குமிழிகளாக. இந்தக் குமிழிகள் தோன்றுகின்றன, மறைகின்றன, திரும்பவும் தோன்றுகின்றன - மெய்யான இருத்தல் இல்லாமல். குறிப்பிட்ட காரணம் எதுவும் அதற்குச் சொல்ல முடியாது. ஏனெனில் ஒவ்வொன்றுக்கும் எல்லாமும் காரணம். ஒவ்வொன்றும்

எல்லாவற்றையும் பாதிக்கின்றது. ஒவ்வொரு குமிழியும் ஒரு உடல். எல்லாக் குமிழிகளும் என்னுடையவையே.

**கே:** உங்களுக்கு எல்லாவற்றையும் சரியாகச் செய்யும் சக்தி உள்ளதென்று சொல்கிறீர்களா?

**ம:** என்னிலிருந்து தனித்து எந்தச் சக்தியும் கிடையாது. அது என் இயல்பு. அது என் ஆதாரத்திலேயே கலந்து இருக்கிறது. அதை உருவாக்கும் திறன் என்று சொல்லலாம். தங்கக் கட்டியிலிருந்து நகைகள் செய்யலாம் - அப்படிச் செய்யப்படும் ஒவ்வொன்றும் தங்கமாகத்தான் இருக்கும். அதே போல நான் எந்த மாதிரியாகத் தோன்றினாலும், என்ன செயல் புரிந்தாலும் நான் நானாகத்தான் இருப்பேன்: ஸ்திரமான, அசைக்க முடியாத, சுதந்திரமான 'நான்' ஆக. நீ உலகம் என்றும், படைக்கப்பட்டது என்றும் சொல்வது என் தன்னிச்சையான உண்மையான இயல்பு. எது நடக்கிறதோ அது நடக்கிறது. ஆனால் எல்லாமும் ஆனந்தத்தில் முடிவது என்பது என் சுபாவம்.

**கே:** ஒரு முட்டாள் தாய் மீதைல் ஆல்கஹாலைக் கொடுத்ததால் ஒரு பையன் குருடாகிவிட்டான். நான் அவனுக்கு உதவுமாறு உங்களை வேண்டுகிறேன். நீங்கள் மிகவும் வாஞ்சையுடன் இருக்கிறீர்கள். உதவவும் ஆர்வமாக இருக்கிறீர்கள். எந்தச் சக்தியினால் நீங்கள் அவனுக்கு உதவ முடியும்?

**ம:** அவனுடைய பிரச்சனை என் விழிப்புணர்வில் பதிவு செய்யப் பட்டுள்ளது. அங்கு அது அழிக்க முடியாதவாறு இருக்கும். விழிப்புணர்வு வேலை செய்யும்.

**கே:** நான் உங்களை உதவச் சொன்னது ஏதாவது வித்தியாசத்தை ஏற்படுத்துமா?

**ம:** நீ வேண்டுவதும் அந்தப் பையனின் பார்வையின்மையின் ஒரு பகுதியே. அவன் குருடாயிருப்பதால் நீ கேட்கிறாய். நீ எதையும் புதிதாகச் சேர்க்கவில்லை.

**கே:** ஆனால் உங்கள் உதவி ஒரு புது அம்சமா?

**ம:** இல்லை. எல்லாமும் அந்தப் பையனின் பார்வை இல்லாமையில் அடங்கி உள்ளது. அம்மா, பையன், நீ, நான், மற்ற எல்லாமும் அதில் அடங்கி உள்ளன. அது ஒரே நிகழ்ச்சி.

**கே:** அந்தப் பையனின் பிரச்சனையைப் பற்றி கலந்து ஆலோசிப்பதும் கூட முன்பே விதிக்கப்பட்டது என்று சொல்கிறீர்களா?

**ம:** வேறு எப்படி? எல்லா நிகழ்வுகளும் அவற்றின் எதிர்காலத்தைக் கொண்டுள்ளன. அந்தப் பையன் விழிப்புணர்வில் தோன்றுகிறான். நான் அதற்கு அப்பால் உள்ளேன். நான் விழிப்புணர்விற்குக் கட்டளை இடுவதில்லை. விழிப்புணர்வின் தன்மைக்குள் எல்லாவற்றையும் சரி செய்வது இருக்கிறது என்று எனக்குத் தெரியும். விழிப்புணர்வை அதன் உருவாக்கங்களைக் கவனித்துக் கொள்ள விட்டு விடு. அந்தப் பையனின் துன்பம், உன் பச்சாதாபம், நான் கேட்பது, விழிப்புணர்வு வேலை செய்வது - எல்லாமும் ஒரே ஒரு நிஜம். பகுதிகளாகப் பிரித்து கேள்வி கேட்காதே.

**கே:** நம் மனங்கள் எவ்வளவு வினோதமாக வேலை செய்கின்றன பார்த்தீர்களா?

**ம:** நீதான் வினோதமானவன். நான் அல்ல. நான் இயல்பாக இருக்கிறேன்; புத்திசாலித்தனத்துடன் இருக்கிறேன். நான் உள்ளவற்றை உள்ளவாறு பார்க்கிறேன். ஆகையினால் அவற்றைப் பார்த்து நான் பயப்படுவதில்லை. ஆனால் நீ இருக்கும் நிஜத்தைப் பார்த்து பயப்படுகிறாய்.

**கே:** நான் ஏன் பயப்பட வேண்டும்?

**ம:** உன்னைப் பற்றிய அறியாமை உன்னைப் பயப்பட வைக்கிறது. மேலும் நீ பயப்படுகிறாய் என்று உனக்குத் தெரியாது. பயப்படாமல் இருக்க முயற்சி செய்யாதே. அறியாமை என்னும் உன்னைச் சுற்றியுள்ள கூட்டை உடைக்க முதலில் முயற்சி செய்.

மக்கள் இறப்பதற்குப் பயப்படுகிறார்கள். ஏனெனில் அவர்களுக்கு இறப்பு என்பது என்னவென்று தெரியாது. ஞானி

அவர் இறப்பதற்கு முன்பே இறந்து விடுவார். பயப்பட எதுவும் இல்லை என்று அவருக்குத் தெரியும். உன் ஸ்வரூப ஞானத்தை நீ அறியும் கணத்தில் நீ எதைப் பற்றியும் கவலைப்பட மாட்டாய்.

இறப்பு சுதந்திரத்தையும், வலிமையையும் கொடுக்கிறது. நீ உலகில் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்றால் உலகத்தைப் பொருத்தவரையில் இறக்க வேண்டும். பிறகு உலகமே உனக்குச் சொந்தமாகி, அது உன் உடலாகவும், உன் நபர்த்தன்மையாகவும், கருவியாகவும் ஆகிவிடும். முற்றிலும் சுதந்திரமாக இருப்பதன் ஆனந்தம் விவரிக்க முடியாதது. மாறாக சுதந்திரத்திற்குப் பயப்படுபவரால் இறக்க முடியாது.

**கே:** இறக்க முடியாதவரால் வாழ முடியாது என்று சொல்கிறீர்களா?

**ம:** நீ எப்படி வேண்டுமானாலும் சொல். பற்றுதல் என்பது பிணைப்பு. பற்றற்று இருப்பது சுதந்திரம். அபிலாசைப்படுவது அடிமைத்தனத்தைக விளைவிக்கும்.

**கே:** நீங்கள் காப்பாற்றப்பட்டால் உலகம் காப்பாற்றப்படும் என்று இதிலிருந்து நான் புரிந்து கொள்ளலாமா?

**ம:** மொத்தமாகப் பார்த்தால் உலகத்தைக் காப்பாற்ற வேண்டியது இல்லை. மனிதன் தவறு செய்கிறான். அதனால் துன்பத்தை உருவாக்குகிறான். அது ஞானியின் பிரக்ஞையின் எல்லைக்குள் வரும் போது சரி செய்யப் படுகிறது. அவருடைய இயல்பு அப்படிப் பட்டது.

**கே:** நாம் ஆன்மீக முன்னேற்றம் என்பதைக் கவனிக்கலாம். ஒரு சுயநலமான மனிதன் இறை நாட்டமுடையவனாக மாறி, தன்னைக் கட்டுப் படுத்தி, எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் செம்மைப் படுத்தி, ஆன்மீகப் பயிற்சி எடுத்து, அவனுடைய மெய்யான இருத்தலை அறிகிறான். இந்த மாதிரியான முன்னேற்றம் காரண காரியத் தொடர்பினால் ஏற்படுகிறதா அல்லது எதேச்சையானதா?

**ம:** ஒவ்வொன்றும் தானாகவே நடக்கிறது, தன்னிச்சையாக என்பது என் கருத்து. ஆனால் மனிதன் ஒரு பலனுக்காகவும், ஒரு குறிக்கோளுக்காகவும் உழைப்பதாகக் கற்பனை செய்கிறான். அவன் எப்போதும் ஒரு பரிசை மனதில் வைத்துக்கொண்டு அதற்காக உழைக்கிறான்.

**கே:** *ஒரு முரட்டு, பண்படாத மனிதன் பரிசு இல்லை என்றால் வேலை செய்ய மாட்டான். அவனுக்கு வெகுமதிகள் கொடுப்பது அவசியம் அல்லவா?*

**ம:** அவன் தனக்கு வெகுமதிகளை எப்படியாவது உருவாக்கிக் கொள்வான். முன்னேற்றம் என்பது விழிப்புணர்வின் இயல்பில் இருக்கிறது என்று அவனுக்குத் தெரியாது. ஒரு நோக்கத்திலிருந்து மற்றொன்றிற்கு முன்னேறி, அவனுடைய அபிலாசைகள் பூர்த்தி அடைய குருமார்களைத் தேடிப் போவான். அவனுடைய இருத்தலின் விதிமுறைகளால் திரும்புகின்ற வழியைக் (நிவிருத்தி) கண்டுபிடிக்கும் போது அவன் எல்லா நோக்கங்களையும் விட்டுவிடுவான். ஏனெனில் உலகத்திடம் அவனுக்கு இருந்த ஆர்வத்தை இழந்திருப்பான். அவனுக்கு மற்றவர்களிடம் இருந்தோ, அல்லது தன்னிடம் இருந்தோ எதுவும் தேவைப்படாது. அவன் எல்லாவற்றைப் பொருத்தவரையிலும் இறந்தவனாகிவிடுவான். ஆனால் எல்லாமும் நடக்கும். எதுவுமே வேண்டாதிருப்பதும், எதுவுமே செய்யாதிருப்பதும் உண்மையான உருவாக்குதல்! உலகம் தன்னுடைய இதயத்தில் வெளிப்படுவதையும், மறைவதையும் கவனிப்பது ஒரு ஆச்சரியம்.

**கே:** *உள்முக முயற்சிக்குப் பெரிய தடையாக இருப்பது சலிப்புத்தன்மை. சாதகன் சலிப்படைகிறான்.*

**ம:** தாமச குணமும், ராஜச குணமும் ஒன்றாக வேலை செய்து சாத்வீக குணத்தைக் கீழ் நிலையில் வைத்திருக்கின்றன. சாத்வீகம் தோன்றுவதற்கு முன்னால் தாமச குணத்தையும், ராஜச குணத்தையும் வெல்ல வேண்டும். இவையெல்லாம் சரியான இடத்திலும், காலத்திலும் தன்னிச்சையாக நடைபெறும்.

**கே:** *அப்படியானால் முயற்சி தேவை இல்லையா?*

ம: முயற்சி எப்போது தேவையோ அப்போது அது தோன்றும். எப்போது முயற்சி இல்லாதிருப்பது அவசியமோ, அப்போது அந்த நிலை இருக்கும். வாழ்க்கையோடு நீ போராட வேண்டியது இல்லை. அதனுடன் வெறுமனே மிதந்து செல். தற்கணத்தில் உள்ள வேலைக்காக உன்னை முழுவதும் ஈடுபடுத்து. அதுதான் தற்கணத்திற்காகத் தற்கணத்தில் இறப்பது. ஏனெனில் வாழ்வது என்பது இறப்பது. இறப்பில்லாமல் உயிர் வாழ்வது என்பது இருக்க முடியாது.

**கே:** உலகத்தை முன்னேற்ற முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. நான் என்ன செய்வது?

ம: உலகமும் ஆத்மாவும் ஒன்று, அவை பரிபூரணமாக உள்ளன, உலகம் என்று சொல்லக்கூடிய எதுவும் இல்லை; சுயமாகிய ஆத்மாதான் எல்லாமும் என்னும் முக்கியமான கருத்தைப் பிடித்துக் கொள். உன் மனோபாவம்தான் பிழையானது. அதற்குத்தான் சீரமைப்பு தேவை. இந்தச் சீரமைப்புதான் சாதனா என்று சொல்லப்படுவது. உன் சோம்பேறித்தனத்தை விட்டுவிட்டு, உன் முழுச் சக்தியையும் தெளிவிற்கும், சுயநலமற்ற தன்மைக்கும் வழிவிட உபயோகப்படுத்துவதன் மூலம் அதை அடைவாய். ஆனால் உண்மையில் இவை எல்லாம் தவிர்க்கமுடியாத வளர்ச்சியின் அறிகுறிகளே. பயப்படாதே, தடுக்காதே, தாமதிக்காதே. நீ என்னவோ அதாக இரு. பயப்படுவதற்கு எதுவும் இல்லை. நம்பிக்கையுடன், முயற்சி செய். உண்மையாகப் பரீட்சித்துப் பார். உன் வாழ்க்கையை வடிவமைக்க உன் மெய்யான இருத்தலுக்கு ஒரு வாய்ப்பு கொடு. அதற்கு நீ வருத்தப்பட மாட்டாய்.

## 34. மனம் என்பது அமைதியற்றது

**கேட்பவர்:** நான் பிறப்பால் ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவன். இப்போது ஹத யோகாவை மெக்சிகோவிலும், அமெரிக்காவிலும் கற்பிக்கிறேன்.

**மஹராஜ்:** அதை எங்கு கற்றாய்?

**கே:** எனக்கு அமெரிக்காவில் ஒரு ஆசிரியர் இருந்தார். அவர் ஒரு இந்திய சுவாமி.

**ம:** அது உனக்கு என்ன கொடுத்தது?

**கே:** அது எனக்கு நல்ல ஆரோக்யத்தையும், வாழ்க்கையை நடத்த ஒரு வழியையும் கொடுத்தது.

**ம:** நன்று. நீ வேண்டியது மொத்தமும் இவ்வளவுதானா?

**கே:** நான் மன அமைதியை வேண்டுகிறேன். கிறிஸ்துவின் பெயரால் கிறிஸ்தவர்கள் என்று கூறிக்கொள்பவர்களால் நடத்தப் படும் கொடூரமான செயல்களால் மனம் வெறுத்துப் போய் விட்டேன். சிலகாலம் எந்த மதத்தையும் சாராமல் இருந்தேன். பிறகு யோகாவால் ஈர்க்கப்பட்டேன்.

**ம:** நீ என்ன அடைந்தாய்?

**கே:** நான் யோக தத்துவத்தைப் பயின்றேன். அது எனக்கு உதவியது.

**ம:** அது எந்த விதத்தில் உனக்கு உதவியது? எந்த அறிகுறிகளினால் உனக்கு உதவி கிடைத்தது என்று முடிவிற்கு வந்தாய்?

**கே:** நல்ல உடல் நலம் அறிந்துகொள்ளக் கூடியது.

**ம:** உடல் நலத்துடன் இருப்பதை உணர்வது ஒரு சுகமான விஷயம். அதில் சந்தேகமில்லை. ஆனந்தம் மட்டும்தானா நீ யோகாவில் எதிர்பார்த்தது?

**கே:** உடல் நலத்துடன் இருப்பதின் மகிழ்ச்சி ஹத யோகாவின் பரிசு. ஆனால் யோகா பொதுவாக அதற்கு மேலே கொடுக்கின்றது. அது பல கேள்விகளுக்குப் பதில் அளிக்கிறது.

**ம:** யோகா என்றால் என்ன அர்த்தப்படுகிறாய்?

**கே:** பரிணாமம், மறுபிறவி, கர்மா மற்றும் பலவற்றைக் கொண்ட இந்தியாவின் மொத்தப் படிப்பினையும் அதுதான்.

**ம:** சரி. உனக்குத் தேவையான எல்லா அறிவும் கிடைத்து விட்டது. ஆனால் அது உனக்கு எந்தவிதத்தில் பிரயோஜனம்?

**கே:** அது எனக்கு மன அமைதியைக் கொடுத்தது.

**ம:** அப்படியா? உன் மனம் அமைதியாக இருக்கிறதா? உன் தேடல் முடிவுற்றதா?

**கே:** இல்லை. இன்னும் முடிவடையவில்லை.

**ம:** இயல்பாக அப்படித்தான். அதற்கு ஒரு முடிவு கிடையாது. ஏனெனில் மன அமைதி என்று ஒன்று கிடையாது. மனம் என்றால் அலைக்கழிக்கப் படுவது. அமைதியற்ற தன்மையே மனம். யோகா என்பது மனதின் ஒரு தன்மை அல்ல. அது மனதின் ஒரு நிலையும் அல்ல.

**கே:** ஓரளவு அமைதியை யோகாவினால் பெற்றேன்.

**ம:** உன்னிப்பாகக் கவனி. அப்போது மனம் எண்ணங்களால் கொதித்துக் கொண்டிருப்பதைப் பார்ப்பாய். எப்போதாவது அது அமைதியாக ஆகலாம். ஆனால் அது ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே. மறுபடியும் வழக்கமான அமைதி இன்மைக்கே திரும்பிவிடும். ஒரு சாந்தப்படுத்தப்பட்ட மனம் ஆரோக்யமான மனம் அல்ல.

நீ உன் மனதை அமைதிப்படுத்த வேண்டும் என்று சொல்கிறாய். தன் மனதை அமைதிப்படுத்த வேண்டுபவர் அமைதியானவரா?

**கே:** நீங்கள் சொல்வது சரி. நான் அமைதியாக இல்லை. அதனால் யோகாவின் உதவியை நாடுகிறேன்.

**ம:** இதில் முரண்பாட்டை நீ பார்க்கவில்லையா? 20 வருடங்கள் நீ மன அமைதியை வேண்டினாய். உன்னால் அதைப் பெற முடியவில்லை. ஏனெனில் ஆரோக்யமற்ற ஒன்று அமைதியாக இருக்க முடியாது.

**கே:** சிறிது முன்னேற்றம் உள்ளது.

**ம:** நீ அடைந்ததாகக் கூறும் அமைதி மிகவும் மெலிதானது. சிறிய அளவிலான எது வேண்டுமானாலும் அதை உடைத்துவிடலாம். நீ அமைதி என்று சொல்வது ஆரோக்யமற்ற தன்மை இல்லாத நிலை மட்டுமே. அது அமைதி என்று பெயர் சொல்லக் கூடிய அளவிற்குத் தகுதியானது அல்ல. உண்மையான அமைதி ஒருபோதும் குறையாது. அசைக்க முடியாத அமைதி உடைய மனம் உனக்கு இருக்கிறது என்று உன்னால் சொல்ல முடியுமா?

**கே:** நான் முயற்சிக்கிறேன்.

**ம:** முயற்சிப்பதும் மனதின் ஆரோக்யமற்ற தன்மையின் ஒரு வடிவமே.

**கே:** அப்படியானால் என்ன மிஞ்சுகிறது?

**ம:** சுயத்தை ஓய்வாக வைத்திருக்க வேண்டியது இல்லை. அதுவே அமைதிதான். அமைதியில் இருப்பது அல்ல. மனம் மட்டும் தான் ஓய்வற்று இருக்கிறது. அதற்குத் தெரிந்தது எல்லாம் பலவாறான வகைகளிலும், அளவுகளிலும் அமைதி இல்லாமல் இருப்பதுதான். மகிழ்ச்சியாக இருக்கும் நிலைகள் உயர்ந்தவையாக எடுத்துக் கொள்ளப்படுகிறன. துன்பமானவைகள் ஒதுக்கப்படுகின்றன. நாம் முன்னேற்றம் என்று சொல்வது வெறுமனே மகிழ்ச்சியற்றதில் இருந்து மகிழ்ச்சியாக மாறுவது. ஆனால் மாறுதல்கள் அவைகளாகவே நமக்கு மாற்றமில்லாததைக் கொண்டு வர முடியாது. ஏனெனில் எதற்கெல்லாம் ஆரம்பம் இருக்கிறதோ அதற்கு முடிவும் இருக்கும். மெய்யிற்கு ஆரம்பம் இல்லை. அது தன்னை ஆரம்பமும் முடிவும் இல்லாததாகவும், எல்லாவற்றிலும் ஊடுருவுவதாகவும், முழு சக்தியைக் கொண்ட, அசைக்க முடியாத ஆதாரமாக,

எக்காலத்திலும் மாற்றமில்லாததாக, உச்ச உயர்வான உந்துசக்தியாகவும் வெளிப்படுத்திக் கொள்கிறது.

**கே:** அப்படியானால் ஒருவர் என்ன செய்யவேண்டும்?

**ம:** யோகாவினால் நீ அறிவையும் அனுபவத்தையும் சேர்த்துக் கொண்டாய். அதை மறுக்க முடியாது. ஆனால் இவை எல்லாவற்றால் உனக்கு என்ன பயன்? யோகா என்றால் இணைவது, சேர்வது. நீ மறுபடியும் இணைத்தது என்ன? சேர்த்தது என்ன?

**கே:** நான் என்னுடைய நபர்த்தன்மையை மெய்யான சுயத்துடன் திரும்ப இணைக்க முயற்சிக்கிறேன்.

**ம:** நபர்த்தன்மை (வியக்தி) கற்பனையின் உருவாக்கம். சுயம் (வியக்தா) இந்தக் கற்பனையால் கட்டுப்பட்டுள்ளது. கற்பனையை விட்டுவிட்டு, சுயத்தை அதன் கட்டிலிருந்து விடுவி. நீ என்னவாக இல்லையோ அதுவாக உன்னை நினைத்துக் கொள்வதுதான் உன்னைக் கட்டுப்படுத்துகிறது. நபர் தன் சொந்தக் காரணத்தால் இருத்தலுக்கு வருவதாகச் சொல்ல முடியாது; வியக்தாதான் ஒரு வியக்தி இருப்பதாகவும், தான் அதுவாக இருப்பதாக விழிப்புணர் வுடன் இருப்பதாகவும் நம்புகிறது. வியக்தாவிற்கு அப்பால் எல்லாவற்றிற்கும் காரணமில்லாத காரணமான பரிணமிக்காதது (அவியக்தா) இருக்கிறது. வியக்தியை மறுபடியும் வியக்தாவுடன் இணைப்பது என்று சொல்வது கூடச் சரி அல்ல. ஏனெனில் அதன் மூலத்திலேயே நபர் என்று ஒன்று இல்லை. அது தீர்மானமாக மன உருவகத்தால் ஏற்படுத்தப்பட்ட மெய்யற்ற இருத்தலாகக் கருதப் படுகிறது. மூலத்தில் எதுவுமே பிரிக்கப்படவில்லை. இணைப்பதற்கு எதுவுமே இல்லை.

**கே:** வியக்தாவைத் தேடவும் கண்டுபிடிக்கவும் யோகா உதவுகிறது.

**ம:** நீ தொலைத்ததைத் தேடிக் கண்டுபிடிக்கலாம். ஆனால் நீ தொலைக்காததைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது.

**கே:** நான் எதையும் எப்போதும் தொலைக்காமல் இருந்திருந்தால் ஆத்மஞானம் பெற்றிருந்திருப்பேன். ஆனால் நான் ஆத்மஞானம் அடையவில்லை. நான் தேடுகிறேன். நான் தேடுவதால் அதுவே

நான் ஏதோ ஒன்றைத் தொலைத்துவிட்டேன் என்பதற்கு அத்தாட்சி இல்லையா?

**ம:** அது நீ தொலைத்துவிட்டதாக நம்புவதைத்தான் காட்டுகிறது. ஆனால் நம்புவது யார்? தொலைந்ததாக நம்பப்படுவது எது? உன்னைப் போன்ற ஒரு நபரைத் தொலைத்துவிட்டாயா? எந்தச் சுயத்தை நீ தேடுகிறாய்? குறிப்பிட்டு எதைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய்?

**கே:** உண்மையான ஆத்ம ஞானத்தை.

**ம:** உண்மையான ஆத்ம ஞானம் ஒரு ஞானமே அல்ல. அது தேடுவதாலோ, அங்கும் இங்கும் பார்ப்பதாலோ உனக்குக் கிடைக்கக் கூடியது அல்ல. அது இடத்திலும், காலத்திலும் காணக் கூடியது அல்ல. அது உன் கடந்த காலத்திலோ, எதிர் காலத்திலோ இல்லை. நீ ஒருபோதும் தொலைக்காததை எப்போதும் கண்டு பிடிக்க முடியாது. ஞானம் என்பது ஒரு ஞாபகம், ஒரு சிந்திக்கும் முறை, ஒரு மனப் பழக்கம். இந்தத் தேடலுக்கு மூல காரணம் சுகமும், துக்கமும். நீ சுகத்தாலும், துக்கத்தாலும் தூண்டப்படுவதால் ஞானத்தைத் தேடுறாய். ஆத்ம ரூபத்தில் இருப்பது என்பது எல்லாத் தூண்டுதலுக்கும் அப்பாற்பட்டது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் நீ ஆத்ம ரூபமாக இருக்க முடியாது. நீ முன்பே ஆத்ம ரூபம்தான். அதற்குக் காரணம் எதுவும் தேவை இல்லை.

**கே:** யோகாவைச் செய்வதால் நான் அமைதியைப் பெறுவேன்..

**ம:** உன்னிலிருந்து தனியாக அமைதி இருக்க முடியுமா? நீ உன் சொந்த அனுபவத்திலிருந்து பேசுகிறாயா அல்லது புத்தக அறிவிலிருந்து பேசுகிறாயா? புத்தக அறிவிலிருந்துதான் பேசுவதாகத் தோன்றுகிறது. ஏனெனில் சுயம் பற்றிய அனுபவத்தை விவரிக்க முடியாது. உன் புத்தக அறிவு ஆரம்பிப்பதற்கு உபயோக மானது. ஆனால் விவரிக்க முடியாத நேரடி அனுபவத்திற்காக சீக்கிரம் அதை விட்டுவிட வேண்டும். வார்த்தைகளை அழிவிற்கும் கூட உபயோகப்படுத்தலாம். வார்த்தைகளால் உருவகங்கள் ஏற்படுத்தப் படுகின்றன. வார்த்தைகளால் அவை அழிக்கப் படுகின்றன. நீ தற்போது இருக்கும் நிலையை வார்த்தைபூர்வமான சிந்தனை யினால் அடைந்துள்ளாய். அதே வழியில் வெளியே வர வேண்டும்.

**கே:** நான் ஓரளவு உள் அமைதி அடைந்துள்ளேன். அதைப் போக்கிக் கொள்ளவா?

**ம:** எது அடையப் பெற்றதோ அது திரும்பவும் தொலைக்கப் படலாம். நீ ஒருபோதும் தொலைக்காத உண்மையான அமைதியை அடைந்தால், அந்த அமைதிதான் உன்னுடன் இருக்கும். ஏனெனில் அது ஒருபோதும் உனக்கு அப்பாற்பட்டு இருந்தது இல்லை. புதியதாக இருப்பது எல்லாம் பழையதாகி விடும். எது ஆரம்பிக்கிறதோ அது முடிவுறும். எதற்கு ஆரம்பம் இல்லையோ அதுதான் முடிவில்லாமல் இருக்கும். உன்னிடம் என்ன இல்லை என்று தேடுவதை விட, நீ எப்போதுமே தொலைக்காத ஒன்று என்ன என்று கண்டுபிடி. அது எல்லாவற்றின் ஆரம்பத்திற்கு முன்பும், முடிவிற்குப் பின்பும் இருப்பது. அதற்குப் பிறப்போ, இறப்போ கிடையாது. அந்த அசைக்க முடியாத நிலையை, ஒரு உடலோ, மனமோ பிறப்பதாலோ, இறப்பதாலோ பாதிக்கப்படாத நிலையை நீ உணர்ந்தறிய வேண்டும்.

**கே:** அவ்வாறு உணர்ந்தறிய வழிமுறைகள் என்ன?

**ம:** வாழ்க்கையில் தடைகளைத் தாண்டாமல் எதையுமே அடைய முடியாது. ஒருவருடைய சத்ய ஸ்வரூபத்தைத் தெளிவாக உணர்ந்தறியத் தடைகளாக இருப்பது இன்பங்களுக்கு ஆசைப் படுவதும், துன்பங்களுக்கு அச்சப்படுவதும்தான். இன்ப துன்பத் தூண்டுதல் தான் குறுக்கே நிற்கிறது. எல்லாத் தூண்டுதல் களிலிருந்தும் விடுதலை அடைந்த, ஆசையே உருவாகாத நிலைதான் இயல்பான நிலை.

**கே:** அந்த மாதிரி ஆசைகளைத் துறப்பதற்கு நீண்ட கால அவகாசம் தேவையா?

**ம:** காலம் தேவை என்று நீ விட்டாயானால் லட்சக் கணக்கான வருடங்கள் தேவை. ஒரு ஆசைக்குப் பிறகு மற்றொரு ஆசையை விடுவது என்பது முடிவே கண்ணுக்குத் தெரியாத நீண்ட செயல். ஆசைகளையும், அச்சங்களையும் தனித்து விட்டுவிட்டு உன் முழுக் கவனத்தையும் ஆசை மற்றும் அச்சம் ஆகிய அனுபவங்களுக்குப் பின்னால் இருப்பவரின்மேல் செலுத்து. 'யார் ஆசைப்படுகிறார்கள்'

என்று கேள். உன் கவனத்தை ஆசைப்படுபவரின்மேல் வைத்திரு. ஒவ்வொரு ஆசையும் உன்னை உன்னிடத்தில் திரும்பக் கொண்டுவர விடு.

**கே:** எல்லா ஆசைகளுக்கும், அச்சங்களுக்கும் மூல காரணம் ஒன்றுதான் - சந்தோசத்திற்கு ஏங்குவது.

**ம:** நீ சிந்திக்கவும் ஏங்கவும் செய்கிற சந்தோசம் வெறும் உடல், மனம் சார்ந்த திருப்தியே. அந்தமாதிரியான புலன் உணர்ச்சி சார்ந்த அல்லது மனம் சார்ந்த சந்தோசம் மெய்யான, தீர்க்கமான மகிழ்ச்சி அல்ல.

**கே:** புலன் உணர்ச்சி மற்றும் மனம் சார்ந்த சுகங்களும், உடல் மற்றும் மனம் நலமாய் இருப்பதால் ஏற்படுகின்ற சௌக்கியமான உணர்வும் கூட அவற்றின் வேரை மெய்மையில் கொண்டிருக்க வேண்டும்.

**ம:** அவற்றின் வேர் கற்பனையில் உள்ளது. ஒரு மனிதனுக்கு ஒரு கல் கொடுக்கப்பட்டு, அது விலைமதிப்பில்லாத வைரம் என்று உத்திரவாதம் அளிக்கப்பட்டால் அவன் மிகவும் சந்தோசப்படுவான் - தன் தவறை உணரும் வரை. அதே போல சுயம் அறியப்பட்டால் சந்தோசம் அதன் சுகத்தையும், வலி அதன் துன்பத்தையும் இழக்கும். சுகமும், துக்கமும் அவை உள்ளபடியே புரிந்துகொள்ளப்படும். அவை இரண்டுமே ஞாபகங்களை அல்லது முன்பே அனுமானிக்கப் பட்டவைகளை அடிப்படையாகக் கொண்ட நிபந்தனைக்குட் பட்ட பதில் செயல்; எதிர்வினை, வெறும் ஈர்ப்பும் எதிர்ப்புமாகப் பார்க்கப்படும். பெரும்பாலும் இன்ப துன்பங்கள் எதிர்பார்க்கப் படும் விதத்திலேயே. அனுபவப்படுகின்றன. இவை எல்லாமே சுயமாகச் சேர்த்துக் கொண்ட பழக்கங்களாலும், அவற்றின் மேல் கொண்டுள்ள உறுதியான புரிதல்களாலும் ஏற்படுபவை.

**கே:** இன்பம் வேண்டுமானால் கற்பனையாக இருக்கலாம். ஆனால் துன்பம் உண்மையானது.

**ம:** இன்பமும் துன்பமும் எப்போதும் சேர்ந்தே இருக்கின்றன. ஒன்றிலிருந்து விடுதலை என்பது இரண்டிலிருந்தும்தான். நீ இன்பத்தைப் பொருட்படுத்தாமல் இருந்தாயானால் துன்பத்திற்குப்

பயப்படத் தேவை இல்லை. இவையெல்லாம் அனுமானமான மதிப்பீடுகளே. ஆனால் இவை இரண்டுமே அல்லாத மகிழ்ச்சி ஒன்று உள்ளது. அது இவற்றிற்கு முற்றிலும் அப்பால் உள்ளது. உனக்குத் தெரிந்த மகிழ்ச்சி விவரிக்கப்படக் கூடியது. அளவிடப்படக் கூடியது. சொல்லப்போனால் அது புறவயப்பட்டது. ஆனால் புறவயப்பட்டது உன்னுடையதாக இருக்க முடியாது. உனக்கு அந்நியமாக உள்ள ஒன்றுடன் உன்னை அடையாளப்படுத்திக் கொள்வது பெரும் தவறு. இந்தமாதிரியான நிலைகளுடன் குழப்பிக் கொள்வது எங்கேயும் கொண்டு செல்லாது. மெய் என்பது அகவயப்பட்டவற்றிற்கும், புறவயப்பட்டவற்றிற்கும், எல்லா நிலைகளுக்கும், எல்லா வேறுபாட்டிற்கும் அப்பாற்பட்டது. கண்டிப்பாக அது அவற்றின் தோன்றும் இடமோ, தோற்றத்திற்கான ஆதாரமோ, அல்லது தோற்றத்தின் ஆணிவேரோ அல்ல. இவை மெய்யைப் பற்றிய அறியாமையால் வருவன - விவரிக்க முடியாத, இருத்தலுக்கும், இருத்தலற்றதிற்கும் அப்பாற்பட்ட மெய்யிலிருந்து அல்ல.

**கே:** நான் பல குருமார்களைத் தொடர்ந்து சென்றேன், பல கோட்பாடுகளைக் கற்றேன். இருப்பினும் எதுவுமே நான் தேடியதை எனக்குக் கொடுக்கவில்லை.

**ம:** நீ வேறொன்றையும் வேண்டாதிருந்தால் சுயத்தை அறியும் ஆசை கண்டிப்பாக நிறைவேற்றப்படும். ஆனால் நீ உனக்குள் மிகவும் நேர்மையாக இருக்க வேண்டும். நிஜமாகவே வேறொன்றையும் வேண்டக் கூடாது. ஆனால் நடுவில் நீ பலவற்றை நாடி, அவற்றை அடையும் முயற்சியில் இருந்தால் உன் முக்கிய நோக்கம் நீ மேலும் புத்திசாலி ஆகி, முரண்பட்ட ஆசைத் தூண்டுதல்களில் இருந்து விடுபடும் வரை தாமதப்படும். அலைக்கழிக்கப்படாமல், வெளிப்புறமாக எதையும் பார்க்காமல் உனக்குள் செல்.

**கே:**ஆனால் என் ஆசைகளும் அச்சங்களும் இன்னும் அங்கேயே இருக்கின்றன.

**ம:** உன் ஞாபகத்தில் தவிர வேறு எங்கே அவை இருக்கின்றன? ஞாபகத்தால் தோன்றிய எதிர்பார்ப்பில் அவற்றின் ஆரம்பம் இருக்கிறது என்று நீ அறிந்தால் அவை உன்னை உபத்திரவம் செய்ய மாட்டா.

**கே:** சமுதாயச் சேவை ஒரு முடிவற்ற வேலை என்று எனக்குத் தெரியும். ஏனெனில் முன்னேற்றமும், பின்னடைவும், வளர்ச்சியும் குறைதலும் ஒன்றாகவே நடக்கின்றன. அவற்றை எல்லாப் பக்கங்களிலும், எல்லா நிலைகளிலும் பார்க்கலாம். என்ன மிஞ்சுகிறது?

**ம:** நீ என்னென்ன வேலைகளை ஆரம்பித்தாயோ அவற்றை முடி. துன்பம் தரக்கூடிய உறுதியான சூழ்நிலைகளிலும், அந்தத் துன்பத்திலிருந்து விடுபடவும் தேவைப்பட்டால் ஒழிய புது வேலைகளை எடுக்காதே. உன்னை நீ முதலில் கண்டுபிடி. பிறகு அளவில்லாத ஆசீர்வாதங்கள் தொடரும். லாபங்களைக் கை விடுவதைப் போல உலகத்திற்கு லாபத்தைக் கொடுப்பது எதுவும் இல்லை. லாப நஷ்ட அடிப்படையில் யார் சிந்திக்காமல் இருக்கிறாரோ அவர்தான் உண்மையிலேயே அஹிம்சையைக் கடைப் பிடிப்பவர். ஏனெனில் அவர் எல்லா முரண்பாடுகளுக்கும் அப்பாற்பட்டவர்.

**கே:** ஆமாம், நான் எப்போதும் அஹிம்சை என்னும் கருத்தினால் ஈர்க்கப் படுகிறேன்.

**ம:** அடிப்படையாக, அஹிம்சை என்றால் 'நோகச் செய்யாதே' என்று அர்த்தம். நல்லது செய்வது என்பது முதலில் வருவதில்லை. ஆனால் நோகச் செய்யாமல் இருப்பது, துன்பத்தை அதிகப் படுத்தாதது முதலில் வருகிறது. மற்றவர்களை மகிழ்ச்சிப் படுத்துவது அஹிம்சை அல்ல.

**கே:** நான் மகிழ்ச்சிப் படுத்துவதைப் பற்றி பேசவில்லை. ஆனால் மற்றவர்களுக்கு உதவ விரும்புகிறேன்.

**ம:** மேற்கொண்டு உதவி தேவைப் படாமல் இருக்கச் செய்வதே மதிப்புள்ள ஒரே உதவி. திரும்பத் திரும்ப உதவுவது உதவியே அல்ல. உன்னால் ஒருவரை எல்லாவிதமான உதவிகளுக்கான

தேவைகளுக்கும் அப்பால் வைக்க முடிந்தால் ஒழிய மற்றவருக்கு உதவுவதைப் பற்றிப் பேசாதே.

**கே:** உதவிக்கான தேவைக்கு அப்பால் ஒருவர் எப்படிச் செல்ல முடியும்? மேலும் ஒருவர் மற்றவருக்கு அப்படி இருக்க உதவ முடியுமா?

**ம:** எல்லா இருப்பவைகளும், தனித்தனியே பிரிந்திருப்பதாலும், குறிப்பிட்ட அளவிற்குள் அடக்கப்படுவதாலும் வலி மிகுந்தவை என்று நீ புரிந்து கொண்டு, எல்லா உயிர்களுடனும் ஒன்றாக, தூய இருத்தலாக, ஒருங்கிணைந்து வாழ விருப்பப்படவும், வாழவும் உன்னால் முடிந்தால் நீ எல்லா உதவிகளுக்கான தேவைக்கும் அப்பால் சென்றுவிடுவாய். நீ உன் உபதேசத்தாலும், செயல்களினாலும், முக்கியமாக உன் இயல்பான இருத்தலினாலும் உதவலாம். உன்னிடம் இல்லாததை நீ மற்றவருக்குக் கொடுக்க முடியாது. நீ என்னவாக இல்லையோ அதை நீ வைத்திருக்க முடியாது. நீ என்னவோ அதைக் கொடுக்கலாம். அளவற்றுக் கொடுக்கலாம்.

**கே:** ஆனால், எல்லா இருத்தலும் வலி மிகுந்தவை என்பது உண்மையா?

**ம:** பிரபஞ்ச அளவிலான சுகத்திற்கான இந்தத் தேடுதலுக்கு வேறு என்ன காரணமாக இருக்க முடியும்? ஒரு சந்தோசமான மனிதன் சந்தோஷத்தைத் தேடுவானா? மக்கள் எவ்வளவு அமைதியற்று இருக்கிறார்கள், எவ்வளவு ஓடிக்கொண்டே இருக்கிறார்கள்! இது ஏனெனில் அவர்கள் வலியுடன் இருப்பதிலிருந்து விடுபட ஆரம்பத்திலேயே சுகத்தை நாடுகிறார்கள். அவர்களால் கற்பனை செய்யப்படும் எல்லா மகிழ்ச்சியும் திரும்பத் திரும்ப உண்டாகும் சுகத்திற்கான உத்திரவாதத்தில் இருக்கிறது.

**கே:** நான் எப்படி இருக்கிறேனோ, நான் எப்படி என்னைப் புரிந்துகொண்டு உள்ளேனோ அப்படி இருந்தால் சந்தோஷமாக இருக்க முடியாது என்றால் நான் என்ன செய்வது?

**ம:** நீ இப்போது இருப்பதாகத் தோன்றுவதை நிறுத்தலாம். நான் சொல்வதில் குரூரமானது எதுவும் இல்லை. ஒரு மனிதனை

அச்சுருத்தும் கனவிலிருந்து எழுப்புவது கருணை. வலியுடன் இருப்பதால் நீ இங்கு வந்துள்ளாய். நான் சொல்வது எல்லாம்: விழி, உன்னை அறி, நீயாக இரு. வலிக்கு முடிவு இன்பத்தில் அல்ல. நீ இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்டவன், விட்டேத்தியான, ஒதுக்கித்தள்ள முடியாதவன் என்று அறிந்தால் இன்பத்தைத் தேடுவதும், அதனால் விளைகின்ற துன்பமும் நின்றுவிடும். துன்பம் இன்பத்தைக் குறி வைக்கிறது. இன்பம் துன்பத்தில் முடிகிறது, இரக்கமில்லாமல்.

**கே:** *முடிவான நிலையில் மகிழ்ச்சி என்பது இருக்காதா?*

**ம:** துக்கமும் இருக்காது. சுதந்திரம் மட்டுமே இருக்கும். சந்தோசம் ஏதாவது ஒன்றைச் சார்ந்து இருக்கிறது. அதனால் அது தொலையலாம். எல்லாவற்றிலிருந்தும் சுதந்திரமாக இருப்பது என்பது எதையும் சார்ந்தது அல்ல. ஆகையால் அது தொலையாது. அந்தச் சுதந்திரத்தை அடை.

**கே:***நான் என் பூர்வ ஜன்மத்தின் காரணமாக துன்பப் படுமாறு பிறந்தவன் அல்லவா? சுதந்திரம் சாத்தியமானதா? நான் என் விருப்பப் படியாகவா பிறந்திருக்கிறேன்? நான் ஒரு சாதாரணமான உயிரினம் அல்லவா?*

**ம:**விழிப்புணர்வில் தோன்றி மறையும் தொடர்ச்சியான நிகழ்வுகள் அன்றி பிறப்பும், இறப்பும் வேறென்ன? பிரிந்திருப்பது மற்றும் அளவிற்கு உட்பட்டு இருப்பது என்னும் கருத்தால் அவை வலி மிகுந்தவை. துக்கத்திலிருந்து கண நேர நிவாரணத்தை நாம் சுகம் என்கிறோம். நாம் மகிழ்ச்சி என்று சொல்கின்ற முடிவில்லாத சுகத்தை எதிர்பார்த்து காற்றில் கோட்டை கட்டுகிறோம். இவை எல்லாம் பலவாறாகத் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டவை மற்றும் தவறாக உபயோகிக்கப்படுபவை. விழி, கடந்து செல். மெய்யாக வாழ்.

**கே:** *என் அறிவு அளவானது. என் சக்தி மிகக் குறைவானது.*

**ம:** சுயம், அறிவும் சக்தியும் தோன்றுவதற்கான ஆதாரமாக இருப்பதால் அவற்றிற்கு அப்பாற்பட்டது. பார்த்தும், உணரக் கூடியதும் மனதில் இருக்கிறது. தூய விழிப்புணர்வு, தூய

சாட்சிபாவம், அறிவும், விருப்பமும் இருப்பதாலோ, இல்லாததாலோ பாதிக்கப்படாமல் இருப்பது ஆகியவை சுயத்தின் தன்மை.

உன் இருத்தலை பிறந்து, இறக்கிற இந்த உடம்பிற்கு அப்பால் வியாபித்திருக்க வைத்திரு. அப்போது உன் பிரச்சனைகள் அனைத்தும் தீர்ந்துவிடும். நீ இறப்பதற்குப் பிறந்திருப்பதாக நம்புவதால் அவை இருக்கின்றன. உன்னை ப்ரம்மையிலிருந்து விடுவித்துச் சுதந்திரமாக இரு. நீ ஒரு குறுகிய அளவிலான நபர் அல்ல.



# 35. மாபெரும் குரு உனக்குள் இருக்கும் சுயம்

**கேட்பவர்:** ஆசைகளிலிருந்தும், விருப்பங்களிலிருந்தும் விடுபடுவதுதான் மெய்ஞானம் அடைவதற்கான முதல் விதிமுறை என்று எல்லோரும் சொல்லக் கேட்கிறேன். ஆனால் இந்த விதி முறையை என்னால் நிறைவேற்ற முடியாது என்று தோன்றுகிறது. தன்னை அறியாமல் இருப்பது ஆசைகளை உருவாக்குகிறது. ஆசைகள் அறியாமையைத் தொடர வைக்கின்றன. உண்மை யிலேயே இது ஒரு முடிவில்லாத கொடுமையான தொடர் சுழற்சி.

**மஹராஜ்:** நிறைவேற்றுவதற்கான விதிமுறைகள் எதுவும் இல்லை. செய்ய வேண்டியது எதுவும் இல்லை. விட வேண்டியது எதுவும் இல்லை. நீ கிரகிக்கின்ற எதுவும் நீ அல்ல, உன்னுடையது அல்ல என்பதை வெறுமனே பார்த்து, ஞாபகம் வைத்திரு. அது விழிப்புணர்வின் புலத்திற்குள் இருக்கிறது. ஆனால் நீ அந்தப் புலமும் அல்ல, அதன் பொருளடக்கமும் அல்ல, அந்தப் புலத்தை அறிபவன்கூட அல்ல. செயல்களைச் செய்யவேண்டும் என்னும் உன் கருத்துதான் உன் முயற்சிகளின் விளைவுகளில் உன்னைச் சிக்க வைக்கிறது. - செயல்படுவதற்கான காரணம், ஆசை, தோல்வி, விரக்தி உணர்வு - இவை எல்லாம் உன்னைப் பின்னால் பிடித்து வைக்கின்றன. என்ன நடக்கிறதோ அதைப் பார்த்து, நீ அவற்றிற்கு அப்பால் உள்ளவன் என்று அறிந்துகொள்.

**கே:** நான் எதுவுமே செய்ய வேண்டியதில்லை என்று அதற்கு அர்த்தமா?

**ம:** நீ செய்யாமல் இருக்க முடியாது. என்ன நடக்கிறதோ அது நடந்து கொண்டே இருக்க வேண்டும். திடீரென்று நிறுத்தினால் நொறுங்கி விடுவாய்.

**கே:** இது அறியப்படுவதும் அறிபவரும் ஒன்றாவதா?

**ம:** இவை இரண்டுமே மனதின் கருத்துக்களே - வார்த்தைகள் அவற்றை வெளிப்படுத்துகின்றன. அவற்றில் சுயம் என்பது கிடையாது. சுயம் என்பது அவை இரண்டில் ஒன்றிலும்கூட இல்லை. அவற்றிற்கு இடையிலோ, அவற்றிற்கு அப்பாலோ இல்லை. அதை மனதளவில் தேடுவது வீண். தேடுவதை நிறுத்தி, அது இங்கேயே, இப்போதே இருப்பதைப் பார். அதுதான் நீ நன்கு அறிந்த 'நான்' என்னும் விழிப்புணர்வு. நீ செய்ய வேண்டியதெல்லாம் உன்னை விழிப்புணர்வின் புலத்திற்குள் இருப்பதாகவோ, அல்லது விழிப்புணர்வுப் புலத்தால் ஆனதாகவோ நினைப்பதை நிறுத்துவதுதான். இதைச் செய்தால் போதும். நீ தெளிவான கவனத்தை இதன்மீது வைத்திருக்க வேண்டும். நீ இந்தக் கருத்துக்களை முன்பே ஜாக்கிரதையாகப் பரிசீலித்திருக்காவிட்டால் ஒருமுறை நான் சொல்வதைக் கேட்டால் போதாது. உன் பழைய அனுபவங்களையும் சாதனைகளையும் மறந்துவிடு. வாழ்வின் மழையையும், காற்றையும் பெற்றுக்கொள்ள திகம்பரராக (நிர்வாணமாக) நில். அப்போது ஒரு வாய்ப்பு இருக்கிறது.

**கே:** பக்திக்கு உங்கள் போதனைகளில் ஏதாவது இடம் உள்ளதா?

**ம:** நீ உடல் நலமில்லாமல் இருக்கும் போது ஒரு மருத்துவரிடம் செல்கிறாய். அவர் என்ன நோய் என்றும், அதற்கு என்ன தீர்வு என்றும் சொல்வார். உனக்கு அவர் மேல் நம்பிக்கை இருந்தால் காரியங்கள் எளிமையாகும். நீ மருந்தை உட்கொள்வாய், உணவுக் கட்டுப்பாட்டைக் கடைப் பிடிப்பாய், நலம் அடைவாய். ஆனால் அவரை நம்பாவிட்டாலும் ஒருமுறை முயற்சி செய்து பார்ப்பாய் அல்லது நீயே மருத்துவத்தைக் கற்பாய். இவை எல்லாவற்றிலும் நலமடைய வேண்டும் என்னும் உன் ஆசைதான் உன்னை இயக்குகிறது. மருத்துவர் அல்ல.

நம்பிக்கை இல்லாமல் அமைதி இல்லை. யாரேனும் ஒருவரை நீ எப்போதும் நம்புவாய் - அது உன் தாயாகவோ, அல்லது உன் மனைவியாகவோ இருக்கலாம். எல்லோரையும் விட சுயத்தை அறிந்த, ஞான விடுதலை அடைந்த மனிதர் மிகவும் நம்பிக்கைக்கு உரியவர். ஆனால் வெறுமனே நம்பினால் மட்டும் போதாது.

ஆசையும் பட வேண்டும். விடுதலைக்கான வேட்கை இல்லாமல் விடுதலை அடைவாய் என்னும் நம்பிக்கையால் மட்டும் என்ன பயன்? ஆசையும், நம்பிக்கையும் ஒன்றாக இணைந்து செல்ல வேண்டும். ஆசை தீவிரமாக இருந்தால் உதவி எளிதாகக் கிடைக்கும். சீடனுக்குக் கற்றுக் கொள்ள ஆசை இல்லாதிருக்கும் வரை உயர்ந்த குருகூட உதவ முடியாது. ஆர்வமும் மனமார்ந்த முயற்சியும் மிக முக்கியம். நம்பிக்கை அனுபவத்தின் மூலம் வரும். உன் குறிக்கோளின் மீது தீவிரமாகப் பற்றுக் கொண்டிரு. உனக்கு யார் வழிகாட்ட முடியுமோ அந்த குரு மீது அதைத் தொடர்ந்து தானாகவே பக்தி ஏற்படும். உன் ஆசையும் நம்பிக்கையும் உறுதியாக இருந்தால் அவருடைய வார்த்தைகள் வேலைசெய்து உன்னை உன் குறிக்கோளிடம் கொண்டு போய்ச் சேர்க்கும். ஏனெனில் தயக்கத்தாலும் விட்டுக் கொடுப்பதாலும் நீ தாமதப் படுத்த மாட்டாய்.

மாபெரும் குரு உனக்குள் இருக்கும் சுயம் (அந்தராத்மா). அதுதான் உண்மையான உச்சஉயர்வான குரு (சத்குரு). அது மட்டுமே உன்னை உன் குறிக்கோளிடம் கொண்டு போய்ச் சேர்க்கும். அது மட்டுமே உன்னைப் பயணத்தின் முடிவில் சந்திக்கும். அதன்மீது நம்பிக்கை வை. உனக்கு வெளியில் வேறு குரு தேவை இல்லை. ஆனால் அதைக் கண்டுபிடிக்க உறுதியான ஆசை உனக்கு இருக்க வேண்டும். அதற்குத் தடையும், தாமதமும் ஏற்படுத்துகின்ற எதையும் நீ செய்யக் கூடாது. வருத்தப்படுவதில் சக்தியையும், நேரத்தையும் வீணடிக்காதே. உன் தவறுகளில் இருந்து கற்றுக் கொள். அவற்றைத் திரும்பச் செய்யாதே.

**கே:** நான் ஒரு தனிப்பட்ட கேள்வி கேட்கலாமா?

**ம:** கேள்.

**கே:** நீங்கள் ஒரு மான் தோலின் மேல் அமர்ந்திருப்பதைப் பார்க்கிறேன். அது அஹிம்சையுடன் எப்படி ஒத்துப் போகிறது?

**ம:** நான் வேலை பார்த்த காலம் முழுவதும் சுருட்டு தயாரித்து விற்றேன். அதனால் மக்கள் தங்கள் உடல் நலத்தைக் கெடுத்துக் கொண்டார்கள். என் வீட்டுக் கதவிற்கு முன்னாள் முனிசிபாலிட்டி

ஒரு பொதுக் கழிப்பிடத்தை அமைத்து என் நலத்தைக் கெடுக்கிறது. இந்த வன்முறையான உலகத்தில் எதோ ஒரு விதமான வன்முறையிலிருந்து ஒருவர் எப்படி அப்பால் இருக்க முடியும்?

**கே:** கண்டிப்பாகத் தவிர்க்கக் கூடிய வன்முறையைத் தவிர்க்க வேண்டும். இருப்பினும் இந்தியாவில் ஒவ்வொரு சுவாமிஜியும் உட்காருவதற்கு புலி, சிங்கம், சிறுத்தை அல்லது மான் தோலை வைத்திருக்கிறார்கள்.

**ம:** பழங்காலத்தில் பிளாஸ்டிக் இல்லை. அதனால் தோல்தான் ஈரத்தைத் தவிர்க்கும். வாத நோய் துறவியையும் விட்டு வைக்காது. அதனால் நீண்ட தியானத்திற்குத் தோல் தேவை என்னும் நடைமுறை ஏற்பட்டுவிட்டது. எப்படி முரசுத் தோல் கோவிலில் உள்ளதோ அப்படி மான் தோல் யோகிக்கு. நாங்கள் அதைக் கவனிப்பது இல்லை.

**கே:** ஆனால் தோலுக்காக விலங்கைக் கொல்ல வேண்டும்.

**ம:** தோலுக்காக ஒரு புலியை எந்த யோகியும் கொன்றதாக நான் கேள்விப்பட்டது இல்லை. கொல்பவர்கள் யோகிகள் அல்லர். யோகிகள் கொல்ல மாட்டார்கள்.

**கே:** நீங்கள் ஏற்றுக் கொள்ளாததை தோலின் மேல் உட்கார மறுப்பதனால் வெளிப்படுத்தலாம் அல்லவா?

**ம:** என்ன ஒரு விசித்திரமான கருத்து! நான் முழுப் பிரபஞ்சத்தையும் அங்கீகரிப்பது இல்லை. ஏன் ஒரு தோலை மட்டும் நிராகரிக்க வேண்டும்?

**கே:** பிரபஞ்சத்தில் என்ன தவறு?

**ம:** தன்னை மறப்பதுதான் மிகப்பெரிய இழப்பு. எல்லாச் சேதங்களும் அதிலிருந்துதான் உருவாகின்றன. மிக முக்கிய மானதைப் பொருட்படுத்து. முக்கியமில்லாதது தன்னைத்தானே பார்த்துக் கொள்ளும். ஒரு இருண்ட அறைக்குள் தடுமாறாதே. ஜன்னல்களை முதலில் திற. வெளிச்சத்தை உள்ளே விடுவது எல்லாவற்றையும் சுலபமாக்கும். நாம் நம்மை உள்ளவாறு பார்த்து மாறும் வரை மற்றவர்களை முன்னேற்ற முயற்சிக்காமல்

காத்திருக்கவேண்டும். முடிவற்ற கேள்விகளால் சுற்றிச் சுற்றி வர அவசியமில்லை; உன்னைச் சோதனை செய். ஒவ்வொன்றும் அதனதன் சரியான இடத்தில் விழும்.

**கே:** மூலத்திற்குத் திரும்பவேண்டும் என்கின்ற தூண்டுதல் மிகவும் அரிதானது. அது இயல்பானதா?

**ம:** ஆரம்பத்தில் வெளிப்புறமாகச் செல்வதும், முடிவில் உட்புறமாகத் திரும்புவதும் இயல்பு. ஆனால் உண்மையில் இரண்டும் ஒன்றேதான் - சுவாசத்தை உள்ளே இழுத்து வெளியே விடுவதைப் போல.

**கே:** அதேபோல உடலும், உடலுக்குள் வசிப்பவரும் ஒன்று அல்லவா?

**ம:** காலம் மற்றும் இடத்தில் நடக்கும் சம்பவங்கள் - பிறப்பு மற்றும் இறப்பு, காரணம் மற்றும் காரியம் - இவை எல்லாவற்றையும் ஒன்றாகக் கருதலாம்; ஆனால் உடலும், உடலில் வசிப்பதும் ஒரே விதமானவை அல்ல. உடல், காலம் மற்றும் இடத்தில் மறைந்து போகக் கூடியதாகவும், அளவானதாகவும் இருக்கிறது. ஆனால் உடலில் வசிப்பது காலமற்றது, இடமற்றது, சாசுவதமானது, எல்லாவற்றிலும் ஊடுருவி இருப்பது. ஆனால் இரண்டையும் ஏகரூபமாக அடையாளம் காண்பது மாபெரும் தவறு. இதுதான் முடிவற்ற துன்பத்திற்குக் காரணம். மனதையும் உடலையும் ஏகரூபம் என நீ பேசலாம்; ஆனால் உடல்-மனம் என்பது அடிப்படையான உண்மை அல்ல.

**கே:** உடலில் வசிப்பது யாராக இருந்தாலும் அதுதான் உடலைக் கட்டுப்படுத்துகிறது. எனவே அதுதான் அதற்குப் பொறுப்பு.

**ம:** ஒரு பிரபஞ்ச சக்தி இருக்கிறது. அதுதான் கட்டுப் படுத்துகிறது. அதுதான் பொறுப்பு.

**கே:** அப்படியானால் நான் என் விருப்பப்படி என்ன வேண்டுமானாலும் செய்துவிட்டு பழியைப் பிரபஞ்ச சக்தியின் மேல் போட்டு விடலாமா? எவ்வளவு சுலபம்!

**ம:** ஆமாம். மிகவும் சுலபம். இயங்கும் அனைத்திற்கும் பின்னால் இருக்கும் அடிப்படையான இயங்குகின்ற சக்தியை அறிந்து, அதனிடம் எல்லாவற்றையும் விட்டு விடு. நீ தயங்காமலும், ஏமாற்றாமலும் இருந்தால் மெய்யிற்கு இதுதான் மிகக் குறுகிய வழி. ஆசையும், அச்சமும் படாமல் எல்லாக் கட்டுப்பாடுகளையும், பொறுப்புகளையும் உதறிவிட்டு ஸ்திரமாக இரு.

**கே:** என்ன ஒரு பைத்தியக்காரத்தனம்!

**ம:** ஆமாம், தெய்வீகப் பைத்தியகாரத்தனம். தனிப்பட்ட கட்டுப்பாட்டில் வைத்திருத்தல் மற்றும் தனிப்பட்ட பொறுப்பு என்னும் ப்ரம்மையை விட்டு விடுவதால் என்ன தவறு? இரண்டுமே மனதில்தான் உள்ளன. நீ கட்டுப்பாட்டில் வைத்திருப்பதாக நினைக்கும்வரை நீதான் பொறுப்பு என்றும் நினைக்க வேண்டும். ஒன்று மற்றொன்றைக் குறிக்கிறது.

**கே:** எப்படி பிரபஞ்சமயமான சக்தி குறிப்பிட்ட ஒன்றிற்குக் காரணமாக முடியும்?

**ம:** பூமியில் இருக்கும் எல்லா உயிர்களும் சூரியனைச் சார்ந்து இருக்கின்றன. இருப்பினும் நடக்கின்ற எல்லாவற்றிற்கும் நீ சூரியனைக் குற்றம் சொல்ல முடியாது - அதுதான் முடிவான காரணமாக இருந்தாலும். வெளிச்சம் பூவின் வர்ணத்தைக் கொடுக்கிறது. ஆனால், அது அதைக் கட்டுப்படுத்துவதோ, அதற்கு நேரடியாகப் பொறுப்போ அல்ல. அதை சாத்தியப் படுத்துகிறது. அவ்வளவுதான்.

**கே:** எனக்கு இவற்றில் என்ன பிடிக்கவில்லை என்றால் ஒரு பிரபஞ்ச சக்தியிடம் அடைக்கலம் புகுவதுதான்.

**ம:** நிஜத்தைப் பற்றி நீ தர்க்கம் செய்யக் கூடாது.

**கே:** யாருடைய நிஜம்? உங்களுடையதா அல்லது என்னுடையதா?

**ம:** உன்னுடையது. நீ என்னுடைய நிஜத்தை மறுக்க முடியாது. ஏனெனில் உனக்கு அதைத் தெரியாது. உனக்கு அதைத் தெரிந்திருந்தால் நீ மறுக்க மாட்டாய். இங்குதான் பிரச்சனை

இருக்கிறது. நீ உன் கற்பனையை நிஜமாகவும், என் நிஜத்தைக் கற்பனையாகவும் எடுத்துக் கொள்கிறாய். எனக்கு உறுதியாக எல்லாமும் ஏகரூபம்தான் என்று தெரியும். வித்தியாசங்கள் பிரிப்பதில்லை. நீ எல்லாவற்றிற்கும் காரணம். அல்லது நீ எதற்கும் காரணம் அல்ல. நீ ஒரு உடலை மட்டுமே கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதாகவும், அதற்குத்தான் பொறுப்பு என்றும் கற்பனை செய்வது உடல்-மனதின் திரிபு.

**கே:** இருப்பினும் உங்கள் உடலால் வரையறுக்கப் பட்டிருக்கிறீர்கள்.

**ம:** உடல் சம்பந்தப் பட்ட சங்கதிகளுக்கு மட்டுமே. அதை நான் பொருட்படுத்துவது இல்லை. அது மழைவரும் பருவகாலத்தைத் தாங்கிக் கொள்வது போன்று. அவை வரும். போகும் - என்னைப் பாதிப்பது இல்லை. அதே போல உடல்-மனம் வரும்; போகும் - உயிர் புதுப்புது வெளிப்பாடுகளைத் தேடிக்கொண்டு எப்போதும் இருக்கும்.

**கே:** நீங்கள் எல்லாத் தீங்கிற்குமான பொறுப்பை கடவுளின் மீது சுமத்தாதவரை எனக்குத் திருப்தி. நான் புரிந்துகொள்ளலாம் அல்லது புரிந்துகொள்ளாமலும் இருக்கலாம். ஒரு கடவுள் இருக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை அவர் மனித மனதால் முன்பே உருவகிக்கப் பட்ட ஒரு கருத்து. அவர் உங்களுக்கு ஒரு மெய்யான வராக இருக்கலாம். ஆனால், சமுதாயம் கடவுளைவிட எனக்கு மெய்யானது. ஏனெனில் நான் அதனால் உருவாக்கப் பட்ட ஒரு பொம்மை மற்றும் அதன் கைதி. உங்களுடைய மதிப்பீடுகள் அறிவார்ந்தவை; அன்பானவை. சமுதாயத்தினுடையதோ சூழ்ச்சி கரமான சுயநலமானது. நான் உங்களுடைய உலகத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட உலகத்தில் வாழ்கிறேன்.

**ம:** யாரும் கட்டாயப் படுத்தவில்லை.

**கே:** உங்களை யாரும் கட்டாயப் படுத்தவில்லை. ஆனால் நான் கட்டாயப் படுத்தப்படுகிறேன். என் உலகம் கொடுமையானது; கண்ணீராலும், கம்பலையாலும், வலியாலும் நிறைந்திருப்பது. அதை அறிவாற்றலாலும், பரிணாமம் மற்றும் கர்மா ஆகிய

கோட்பாடுகளாலும் விளக்குவது காயத்தை மேலும் காயப் படுத்துவதுபோல் ஆகும். கொடூரமான உலகத்தின் கடவுள் இரக்கமற்றவர்.

**ம:** நீதான் உன் உலகத்தின் கடவுள். நீ முட்டாள் மற்றும் இரக்கமற்றவன். கடவுள் முன்பே உருவகிக்கப்பட்ட ஒரு கருத்தாக, உன் சொந்த உருவாக்கமாக இருந்துவிட்டுப் போகட்டும். நீ யார் என்று சோதனை செய். கொடூரம் நிறைந்த ஒரு உலகத்தில் உண்மை, பவித்ரம் மற்றும் அழகைத் (சத்தியம், சிவம், சுந்தரம்) தேடும் ஆசையோடு நீ எப்படி வாழ்கிறாய் என்று கண்டு பிடி. உனக்குக் கடவுள் என்பது யார் என்றோ, எதைப் பற்றிப் பேசுகிறாய் என்றோ தெரியாதபோது கடவுளுக்கு ஆதரவாகவோ அல்லது விரோத மாகவோ விவாதிப்பதில் என்ன பிரயோஜனம்? அச்சத்திலும், எதிர்பார்ப்பிலும் பிறந்து, ஆசையாலும், கற்பனையாலும் வடிவமைக்கப்பட்ட கடவுள், நீக்கமற நிறைந்திருக்கின்ற சக்தியாக, பிரபஞ்சத்தின் மனமும் இதயமுமாக இருக்க முடியாது.

**கே:** நான் வாழும் உலகமும், நான் நம்பும் கடவுளும் கற்பனையின் உருவாக்கங்கள் என்று ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அவை ஆசையினால் எப்படி உருவாக்கப்பட்டன? நான் ஏன் ஒரு வலிமிகுந்த உலகத்தையும், ஒரு அலட்சியமான கடவுளையும் கற்பனை செய்ய வேண்டும்? என்னைக் கொடூரமாக ஏமாற்றிக் கொள்ள என்னிடம் என்ன தவறு உள்ளது? 'அது முடித்துக் கொள்ளவேண்டிய ஒரு கனவு' என்று ஞானம் பெற்ற மனிதர் என்னிடம் சொல்கிறார். ஆனால் அவரும் அந்தக் கனவின் ஒரு பகுதி அல்லவா? நான் வெளியேறும் வழி தெரியாமல் சிக்கிக் கொண்டதாக நினைக்கிறேன். நீங்கள் சுதந்திரமாக இருப்பதாகச் சொல்கிறீர்கள். எதிலிருந்து சுதந்திரமாக உள்ளீர்கள்? எனக்கு வார்த்தைகளால் உணவூட்டாதீர்கள். எனக்கு ஞானத்தைக் கொடுங்கள். நான் விழிக்க எனக்கு உதவுங்கள். ஏனெனில் நீங்கள்தான் நான் தூக்கத்தில் புரள்வதைப் பார்க்கிறீர்கள்.

**ம:** நான் சுதந்திரமானவன் என்று சொன்னால் நான் வெறுமனே ஒரு நிஜத்தைத்தான் சொல்கிறேன். நீ வயது முதிர்ந்தவனாய் இருந்தால் குழந்தைத்தனத்திலிருந்து விடுபட்டவன். நான் எல்லா

விவரிப்பிலிருந்தும், அடையாளத்திலிருந்தும் விடுபட்டவன். நீ என்னதான் கேட்டாலும், பார்த்தாலும், நினைத்தாலும் நான் அவை அல்ல. ஒரு உளவியல் காட்சியாகவோ அல்லது ஒரு கருத்தாகவோ இருப்பதிலிருந்து நான் சுதந்திரமானவன்.

**கே:** இருப்பினும் உங்களுக்கு ஒரு உடல் இருக்கிறது. நீங்கள் அதைச் சார்ந்து இருக்கிறீர்கள்.

**ம:** மறுபடியும் உன் கருத்துதான் சரியானது என்று நீ எண்ணுகிறாய். நான் திரும்பவும் சொல்கிறேன்: நான் ஒரு உடலாக இருக்கவில்லை; தற்போதும் இல்லை; இருக்கப் போவதும் இல்லை. எனக்கு இது நிஜம். நானும் பிறந்தேன் என்னும் ப்ரம்மையில் இருந்தேன். ஆனால் என் குரு, பிறப்பதும் இறப்பதும் வெறும் கருத்துக்கள் என்று என்னை அறிய வைத்தார் - பிறப்பு என்பது 'எனக்கு ஒரு உடல் இருக்கிறது' என்னும் கருத்து; இறப்பு என்பது 'என் உடல் அழிந்துவிட்டது' என்னும் கருத்து என்று. இப்போது நான் ஒரு உடல் அல்ல என்று தெரிந்த பிறகு உடல் இருக்கலாம் அல்லது இல்லாமல் போகலாம். அது என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தும்? உடல் - மனம் என்பது ஒரு அறை மாதிரி. அது இருக்கும். ஆனால் நான் எல்லா நேரமும் அதில் வசிக்க வேண்டியது இல்லை.

**கே:** இருப்பினும் ஒரு உடல் உள்ளது. அதை நீங்கள் பாதுகாக்கின்றீர்கள்.

**ம:** எந்தச் சக்தி உருவாக்கியதோ அந்த சக்தி அதைப் பாதுகாக்கிறது.

**கே:**நாம் ஒவ்வொரு நிலையாக எப்போதும் தாவிக் கொண்டே இருக்கிறோம்.

**ம:** இரண்டு நிலைகள் கவனிக்கத்தக்கவை: நிஜங்களால் ஆன பௌதீக நிலை மற்றும் கருத்துக்களால் ஆன மனோ நிலை. நான் இரண்டிற்குமே அப்பாற்பட்டவன். உன்னுடைய நிஜங்களோ, கருத்துக்களோ என்னுடையவை அல்ல. நான் பார்ப்பது அப்பால் உள்ளது. என்னுடைய பக்கத்திற்குக் குதித்து வா. வந்து என்னுடன் பார்.

**கே:** நான் சொல்ல விரும்புவதெல்லாம் மிக எளிமையானது: 'உடல்தான் நான்' என்று நான் நம்பும்வரை 'கடவுள் என் உடலைப் பார்த்துக் கொள்வார்' என்று நான் சொல்லக் கூடாது. கடவுள் பார்த்துக் கொள்ள மாட்டார். அவர் அதைப் பட்டினி போட்டு, நோயுற்று, இறக்க வைத்து விடுவார்.

**ம:** வெறும் உடம்பிலிருந்து வேறு என்ன எதிர் பார்க்கிறாய்? அதைப் பற்றி ஏன் இவ்வளவு ஆர்வத்துடன் இருக்கிறாய்?

நீ உன்னை உடல் என்று நினைப்பதால் அதை அழிவற்றதாக இருக்க வேண்டுகிறாய். தேவையான யோகப் பயிற்சிகளினால் நீ அதன் ஆயுளைக் கூடுமானவரை நீடிக்கலாம். ஆனால் அதனால் முடிவாக என்ன பயன்?

**கே:** நீண்ட ஆயுளுடனும், உடல் நலத்துடனும் வாழ்வது நல்லது. அது நாம் குழந்தைப் பருவத்திலும், இளமையிலும் செய்த தவறுகளையும், வயது முதிர்ந்த பருவத்தின் விரக்திகளையும், வயதான காலத்தின் துன்பங்களையும், அறிவாற்றல் அற்ற தன்மையையும் தவிர்க்க ஒரு வாய்ப்பு கொடுக்கிறது.

**ம:** எல்லா வகையிலும் நீண்டகாலம் வாழ். ஆனால் அது உன் கையில் இல்லை. உன் பிறந்த தேதியையும், இறக்கும் தேதியையும் உன்னால் தீர்மானிக்க முடியுமா? நாம் பேசுவது ஒரே மொழியில் இல்லை. உன்னுடையது உத்தேசத்திலும், அனுமானத்திலும் தொங்குகின்ற நம்பிக்கை ஊட்டப்பட்ட பேச்சு. நீ உறுதியாக இல்லாதவற்றைப் பற்றி உறுதியுடன் பேசுகிறாய்.

**கே:** அதனால்தான் நான் இங்கு இருக்கிறேன்.

**ம:** நீ இன்னும் இங்கு இல்லை. நான் இங்கு இருக்கிறேன். நீ என்னை உன்னுடைய வாழ்க்கையை வாழவும், உன்னைப்போல் உணரவும், உன் மொழியில் பேசவும் வேண்டுகிறாய். என்னால் அது முடியாது. அது உனக்கு உதவாது. நீ என்னிடம் வர வேண்டும். வார்த்தைகள் மனதினுடையவை. மனம் அவற்றைத் தெளிவற்ற தாக்கும்; திரிக்கும். எனவேதான் வார்த்தைகளைக் கடந்து செல்வதும், என்னுடைய பக்கத்திற்கு வருவதும் முற்றிலும் அவசியம்.

**கே:** என்னை உங்கள் பக்கத்திற்கு எடுத்துக் கொள்ளுங்கள்.

**ம:** நான் அதைத்தான் செய்கிறேன். ஆனால் நீ தடுக்கிறாய். நீ கருத்துக்களுக்கு மெய்த்தன்மையைக் கொடுக்கிறாய். ஆனால் கருத்துக்கள் மெய்யின் திரிபுகள். எல்லாக் கருத்து உருவாக்கத்தையும் விட்டுவிட்டு, மௌனமாகவும், கவனமாக விழிப்புடனும் இரு. அதில் நம்பிக்கையுடனும், மனமார்ந்த ஈடுபாட்டுடனும் இரு. அப்போது எல்லாவற்றிற்கும் மேலான நன்மை உனக்கு ஏற்படும்.



# 36. கொல்வது கொல்பவரைத்தான் வருத்தும்; கொல்லப்பட்டதை அல்ல

**கேட்பவர்:** ஆயிரம் வருடங்களுக்கு முன்பு ஒரு மனிதர் வாழ்ந்து இறந்தார். அவருடைய அடையாளம் (அந்தகர்ணா) ஒரு புது உடலில் மறுபடியும் தோன்றியது. அவருக்கு ஏன் அவருடைய முற்பிறவி ஞாபகம் இல்லை? அப்படி அவருக்கு முடியுமானால் ஞாபகத்தை விழிப்புணர்விற்குள் கொண்டு வர முடியுமா?

**மஹராஜ்:** அதே நபர்தான் மறுபடியும் புது உடலில் தோன்றினார் என்று எப்படி உனக்குத் தெரியும்? ஒரு புது உடல் முற்றிலும் ஒரு புது மனிதனாக இருக்கலாம்.

**கே:** ஒரு பானையில் நெய் இருப்பதைக் கற்பனை செய்யுங்கள். பானை உடைந்தாலும் நெய் அப்படியே இருக்கும். அதை வேறு பானைக்கு மாற்றிவிடலாம். பழைய பானை அதன் மணத்தைக் கொண்டிருக்கும். புதுப் பானையும் அதன் மணமுடன் இருக்கும். நெய் அதன் மணத்தை ஒரு பானையிலிருந்து வேறு பானைக்குக் கொண்டு செல்லும். அதே போல தனி நபர் அடையாளமும் ஒரு உடலிலிருந்து வேறு உடலுக்கு மாற்றப்படும்.

**ம:** சரி. உடல் என்று ஒன்று இருக்கும்போது அதன் தனித் தன்மைகள் நபரைப் பாதிக்கின்றன. உடல் இல்லாதபோது 'நான்' என்னும் உணர்வில் நாம் நம் தூய அடையாளத்தைக் கொண்டிருக் கிறோம். ஆனால் நீ ஒரு புதுஉடலில் பிறக்கும் போது முன்பு அனுபவித்த உலகம் எங்கு உள்ளது?

**கே:** ஒவ்வொருவரும் தன் சொந்த உலகத்தை அனுபவிக்கிறார்.

**ம:** தற்போதைய உடலில் பழைய உடல் - இது வெறும் கற்பனையா அல்லது ஒரு ஞாபகமா?

**கே:** கற்பனைதான். மூளை எவ்வாறு அது அனுபவிக்காததை ஞாபகம் வைத்துக்கொள்ளும்?

**ம:** நீயே உன் கேள்விக்குப் பதில் சொல்லிவிட்டாய். எதற்காகக் கற்பனைகளுடன் விளையாட வேண்டும்? நீ உறுதியாக இருப்பதுடன் திருப்தியாக இரு. நீ உறுதியாக இருக்கக் கூடிய ஒன்றே ஒன்று 'நான்' என்பது மட்டும்தான். அதில் ஸ்திரமாக இரு. மற்ற எல்லாவற்றையும் ஒதுக்கித் தள். இதுதான் யோக மார்க்கம்.

**கே:** நான் வார்த்தை வடிவத்தில் மட்டுமே விட்டு விடலாம். ஞாபகத்திலிருந்து அதிகபட்சமாக 'இது நான் அல்ல. இது என்னுடையது அல்ல. நான் இவற்றிற்கு அப்பாற்பட்டவன்' என்னும் சூத்திரத்தை வேண்டுமானால் நான் திரும்பத் திரும்பச் சொல்லலாம்.

**ம:** நல்லது. ஆரம்பத்தில் வார்த்தைகளால். பிறகு மனதாலும், உணர்ச்சி பூர்வமாகவும். பிறகு செயலில். உனக்குள் இருக்கும் மெய்யின் மேல் கவனத்தைத் திருப்பு. அப்போது அது வெளிப்படும். இது வெண்ணெய்க்காகத் தயிரைக் கடைவது போல. சரியாகவும், பொறுப்புடனும் இதைச் செய். கண்டிப்பாக அதன் விளைவை அடைவாய்.

**கே:** பரிபூரணம் எப்படி ஒரு செய்முறையின் விளைவாக இருக்கும்?

**ம:** நீ சொல்வது சரி. சார்ந்தது பூரணம் ஆக முடியாது. ஆனால் அது பூரணத்தைத் தடுக்கலாம் - எப்படி தயிரைக் கடையாமல் இருந்தால் வெண்ணெய் வராதோ அப்படி. மெய்தான் உந்துதலை உருவாக்குகிறது. அகம் புறத்தைத் தூண்டுகிறது. புறம் ஆர்வத்துடனும் முயற்சியுடனும் செயல் புரிகிறது. ஆனால் முடிவாக அகமும் இல்லை. புறமும் இல்லை. விழிப்புணர்வின் ஒளிதான் உருவாக்குபவரும், உருவாக்கப்படுவதும்; அனுபவிப்பவரும், அனுபவமும்; உடலும், உடலில் வசிப்பதும். இவை எல்லாமும் எதனால் வெளிப்படுகின்றனவோ அந்தச் சக்தியைக் கவனி. அப்போது உன் எல்லாக் கேள்விகளும் முடிவிற்கு வரும்.

**கே:** எந்தச் சக்தி வெளிப்படுத்துகிறது?

**ம:** அது தீவிரமான ஆசைகளால் உந்தப்பட்ட கற்பனையால் பிறக்கும் சக்தி.

**கே:** இவை எல்லாம் எனக்குத் தெரியும். ஆனால் என் சக்தி அதன் மேல் வேலை செய்வதில்லை.

**ம:** இது விளைவுகளுக்காக ஏங்குவதால் பிறக்கும் உன்னுடைய மற்றுமொரு ப்ரம்மை.

**கே:** உபயோகமான செயலினால் என்ன தவறு?

**ம:** அது இங்கு பொருந்தாது. இந்தச் சமாச்சாரங்களில் பிரயோஜனம், செயல் என்னும் கேள்விகளுக்கே இடம் இல்லை. உனக்குத் தேவையானது எல்லாம் கேட்பது, ஞாபகம் வைத்துக் கொள்வது, அதைப் பற்றிச் சிந்திப்பது ஆகியவையே. இது சாப்பிடுவதைப் போன்றது. நீ செய்யக் கூடியதெல்லாம் உணவைக் கடித்து, மென்று, விழுங்குவதுதான். மேற்கொண்டு ஜீரணமாவது பிரக்ஞை இல்லாமல், தானாக நடக்கும். நடிகர் மற்றும் மேடை ஆகிய இரண்டுமே மனம் என்பதைக் கேள். ஞாபகம் வைத்திரு. புரிந்து கொள். எல்லாமுமே மனோமயம்தான். நீ மனம் மட்டுமே அல்ல. மனம் பிறக்கிறது. மறுபடியும் பிறக்கிறது. நீ அல்ல. மனம் உலகத்தையும், அதன் அற்புதமான வகைகளையும் உருவாக்குகிறது. எப்படி ஒரு நல்ல நாடகத்தில் எல்லாவிதமான கதா பாத்திரங்களும், காட்சிகளும் இருக்குமோ அப்படி, ஒரு உலகத்தை உருவாக்க எல்லாவற்றிலும் சிறிதளவு வேண்டும்.

**கே:** நாடகத்தில் யாரும் துன்பப் படுவதில்லை.

**ம:** அதனுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருந்தால் மட்டுமே. உன்னை உலகத்துடன் அடையாளப் படுத்தாமலும், ஒன்றுபடுத்திக் கொள்ளாமலும் இரு. அப்போது நீ துன்பப்பட மாட்டாய்.

**கே:** மற்றவர்கள் துன்பப்படுவார்கள்.

**ம:** அப்படியானால் எல்லா வகையிலும் முயற்சி செய்து உன் உலகத்தைப் பரிபூரணமாக்கு. உனக்கு கடவுளின் மேல் நம்பிக்கை இருந்தால் அவருடன் வேலை செய். இல்லை என்றால் நீயே

கடவுளாக ஆகு . ஒன்று உலகத்தை நாடகமாகப் பார். அல்லது உன் முழுச் சாமர்த்தியத்துடன் அதில் செயல் புரி. அல்லது இரண்டையுமே செய்.

**கே:** இறக்கும் மனிதனின் உடல் மற்றும் ஆன்மாவிற்கு இடையே உள்ள பரஸ்பர அடையாளத்தைப் பற்றி என்ன சொல்வது? அவன் இறந்தால் அது என்ன ஆகிறது? அது வேறு உடலில் தொடர்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?

**ம:** அது தொடர்கிறது. இருப்பினும் தொடர்வதில்லை. இவை எல்லாம் நீ எப்படிப் பார்க்கிறாய் என்பதைப் பொருத்தது. பரஸ்பர அடையாளம் என்பது என்ன? ஞாபகத்தின் தொடர்ச்சிதானே? ஞாபகம் இல்லாமல் பரஸ்பர அடையாளத்தைப் பற்றிப் பேச முடியுமா?

**கே:** ஆமாம். என்னால் முடியும். குழந்தைக்கு அதன் பெற்றோர்களைத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் பரம்பரைக் குணாதிசயங்கள் தெரியும்.

**ம:** யார் அதைத் தெரியப்படுத்துகிறார்கள்? ஞாபகத்தில் பதிவு செய்து, ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய ஒருவர்தான் தெரியப் படுத்துகிறார். ஞாபகம் மட்டும்தான் உன் மனோ வாழ்க்கையின் ஆதாரம் என்று நீ பார்க்கவில்லையா? பரஸ்பர அடையாளம் என்பது காலத்திலும், இடத்திலும் நடக்கும் செயல்களின் ஒரு படிவம் மட்டுமே. படிவத்தை மாற்றினால் மனிதன் மாறிவிடுவான்.

**கே:** படிவம் அர்த்தமுள்ளதும், முக்கியமானதும் ஆகும். அதற்கென்று மதிப்பு உள்ளது. நெய்யப்பட்ட துணி வெறுமனே வண்ணமயமான நூல்தான் என்று சொன்னால் முக்கியமான ஒன்று விட்டுப் போய்விடும் - அதன் அழகு. அல்லது ஒரு புத்தகத்தை வெறும் மை கறையுள்ள காகிதம் என்று சொன்னால் அதன் அர்த்தத்தை விட்டுவிடுவோம். பரஸ்பர அடையாளம் மதிப்பு மிக்கது. ஏனெனில் அதுதான் தனி நபர்த்தன்மையின் அடிப்படை. அது நம்மைத் தனித்துவமானவராகவும், நமக்குப் பதிலாக வேறு ஒன்றாலும் நிரப்ப முடியாதவாறும் செய்கிறது. 'நான்' என்பது தனித்துவத்தின் உள்ளார்ந்த அறிவு.

ம: ஆமாம் மற்றும் இல்லை. அறிந்துகொள்வது, தனி நபர்த் தன்மை மற்றும் தனித்துவம் - இவை எல்லாம் மனதின் மிக மதிப்புடைய பாங்குகள். ஆனாலும் மனதினுடையவை மட்டுமே. 'இருக்கின்ற எல்லாமுமே நான்தான்' என்னும் அனுபவமும் அதற்குச் சமமாகச் சரியானதே. குறிப்பிட்ட ஒன்றும், பிரபஞ்சமயமானதும் பிரிக்க முடியாதவை. இவை அகத்திலும் புறத்திலும் காண்கின்ற பெயரற்றதின் இரு தன்மைகள். துரதிர்ஷ்ட வசமாக வார்த்தைகளால் விளக்க மட்டுமே முடிகிறது. ஆனால் உணர்த்த முடியாது. வார்த்தைகளைக் கடந்து செல்ல முயற்சி செய்.

**கே:** இறப்புடன் எது இறக்கிறது?

**ம:** 'நான் இந்த உடல்' என்னும் கருத்து இறக்கிறது. சாட்சி இறப்பதில்லை.

**கே:** ஜைனர்கள் பல தனித்தனியான சாட்சிகள் உண்டென்று நம்புகிறார்கள், எப்போதும் தனித்தனியாக உள்ளவையாக.

**ம:** அது சில மகான்களின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்ட அவர்களுடைய மதத்தின் பாரம்பரியம். ஒரே சாட்சி எண்ணற்ற உடல்களில் 'நான்' என்று தன்னைப் பிரதிபலிக்கிறது. உடல்கள் எவ்வளவுதான் நுட்பமாக இருந்தாலும் அவை இருக்கும்வரை 'நான்' என்பது பலவாகத் தோன்றும். உடல்களுக்கு அப்பால் அந்த ஒன்றே ஒன்று மட்டுமே இருக்கிறது.

**கே:** அது கடவுளா?

**ம:** படைக்கும் கடவுள் உலகை உடலாகக் கொண்ட ஒரு நபர். பெயரற்ற ஒன்று எல்லாக் கடவுள்களுக்கும் அப்பாற்பட்டது.

**கே:** ஸ்ரீ ரமண மகரிஷி இறந்துவிட்டார். அது அவருக்கு என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தியது?

**ம:** ஒன்றும் இல்லை. அவர் என்னவாக இருந்தாரோ அப்படியே இருக்கிறார் - பூரணமான மெய்மையாக.

**கே:** ஆனால் சாதாரண மனிதனின் இறப்பு ஒரு வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது.

**ம:** சாதாரண மனிதன் இறப்பிற்கு முன்பு தான் என்னவாக இருந்ததாக நினைத்தாரோ அப்படியே இறப்பிற்குப் பிறகும் தொடர்கிறார். அவருடைய சுய உருவகம் பிழைக்கிறது.

**கே:** முன்பு ஒரு நாள் ஞானி தியானத்திற்காக மிருகங்களின் தோலை உபயோகிப்பதைப் பற்றிய பேச்சு வந்தது. நான் அதில் சமாதானம் ஆகவில்லை. அசைவ உணவு உண்பதைப் பற்றியும் அப்படித்தான். எல்லாவற்றையும் பழக்கவழக்கம் மற்றும் பாரம்பரியம் என்று ஞாயப்படுத்துவது எளிது. பழக்கவழக்கம் கொடூரமானதாகவும், பாரம்பரியம் தவறாகவும் இருக்கலாம். அவை விளக்குகின்றன. ஆனால் நியாயப்படுத்துவதில்லை.

**ம:** மெய்ஞானம் அடைந்தபிறகு சட்ட விதிமுறை மீறல் இருக்கும் என்று நான் ஒருபோதும் சொல்லவில்லை. ஒரு விடுதலையடைந்த மனிதர் சட்டத்திற்கு மிகவும் கீழ்ப்படிபவர். ஆனால் அவருடைய சட்டங்கள் அவருடைய மெய்யான சுயத்தின் சட்டங்கள்; சமுதாயத்தினுடையது அல்ல. சூழ்நிலைக்கேற்றவாறும், தேவைக் கேற்றவாறும் அவற்றை அவர் கடைப்பிடிக்கவோ மீறவோ செய்வார். ஆனால் அவர் விநோதமாகவும், முறையற்றும் ஒருபோதும் இருக்க மாட்டார்.

**கே:** பாரம்பரியம் மற்றும் பழக்கவழக்கம் ஆகியவற்றால் நியாப்படுத்துவதைத்தான் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

**ம:** பிரச்சனை நம் மாறுபட்ட பார்வைக் கோணங்களால் வருவது. நீ உடல் - மனதால் பேசுகிறாய். நான் சாட்சி பாவத் திலிருந்து பேசுகிறேன். இந்த வித்தியாசம் அடிப்படையானது.

**கே:** இருப்பினும் குரூரம் குரூரம்தான்.

**ம:** யாரும் உன்னைக் குரூரமாக இருக்க வற்புறுத்தவில்லை.

**கே:** மற்றவர்களின் குரூரத்தை உபயோகப்படுத்துவது பதிலியாகக் குரூரமாக இருப்பது.

**ம:** நீ உயிர்வாழ்தலின் இயல்பை நுட்பமாகக் கவனித்தால் குரூரத்தை எல்லா இடத்திலும் பார்ப்பாய். ஏனெனில் ஒரு உயிருக்கு

மற்றொரு உயிர் உணவாகிறது. இது தான் நிஜம். ஆனால் அது நீ உயிரோடு இருப்பதைக் குற்றமாக நினைக்க வைக்காது. நீ உன் குரூரமான வாழ்க்கையை உன் தாய்க்கு அளவில்லாத துன்பங்களைக் கொடுத்து ஆரம்பித்தாய். உன் வாழ்நாளின் கடைசி வரைக்கும் உணவு, உடை, இருப்பிடம், உடலை வைத்திருப்பது, அதன் தேவைகளுக்காகப் போராடுவது, பாதுகாப்பில்லாமலும், இறப்பும் உள்ள உலகத்தில் பாதுகாப்பாக இருப்பது ஆகியவற்றிற்காக நீ போராடுவாய். விலங்கைப் பொறுத்தவரை கொல்லப்படுவது மோசமான இறப்பு அல்ல. வியாதியாலும், வயதாகி அழுகிப் போவதாலும் இறப்பதைவிடவும் நல்லது. குரூரம் நோக்கத்தில்தான் உள்ளது. நிகழ்பாட்டில் அல்ல. கொல்வது கொல்பவரைத்தான் வருத்தும். கொல்லப்பட்டதை அல்ல.

**கே:** இதை ஒப்புக்கொள்கிறேன். அப்படியானால் ஒருவர் வேட்டையடுபவர் மற்றும் கசாப்புக் கடைக்காரரின் வேலையை ஏற்றுக் கொள்ளக் கூடாது.

**ம:** யார் உன்னை ஏற்றுக் கொள்ளச் சொன்னார்கள்?

**கே:** நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள்.

**ம:** நீ அவ்வாறுதான் என்னைப் பார்க்கிறாய்! எவ்வளவு சீக்கிரமாகக் குற்றம் சுமத்தி, பழித்து, தண்டனை கொடுத்து, அதை நிறைவேற்றுகிறாய்! உன்னிடமிருந்து அல்லாமல் என்னிடமிருந்து ஏன் ஆரம்பிக்கிறாய்?

**கே:** உங்களைப் போன்ற மனிதர் முன் உதாரணமாக இருக்க வேண்டும்.

**ம:** நீ என்னைப் பின்பற்றத் தயாராக இருக்கிறாயா? நான் உலகைப் பொறுத்தவரையில் இறந்தவன்; எனக்கு எதுவும் வேண்டியதில்லை - உயிர் வாழ்வது கூட. நான் இருப்பது போல் இரு. நான் செய்வது போல் செய். நீ என் உடைகளையும், உணவையும் பார்த்து என்னைக் கணிக்கிறாய். நானோ உன் நோக்கத்தை மட்டுமே பார்க்கிறேன். நீ உன்னை உடல் - மனமாக நினைத்து அதன்படி செயல்பட்டால் நீ செய்வது மாபெரும்

குரூரமான குற்றம் - உன் ஆத்ம ஸ்வரூபத்தின் மேல் செய்யும் குரூரம். அதனுடன் ஒப்பிட்டால் மற்ற குரூரங்கள் ஒன்றுமில்லை.

**கே:** நீங்கள் உடல் அல்ல என்பதில் அடைக்கலம் புகுகிறீர்கள். ஆனால் நீங்கள் உங்கள் உடலின்மேல் கட்டுப்பாடு வைத்துள்ளீர்கள். அது செய்யும் எல்லாவற்றிற்கும் நீங்கள் பொறுப்பு. உடலை முழுமையாகத் தன்னிச்சையாகச் செயல்பட விடுவது அறிவற்ற தன்மை மற்றும் பைத்தியகாரத்தனம்.

**ம:** பொறு, பொறு. ஆசுவாசப்படுத்திக் கொள். நானும் கறிக்காகவோ, தோலுக்காகவோ விலங்குகளைக் கொல்வதை எதிர்ப்பவன்தான். ஆனால் அதற்கு முதலிடம் தருவதை மறுக்கிறேன். சைவ உணவுப் பழக்கம் சரியானதுதான். ஆனால் மிக அவசரமானது அல்ல. எல்லா நோக்கங்களும் தன் நிலைக்குத் திரும்பிய ஞானியால் நன்கு நிறைவேற்றப்படும்.

**கே:** நான் ஸ்ரீ ரமணாசிரமத்திலிருந்த போது ஸ்ரீ ரமண பகவானை எல்லா இடத்திலும் - சர்வ வியாபியாகவும், சர்வ சாட்சியாகவும் உணர்ந்தேன்.

**ம:** உன்னிடம் தேவையான அளவு நம்பிக்கை இருக்கிறது. அவர்மேல் உண்மையான நம்பிக்கை யாருக்கு இருக்கிறதோ அவர்கள் எல்லா இடத்திலும், எல்லா நேரமும் அவரை உணர்வார்கள். எல்லாமும் உன் நம்பிக்கையைப் பொருத்து நடக்கிறது. உன் நம்பிக்கை உன் உறுதியான ஆசையின் வடிவம்.

**கே:** நீங்கள் உங்கள் மேல் கொண்டுள்ள நம்பிக்கையும் கூட ஒரு ஆசையின் வடிவம் அல்லவா?

**ம:** நான் 'நான்' என்று சொல்லும் போது, ஒரு உடலை மையமாகக் கொண்ட ஒரு உருவத்தை அர்த்தப்படுத்தவில்லை. இருத்தலின் மொத்தத்தை, விழிப்புணர்வுக் கடலை, எல்லாமும் இருப்பதும், அறிவதுமான முழுப் பிரபஞ்சத்தை நான் குறித்தேன். எனக்கு ஆசைப்பட ஒன்றும் இல்லை. ஏனெனில் நான் எப்போதைக்கும் பரிபூரணமானவன்.

**கே:** மற்ற மக்களின் உள் வாழ்க்கையை நீங்கள் தொட முடியுமா?

**ம:** நான்தான் எல்லோரும்.

**கே:** நான் சாரம் அல்லது உள்ளடக்கத்தைக் குறித்த அடையாளத்தையோ, வடிவங்களின் ஒத்த தன்மையையோ குறிக்கவில்லை. மற்றவர்களின் மனதிலும், இதயத்திலும் உண்மையாகவே நுழைவதையும், அவர்களுடைய தனிப்பட்ட அனுபவங்களில் பங்கெடுப்பதையும் நான் குறிப்பிட்டேன். நீங்கள் என்னுடன் துன்பப்படவும், குதூகலிக்கவும் முடியுமா? அல்லது கவனிக்கும் மற்றும் ஒப்பிடும் திறமையால் நான் என்ன உணர்கிறேன் என்று அனுமானிக்கிறீர்களா?

**ம:** எல்லா இருப்பவைகளும் என்னுள் உள்ளன. ஆனால் ஒரு மூளையின் உள்ளடக்கத்தை இன்னொரு மூளைக்குள் கொண்டு வருவதற்கு விஷேசமான பயிற்சி தேவை. பயிற்சியினால் அடைய முடியாதது எதுவும் இல்லை.

**கே:** நான் உங்களுடைய மன உருவகமோ அல்லது நீங்கள் என்னுடைய மன உருவகமோ அல்ல. நான் என் சுயஅதிகாரத்தின் படி இருக்கிறேன். உங்களுடைய உருவாக்கப்படி அல்ல. இந்த கற்பனையான, மனோ உருவகமான, பக்குவமற்ற தத்துவம் என்னைக் கவரவில்லை. நீங்கள் எனக்கு எல்லா நிஜத்தையும் இல்லாமல் போகச் செய்கிறீர்கள். யார் யாருடைய பிம்பம்? நீங்கள் என்னுடைய பிம்பமா அல்லது நான் உங்களுடைய பிம்பமா? அல்லது நான் என்னுடைய சொந்த பிம்பத்திலிருக்கும் என் பிம்பமா? அல்ல. எங்கோ ஏதோ ஒன்று தவறு.

**ம:** வார்த்தைகள் அவற்றின் உள்ளீடற்ற தன்மையைக் காண்பிக்கின்றன. மெய்யை விவரிக்க முடியாது. அதை அனுபவப் படத்தான் முடியும். என்னால் இதற்குமேல் ஒன்றும் செய்ய முடியவில்லை. நான் அறிந்ததை விளக்க இதைவிடச் சிறந்த வார்த்தைகள் எனக்குக் கிடைக்கவில்லை. நான் சொல்வது அபத்தமாகக்கூடத் தெரியும். ஆனால் இந்த வார்த்தைகள் தெரிவிக்க முயற்சிப்பது உச்சமுடிவான உண்மையை. நாம் எவ்வளவுதான் வார்த்தை ஜாலம் செய்தாலும் எல்லாமும் ஏகரூபம்தான். ஒவ்வொரு ஆசையின் ஒரே ஆதாரமும், இலக்குமான நாம்

எல்லோரும் அறிந்த 'நான்' என்பதைச் சந்தோஷப்படுத்தவே எல்லாமும் செய்யப் படுகிறது.

**கே:** ஆசையின் வேரில் துக்கம் இருக்கிறது. துக்கத்திலிருந்து தப்பிப்பதுதான் அடிப்படையான உந்துதல்.

**ம:** துக்கத்தின் மூல காரணம் என்ன? உன்னை அறியாதிருப்பது. ஆசையின் வேர் என்ன? உன்னை அறிய ஏற்படும் உந்துதல். எல்லா படைக்கப்பட்டவைகளும் அவற்றின் சுயத்திற்காக உழல்கின்றன. அதை அடையும் வரை அது ஓயாது.

**கே:** அது எப்போது அடையப்படும்?

**ம:** நீ எப்போது ஆசைப்படுகிறாயோ அப்போது அடையப்படும்.

**கே:** உலகத்தைப் பொருத்து?

**ம:** நீ உன்னுடன் அதை எடுத்துச் செல்லலாம்.

**கே:** நான் முழு நிறைவு அடையும்வரை உலகத்திற்கு உதவிக் கொண்டு காத்திருக்க வேண்டுமா?

**ம:** எல்லா வழியிலும் உலகத்திற்கு உதவு. உன்னால் மிகவும் உதவ முடியாது. ஆனால் அந்த முயற்சி உன்னை வளர்க்கும். உலகத்திற்கு உதவ முயற்சிப்பதில் தவறு எதுவும் இல்லை.

**கே:** கண்டிப்பாக மிகவும் உதவி செய்த சாதாரண மனிதர்கள் இருந்தார்கள்.

**ம:** உலகத்திற்கு உதவி தேவைப்படும் நேரம் வரும்போது, சிலருக்கு மாபெரும் மாற்றத்தை உருவாக்கத் தேவையான உறுதியும், அறிவும், வலிமையும் கிடைக்கும்.

# 37. துன்பத்திற்கும், இன்பத்திற்கும் அப்பால் ஆனந்தம் இருக்கிறது

**மஹராஜ்:** முதலில் நீ உட்பட எல்லாவற்றிற்கும் நீதான் அத்தாட்சி என்று அறிந்து கொள்ள வேண்டும். யாரும் நீ இருப்பதை நிரூபிக்க முடியாது; ஏனெனில் உன்னுடைய இருத்தல் உன்னால் முதலில் உறுதி செய்யப்பட வேண்டும். உன் இருத்தலுக்கும், அறிதலுக்கும் நீ யாருக்கும் கடமைப்பட்டவன் அல்ல. உன் இருத்தல் முழுவதும் உன்னால்தான் என்பதை ஞாபகம் வைத்துக் கொள். நீ எங்கோ இருந்து வரவில்லை; எங்கும் போவதும் இல்லை. நீயே காலமற்ற இருத்தலும், பிரக்ஞையும்.

**கேட்பவர்:** நம் இருவருக்கிடையே அடிப்படையாக ஒரு வித்தியாசம் உள்ளது. நீங்கள் மெய்யை அறிந்தவர். எனக்கோ மனதின் செயல்பாடுகள் மட்டும்தான் தெரியும். எனவே நீங்கள் சொல்வது ஒன்று. நான் கேட்பது வேறொன்று. நீங்கள் சொல்வது உண்மை. வார்த்தைகள் ஒன்றாக இருந்தாலுமே நான் புரிந்து கொள்வது மெய்யற்றது. நம் இருவருக்கும் இடையில் இடைவெளி உள்ளது. அதை எப்படி நிரப்புவது?

**ம:** நீ உன்னை என்னவாக நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அந்தக் கருத்தை விட்டுவிடு. அப்போது இடைவெளி இருக்காது. உன்னைத் தனியானவன் என்று கற்பனை செய்வதால்தான் நீ இடைவெளியை உருவாக்கிவிட்டாய். நீ அதைத் தாண்ட வேண்டியதில்லை. வெறுமனே உருவாக்காமல் இருந்தால் போதும். எல்லாமும் நீதான்; உன்னுடையவைதான். வேறு ஒருவரும் இல்லை. இதுதான் நிஜமான நிலை.

**கே:** எவ்வளவு விசித்திரமானது! உங்களுக்கு உண்மையாக இருக்கும் அதே வார்த்தைகள் எனக்கு மெய்யற்றதாக இருக்கின்றன.

'வேறு ஒருவரும் இல்லை' என்பது எவ்வளவு வெளிப்படையாக உண்மையில்லை!

**ம:** அந்த வார்த்தைகள் உண்மையாகவோ, உண்மையில்லா மலோ இருந்துவிட்டுப் போகட்டும். வார்த்தைகள் முக்கியமல்ல. எது முக்கியம் என்றால் உன்னைப்பற்றி நீ கொண்டுள்ள கருத்துதான். ஏனெனில் அது உன்னைத் தடுக்கிறது. அதை விட்டு விடு.

**கே:** என் குழந்தைப் பருவத்திலிருந்து நான் என் பெயர் மற்றும் உருவ அளவில் வரையறுக்கப்பட்டவன் என்று சிந்திக்குமாறு சொல்லிக் கொடுத்துள்ளனர். அதற்கு மாற்றான கருத்து என் மனதில் உள்ள படிமங்களை அழிக்காது. தொடர்ந்த மூளைச் சலவை தேவை - அது முடியுமானால்.

**ம:** மனதின் குழப்பங்களைச் சரிப்படுத்துவதை நீ மூளைச் சலவை என்று சொல்கிறாய். நான் யோகா என்று சொல்கிறேன். ஒரே எண்ணங்களைத் திரும்பத் திரும்ப எண்ணுவதற்குக் கட்டாயப் படுத்தக் கூடாது. மேற்கொண்டு நகர்ந்து செல்.

**கே:** செய்வதை விடச் சொல்வது எளிது.

**ம:** குழந்தைத்தனமாக இருக்காதே. துன்பப்படுவத்தை விட மாறுவது சுலபம். உன் குழந்தைத்தனத்திலிருந்து வளர். அவ்வளவு தான்.

**கே:** இவை எல்லாம் செய்யப்படுவது இல்லை. தானாக நடக்கின்றன.

**ம:** எல்லா நேரமும், ஒவ்வொன்றும் தானாக நடக்கின்றது - ஆனால் நீ அதற்குத் தயாராக இருக்க வேண்டும். தயாராக இருப்பது என்பது கனிந்திருப்பது. தயாராக இல்லாமல் இருப்பது குழந்தைத் தனம். நீ மெய்யைப் பார்ப்பது இல்லை. ஏனெனில் உன் மனம் அதற்குத் தயாராக இல்லை.

**கே:** மெய்தான் என் உண்மையான தன்மை என்றால் நான் எப்படி எப்போதுமே தயாராக இல்லாமல் இருப்பேன்?

**ம:** தயாராக இல்லை என்றால் பயப்படுகிறாய் என்ற அர்த்தத்தில். மூலத்தில் நீ என்னவாக இருக்கிறாயோ அதைப் பார்த்து பயப்படுகிறாய். பூரணம்தான் நீ சேருமிடம். ஆனால் உன் தனித்த அடையாளத்தை இழந்துவிடுவாய் என்று பயப்படுகிறாய். இதுதான் குழந்தைத்தனம் - உன் ஆசைகள் மற்றும் அச்சங்கள், கருத்து மற்றும் கற்பனைகள் ஆகிய பொம்மைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பது. எல்லாவற்றையும் விட்டுவிட்டு, மெய் தன்னை உறுதிப்படுத்திக் கொள்ளத் தயாராக இரு. இந்தச் சுய உறுதி 'நான்' என்னும் வார்த்தையினால் சிறப்பாக வெளிப்படுத்தப்படுகிறது. வேறு ஒன்றிற்கும் இருத்தல் என்பது இல்லை. இதைப் பற்றித் தீர்க்கமாக உறுதியாக இரு.

**கே:** 'நான்' என்பதும், ஆனால் கூடவே 'எனக்குத் தெரியும்' என்பதும், நான் இன்னார், இந்த உடலின் உரிமையாளர், மற்ற உடல்களின் உரிமையாளர்களுடன் பல்வேறு தொடர்புகளைக் கொண்டுள்ளவன் என்பதும் எனக்குத் தெரியும்.

**ம:** இவை எல்லாம் தற்பொழுதிற்குக் கொண்டுவரப்பட்ட ஞாபகங்கள்.

**கே:** நான் தற்பொழுதில் என்ன உள்ளதோ அதைப் பற்றித்தான் உறுதியாக இருக்க முடியும். கடந்த காலம் மற்றும் எதிர் காலம், ஞாபகம் மற்றும் கற்பனை, இவை எல்லாம் மனோ நிலைகள். ஆனால் அந்த அளவிற்குத்தான் அவற்றை எனக்குத் தெரியும். அவை மட்டுமே இப்போது இருக்கின்றன. நீங்கள் அவற்றைக் கைவிடச் சொல்கிறீர்கள். எப்படி ஒருவர் தற்பொழுதில் உள்ளதைக் கைவிடுவது?

**ம:** நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் எப்போதும் எதிர்காலத்திற்கே நகர்கிறாய்.

**கே:** நான் தற்பொழுதிலிருந்து தற்பொழுதிற்கு நகர்கிறேன். நான் நகர்வதே இல்லை. மற்ற எல்லாமும் நகர்கின்றன - நான் அல்ல.

**ம:** சரி. ஆனால் உன் மனம் நகர்கிறது. தற்பொழுதில் நீ அசையக் கூடியதும், அசையாததும் ஆனவன். இதுவரை நீ உன்னை அசைபவனாகப் பார்த்தாய். அசையாததை ஒதுக்கித் தள்ளி

விட்டாய். உன் உள் மனதை எதிர்ப்புறமாகப் புரட்டு. அசைவதை ஒதுக்கித் தள். அப்போது நீ உன்னை எப்போதும் இருக்கும், மாற்றமில்லாத, விவரிக்க முடியாத, ஆனால் பாறையைப் போன்று உறுதியாக உள்ள மெய்மையாக அறிவாய்.

**கே:** அது இப்போது இருந்தால், எனக்கு அது ஏன் தெரியவில்லை?

**ம:** ஏனெனில் உனக்குத் தெரியாது என்னும் கருத்தைப் பிடித்துக் கொண்டு இருக்கிறாய். அந்தக் கருத்தை விட்டு விடு.

**கே:** அது என்னை அறிந்தவன் ஆக்காது.

**ம:** பொறு. ஒரே சமயத்தில் சுவற்றின் இரு பக்கங்களிலும் இருக்கப் பார்க்கிறாய். உன்னால் முடியும். ஆனால் சுவற்றை நீக்க வேண்டும். அல்லது சுவரும், அதன் இரு பக்கங்களும் 'இங்கு' அல்லது 'அங்கு' என்னும் கருத்துக்கள் செல்லுபடி ஆகாத ஒரே ஒரு ஒற்றை இடம் என்று அறிய வேண்டும்.

**கே:** உதாரணங்கள் எதையும் நிரூபிப்பது இல்லை. என்னுடைய ஒரே புகார் இதுதான்: நீங்கள் பார்ப்பதை நான் ஏன் பார்ப்பதில்லை? ஏன் உங்களுடைய வார்த்தைகள் எனக்கு சரியானவையாகத் தெரியவில்லை? எனக்கு இது மட்டும் தெரிந்தால் போதும். மற்ற எல்லாம் பொறுத்திருக்கலாம். நீங்கள் புத்திசாலி; நான் முட்டாள். நீங்கள் அறிவீர்கள்; நான் அறியவில்லை. எங்கு, எப்படி நான் என் அறிவைப் பெறுவேன்?

**ம:** உன்னை நீ முட்டாள் என்று அறிந்து கொண்டால் நீ ஒருபோதும் முட்டாள் அல்ல.

**கே:** எப்படி நான் நோய்வாய்ப்பட்டுள்ளேன் என்று தெரிந்தது மட்டுமே என்னைக் குணமாக்காதோ அதுபோல, நான் முட்டாள் என்று அறிந்துகொள்வது என்னை அறிவாளி ஆக்காது.

**ம:** உனக்கு நோய் உள்ளது என்று அறிந்து கொள்ள நீ ஆரம்பத்தில் நலமுடன் இருக்க வேண்டாமா?

**கே:** இல்லை. நான் ஒப்பிட்டுப் பார்ப்பதால் அறிவேன். நான் பிறவியிலேயே பார்வை அற்றவனாக இருந்து, நான் தொட்டுத்தான்

அறிந்துகொள்ள வேண்டும் என்று இருக்கும்போது, நீங்கள் பொருள்களைத் தொடாமலே அறிவீர்கள் என்று சொன்னால், நான் பார்ப்பது என்றால் என்ன என்று தெரிந்து கொள்ளாமலே நான் பார்வை அற்றவன் என்று அறிவேன். அதுபோல, நான் கிரகித்துக் கொள்ளமுடியாதவற்றை நீங்கள் உறுதியாகச் சொல்லும்போது ஏதோ சில என்னிடம் இல்லை என்று எனக்குத் தெரிகிறது. நீங்கள் என்னைப் பற்றி அற்புதமாகச் சொல்கிறீர்கள்; உங்களைப் பொருத்து நான் சாசுவதமானவன், சர்வ வியாபி, எல்லாம் அறிந்தவன், உச்ச உயர்வாக மகிழ்ச்சியாக இருப்பவன், இருக்கும் அனைத்தையும் உருவாக்குபவன், காப்பவன், அழிப்பவன், எல்லா உயிர்களின் மூலம், இருத்தலின் இதயம், ஒவ்வொரு உயிரினத்தின் எஜமான் மற்றும் அன்பிற்குரியவன். எல்லா இருப்பவைகளின் ஆதாரமும், நோக்கமுமான உச்ச உயர்வான மெய்யுடன் என்னைச் சரிநிகராக்குகிறீர்கள். நான் புரியாமல் விழிக்கிறேன்; ஏனெனில் நான் என்னை ஆசைகள் மற்றும் அச்சங்களின் சிறு மூட்டை, துன்பப்படும் ஒரு குமிழி, இருத்தலாகிய மாபெரும் கடலில் கண நேரத்தில் தோன்றி மறைகின்ற விழிப்புணர்வின் ஒளிக் கீற்று என்றுதான் அறிந்துள்ளேன்.

**ம:** துக்கம் தோன்றுவதற்கு முன்பும் நீ இருந்தாய். துக்கம் நீங்கிய பிறகும் நீ இருக்கிறாய். துக்கம் கண நேரத்தில் தோன்றி மறைவது. நீ அல்ல.

**கே:** மன்னிக்கவும். நீங்கள் பார்ப்பதை நான் பார்ப்பதில்லை. நான் பிறந்ததிலிருந்து இறக்கும் வரை துக்கமும், சந்தோசமும் என் வாழ்க்கையை வடிவமைக்கின்றன. பிறப்பதற்கு முன்பும், இறந்த பின்பும் உள்ளவற்றைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. நீங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்ளவோ, மறுக்கவோ இல்லை. நீங்கள் சொல்வதை நான் கேட்கிறேனே ஒழிய எனக்கு அவற்றைப் பற்றித் தெரியவில்லை.

**ம:** நீ இப்போது விழிப்புணர்வுடன் இருக்கிறாய் அல்லவா?

**கே:** தயவு செய்து முன்பைப் பற்றியும், பிறகைப் பற்றியும் என்னிடம் கேட்காதீர்கள். தற்பொழுது இருப்பதைப் பற்றித்தான் எனக்குத் தெரியும்.

**ம:** சரி. நீ விழிப்புணர்வுடன் இருக்கிறாய். அப்படியே இரு. நீ விழிப்புணர்வுடன் இல்லாத நிலைகளும் இருந்தன. அதை பிரக்ஞையற்ற இருத்தல் என்று சொல்.

**கே:** விழிப்புணர்வற்றா?

**ம:** விழிப்புணர்வுடன் இருப்பது, விழிப்புணர்வற்று இருப்பது ஆகியவை இங்கு பொருந்த மாட்டா. இருத்தல் விழிப்புணர்வில் உள்ளது. மெய்மை(சாரதத்துவம்) விழிப்புணர்வைச் சார்ந்து இருப்பதல்ல.

**கே:** அது சூன்யமா? மௌனமா?

**ம:** அதை ஏன் விவரிக்க வேண்டும்? இருத்தல் விழிப்புணர்வை ஊடுருவுகிறது, அதைக் கடந்து இருக்கிறது. நோக்கத்துடன் கூடிய விழிப்புணர்வு தூய விழிப்புணர்வின் ஒரு பகுதி. அதற்கு அப்பாற்பட்டது அல்ல.

**கே:** நீங்கள் விழிப்புணர்வு உடையதும், விழிப்புணர்வு அற்றதும் அல்லாத தூய இருத்தல் நிலையை எவ்வாறு தெரிந்து கொண்டீர்கள்? எல்லா அறிவும் விழிப்புணர்வில்தான் உள்ளன. செயலற்ற மனோ நிலை வேண்டுமானால் இருக்கலாம். அப்போது விழிப்புணர்வு சாட்சியாகத் தோன்றுமா?

**ம:** சாட்சி நிகழ்வுகளைப் பதிவு மட்டுமே செய்யும். மனம் செயலற்று இருக்கும் போது 'நான்' என்னும் உணர்வும் கூட கரைந்து விடுகிறது. மனம் இல்லாமல் 'நான்' என்பது இல்லை.

**கே:** மனம் இல்லாமல் என்றால், எண்ணங்கள் இல்லாமல். 'நான்' என்னும் எண்ணம் அடங்குகிறது. இருத்தல் என்னும் உணர்வாக 'நான்' மிஞ்சுகிறது.

**ம:** எல்லா அனுபவங்களும் மனதுடன் அடங்குகின்றன. மனம் இல்லாமல் அனுபவிப்பவரோ, அனுபவமோ இருக்க முடியாது.

**கே:** சாட்சி மிஞ்சுவது இல்லையா?

**ம:** சாட்சி, அனுபவம் இருப்பதையும், இல்லாதிருப்பதையும் வெறுமனே பதிவு செய்கிறது. அதுவே ஒரு அனுபவம் அல்ல.

ஆனால் 'நான் சாட்சி' என்னும் எண்ணம் உதிக்கும் போது அது ஒரு அனுபவம் ஆகிறது.

**கே:** எனக்குத் தெரிந்ததெல்லாம் சிலசமயம் மனம் வேலை செய்கிறது. சிலசமயம் நின்று விடுகிறது. மன நிசப்த அனுபவத்தை நான் செயலற்ற மனம் என்று சொல்கிறேன்.

**ம:** அதை நிசப்தம், அல்லது சூன்யம், அல்லது செயலற்ற தன்மை என்று எவ்வாறு வேண்டுமானாலும் சொல். உண்மை என்ன வென்றால், அனுபவிப்பவர், அனுபவிப்பது, அனுபவம் என்னும் மூன்றும் இல்லை. சாட்சிபாவத்தில், பிரக்ஞையில், சுய உணர்வில் நான் இது அல்லது அதுவாக இருப்பது என்னும் உணர்வு கிடையாது. தனித்துவமற்ற இருத்தல் மிஞ்சுகிறது.

**கே:** விழிப்புணர்வில்லாத ஒரு நிலையாகவா?

**ம:** எதைக் குறித்தும் அது எதிர் நிலையானது. அது எல்லா எதிர் நிலையானவற்றிற்கும் இடையேயும், அப்பாலும் உள்ளது. அது விழிப்புணர்வு உடையதும் அல்ல, விழிப்புணர்வற்றதும் அல்ல. இரண்டிற்கும் இடைப்பட்டதும் அல்ல. இரண்டிற்கும் அப்பாற் பட்டதும் அல்ல. அனுபவத்துடன் அல்லது அனுபவம் இல்லாமல் இருப்பது என்று சொல்லக்கூடிய எதைக் குறித்தும் இல்லாமல் அது அதாகவே இருக்கிறது.

**கே:** எவ்வளவு விசித்திரம்! அதை ஒரு அனுபவம் போல் நீங்கள் பேசுகிறீர்கள்.

**ம:** அதை நான் நினைத்தால் அது ஒரு அனுபவமாகிறது.

**கே:** எப்படி கண்ணுக்குத் தெரியாத ஒளி பூவால் குறுக்கிடப்படும் போது வர்ணமாகிறதோ அப்படி.

**ம:** ஆமாம். நீ அவ்வாறு சொல்லலாம். அது வர்ணத்தில் உள்ளது. ஆனால் வர்ணம் அல்ல.

**கே:** இது நாகார்ஜுனாவின் அதே மாதிரியான பழைய நான்கு வித மறுத்தல்: இதுவும் அல்ல; அதுவும் அல்ல; இரண்டும் அல்ல; இரண்டில் ஏதேனும் ஒன்றும் அல்ல. எனக்குத் தலை சுற்றுகிறது.

**ம:** உன் பிரச்சனை, மெய்மை என்பது விழிப்புணர்வின் ஒரு நிலை, பல நிலைகளில் ஒன்று என்னும் உன் கருத்தால் வருகிறது. 'இது மெய். அது மெய்யல்ல. ஒரு பகுதி மெய். ஒரு பகுதி மெய்யல்ல' என்று, மெய் என்பது பல்வேறு அளவுகள் கொண்ட ஒரு குணம் அல்லது தன்மை என்று நீ சொல்ல வருகிறாய்.

**கே:** என்னை வேறு விதமாகச் சொல்ல விடுங்கள். விழிப்புணர்வு துக்கப்படும்போதுதான் பிரச்சனைகள் எழுகின்றன. எப்போதும் பேரின்ப நிலையில் இருப்பது கேள்விகளை எழுப்பாது. நாங்கள் விழிப்புணர்வை இன்பமும் துன்பமும் கலந்த கலவையாகத்தான் பார்க்கிறோம். அது ஏன்?

**ம:** எல்லா விழிப்புணர்வு நிலையும் வரையறுக்கப் பட்டவையே. அதனால் துக்கம் மிகுந்தவையாக உள்ளன. விழிப்புணர்வின் மூலத்தில் அனுபவிக்க வேண்டும் என்னும் ஆசையின் உந்துதல் இருக்கிறது.

**கே:** ஆசை இல்லாமல் விழிப்புணர்வு இருக்க முடியாது என்று சொல்கிறீர்களா? விழிப்புணர்வு இல்லாமல் இருப்பதால் என்ன பிரயோஜனம்? நான் துக்கத்திலிருந்து விடுபட இன்பத்தைக் கைவிட வேண்டும் என்றால் இரண்டையுமே வைத்துக் கொள்வேன்.

**ம:** துக்கத்திற்கும், சந்தோசத்திற்கும் அப்பால் பேரின்பம் இருக்கிறது.

**கே:** விழிப்புணர்வில்லாத பேரின்பத்தால் என்ன பயன்?

**ம:** மெய் விழிப்புணர்வுடையதும் அல்ல; விழிப்புணர்வற்றதும் அல்ல.

**கே:** விழிப்புணர்வை நீங்கள் ஏன் எதிர்க்கிறீர்கள்?

**ம:** அது ஒரு சுமை. உடல் என்றால் சுமை. உணர்ச்சிகள், ஆசைகள், எண்ணங்கள் - இவை எல்லாம் சுமைகள். எல்லா விழிப்புணர்வும் முரண்பாடுகளைக் கொண்டவை.

**கே:** தூய இருத்தலாகவும், தூய விழிப்புணர்வாகவும், எல்லையற்ற பேரின்பமாகவும் மெய் விவரிக்கப்படுகிறது. அதில் துக்கத்திற்கு என்ன சம்பந்தம்?

**ம:** துக்கமும், சுகமும் ஆனந்த ரூபமாக உள்ளன. துக்கம் சந்தோசத்தின் விலை. சந்தோசம் துக்கத்தின் வெகுமதி. வாழ்க்கையிலும் அடிக்கடி நீ நோகச் செய்வதால் சந்தோசப்படுகிறாய்; சந்தோசப்படுவதால் நொந்துபோகிறாய். துக்கமும், சுகமும் ஏகரூபம் என்று அறிவதுதான் ஆனந்தம்.

**கே:** இவை எல்லாம் சந்தேகத்திற்கு இடமில்லாமல் சுவாரசியமாகத்தான் இருக்கின்றன. ஆனால் என் குறிக்கோள் மிகவும் எளிமையானது. நான் வாழ்க்கையில் சுகம் அதிகமாகவும், துக்கம் குறைவாகவும் இருக்க வேண்டுகிறேன். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

**ம:** விழிப்புணர்வு இருக்கும் வரை சுகமும், துக்கமும் இருக்கும். 'நான்' என்பதின் இயல்பில், விழிப்புணர்வின் இயல்பில் எதிர் எதிரானவைகளுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்வது உள்ளது.

**கே:** அப்படியானால் இவை எல்லாவற்றாலும் எனக்கு என்ன பிரயோஜனம்? இது என்னைத் திருப்திப்படுத்தவில்லை.

**ம:** நீ என்பது யார்? யார் திருப்திப்படவில்லை?

**கே:** நான், சுக - துக்க மனிதன்.

**ம:** சுகம், துக்கம் - இரண்டுமே நிகழ்கின்றன. அதைப் பற்றி உனக்கென்ன? நான் இங்கு, உன் முன்னே அமர்ந்து சொல்கிறேன் - என்னுடைய சொந்த, உடனடியான, மாற்றமில்லாத அனுபவத்திலிருந்து சொல்கிறேன் - சுகமும், துக்கமும், பேரின்பம் என்னும் கடலின் அலைகளில் உச்சமும், தாழ்வும் ஆகும். அடி ஆழத்தில் முழுமையான பூரணம் உள்ளது.

**கே:** உங்களுடைய அனுபவம் நிலையானதா?

**ம:** அது காலமற்றது, மாற்றமில்லாதது.

**கே:** நான் அறிந்ததெல்லாம் சுகத்திற்கு ஆசைப்படுவதும், துக்கத்திற்கு அச்சப்படுவதும்தான்.

**ம:** உன்னைப் பற்றி நீ அவ்வாறுதான் நினைத்துக் கொண்டு இருக்கிறாய். அதை நிறுத்து. ஒரு பழக்கத்தை உன்னால் முழுவதும் உடனே நிறுத்த முடியவில்லை என்றால் வழக்கமாகச் சிந்திக்கின்ற வழியைக் கவனித்து, அதன் குறைகளைக் கண்டுபிடி. பழக்கத்தைக் கேள்வி கேட்பது மனதின் கடமை. மனம் உருவாக்கியதை மனம் தான் அழிக்கவேண்டும். அல்லது மனதிற்கு வெளியே ஆசை எதுவும் கிடையாது என்று அறிந்து மனதிற்கு வெளியே நில்.

**கே:** எல்லாமும் மனதால் ஆனது என்னும் இந்த விளக்கத்தை உண்மையாலுமே நான் நம்பவில்லை. கண் எப்படி ஒரு கருவியோ அப்படி மனமும் ஒரு கருவி. உணர்ந்தறிதலை உருவாக்குதல் என்று நீங்கள் சொல்ல முடியுமா? நான் உலகத்தை ஜன்னல் வழியாகப் பார்க்கிறேன். ஜன்னலில் அல்ல. நீங்கள் சொல்வதெல்லாம் பொதுவான நிலையில் சரியான ஒன்றாக இருக்கின்றன. ஆனால் அந்த நிலை மெய்மையில் இருக்கிறதா அல்லது மனத்தில் மட்டுமே உள்ளதா என்று எனக்குத் தெரியாது. அதைப் பற்றிய மன வடிவம்தான் எனக்கு இருக்கிறது. அதன் அர்த்தம் உங்களுக்கு என்னவோ அது எனக்குத் தெரியாது.

**ம:** உன் நிலையை மனதில் கொண்டிருக்கும் வரை என்னை மனதால்தான் பார்ப்பாய்.

**கே:** புரிந்துகொள்ள வார்த்தைகள் எவ்வளவு போதவில்லை பாருங்கள்!

**ம:** வார்த்தைகள் இல்லாமல் புரிந்துகொள்ள என்ன இருக்கிறது? புரிந்துகொள்ள வேண்டியதின் அவசியம் தவறாகப் புரிந்து கொண்டதனால் வருகிறது. நான் சொல்வது உண்மை. ஆனால் உனக்கு அது வெறும் கோட்பாடு. அது உண்மை என்று எப்படி அறிவாய்? கேள், ஞாபகம் வைத்திரு, சிந்தி, உருவகப்படுத்து, அனுபவி. மேலும் உன் தினசரி வாழ்க்கையில் அதைப் பயன்படுத்து. என்னைப்பற்றி உறுதியாக இரு. எல்லாவற்றிற்கும் மேலாக உன்னைப்பற்றி உறுதியாக இரு. ஏனெனில் உனக்கு நீதான் பெரிய தடையை உருவாக்குகிறாய். இந்த வழி உனக்கு ஊடாக, உனக்கு அப்பால் செல்லும். குறிப்பிட்ட ஒன்றுதான் மெய்யானது,

விழிப்புணர்வும், சந்தோசமும் உடையதென்று நம்பி, இருமையற்ற மெய்யை ஏதோ கற்பனை, ஒரு மறைபொருளான கருத்து என்று நீ ஒதுக்கும் வரை நான் கோட்பாடுகளையும், பொய்யான கருத்துக்களையும் வெளியிடுவதாகத்தான் பார்ப்பாய். ஆனால் மெய்யை உன் சொந்த இருத்தலுக்குள் ஒருமுறை தொட்டு விட்டாயென்றால் நான் விவரிப்பது உனக்கு நெருக்கமாகவும், பிரியமானதாகவும் இருப்பதைக் காண்பாய்.



# 38. ஆன்மீகப் பயிற்சி என்பது மனோதிடத்தை உறுதிப்படுத்துவது, திரும்ப உறுதிப்படுத்துவது

**கேட்பவர்:** உங்களை எப்போதாவது சந்திக்க வரும் மேற்கத்திய வர்கள் ஒரு வினோதமான பிரச்சனையை எதிர்கொள்கிறார்கள். ஒரு விடுதலை அடைந்தவர், ஒரு ஞானி, ஒரு சுயம் அறிந்தவர், ஒரு கடவுளை அறிந்தவர், உலகத்திற்கு அப்பாற்பட்ட ஒருவர் - இப்படிப்பட்ட ஒருவரை அவர்களுக்குத் தெரியாது. கிறிஸ்துவ பாரம்பரியத்தில் அவர்கள் ஒரு ஞானியைப் பற்றி அறிந்ததெல்லாம்: அவர் ஒரு நன்னடத்தையுள்ள மனிதர், சட்டத்தை மதிப்பவர், கடவுளுக்குப் பயப்படுபவர், சக மனிதர்களிடம் அன்பாக இருப்பவர், நிறைய பிரார்த்தனை செய்பவர், சில சமயங்களில் ஆனந்தப் பரவசம் அடைபவர், சில அதிசயங்களை நிகழ்த்தி, அதனால் புனிதர் என்று உறுதி செய்யப்படுபவர் என்றுதான். மேற்கத்திய நாகரீகத்திற்கு ஞானி என்னும் கருத்தே அந்நியமானது; ஒரு மாதிரியாக அயல் தேசத்துடையது மற்றும் நம்ப முடியாதது. அவருடைய இருத்தல் ஒப்புக் கொள்ளப்பட்டாலும், வினோத மான உடல் ஆசனங்களாலும், மனப் பாங்காலும் உண்டான சுய தூண்டுதலால் ஆன திரிபுற்ற மனோ நிலையுடைய ஒருவராகத்தான் அவர் சந்தேகத்துடன் பார்க்கப்படுவார். விழிப்புணர்வில் ஏதோ ஒன்று முழுவதும் வியாபித்துள்ளது என்னும் புதிய கருத்தே அவர்களுக்குப் பொய்யானதாகவும், சாத்தியமாகாததாகவும் தோன்றும்.

அவர்களுக்கு எது உதவும் என்றால் ஒரு ஞானி, தன் மெய்யறிதல் அனுபவத்தை, அதன் காரணங்கள், ஆரம்பம், அதன் முன்னேற்றம், அதனால் பெற்றவை மற்றும் நடைமுறை வாழ்க்கையில் அவற்றைச் செயல் படுத்தும் விதம் ஆகியவற்றைச் சொல்வதைக் கேட்கும்

சந்தர்ப்பம்தான். அவர் சொல்வதில் பல வினோதமாக, அர்த்த மற்றவையாகக்கூடத் தோன்றலாம். இருப்பினும் ஒரு மெய்மை உணர்வு, வருணனைக்கு அடங்காத, மிகவும் மெய்யான, பிரக்தியட்சமாக அனுபவிக்கும் சூழ்நிலை அங்கு நிலவும். பின்பற்றத்தக்க வாழ்க்கையை வாழக்கூடிய மையமாக அது உருவாகும்.

**மஹராஜ்:** அந்த அனுபவத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. அனுபவத்தை உன்னால் பகிர்ந்துகொள்ள முடியுமா?

**கே:** ஆனால் அவர் ஒரு கலைஞராக இருந்தால் முடியும். கலையின் சாரம் உணர்வுகளை, அனுபவங்களைப் பகிர்வது.

**ம:** பகிர்தலைப் பெற, நீ பெறத் தகுதி வாய்ந்தவனாக இருக்க வேண்டும்.

**கே:** ஆமாம்; ஒரு பெறுபவர் இருக்கவேண்டும். ஆனால் அனுபவத்தை ஒருவர் கொடுக்காமல் இருந்தால் பெறுபவர் தயாராக இருந்து என்ன பயன்?

**ம:** ஞானி எல்லோருக்கும் சொந்தமானவர். தன்னிடம் வருபவர்களுக்கெல்லாம் ஞான தானத்தைச் சோர்வில்லாமலும், முழுமையாகவும் கொடுப்பார். அவ்வாறு ஞான தானத்தைக் கொடுப்பவராக இல்லாவிட்டால் அவர் ஒரு ஞானி அல்ல. அவர் என்ன வைத்திருக்கிறாரோ அதை எல்லோரிடமும் பகிர்ந்து கொள்வார்.

**கே:** ஆனால் அவர் தன்னையே பகிர்ந்துகொள்ள முடியுமா?

**ம:** அவர் மற்றவர்களை ஞானியாக்க முடியுமா என்று கேட்கிறாயா? முடியும் மற்றும் முடியாது. முடியாது, ஏனெனில் ஞானிகள் உருவாக்கப்படுவதில்லை. அவர்கள் தங்கள் ஆதாரத்திற்கு, தங்களின் உண்மையான இயல்பிற்குத் திரும்பும்போது தங்களை அறிந்துகொள்கிறார்கள். நீ என்னவாக முன்பே இருக்கிறாயோ அதாக உன்னை ஆக்க முடியாது. உனக்கு நான் சொல்லக் கூடியதெல்லாம் நான் பயணித்த வழியையும், அதை எடுத்துக் கொள்ளுமாறு உன்னை அழைப்பதும்தான்.

**கே:** இது என் கேள்விக்கான பதில் இல்லை. என் மனதில் திறனாய்வு செய்கின்ற, ஆராயாமல் எதையும் ஏற்காத, விழிப்புணர்வின் உயர் நிலைகளின் சாத்தியக் கூறுகளையே மறுக்கிற மேற்கத்தியவரைக் கொண்டுள்ளேன். மேற்கத்திய மனதின் பொருள் சார்ந்த பார்வையைப் பாதிக்காமல், அண்மைக் காலங்களில் மருந்துகள் அவர்களுடைய நம்பிக்கையின்மையை உடைத்துவிட்டன. மருந்தோ மருந்தில்லையோ, உடல் அடிப்படை நிஜமாகவும், மனம் இரண்டாம் பட்சமாகவும் இருக்கின்றது. மனதைத் தாண்டி அவர்கள் எதையும் பார்ப்பதில்லை. புத்தர் முதற்கொண்டு சுயம் அறிதலாகிய ஞான நிலை, 'இது அல்ல, அது அல்ல' என்னும் எதிர்மறை வாக்கியங்களாகத்தான் விவரிக்கப் பட்டு வருகிறது. இது தவிர்க்க முடியாததா? விவரிக்க முடியா விட்டாலும்கூட அதை உதாரணத்தின் மூலம் விளக்க முடியாதா? விளக்க வேண்டிய நிலை வார்த்தைகளுக்கு அப்பால் இருக்கும் போது எந்த வார்த்தை விவரிப்பும் போதாது என்பதை ஒப்புக் கொள்கிறேன். இருப்பினும் அதுவும் வார்த்தைகளுக்குள்தான் இருக்கிறது. வெளிப்படுத்த முடியாததை வார்த்தைகளுக்குள் கொண்டுவருவதுதான் கவிதை.

**ம:** ஆன்மீகக் கவிஞர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். உனக்கு என்ன வேண்டுமோ அதற்கு அவர்களிடம் செல். என்னைப் பொறுத்தவரை என் வழிகாட்டுதல் எளிமையானது: சிறிது காலம் என்னை நம்பி நான் சொல்வதைச் செய். நீ விடாமுயற்சியுடன் இருந்தால் உன் நம்பிக்கை நியாயமானது என்று அறிவாய்.

**கே:** ஆர்வம் மட்டுமே உள்ள, ஆனால் நம்பிக்கை இல்லாத வர்கள் என்ன செய்வது?

**ம:** அவர்கள் என்னுடன் தங்க முடிந்தால் அவர்களுக்கும் நம்பிக்கை வரும். அவர்கள் என்னை நம்பிவிட்டால், என் அறிவுரையைப் பின்பற்றி, தங்களுடைய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றிக் கொள்வார்கள்.

**கே:** நான் கேட்பது பயிற்சியை அல்ல. அதன் விளைவுகளை. உங்களிடம் இரண்டும் இருக்கின்றன. நீங்கள் பயிற்சியைப் பற்றி முழுவதும் சொல்ல விரும்புகிறீர்கள்; ஆனால் விளைவுகளைப்

பற்றி வரும் போது நீங்கள் பகிர்ந்துகொள்ள மறுக்கிறீர்கள். ஒன்று, உங்கள் நிலை வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது என்று சொல்கிறீர்கள். அல்லது நமக்குள் வித்தியாசம் எதுவும் இல்லை என்கிறீர்கள். நாங்கள் ஒரு வித்தியாசத்தைப் பார்க்கும்போது நீங்கள் அவ்வாறு ஒன்றையும் பார்ப்பது இல்லை. இரண்டிலுமே உங்களுடைய நிலையைப் பற்றிய உட்கருத்து எங்களுக்குக் கிடைப்பதில்லை.

**ம:** உன்னைப் பற்றிய உட்கருத்தே உனக்கு இல்லாமல் இருக்கும்போது என்னைப் பற்றிய உட்கருத்து உனக்கு எப்படிக் கிடைக்கும்? உட்கருத்தை அறிவதற்கான கருவியே இல்லாமல் இருக்கும்போது அதை முதலில் கண்டுபிடிக்க வேண்டியது அவசியமில்லையா? இது கண் பார்வையற்ற ஒருவர் பார்வையைப் பெறுவதற்கு முன்பே ஓவியம் வரையக் கற்க வேண்டுவது போல் உள்ளது. என்னுடைய நிலையை அறிய வேண்டுகிறாய். ஆனால் உன் மனைவி அல்லது வேலைக்காரனின் நிலை உனக்குத் தெரியுமா?

**கே:** நான் சில குறிப்புகளைத்தான் கேட்கிறேன்.

**ம:** நன்று. நான் உனக்கு மிக முக்கியமான குறிப்பைக் கொடுத்தேன் - நீ வித்தியாசங்களைப் பார்ப்பவற்றில் நான் பார்ப்பதில்லை. எனக்கு அது போதுமானது. அது போதாது என்று நீ நினைத்தால் நான் திரும்பவும் அது போதும் என்று சொல்லத்தான் முடியும். இதை ஆழமாகச் சிந்தி. அப்போது நான் பார்ப்பதை நீயும் பார்ப்பாய்.

நீ உடனடியாக உட்கருத்து கிடைக்கவேண்டும் என்று நினைக்கிறாய். ஆனால் உடனடியாகக் கிடைப்பதற்கு முன் நீண்ட ஆயத்தம் தேவை என்பதை மறந்துவிட்டாய். பழங்கள் பழுத்து திடீரென்று விழுகின்றன. ஆனால் அவை பழுக்க அதிக காலம் ஆகும்.

நான் என்னை நம்ப வேண்டும் என்று சொன்னால் அது ஒரு குறுகிய காலத்திற்கு மட்டும் தான். உன்னை நகரவைக்கத் தேவையான காலம்தான். எவ்வளவுக்கெவ்வளவு நீ மெய்யார் வத்துடன் இருக்கிறாயோ அவ்வளவுக்கவ்வளவு குறைந்த

நம்பிக்கை உனக்குத் தேவை. ஏனெனில் சீக்கிரமாகவே என் மேல் நீ கொள்ளும் நம்பிக்கை நியாயமானதென்று அறிவாய். நான் நம்பிக்கைக்கு உகந்தவன் என்று என்னை நிரூபிக்கச் சொல்கிறாய். நான் எப்படி அதைச் செய்வது? எதற்காக அதைச் செய்ய வேண்டும்? தற்போது மேற்கத்திய விஞ்ஞானத்தில் நடைமுறையில் உள்ள செயல்பாட்டு அணுகுமுறையைத்தான் நான் உனக்குக் கொடுக்கிறேன். ஒரு விஞ்ஞானி ஒரு பரிசோதனையையும், அதன் விளைவுகளையும் விளக்கினால் நீ அவருடைய வார்த்தைகளை நம்பி அவர் விளக்கியவாறு அந்தப் பரிசோதனையை திரும்பச் செய்வாய். அதே முடிவையோ அல்லது அதேபோன்ற முடிவையோ நீ பெற்றால் அவரை மேற்கொண்டு நம்ப வேண்டியதில்லை. நீ உன் சொந்த அனுபவத்தை நம்புவாய். ஊக்குவிக்கப்பட்டு, தொடர்ந்து, இறுதியாக கிட்டத்தட்ட அதே மாதிரியான முடிவை அடைவாய்.

**கே:** கலாச்சாரத்தாலும், பேணி வளர்க்கப்பட்டதாலும் இந்திய மனம் பொருண்மை சாராத ஆன்மீகப் பரிசோதனைகளுக்குத் தயாராக உள்ளது. இந்தியருக்கு, 'உச்ச உயர்வான மெய்மையை எளிதாகவும், தெளிவாகவும் மனதால் உணர்ந்தறிதல்' போன்ற வார்த்தைகள் புரிந்துகொள்ளப்பட்டு, அவருடைய இருத்தலின் ஆழத்திலிருந்து விளைவுகள் கிடைக்கின்றன. அவை ஒரு மேற்கத்தியவருக்குக் குறைந்த அளவே அர்த்தமுள்ளவை. கிறிஸ்துவ மதத்தின் அவருடைய சொந்த மதப் பிரிவில் அவர் வளர்க்கப்பட்டாலும் கடவுளின் ஆணைகளுடனும், கிறிஸ்துவின் உரிமைக் கட்டளைகளுடனும் இணக்கமாக இருத்தலுக்கு அப்பால் அவர் சிந்திக்க மாட்டார். மெய்மையின் நேரடி அனுபவம் அவருடைய எதிர்பார்ப்பிற்கு அப்பாற்பட்டது மட்டுமல்லாமல் அவருடைய புரிதலுக்கும் அப்பாற்பட்டது. சில மேற்கத்தியவர்கள், 'பிரயோஜனமில்லை. மேற்கத்தியவர் கைக்கொள்ள மாட்டார். ஏனெனில் அவரால் முடியாது. சுயம் அறிதலைப்பற்றி அவரிடம் எதுவும் சொல்ல வேண்டாம். அவர் ஒரு பயனுள்ள வாழ்க்கையை வாழ்ந்து, மறுபிறவியை இந்தியாவில் பிறக்கட்டும். அப்போதுதான் அவருக்கு ஒரு வாய்ப்பு உள்ளது' என்கின்றனர். ஒரு சிலர், 'மெய் எல்லோருக்கும் பொதுவானது. ஆனால் எல்லோருக்கும் அதைக் கிரகிக்கும் திறன் சமமாக வாய்ப்பதில்லை. அந்தத் திறன் ஆசைப்

படுவதால் வரும். அந்தத் தீவிர ஆசை பக்தியாக மாறி, முடிவில் ஆத்ம நிவேதனமாக வளரும். நேர்மையாகவும், முழு ஆர்வத்துடனும், எல்லாத் தடைகளையும் தாண்டவேண்டும் என்னும் உறுதியான முடிவாலும் மேற்கத்தியவருக்கும் கீழை நாட்டவருக்குண்டான அதே வாய்ப்பு உள்ளது. அவருக்குத் தேவையானதெல்லாம் ஆர்வத்தைத் தட்டி எழுப்ப வேண்டுவதே' என்று சொல்கின்றனர். சுயம் அறிதலுக்கான ஆர்வத்தைத் தட்டி எழுப்ப அதன் பயன்களைப்பற்றி அவரை நம்ப வைக்க வேண்டும்.

**ம:** ஒருவருடைய தனிப்பட்ட சொந்த அனுபவங்களை பரிமாறிக்கொள்ள முடியுமென்று நம்புகிறாயா?

**கே:** எனக்குத் தெரியாது. நீங்கள் ஒருமையைப் பற்றியும், பார்ப்பவருக்குப் பார்ப்பதுடன் உள்ள ஒருமைத் தன்மையைப் பற்றியும் பேசுகிறீர்கள். எல்லாமும் ஒன்றாய் இருக்கும் போது பரிமாற்றம் சாத்தியமான ஒன்றே.

**ம:** ஒரு நாட்டைப் பற்றிய நேரடி அனுபவத்தைப் பெற ஒருவர் அங்கு சென்று வசிக்க வேண்டும். சாத்தியமில்லாத ஒன்றைக் கேட்காதே. ஒருவருடைய ஆன்மீக வெற்றி மனித குலத்திற்குப் பயனுள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் மற்றொரு நபருக்குப் பயனளிக்க நெருங்கிய தனிப்பட்ட உறவு தேவை. அப்படிப்பட்ட உறவு எதேச்சையானதல்ல; எல்லோராலும் முடியாது. ஆனால் விஞ்ஞான அணுகுமுறை எல்லோருக்கும் பொதுவானது. 'நம்பு - பரிசோதி - அனுபவப்படு'. வேறு என்ன உனக்கு வேண்டும்? விரும்பாதவர்களிடம் ஏன் மெய்யைத் திணிக்க வேண்டும்? எப்படி இருந்தாலும் அதைச் செய்ய முடியாது. பெறுபவர் இல்லாமல் கொடுப்பவர் என்ன செய்ய முடியும்?

**கே:** கலையின் சாராம்சமே புற வடிவத்தை உபயோகப் படுத்தி ஒரு உள் அனுபவத்தை வெளிப்படுத்துவது. புறம் அர்த்தமுள்ளதாக ஆவதற்கு முன் ஒருவர் அகத்தளவில் உணர்வுடன் இருக்க வேண்டும். ஒருவர் எப்படி அக உணர்வை வளர்ப்பது?

**ம:** நீ எப்படிச் சொன்னாலும் அர்த்தம் ஒன்றேதான். கொடுப்பவர்கள் நிறையப் பேர். எடுத்துக் கொள்பவர்கள் எங்கே இருக்கிறார்கள்?

**கே:** நீங்கள் உங்கள் அக உணர்வைப் பகிர்ந்துகொள்ள முடியாதா?

**ம:** ஆமாம், என்னால் முடியும். ஆனால் பகிர்தல் என்பது இருவழிப் பாதை. பகிர்ந்துகொள்ள இருவர் தேவை. நான் கொடுக்க விரும்புவதை யார் வாங்கிக்கொள்ள விரும்புகிறார்கள்?

**கே:** நாம் எல்லோரும் ஒன்றே என்று நீங்கள் சொல்கிறீர்கள். அது போதாதா?

**ம:** நான் உன்னுடன் ஒருவன். நீ என்னோடு ஒருவனா? ஆம் என்றால் நீ கேள்விகள் கேட்க மாட்டாய். இல்லை என்றால், நான் பார்ப்பதை நீ பார்க்க முடியவில்லை என்றால், உன் பார்வையை மேம்படுத்தும் வழியைச் சொல்வதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?

**கே:** உங்களால் கொடுக்கமுடியாதது உங்களுடையது அல்ல.

**ம:** நான் என்னுடையது என்று எதையும் உரிமை கோருவதில்லை. 'நான்' என்பது இல்லை என்றால் 'என்னுடையது' என்பது எங்கிருக்கும்? இரண்டு பேர் ஒரு மரத்தைப் பார்க்கிறார்கள். ஒருவர் இலைகளுக்கடியில் பழம் மறைந்திருப்பதைப் பார்க்கிறார். மற்றொருவருக்கு அது தெரியவில்லை. மற்றபடி இருவருக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. சிறிது கவனம் செலுத்தினால் மற்றவரும் பார்க்க முடியும் என்று பழத்தைப் பார்த்தவருக்குத் தெரியும். ஆனால் பகிர்ந்துகொள்ளுதல் என்னும் கேள்வி எழாது. என்னை நம்பு; நான் கருமி அல்ல. நான் மெய்யின் உன்னுடைய பங்கைத் தக்க வைத்துக் கொண்டு கையை மூடி வைத்திருக்கவில்லை. மாறாக, நான் முழுமையாக உன்னுடையவன். என்னை உண்; என்னைக் குடி. ஆனால் 'கொடு, கொடு' என்று நீ வார்த்தைகளால் திரும்பத் திரும்பச் சொல்கிறாயே ஒழிய, கொடுப்பதைப் பெற்றுக்கொள்ள நீ எதுவும் செய்வதில்லை. நான் பார்ப்பதை நீ பார்க்க முடிவதற்கு உனக்கு அருகில் உள்ள, எளிய வழியைக் காண்பிக்கிறேன். ஆனால் நீ உன்னுடைய பழைய சிந்திக்கும், உணரும், செயல்படும் பழக்கங்களைப் பற்றிக் கொண்டு, முழுப் பழியையும் என்மீது போடுகிறாய். உன்னிடம் இல்லாதது எதுவும் என்னிடம் இல்லை. சுயம் அறிதலாகிய அறிவு கொடுத்து வாங்கக்

கூடிய ஒரு ஜடப் பொருளல்ல. அது முற்றிலும் ஒரு புதிய பரிமாணம்; அங்கு கொடுப்பதற்கோ, பெறுவதற்கோ எதுவும் இல்லை.

**கே:** உங்களுடைய தினசரி வாழ்க்கையின்போது உங்கள் மனதில் என்ன இருக்கும் என்பதைப் பற்றிய சிறிதளவு உட்கருத்தையாவது எங்களுக்குச் சொல்லுங்கள். உங்களைப் பொறுத்தவரை சாப்பிடுவது, நீர் அருந்துவது, பேசுவது, தூங்குவது ஆகியவற்றைப் பற்றி எவ்வாறு உணர்கிறீர்கள்?

**ம:** வாழ்க்கையின் பொதுவானவற்றை உன்னைப் போலத்தான் நானும் அனுபவப்படுகிறேன். நான் அனுபவப்படாததில்தான் வித்தியாசம் இருக்கிறது. நான் அச்சம் அல்லது பேராசையையோ, வெறுப்பு அல்லது கோபத்தையோ அனுபவப்படுவதில்லை. நான் எதையும் வேண்டுவதில்லை, எதையும் வேண்டாம் என்று மறுப்பதில்லை, எதையும் வைத்துக் கொள்வதில்லை. இந்தச் சமாச்சாரங்களில் நான் விட்டுக் கொடுத்து சமரசம் செய்வதில்லை. நமக்குள் இருக்கும் மிகப்பெரிய வித்தியாசம் இதுவாக இருக்கலாம். நான் சமரசம் செய்துகொள்வதில்லை, எனக்கு நான் உண்மையாக இருக்கிறேன். நீயோ மெய்யிற்கு அஞ்சுகிறாய்.

**கே:** மேற்கத்திய நாட்டவரின் பார்வையில் உங்களுடைய வழிமுறையில் ஏதோ ஒன்று உறுத்துகிறது. ஒரு மூலையில் உட்கார்ந்து 'நான் கடவுள், நான் கடவுள்' என்று திரும்பத்திரும்பச் சொல்வது பைத்தியகாரத்தனமாகத் தோன்றுகிறது. ஒரு மேற்கத்திய வரை இதுமாதிரியான பயிற்சிகள் உச்சஉயர்வான, தெளிந்த புத்தியைக் கொடுக்கும் என்று எப்படி நம்ப வைப்பது?

**ம:** தான் கடவுள் என்று கூறுபவரும், அதைச் சந்தேகப்படுபவரும் - இருவருமே தவறான நம்பிக்கைகொண்டு ஏமாறுகிறார்கள். தங்கள் கனவிலிருந்து அவர்கள் பேசுகிறார்கள்.

**கே:** எல்லாமுமே கனவு என்றால் விழித்திருப்பது என்பது என்ன?

**ம:** கனவு உலகத்தின் மொழியில் எப்படி விழித்திருக்கும் நிலையை விவரிப்பது? வார்த்தைகள் எதார்த்தத்தை விவரிப்ப தில்லை. அவை அடையாளச் சின்னங்கள் மட்டுமே.

**கே:** நீங்கள் உங்கள் அக உணர்வைப் பகிர்ந்துகொள்ள முடியாதா?

**ம:** ஆமாம், என்னால் முடியும். ஆனால் பகிர்தல் என்பது இருவழிப் பாதை. பகிர்ந்துகொள்ள இருவர் தேவை. நான் கொடுக்க விரும்புவதை யார் வாங்கிக்கொள்ள விரும்புகிறார்கள்?

**கே:** நாம் எல்லோரும் ஒன்றே என்று நீங்கள் சொல்கிறீர்கள். அது போதாதா?

**ம:** நான் உன்னுடன் ஒருவன். நீ என்னோடு ஒருவனா? ஆம் என்றால் நீ கேள்விகள் கேட்க மாட்டாய். இல்லை என்றால், நான் பார்ப்பதை நீ பார்க்க முடியவில்லை என்றால், உன் பார்வையை மேம்படுத்தும் வழியைச் சொல்வதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?

**கே:** உங்களால் கொடுக்கமுடியாதது உங்களுடையது அல்ல.

**ம:** நான் என்னுடையது என்று எதையும் உரிமை கோருவதில்லை. 'நான்' என்பது இல்லை என்றால் 'என்னுடையது' என்பது எங்கிருக்கும்? இரண்டு பேர் ஒரு மரத்தைப் பார்க்கிறார்கள். ஒருவர் இலைகளுக்கடியில் பழம் மறைந்திருப்பதைப் பார்க்கிறார். மற்றொருவருக்கு அது தெரியவில்லை. மற்றபடி இருவருக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. சிறிது கவனம் செலுத்தினால் மற்றவரும் பார்க்க முடியும் என்று பழத்தைப் பார்த்தவருக்குத் தெரியும். ஆனால் பகிர்ந்துகொள்ளுதல் என்னும் கேள்வி எழாது. என்னை நம்பு; நான் கருமி அல்ல. நான் மெய்யின் உன்னுடைய பங்கைத் தக்க வைத்துக் கொண்டு கையை மூடி வைத்திருக்கவில்லை. மாறாக, நான் முழுமையாக உன்னுடையவன். என்னை உண்; என்னைக் குடி. ஆனால் 'கொடு, கொடு' என்று நீ வார்த்தைகளால் திரும்பத் திரும்பச் சொல்கிறாயே ஒழிய, கொடுப்பதைப் பெற்றுக்கொள்ள நீ எதுவும் செய்வதில்லை. நான் பார்ப்பதை நீ பார்க்க முடிவதற்கு உனக்கு அருகில் உள்ள, எளிய வழியைக் காண்பிக்கிறேன். ஆனால் நீ உன்னுடைய பழைய சிந்திக்கும், உணரும், செயல்படும் பழக்கங்களைப் பற்றிக் கொண்டு, முழுப் பழியையும் என்மீது போடுகிறாய். உன்னிடம் இல்லாதது எதுவும் என்னிடம் இல்லை. சுயம் அறிதலாகிய அறிவு கொடுத்து வாங்கக்

கூடிய ஒரு ஜடப் பொருளல்ல. அது முற்றிலும் ஒரு புதிய பரிமாணம்; அங்கு கொடுப்பதற்கோ, பெறுவதற்கோ எதுவும் இல்லை.

**கே:** உங்களுடைய தினசரி வாழ்க்கையின்போது உங்கள் மனதில் என்ன இருக்கும் என்பதைப் பற்றிய சிறிதளவு உட்கருத்தையாவது எங்களுக்குச் சொல்லுங்கள். உங்களைப் பொறுத்தவரை சாப்பிடுவது, நீர் அருந்துவது, பேசுவது, தூங்குவது ஆகியவற்றைப் பற்றி எவ்வாறு உணர்கிறீர்கள்?

**ம:** வாழ்க்கையின் பொதுவானவற்றை உன்னைப் போலத்தான் நானும் அனுபவப்படுகிறேன். நான் அனுபவப்படாததில்தான் வித்தியாசம் இருக்கிறது. நான் அச்சம் அல்லது பேராசையையோ, வெறுப்பு அல்லது கோபத்தையோ அனுபவப்படுவதில்லை. நான் எதையும் வேண்டுவதில்லை, எதையும் வேண்டாம் என்று மறுப்பதில்லை, எதையும் வைத்துக் கொள்வதில்லை. இந்தச் சமாச்சாரங்களில் நான் விட்டுக் கொடுத்து சமரசம் செய்வதில்லை. நமக்குள் இருக்கும் மிகப்பெரிய வித்தியாசம் இதுவாக இருக்கலாம். நான் சமரசம் செய்துகொள்வதில்லை, எனக்கு நான் உண்மையாக இருக்கிறேன். நீயோ மெய்யிற்கு அஞ்சுகிறாய்.

**கே:** மேற்கத்திய நாட்டவரின் பார்வையில் உங்களுடைய வழிமுறையில் ஏதோ ஒன்று உறுத்துகிறது. ஒரு மூலையில் உட்கார்ந்து 'நான் கடவுள், நான் கடவுள்' என்று திரும்பத்திரும்பச் சொல்வது பைத்தியகாரத்தனமாகத் தோன்றுகிறது. ஒரு மேற்கத்திய வரை இதுமாதிரியான பயிற்சிகள் உச்சஉயர்வான, தெளிந்த புத்தியைக் கொடுக்கும் என்று எப்படி நம்ப வைப்பது?

**ம:** தான் கடவுள் என்று கூறுபவரும், அதைச் சந்தேகப்படுபவரும் - இருவருமே தவறான நம்பிக்கைகொண்டு ஏமாறுகிறார்கள். தங்கள் கனவிலிருந்து அவர்கள் பேசுகிறார்கள்.

**கே:** எல்லாமுமே கனவு என்றால் விழித்திருப்பது என்பது என்ன?

**ம:** கனவு உலகத்தின் மொழியில் எப்படி விழித்திருக்கும் நிலையை விவரிப்பது? வார்த்தைகள் எதார்த்தத்தை விவரிப்ப தில்லை. அவை அடையாளச் சின்னங்கள் மட்டுமே.

**கே:** மறுபடியும் அதே காரணங்கள் - வார்த்தைகள் மெய்யை விவரிக்க முடியாதென்று.

**ம:** உனக்கு வார்த்தைகள் வேண்டுமென்றால், நான் சில புராதன காலத்துச் சக்திவாய்ந்த மந்திர வார்த்தைகளைத் தருகிறேன். விடாமல் அவற்றில் ஒன்றைத் திரும்பத் திரும்பக் கூறு. அவை விந்தைகளை விளைவிக்கும்.

**கே:** நீங்கள் கருத்தூன்றிப் பேசுகிறீர்களா? சரியான பண்பாட்டினாலும், ஆன்மீகப் பின்னனியினாலும் பிறக்கும் நம்பிக்கையும், உறுதியும் சிறிதளவும் இல்லாத ஒரு மேற்கத்தியவரை, 'ஓம்', அல்லது 'ராம்,' அல்லது 'ஹரே கிருஷ்ணா' என்று விடாமல் திரும்பத் திரும்பச் சொல்லச் சொல்வீர்களா? நம்பிக்கையும், மிகுந்த ஊக்கமும் இல்லாமல் ஒரே சத்தங்களை இயந்திர கதியில் திரும்பத் திரும்பச் சொல்வதனால் அவர் எப்போதாவது எதையாவது அடைவாரா?

**ம:** ஏன் முடியாது? வேட்கை, மற்றும் மறைந்திருக்கும் நோக்கம் ஆகியவைதான் முக்கியம். அவை எடுக்கும் புற வடிவம் அல்ல. அவர் எதைச் செய்தாலும், அதைத் தன் மெய்யான சுயத்தை அறிவதற்காகப் பயன்படுத்தினால் அது கண்டிப்பாக அவரை அவருடைய சுயத்திடம் சேர்க்கும்.

**கே:** வழிமுறையின் செயல்திறமையின் மேல் நம்பிக்கை தேவையில்லையா?

**ம:** விளைவுகளை எதிர்பார்ப்பது என்னும் நம்பிக்கை தேவையில்லை. இங்கு செயல் மட்டுமே முக்கியம். மெய்யிற்காக நீ எதைச் செய்தாலும் அது உன்னை மெய்யிடம் கொண்டு போய்ச் சேர்க்கும். மனமார்ந்த ஈடுபாட்டுடனும், நேர்மையாகவும் மட்டும் இரு. அதன் புற வடிவம் முக்கியமே அல்ல.

**கே:** அப்படியானால் ஒருவருடைய மனமார்ந்த ஈடுபாட்டை வெளிப்படுத்த வேண்டிய அவசியம் என்ன?

**ம:** தேவை இல்லை. எதுவுமே செய்யாதிருந்தாலே நல்லது. எண்ணத்தாலும் செயலாலும் நீர்த்துப் போகாத, தூய, தீவிரமான மனமார்ந்த ஈடுபாடு உன் இலக்கிற்கு உன்னை வேகமாகக்

கொண்டு போய்ச் சேர்க்கும். தூய நோக்கம்தான் முக்கியம். வழிமுறை அல்ல.

**கே:** நம்பிக்கையை வைக்க முடியவில்லை. மனக் கசப்புடன் முடிகின்ற, சலிப்புடன், சோம்பலாக மனம் இருக்கும்போது திரும்பத்திரும்பச் சொல்லும் மந்திரம் எப்படி நல்ல பயன் அளிக்கக் கூடியதாக இருக்கும்?

**ம:** சலிப்பு, மனக் கசப்பு, முற்றிலுமாக நம்பிக்கையின்மை ஆகியவை இருந்தாலும் கூட மந்திரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்வது, மேலும் மேலும் போராடுவது, சகித்துக் கொள்வது, விடா முயற்சி ஆகியவைதான் உண்மையாகவே அவசியம். அவைகளாகவே முக்கியமானவை அல்ல. அவைகளுக்குப் பின்னால் இருக்கும் மனமார்ந்த ஈடுபாடுதான் மிகவும் முக்கியம். வெளிப் புறத்திலிருந்து உந்துதலும், உட்புறத்திலிருந்து இழுப்பதும் அவசியம்.

**கே:** என் கேள்விகள் மேற்கத்திய நாட்டவர்களால் பெரும்பாலும் கேட்கப் படுபவை. அம் மக்கள் காரண காரியம், குறிக்கோள்கள், அவற்றை அடையும் வழிமுறைகளைப் பற்றித்தான் சிந்திக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட வார்த்தைக்கும், பூரணமான மெய்மைக்கும் ஒரு காரணத் தொடர்பு இருப்பதை அவர்கள் பார்ப்பதில்லை.

**ம:** அப்படி எதுவும் இல்லை. ஆனால் வார்த்தைக்கும் அதன் அர்த்தத்திற்கும், செயலுக்கும் அதன் நோக்கத்திற்கும் தொடர்பு உள்ளது. ஆன்மீகப் பயிற்சி என்பது மனோதிடத்தை உறுதிப் படுத்துவது. திரும்பவும் உறுதிப் படுத்துவது. விருப்பம் இல்லாதவர் மெய் வழங்கப் பட்டாலும்கூட பெற்றுக்கொள்ள மாட்டார். பயத்தினால் பிறக்கும் விருப்பமின்மைதான் ஒரே தடை.

**கே:** அங்கு பயப்பட என்ன இருக்கிறது?

**ம:** அறியப்படாதது. அது இருக்கும் எந்த ஒன்றுமே இல்லை; அறியப்படும் எந்த ஒன்றும் இல்லை; செயல்படும் எந்த ஒன்றும் இல்லை. அது அனைத்திற்கும் அப்பால் உள்ளது.

**கே:** நீங்கள் அடைந்த விதத்தைப் பகிர்ந்துகொள்ள முடியும். ஆனால் அதன் பலன்களைப் பகிர்ந்து கொள்ள முடியாது என்று சொல்கிறீர்களா?

**ம:** நான் நிச்சயமாகப் பலன்களைப் பகிர்ந்து கொள்ள முடியும். அதைத்தான் நான் சதா காலமும் செய்துகொண்டு இருக்கிறேன். ஆனால் என்னுடையது நிசப்தமான மொழி. அதைக் கேட்கவும், புரிந்து கொள்ளவும் கற்றுக்கொள். அதுதான் யோக மார்க்கம்.

**கே:** மனமார்ந்த ஈடுபாட்டுடன் கூடிய உளப்பாங்கு இல்லாமல் ஒருவர் எப்படி ஆரம்பிப்பார் என்று எனக்குத் தெரியவில்லை.

**ம:** என்னுடன் சிறிது காலம் இரு. அல்லது நான் சொல்வதற்கு உன் மனதைக் கொடுத்துத் தியானம் செய். உறுதியான ஈடுபாட்டுடன் கூடிய மனப்பாங்கு தோன்றும்.

**கே:** எல்லோருக்கும் உங்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைப்பதில்லை.

**ம:** உன் சுயத்தைச் சந்தி. உன் சுயத்துடன் இரு; அது சொல்வதைக் கேள்; அதற்குக் கீழ்ப் படி; அதை நேசி; அதை மனதில் இடைவிடாது வைத்திரு. உனக்கு வேறு வழிகாட்டி தேவை இல்லை. உன்னுடைய மெய் அறியும் உந்துதலின் பலன் உன் தினசரி வாழ்க்கையைப் பாதித்துக் கொண்டிருக்கும்வரை எல்லாமும் உன்னிடம் நன்றாக நடக்கின்றன என்று தெரிந்து கொள். யாரையும் துன்புறுத்தாமல் உன் வாழ்க்கையை வாழ். துன்புறுத்தாமை யோகாவின் மிகவும் சக்தி வாய்ந்த வடிவம். அது உன் இலக்கிற்கு உன்னை வேகமாகக் கொண்டு போய்ச் சேர்க்கும். இதைத்தான் நான் 'நிசர்க யோகா', இயற்கையான யோகா என்று சொல்கிறேன். அது அமைதியாகவும், ஒருமைத் தன்மையோடும், நட்புடனும், அன்புடனும் வாழும் கலை. காரணமற்ற, முடிவற்ற ஆனந்தம் அதன் பலன்.

**கே:** இருப்பினும் இவை எல்லாம் சிறிது நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டவை.

**ம:** உள் முகமாகத் திரும்பு. அப்போது உன்னை நம்பத் தொடங்குவாய். மற்ற எல்லாவற்றின் மேலும் நம்பிக்கை

அனுபவத்தால் வரும். வெறும் நம்பிக்கையால் மட்டுமே நீ அதிகமாக அடைய முடியாது.

**கே:** என்னிடம் ஒருவர் உனக்குத் தெரியாத ஒன்று எனக்குத் தெரியும் என்று சொன்னால், 'எனக்குத் தெரியாத, உங்களுக்குத் தெரிந்த அது என்ன?' என்று நான் கேட்பேன்.

**ம:** அதற்கு அவர் அதை வார்த்தைகளால் தெரிவிக்க முடியாது என்று சொன்னால் என்ன செய்வாய்?

**கே:** அப்படியானால் அவரை நெருக்கமாகக் கவனித்து, அவர் என்ன சொல்கிறார் என்று புரிந்துகொள்ள முயற்சிப்பேன்.

**ம:** சரியாக இதையேதான் நான் உன்னைச் செய்யச் சொல்கிறேன். ஒரு பரஸ்பரப் புரிந்துகொள்ளும் தன்மை ஏற்படும் வரை ஆர்வத்துடன் இரு, கவனி. பிறகு பகிர்தல் எளிதாகும். உண்மையில் எல்லா அறிதலும் பகிர்தல் மட்டுமே. ஒரு விரிவான விழிப்புணர்வு நிலைக்குள் நுழைந்து அதைப் பகிர்ந்துகொள்வாய். நுழையவும், பகிர்ந்து கொள்ளவும் விருப்பமின்மைதான் ஒரே தடை. நான் ஒருபோதும் வித்தியாசங்களைப் பற்றி பேசுவதில்லை. ஏனெனில் எனக்கு அப்படி எதுவும் கிடையாது. நீ வித்தியாசங் களைப் பற்றிப் பேசுகிறாய். எனவே நீதான் அவற்றை எனக்குக் காண்பிக்க வேண்டும். எப்படியாவது வித்தியாசங்களை எனக்குக் காண்பி. இதற்கு நீ என்னைப் புரிந்துகொள்ள வேண்டும். பிறகு வித்தியாசங்களைப் பற்றிப் பேச மாட்டாய். ஒன்றை நன்கு புரிந்துகொள். அப்போது நீ சேர வேண்டிய இடத்தைச் சேர்ந்து விடுவாய். உன்னை எது தடுக்கிறது என்றால் வாய்ப்பு இல்லாமை அல்ல. எதை நீ புரிந்துகொள்ள வேண்டுகிறாயோ அதில் உன் மனதை ஒருமுகப் படுத்தும் திறமை இல்லாததுதான் காரணம். எது உனக்குத் தெரியாதோ அதை மனதில் வைத்திருந்தால் அது அதன் இரகசியங்களை உனக்கு வெளிப்படுத்தும். ஆனால் நீ மேலோட்ட மாகவும், பொறுமையற்றும், பார்ப்பதற்கும் காத்திருப்பதற்கும் தேவையான அளவு மெய்யார்வமற்றும் இருந்தால், அது ஒரு குழந்தை நிலாவைப் பார்த்து அது வேண்டும் என்று அடம்பிடித்து அழுவது போலாகும்.

# 39. தானாகவே எதற்கும் இருத்தல் இல்லை

**கேட்பவர்:** உங்களைக் கவனிக்கும் போது உங்களிடம் கேள்வி கேட்பது பிரயோஜனப்படாது என்று எனக்குத் தெரிகிறது. எந்தக் கேள்வியாக இருந்தாலும் நீங்கள் அதன் மேலேயே அதைத் திருப்பிவிட்டு, நானே உருவாக்கிய ப்ரமையில் நான் வாழ்கிறேன், மெய் வார்த்தைகளால் விவரிக்க முடியாதது என்னும் அடிப்படை உண்மைக்கு என்னைக் கொண்டு வருகிறீர்கள். வார்த்தைகள் குழப்பத்தை அதிகரிக்கின்றன. உள்முகமாகச் சப்தமில்லாமல் தேடுவதுதான் ஒரே புத்திசாலித்தனமான வழி.

**மஹராஜ்:** உள்ளபடியே மனம் ப்ரம்மையை உருவாக்குகிறது. மனமே அதிலிருந்து விடுபடுகிறது. வார்த்தைகள் ப்ரம்மையை மிகைப்படுத்தலாம். அல்லது அதைப் போக்கவும் உதவலாம். ஒரு உண்மையை அது மெய்யாகும் வரை திரும்பத் திரும்பச் சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை. தாயின் வேலை குழந்தையைப் பெற்றெடுப்பதொடு முடிவதில்லை. தேவைப் படும் காலம் வரை, நாள் தோறும், வருடந்தோறும் அவர் உணவூட்டுவார். மெய் வார்த்தைகளைவிட சத்தமாகப் பேசும் வரை மக்கள் வார்த்தைகளைக் கேட்க வேண்டியது அவசியம்.

**கே:** ஆகையால் நாங்கள் வார்த்தைகளால் உணவூட்டப்பட வேண்டிய குழந்தைகளா?

**ம:** நீ வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வரை குழந்தைதான்.

**கே:** சரி. அப்படியானால் நீங்கள் எங்களுக்குத் தாயாக இருங்கள்.

**ம:** பிறப்பதற்கு முன் குழந்தை எங்கு இருந்தது? அது தாயுடன் இருக்கவில்லையா? அது தாயுடன் இருந்ததால்தான் பிறக்க முடிந்தது.

**கே:** கண்டிப்பாக தானே குழந்தையாக இருந்தபோது தாய் குழந்தையைச் சுமக்கவில்லை.

**ம:** சாத்தியமாகக் கூடிய தாய்தான் அவர். காலத்தின் ப்ரம்மைக்கு அப்பால் செல்.

**கே:** உங்கள் பதில் எப்போதும் ஒன்றேதான்; திரும்பத் திரும்ப அதே நேரத்தில் அடிக்கும் கடிகாரத்தின் வேலையைப் போன்றது.

**ம:** அதற்கு வேறொன்றும் செய்ய முடியாது. எப்படி ஒரே சூரியன் லட்சக்கணக்கான நீர்த் துளிகளில் பிரதிபலிக்கிறதோ, அப்படி காலத்திற்கு அப்பாற்பட்டது முடிவில்லாமல் திரும்பத் திரும்ப வருகிறது. நான் 'நான், நான்' என்று திரும்பத் திரும்பச் சொல்லும் போது எப்போதும் இருக்கின்ற மெய்யை உறுதிப் படுத்தி, திரும்பவும் உறுதிப் படுத்துகிறேன். நீ என் வார்த்தைகளால் சோர்ந்து போகிறாய். ஏனெனில் அவற்றிற்குப் பின்னால் இருக்கும் உயிருள்ள உண்மையை நீ பார்ப்பதில்லை. அதைத் தொடர்பு கொள். அப்போது வார்த்தைகள் மற்றும் நிசப்தத்தின் முழு அர்த்தத்தையும் கண்டுபிடிப்பாய்.

**கே:** சிறு பெண் முன்பே அவளுடைய எதிர்காலக் குழந்தையின் தாய் என்று நீங்கள் சொன்னீர்கள். அவியக்தாவின் நிலையில் ஆமாம். ப்ரக்தியட்சத்தில் இல்லை.

**ம:** அவியக்தா எண்ணங்களின் மூலமாகப் ப்ரக்தியட்சமாகிறது. உடலும் அதன் செயல்பாடுகளும் மனதில்தான் உள்ளன.

**கே:** மனம் என்பது இயக்கத்தில் உள்ள விழிப்புணர்வு. விழிப்புணர்வு என்பது ஆத்மாவின் குணமுள்ள (சகுணா) தன்மை. குணமற்றது (நிர்குணா) அதன் மற்றொரு தன்மை. இவற்றிற்கு அப்பால் பூரணத்தின் (பரமார்த்தாவின்) அளவிடமுடியாத ஆழம் இருக்கிறது.

**ம:** மிகச் சரி. அழகாகச் சொன்னாய்.

**கே:** ஆனால் இவை எல்லாம் எனக்கு வெறும் வார்த்தைகள்தான். அவற்றைக் கேட்பதும், திரும்பக் கூறுவதும் போதாது. அவற்றை உணர வேண்டும்.

**ம:** புறத்துடன் முன்பே ஈடுபட்டிருப்பது உன்னை அகத்தில் மனதைக் குவிக்க விடாமல் செய்வதைத்தவிர வேறு எதுவும் உன்னைத் தடுப்பதில்லை. அதற்கு ஒன்றும் செய்ய முடியாது. உன் சாதனாவை நீ தவிர்க்கக் கூடாது. உள்ளே உள்ளதும், வெளியே உள்ளதும் ஒன்றாகி, உள்ளும், புறமும் உள்ள வாசனைகளின் பந்தத்திற்கு அப்பால் செல்லும்வரை நீ உலகத்திற்கு எதிர்ப்புறமாகத் திரும்பி, உள்முகமாக இரு.

**கே:** கண்டிப்பாகக் குணமற்றது ( நிர்குணா) குணமுள்ள (சகுண) மனதில் உள்ள வெறும் கருத்துதான். தானாகவே அதற்கு இருத்தல் இல்லை.

**ம:** தானாகவே எதற்கும் இருத்தல் இல்லை. ஒவ்வொன்றுக்கும் அதன் இல்லாமை தேவை. இருத்தல் என்பது வித்தியாசப் படுத்திப் பார்க்கக் கூடியது, இங்கு உள்ளது - அங்கு அல்ல, இப்போது உள்ளது - அப்போது அல்ல, இப்படி உள்ளது - அப்படி அல்ல என்று. தண்ணீர் எப்படி அதைக் கொண்டிருக்கும் பாத்திரத்தின் வடிவத்தை எடுக்கிறதோ அப்படி ஒவ்வொன்றும் குணத்தால் தீர்மானிக்கப் படுகின்றன. எப்படி பாத்திரத்தைப் பொருத்தில்லாமல் தண்ணீர் தண்ணீராகவே இருக்கிறதோ, எப்படி ஒளி அது கொடுக்கும் வர்ணங்களைப் பொருத்தில்லாமல் ஒளியாகவே இருக்கிறதோ, அப்படி மெய் அது பிரதிபலிக்கும் குணங்களைப் பொருத்தில்லாமல் மெய்யாகவே இருக்கிறது. ஏன் பிரதிபலிப்பை மட்டும் விழிப்புணர்வின் குவி மையத்தில் வைக்க வேண்டும்? ஏன் மெய்யையே வைக்கக் கூடாது?

**கே:** விழிப்புணர்வே ஒரு பிரதிபலிப்பு. அது எப்படி மெய்யைக் கொண்டிருக்கும்?

**ம:** விழிப்புணர்வும் அதன் உள்ளடக்கமும் மாறக் கூடியவை, கண நேரத்தியவை என்று அறிவது மெய்யின் மேல் கவனத்தைக் குவிப்பதாகும். கயிறை கயிறாகப் பார்ப்பதற்கு அதைப் பாம்பாகப் பார்க்காமல் இருக்க வேண்டியது அவசியம்.

**கே:** *அவசியம் மட்டும் தானா அல்லது அதுவே போதுமானதா?*

**ம:** கயிறு உள்ளதென்றும் அது பாம்பைப் போல் தெரிகிற தென்றும் ஒருவருக்குத் தெரிய வேண்டும். அதே போல் மெய் இருக்கிறதென்றும் அதன் தன்மை சாட்சி – விழிப்புணர்வு என்றும் ஒருவர் அறிய வேண்டும். அது சாட்சித் தன்மைக்கு அப்பாற் பட்டதுதான். ஆனால் அதற்குள் நுழைய ஒருவர் தூய சாட்சிபாவ நிலையை அறிய வேண்டும். குணங்களைப் பற்றிய அறிவு ஒருவரை குணமற்றதன் அருகில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

**கே:** *குணமற்றதை அனுபவப் பட முடியுமா?*

**ம:** குணமுள்ளதைக் குணமுள்ளது என்று அறிவது மட்டுமே குணமற்றதைப் பற்றிச் சொல்லக் கூடியது. நேர்மறையான வார்த்தைகள் வெறும் குறிப்புகள் மட்டுமே. அவை தவறாகக் கொண்டு செல்பவை.

**கே:** *மெய்யின் சாட்சித்துவத்தைப் பற்றி நீங்கள் ஏதாவது சொல்ல முடியுமா?*

**ம:** அது எப்படி முடியும்? நாம் மெய்யற்றதை, ப்ரம்மையாகத் தோன்றுவதை, கடந்து போகக்கூடியதை, வரையறைக்குட் பட்டதைப் பற்றித்தான் பேசமுடியும். அதற்கு அப்பால் செல்ல, சுதந்திரமான இருத்தல் எதற்குமே இல்லை என்று ஒவ்வொன்றையும் முற்றிலுமாக மறுக்க வேண்டும். எல்லாமுமே சார்புடையவைதான்.

**கே:** *அவை எதைச் சார்ந்து இருக்கின்றன?*

**ம:** விழிப்புணர்வை. விழிப்புணர்வு சாட்சியைச் சார்ந்து இருக்கிறது.

**கே:** *சாட்சி மெய்யைச் சார்ந்து இருக்கிறதா?*

**ம:** சாட்சி என்பது மெய்யின் தூய்மையான பிரதிபலிப்பு. அது மனதின் நிலையைப் பொறுத்தது. எங்கு தூய்மையும், பந்த மில்லாமையும் மேம்பட்டிருகின்றனவோ அங்கு சாட்சிபாவ விழிப்புணர்வு இருத்தலுக்கு வரும். இது, எங்கு தண்ணீர் தெளிவாகவும், அலையற்றும் இருக்கிறதோ அங்கு நிலவின் பிம்பம் தெளிவாகத் தோன்றுவது போல என்றோ, அல்லது சூரிய

வெளிச்சம் வைரத்தில் மின்னுவதைப் போல என்றோ சொல்வதைப் போன்றது.

**கே:** *சாட்சி இல்லாமல் விழிப்புணர்வு இருக்க முடியுமா?*

**ம:** *சாட்சி இல்லாமல் அது விழிப்புணர்வற்றதாகிவிடும், வெறும் உயிர் வாழ்வதாக. விழிப்புணர்வின் எல்லா நிலையிலும் சாட்சி, எப்படி ஒவ்வொரு வர்ணத்திலும் ஒளி உள்ளதோ அப்படி உள்ளார்ந்திருக்கிறது. அறிபவர் இல்லாமல் அறிவு இருக்க முடியாது. தன்னுடைய சாட்சி இல்லாமல் அறிபவர் இருக்க முடியாது. உனக்குத் தெரிவது மட்டுமல்ல. உனக்குத் தெரியும் என்பதும் தெரியும்.*

**கே:** *குணமற்றதை அனுபவப் பட முடியாது, ஏனெனில் எல்லா அனுபவங்களும் குணமுள்ளவை என்றால் எதற்கு நிர்குணத்தைப் பற்றி பேச வேண்டும்?*

**ம:** *நிர்குணம் இல்லாமல் குணத்தைப்பற்றிய அறிவு எப்படி இருக்க முடியும்? இவை எல்லாம் ஊற்றெடுக்க ஒரு ஆதாரம், இவை எல்லாம் நிற்க ஒரு அஸ்திவாரம் வேண்டும். ஆத்ம ஞானம் என்பது அடிப்படையாக ஒருவரின் குணங்களைப் பற்றிய அறிவு மற்றும் எல்லையில்லாத வரையறைகளின் விதங்கள் வரையறுக்கப்படவும், பலவிதங்களை உருவாக்கவும் நமக்குள்ள எல்லையற்ற சாத்தியத்தைச் சார்ந்தது என்றும் அறிவதாகும். சகுண மனதிற்கு நிர்குணம் முழுமை என்றும், அதே சமயம் ஒன்றுமே இல்லாதது என்றும் தோன்றும். இரண்டையுமே நேரடியாக அனுபவப்பட முடியாது. ஆனால் அதனால் அவற்றை அது இல்லாமல் போகச் செய்யாது.*

**கே:** *அது ஒரு உணர்ச்சி இல்லையா?*

**ம:** *உணர்ச்சியும் மனதின் ஒரு நிலையே. எப்படி ஒரு நலமுடன் உள்ள உடலுக்குக் கவனம் தேவை இல்லையோ அப்படி நிர்குணம் அனுபவங்கள் அற்றது. இறக்கும் அனுபவத்தை எடுத்துக்கொள். சாதாரண மனிதன் இறப்பைப் பற்றி அஞ்சுவான். ஏனெனில் அவன் மாற்றத்தைப் பற்றி அஞ்சுகிறான். ஞானி அஞ்சுவதில்லை. ஏனெனில் அவர் மனம் முன்பே இறந்துவிட்டது. அவர் 'நான்*

வாழ்கிறேன்' என்று நினைப்பதில்லை. 'உயிர் இருக்கிறது' என்று அவருக்குத் தெரியும். உயிரில் எந்த மாற்றமும் கிடையாது. இறப்பும் கிடையாது. காலத்திலும், இடத்திலும் உள்ள ஒரு மாற்றமாக இறப்பு தோன்றுகிறது. காலமோ, இடமோ இல்லாதபோது அங்கு இறப்பு எப்படி இருக்க முடியும்? ஞானி பெயரளவிலும், உருவத்திலும் முன்பே இறந்துவிட்டார். அவற்றை இழப்பது எவ்வாறு அவரைப் பாதிக்கும்? இரயிலில் ஏறிய மனிதன் பல இடங்களுக்குப் பயணம் செய்கிறான். ஆனால் இரயிலில் ஏறாத மனிதன் எங்கும் செல்வதில்லை. அதனால் அவன் கட்டாயமாகச் சேரும் இடம் எதுவும் இருக்காது. அவனுக்குச் செல்லவேண்டிய இடம் எதுவுமில்லை. செய்யவேண்டியது எதுவும் இல்லை. எதுவுமாகவும் ஆக வேண்டியதில்லை. திட்டங்கள் போடுபவர் அவற்றை நிறைவேற்ற மறுபடியும் பிறப்பார். திட்டங்கள் போடாதவர் மறுபடியும் பிறக்க வேண்டியதில்லை.

**கே:** துன்பத்திற்கும் இன்பத்திற்கும் என்ன நோக்கம்?

**ம:** அவை தாங்களாகவே இருக்கின்றனவா அல்லது மனதில் மட்டும் இருக்கின்றனவா?

**கே:** எப்படி இருந்தாலும் அவை இருக்கின்றன. மனத்தைப் பொருட்படுத்த வேண்டாம்.

**ம:** துன்பமும் இன்பமும் வெறும் அறிகுறிகள்தான். அவை தவறான அறிவு மற்றும் தவறான உணர்சிகளின் விளைவுகள். ஒரு விளைவு தானாக அதன் சொந்த நோக்கத்தைக் கொண்டிருக்க முடியாது.

**கே:** கடவுளின் பரிபாலனத்தில் ஒவ்வொன்றும் ஒரு நோக்கத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

**ம:** நீ சர்வ சாதாரணமாகப் பேசும் கடவுளை அறிவாயா? உனக்குக் கடவுள் என்பது என்ன? ஒரு சப்தமா, காகிதத்தில் எழுதப் பட்ட வார்த்தையா, மனதில் உள்ள ஒரு கருத்தா?

**கே:** அவருடைய சக்தியால் நான் பிறந்து, உயிருடன் உள்ளேன்.

**ம:** துன்பப் படவும், இறக்கவும் செய்கிறாய். அதில் சந்தோசம் அடைகிறாயா?

**கே:** துன்பப் படுவதும், இறப்பதும் என்னுடைய சுய தவறாக இருக்கலாம். நான் சாசுவதமாக உயிருடன் இருக்க உருவாக்கப் பட்டிருக்கிறேன்.

**ம:** கடந்த காலத்தில் இல்லாமல் சாசுவதம் ஏன் எதிர் காலத்தில் மட்டும் உள்ளது? எதற்கு ஆரம்பம் உள்ளதோ அதற்கு முடிவு கண்டிப்பாக இருக்கும். ஆரம்பம் இல்லாதது மட்டுமே முடிவில்லாமல் இருக்கும்.

**கே:** கடவுள் ஒரு வெறும் கோட்பாடாகவோ, ஒரு செயல்படும் கருத்தாகவோ இருக்கலாம். எப்படிப் பார்த்தாலும் அது ஒரு பயனுள்ள கருத்து.

**ம:** இதற்கு அது உள்ளுக்குள் முரண்பாடற்று இருக்க வேண்டும். ஆனால் உன்னுடையது அவ்வாறு இல்லை. நீ உன் சொந்த உருவாக்கம், நீதான் உன்னை உருவாக்கியவர் என்னும் கோட்பாட்டை ஏன் முயற்சிக்கக் கூடாது? குறைந்த பட்சம் வெளிப் புறத்தில் போராட கடவுள் என்று ஒன்று இருக்காது.

**கே:** இந்த உலகம் செழுமையாகவும், சிக்கல் மிகுந்ததாகவும் இருக்கிறது. அதை நான் எப்படி உருவாக்குவது?

**ம:** உன்னால் என்ன செய்ய முடியும், என்ன செய்ய முடியாது என்று அறிய உன்னைப் பற்றிப் போதுமான அளவு உனக்குத் தெரியுமா? உன் சக்தி உனக்குத் தெரியுமா? நீ அதைப் பற்றி ஆராயவே இல்லை. உன்னிலிருந்து இப்போது ஆரம்பி.

**கே:** எல்லோரும் கடவுளை நம்புகிறார்கள்.

**ம:** என்னைப் பொறுத்தவரை நீதான் உனக்குக் கடவுள். ஆனால் நீ வேறுவிதமாக நினைத்தால் கடைசி வரை நினை. கடவுள் என்று ஒன்று இருந்தால் அனைத்தும் கடவுளுடையதே; எல்லாமும் நன்மைக்கே. வருவது அனைத்தையும் சந்தோசமாகவும், நன்றியுடனும் வரவேறு. எல்லா ஜீவராசிகளையும் நேசி. இதுவும் உன்னை உன் சுயத்திடம் கொண்டு போய்ச் சேர்க்கும்.

# 40. சுயம் மட்டுமே மெய்யானது

**மஹராஜ்:** உலகம் இருக்கிறது. ஆனால் அது மின்னும் மற்றும் ஒன்றுமில்லாத காட்சியாக இருக்கிறது. அது இருக்கிறது. ஆனாலும் இல்லை. நான் அதைப் பார்க்க விரும்பும் வரையும், அதில் பங்குகொள்ள விரும்பும் வரையும் அது இருக்கிறது. நான் அக்கறை எடுப்பதை நிறுத்திவிட்டால் அது கரைந்துவிடும். அதற்குக் காரணமோ பிரயோஜனமோ எதுவும் கிடையாது. நாம் துயரத்தோடு இருக்கும் போது அது வெளிவருகிறது. அது எப்படித் தெரிகிறதோ அப்படி இருக்கிறது. ஆனால் அதில் ஆழமோ அர்த்தமோ இல்லை. அதைச் சாட்சிபாவத்தால் பார்ப்பவர்தான் நிஜமானவர். அவரைச் சுயம் என்றோ, ஆத்மா என்றோ அழைக்கலாம். சுயத்திற்கு உலகம் இருக்கிறது - ஆனால் ஒரு வர்ணமயமான நாடகமாக. அதை அவர் அது இருக்கும் வரை அனுபவிப்பார். அது முடிந்தவுடன் மறந்துவிடுவார். மேடையில் நடக்கும் அனைத்தும் அவரை பயத்தில் நடுங்கச் செய்யவோ, அல்லது சிரிப்பில் உருண்டு புரளவோ செய்யும். இருப்பினும் எல்லா நேரமும் அது ஒரு நாடகம் என்னும் பிரக்ஞையுடன் அவர் இருப்பார். ஆசையோ அச்சமோ இல்லாமல் அவர் அது நடைபெறும்போது மகிழ்ச்சியுடன் அனுபவிப்பார்.

**கேட்பவர்:** உலகத்தில் மூழ்கியுள்ளவருக்குப் பலவிதமான ருசிகளுடைய வாழ்க்கை உள்ளது. அவர் அழுவார், சிரிப்பார், நேசிப்பார், வெறுப்பார், ஆசைப் படுவார், அச்சப் படுவார், துன்பப் படுவார், ஆனந்தப் படுவார். ஆசையும், அச்சமும் இல்லாத ஞானிக்கு என்ன வாழ்க்கை இருக்கும்? அவருடைய விட்டேத்தியான தன்மையினால் வறண்டு போய் விட மாட்டாரா?

**ம:** அவருடைய நிலை அவ்வளவு மோசமானதல்ல. அது தூய, காரணமற்ற, நீர்த்துப் போகாத பேரானந்தத்தின் சுவையைக்

கொண்டிருக்கும். அவர் மகிழ்ச்சியாக இருப்பார். அதோடு, மகிழ்ச்சியாக இருப்பது அவருடைய இயல்பு என்றும், அதை அடைய அவர் எதுவும் செய்யவோ, பிரயத்தனப்படவோ வேண்டியதில்லை என்றும் முழுமையாக அவர் அறிவார். அந்த ஆனந்தம் அவருடன் கூடவே இருக்கும். அது உடலை விட மெய்யாகவும், மனதை விட நெருக்கமாகவும் அவரைத் தொடரும். காரணமில்லாமல் மகிழ்ச்சி இருக்காது என்று நீ கற்பனை செய்து கொள்கிறாய். என்னைப் பொறுத்தவரை மகிழ்ச்சிக்காக எதையும் சார்ந்திருப்பது மிகப் பெரிய துக்கம். இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணங்கள் இருக்கும். ஆனால் என்னுடைய நிலை எனக்கே சொந்தமானது, முற்றிலும் காரணமற்றது, சுதந்திரமானது, அசைக்க முடியாதது.

**கே:** மேடையில் நடக்கும் நாடகம் போன்றதா?

**ம:** நாடகம் எழுதப்பட்டு, திட்டமிடப்பட்டு, ஒத்திகை பார்க்கப் படும். உலகம் சூனியத்திலிருந்து ஊற்றெடுத்து உருவாகிறது. சூனியத்திற்குத் திரும்புகிறது.

**கே:** உலகை உருவாக்கும் ஒருவர் இல்லையா? உருவாக்கப் படுவதற்கு முன்பு உலகம் பிரம்மாவின் மனதில் இருந்திருக்காதா?

**ம:** நீ என்னுடைய நிலைக்கு வெளியில் இருக்கும் வரை பல உருவாக்குபவர்கள், காப்பவர்கள், அழிப்பவர்களைக் கொண்டிருப்பாய். ஆனால் என்னுடன் வந்துவிட்ட பிறகு, நீ சுயத்தை மட்டுமே பார்ப்பாய். உன்னை எல்லாவற்றிலும் பார்ப்பாய்.

**கே:** எப்படிஇருந்தாலும் நீங்கள் இயங்குகிறீர்கள்.

**ம:** உனக்குத் தலை சுற்றல் இருந்தால் உலகம் உன்னைச் சுற்றி சுற்றுவதாகப் பார்ப்பாய். காரண காரியம், வேலை மற்றும் அதன் பயன் ஆகிய கருத்துக்களால் ஆட்டிப் படைக்கப்படுவதால் நான் இயங்குவதாக வெளிப்படையாகப் பார்க்கிறாய். நிஜத்தில் நான் பார்க்க மட்டுமே செய்கிறேன். எது செய்யப்பட்டாலும் அது மேடையில் நிகழ்த்தப்படுகிறது. சுகமும், துக்கமும், வாழ்தலும், இறத்தலும் கட்டுப்படுத்தப்பட்டுள்ள மனிதனுக்கு நிஜமானவை.

எனக்கு அவையெல்லாம் நாடகத்தில் நடப்பவை. நாடகத்தைப் போலவே மெய்யற்றவை.

நானும் உன்னைப் போலவே இந்த உலகத்தை அனுமானிக் கலாம். ஆனால் நீ அதில் இருப்பதாக நம்புகிறாய். நானோ அதை மிகவிரிந்த விழிப்புணர்வுக் கடலில் ஒளிர்கின்ற ஒரு துளியாகப் பார்க்கிறேன்.

**கே:** நாம் எல்லோரும் முதுமை அடைகிறோம். வலி, வலுவில்லாமை, முடிவை நெருங்குதல் ஆகியவை இருப்பதால் முதுமை சுகமானதல்ல. வயதான மனிதராக ஞானி எவ்வாறு தன்னை உணர்வார்? தன்னுடைய முதுமை மனத்தொய்வை அவருடைய உள்மனம் எவ்வாறு பார்க்கும்?

**ம:** வயதாக ஆக சந்தோஷமும், அமைதியும் அதிகமாக வளரும். அவர் வீடு அடையத்தானே போகிறார். ஒரு இரயில் பயணி அவர் சேரவேண்டிய இடத்தை நெருங்கும் போது தன்னுடைய சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டு வருத்தப்படாமல் இறங்குவது போல அவர் இறங்கிவிடுவார்.

**கே:** கண்டிப்பாக இங்கு ஒரு முரண்பாடு இருக்கிறது. ஞானி எல்லா மாற்றங்களுக்கும் அப்பாற்பட்டவர் என்று சொல்லப் படுகிறது. அவருடைய சந்தோசம் வளர்வதோ, குறைவதோ கிடையாது. வயதடைவதாலும், உடல் வலிமை குறைவதாலும் அவருடைய சந்தோசம் எப்படி அதிகரிக்கும்?

**ம:** முரண்பாடு எதுவும் இல்லை. விதியின் தொடர்ச்சி அதன் முடிவிற்கு வருகிறது. அதனால் மனம் மகிழ்ச்சியாக இருக்கிறது. உடல் ரூபமான இருத்தலாகிய பணி விலகுகிறது. உடலின் சுமை நாளுக்கு நாள் குறையும்.

**கே:** ஞானி நோய்வாய்ப் படுகிறார் என்று வைத்துக் கொள்வோம். ஃப்ளு ஜுரத்தால் அவருக்கு ஒவ்வொரு முட்டியும் வலிக்கிறது, எரிகிறது. அப்போது அவருடைய மனோ நிலை எப்படி இருக்கும்?

**ம:** ஒவ்வொரு உணர்ச்சியும் மிகச் சரியான சமநிலையில் கருத்தில் கொள்ளப்படும். அதன்மேல் ஆசையோ, அல்லது அதை

வெறுப்பதோ இருக்காது. அது இருப்பதுபோல் இருக்கும். அதை அவர் வாஞ்சையுடனான பற்றற்ற புன்னகையுடன் பார்ப்பார்.

**கே:** அவர் தன்னுடைய துன்பத்திலிருந்து விலகி இருக்கலாம். இருப்பினும் துன்பம் அவரிடம் உள்ளது.

**ம:** அது உள்ளது. ஆனால் அது ஒரு பொருட்டல்ல. நான் எந்த நிலையிலிருந்தாலும் அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டிய மனதின் ஒரு நிலையாகத்தான் அதை நான் பார்க்கிறேன்.

**கே:** துன்பம் என்பது துன்பம்தான். அதை நீங்கள் அவ்வாறுதான் உணர்வீர்கள்.

**ம:** உடலை உணர்பவர் அதன் துன்பங்களையும், சுகங்களையும் உணர்கிறார். நான் உடலும் அல்ல. அதை உணர்பவரும் அல்ல.

**கே:** நீங்கள் இருபத்தைந்து வயதானாவர் என்று எடுத்துக் கொள்வோம். உங்களுடைய திருமணம் ஏற்பாடு செய்யப்பட்டு நடந்தும் விடுகிறது. பிறகு குடும்பக் கடமைகள் உங்களைச் சூழ்ந்துகொள்கின்றன. நீங்கள் எவ்வாறு உணர்வீர்கள்?

**ம:** இப்போது எப்படி உணர்கிறேனோ அப்படித்தான். புற நிகழ்வுகளால் என் அக நிலை வடிவமைக்கப்படுவதாக நீ வலியுறுத்திக்கொண்டே இருக்கிறாய். அது அப்படி அல்ல. எது நடந்தாலும் நான் அப்படியே இருக்கிறேன். என் இருத்தலின் மூலத்தில் ஒரு அடர்ந்த ஒளிப் புள்ளியாக, தூய விழிப்புணர்வு இருக்கிறது. இந்தப் புள்ளி, தன் இயல்பில் கதிர் வீசி, அண்ட வெளியில் காட்சிகளையும், காலத்தில் நிகழ்வுகளையும் பிரயத்தனப் படாமலும் தன்னிச்சையாகவும் உருவாக்குகிறது. அது வெறுமனே சாட்சியாக மட்டும் இருக்கும் வரையில் பிரச்சனை எதுவும் இல்லை. ஆனால் பாகுபாடு காணும் புத்தி தோன்றி, வித்தியா சங்களை ஏற்படுத்தும்போது இன்ப துன்பங்கள் தோன்றுகின்றன. தூக்கத்தின்போது மனம் செயலற்ற நிலையில் இருக்கும்; அது போல்தான் இன்ப துன்பங்களும். உருவாக்கும் செயல்முறை தொடரும். ஆனால் அதன் குறுக்கீடு கவனிக்கப்பட மாட்டாது. மனம் விழிப்புணர்வின் ஒரு வடிவம். விழிப்புணர்வு உயிரின் ஒரு தன்மை. உயிர் ஒவ்வொன்றையும் உருவாக்குகிறது. ஆனால் உச்ச உயர்வு எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது.

**கே:** உச்ச உயர்வு எஜமான். விழிப்புணர்வு அதன் வேலையாள்.

**ம:** அது அவ்வாறு அல்ல. எஜமான் விழிப்புணர்வின் ஒரு பகுதி. அதற்கு அப்பால் இல்லை. விழிப்புணர்வைப் பொருத்தவரை உச்ச உயர்வானது படைப்பது மற்றும் அழிப்பது, வடிவமுடையது மற்றும் வடிவமற்றது, வியக்தித்துவமும், வியக்தத்துவமுமாகிய இரண்டுமானது. மற்றும் அது இவை எதுவுமே இல்லை. வார்த்தைகள் அதை அடைவதில்லை. மனமும் கூட.

**கே:** ஞானி மிகவும் தனித்த ஒருவராகத் தோன்றுகிறார், எல்லாமும் தானாக.

**ம:** அவர் தனித்து இருக்கிறார். ஆனால் அவர் எல்லாமுமே. அவர் இரண்டுமாகவும், இரண்டில் ஒன்றாகக் கூட இல்லாமலும் இருக்கிறார். அவர் ஒரு ஜீவன்கூட அல்ல. ஆனால் அவர் எல்லா இருப்பவைகளின் இருத்தல். அதுவும் கூட அல்ல. எந்த வார்த்தையும் பொருந்தாது. அவர் என்னவோ அதுதான் அவர் - எல்லாமும் உருவாகின்ற ஆதாரமாக.

**கே:** இறப்பதற்கு உங்களுக்குப் பயமாக இல்லையா?

**ம:** என் குருவின் குரு எப்படி இறந்தார் என்று உனக்குச் சொல்கிறேன். தன் முடிவு நெருங்குகிறது என்று அறிவித்த பிறகு, தன் தினசரி வழக்கங்களை மாற்றாமல், உணவு உண்பதை மட்டும் அவர் நிறுத்திவிட்டார். பதினோராவது நாள், பிரார்த்தனை நேரத்தில், அவர் தீவிரமாகப் பாடிக்கொண்டும், கை தட்டிக் கொண்டும் இருந்தபோது திடீரென்று அவர் இறந்துவிட்டார். வெறுமனே, இரண்டு அசைவுகளுக்கு நடுவே, ஊதி அணைக்கப் பட்ட மெழுகுவர்த்தி போல. ஒவ்வொருவரும் எப்படி வாழ்கின்றனரோ அப்படி இறக்கின்றனர். எனக்கு இறப்பதைப் பற்றி பயம் இல்லை. ஏனெனில் எனக்கு வாழ்க்கையைப் பற்றி பயம் இல்லை. நான் மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்கிறேன். சந்தோசமாக இறப்பேன். பிறப்பதுதான் துன்பம். இறப்பது அல்ல. இவை எல்லாம் நீ அதை எப்படிப் பார்க்கிறாய் என்பதைப் பொறுத்தது.

**கே:** உங்கள் நிலையைப் பற்றிய ஆதாரம் எதுவும் இருக்காது. அதைப் பற்றி எனக்குத் தெரிந்ததெல்லாம் நீங்கள் சொல்வதுதான். நான் காண்பதெல்லாம் ஒரு சுவாரசியமான முதியவரைத்தான்.

**ம:** நீதான் சுவாரசியமான முதியவர். நான் அல்ல. நான் எப்போதும் பிறக்கவில்லை. எனக்கு எப்படி வயதாகும்? நான் எவ்வாறு உனக்குத் தோன்றுகிறேனோ அது உன் மனதில்தான் உள்ளது. எனக்கு அதைப் பற்றிய அக்கறை இல்லை.

**கே:** கனவாகக் கூட நீங்கள் ஒரு மிகவும் வழக்கத்திற்கு மாறான கனவு.

**ம:** சரி. உன்னை எழுப்பக் கூடிய கனவு நான். அதற்கு அத்தாட்சியாக உன் விழிப்பு இருக்கும்.

**கே:** நான் இறந்ததாக உங்களுக்குச் செய்தி வருவதாகக் கற்பனை செய்வோம். யாரோ ஒருவர் ' உங்களுக்கு இன்னாரைத் தெரியுமா? அவர் இறந்துவிட்டார்' என்று சொல்கிறார். உங்களுடைய எதிர் வினை என்னவாக இருக்கும்?

**ம:** நீ வீடு திரும்புவதில் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். இந்த முட்டாள்தனத்திலிருந்து நீ வெளிவருவதைப் பார்ப்பதில் மிகவும் மகிழ்ச்சி.

**கே:** எந்த முட்டாள்தனம்?

**ம:** நீ பிறந்திருக்கிறாய், இறக்கப் போகிறாய் என்று நினைப்பது, நீ மனதை வெளிப்படுத்துகின்ற உடல் என்று நினைப்பது மற்றும் இதுபோன்ற அபத்தங்கள். என் உலகத்தில் யாரும் பிறப்பதில்லை. யாரும் இறப்பதில்லை. சிலர் ஒரு பிரயாணம் சென்று திரும்ப வருகிறார்கள். சிலர் வெளியே செல்வதே இல்லை. ஒவ்வொருவரும் தத்தம் கனவுகளால் சுற்றப்பட்டு கனவுப் பிரதேசத்தில் பயணிப் பதால் என்ன வித்தியாசம் இருக்கப்போகிறது. விழிப்பதுதான் முக்கியம். 'நான்' என்பதை மெய் என்றும், அன்பு என்றும் அறிந்து கொண்டால் போதும்.

**கே:**என்னுடைய அணுகுமுறை அத்தனை பரிபூரணமானது மற்றும் தீர்க்கமானது அல்ல. அதனால்தான் இந்தக் கேள்வி. மேற்கத்திய நாடுகள் அனைத்திலும் மக்கள் நிஜமான ஒன்றைத் தேடுகிறார்கள். அவர்கள், பருப் பொருளைப் பற்றி நிறையவும், மனதைப் பற்றிச் சிறிதளவும், விழிப்புணர்வின் தன்மை மற்றும்

நோக்கத்தைப் பற்றி எதுவுமே சொல்லாத விஞ்ஞானத்தின்பால் திரும்புகிறார்கள். அவர்களைப் பொருத்தவரை மெய் என்பது புறவயப்பட்டது, வெளியில் இருப்பது, நேரடியாகவோ, அல்லது குறிப்பாலோ கவனித்து அறியக்கூடியது மற்றும் விளக்கப்படக் கூடியது. மெய்யின் அக உணர்வு நிலையைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. மெய் என்று ஒன்று இருக்கிறது என்றும், அதை ஜடப் பொருளிலிருந்தும், அதன் வரையறைகள் மற்றும் உருக்குளைவுகளிலிருந்தும் விடுவிக்கப்பட்ட உணர்வால் கண்டுபிடிக்கலாம் என்றும் அவர்கள் அறியச் செய்வது மிகவும் முக்கியம். உலகில் உள்ள பெரும்பாலான மக்களுக்கு மெய் என்று ஒன்று இருக்கிறது என்றும், அதை உணர்வில் காணவும், அனுபவப் படவும் முடியும் என்றும் தெரியாது. அதை நிஜமாக அனுபவப் பட்டவரிடமிருந்து அவர்கள் அந்த நல்ல செய்தியைக் கேட்க வேண்டும் என்பது மிகவும் முக்கியமாகத் தோன்றுகிறது. அம்மாதிரி கண்டவர்கள் எப்போதும் இருக்கின்றனர். அவர்களுடைய அத்தாட்சி மிகவும் மதிப்புமிக்கது.

**ம:** ஆமாம். சுயம் அறிதல் என்னும் உண்மையான நற்செய்தியை ஒருமுறை கேட்டால் மறக்காது. மண்ணில் விழுந்த விதைபோல அது சரியான பருவத்திற்காகக் காத்திருந்து, முளைத்து, பெரும் மரமாக வளரும்.



# 41. சாட்சி மனப்பாங்கை வளர்

**கேட்பவர்:** ஞானியின் மனோ நிலை தினசரி, மற்றும் ஒவ்வொரு மணிநேரமும் எப்படி இருக்கும்? அவர் எவ்வாறு பார்க்கிறார், கேட்கிறார், சாப்பிடுகிறார், நீர் அருந்துகிறார், விழித்திருக்கிறார், தூங்குகிறார், வேலை செய்கிறார், ஓய்வெடுக்கிறார்? அவருடைய நிலை எங்களுடையதிலிருந்து வித்தியாசமானது என்பதற்கு என்ன அத்தாட்சி? மெய் அறிந்ததாகச் சொல்லப்படுகின்றவர்களுடைய வாய் மொழிச் சான்றைத் தவிர அவர்களுடைய நிலையைப் புறவயத்தில் சரிபார்க்க ஒரு வழியும் கிடையாது. அவர்களுடைய உடல் மற்றும் மனதின் இயக்கத்தில் உற்று நோக்கக் கூடிய வித்தியாசங்கள் இருக்காதா?

**மஹராஜ்:** நீ வித்தியாசங்களைக் காணலாம் அல்லது காணாமல் இருக்கலாம். எல்லாமும் உன் உற்றுநோக்க இயலும் அளவையும், பார்க்கும் விதத்தையும் பொறுத்தது. புறவயப்பட்ட வித்தியாசங்கள் மிகமிகக் குறைந்த அளவே முக்கியமானவை. எது முக்கியம் என்றால் அவர்களுடைய பார்வையின் தன்மை, அவர்களுடைய மனோபாவம் ஆகியவையே. அது முழுவதும் பற்றற்றும், விட்டேத்தியாகவும், தனித்து நிற்பதாகவும் இருக்கும்.

**கே:** ஞானி உணர்ச்சிவயப்படுவாரா? தன் குழந்தை இறந்தால் ஞானி துக்கப்படுவாரா, மாட்டாரா?

**ம:** துக்கப்படுபவர்களோடு சேர்ந்து அவரும் துக்கப்படுவார். அந்த நிகழ்வு சிறிதளவே முக்கியம். ஆனால் துன்பப்படுபவர் உயிரோடிருந்தாலும் அல்லது இறந்திருந்தாலும், உடலில் இருந்தாலும் அல்லது உடல் இல்லாமல் இருந்தாலும் அவர்மீது மிகவும் பரிவுடன் இருப்பார். என்ன ஆனாலும் அன்பும், பரிவும் தான் அவருடைய அடிப்படை இயல்பு. வாழ்கின்ற அனைத்

துடனும் அவர் ஒன்றானவர். அன்புதான் அந்த ஒருமைத் தன்மையின் செயல்வடிவம்.

**கே:** மக்கள் இறப்பதைப் பற்றி மிகவும் அச்சப்படுகிறார்கள்.

**ம:** ஞானி எதைப் பற்றியும் அச்சப்படுவதில்லை. ஆனால் அவர் அச்சப்படும் மனிதனைப் பார்த்து இரக்கப்படுவார். பிறப்பது, வாழ்வது, இறப்பது என்பவை இயற்கையானவை. அச்சப்படுவது இயற்கையானது அல்ல. ஆனால் அந்த நிகழ்வு கவனத்தில் கொள்ளப்படும்.

**கே:** நீங்கள் அதிகமான காய்ச்சல், வலி, நடுக்கத்துடன் உடல் நலமில்லாமல் இருப்பதாகக் கற்பனை செய்வோம். உங்கள் நிலை கவலைக்கிடமானது என்றும், இன்னும் சில நாட்களே உயிர் வாழலாம் என்றும் உங்களிடம் மருத்துவர் சொல்கிறார். அப்போது உங்களுடைய முதல் எதிர்வினை என்னவாக இருக்கும்?

**ம:** எதிர்வினை ஒன்றும் இருக்காது. எப்படி ஊதுவத்தி எரிந்து தீர்ந்து போவது இயற்கையோ அப்படி உடல் இறப்பதும் இயற்கை. உண்மையில் அது மிகக் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்தது. எது முக்கியம் என்றால் நான் உடலோ மனமோ அல்ல என்பது. 'நான்' இருக்கிறேன். அவ்வளவுதான்.

**கே:** உங்கள் குடும்பம் பரிதவிக்கும். நீங்கள் அவர்களுக்கு என்ன சொல்வீர்கள்?

**ம:** வழக்கமானதுதான்: அச்சப்படாதீர்கள், வாழ்க்கை தொடரும், கடவுள் உங்களைக் காப்பாற்றுவார், நாம் மறுபடியும் சீக்கிரமே ஒன்றாகச் சேர்வோம் என்றெல்லாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை இந்தக் குமுறல்கள் முழுவதுமே அர்த்தமற்றவை. ஏனெனில் வாழ்வதாகவோ, இறப்பதாகவோ தன்னை நினைத்துக் கொள்வது நான் அல்ல. நான் பிறக்கவும் இல்லை. இறக்கவும் முடியாது. நான் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவோ, மறப்பதற்கோ எதுவும் இல்லை.

**கே:** இறந்தவர்களுக்காகச் செய்யப்படும் பிரார்த்தனைகளைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?

**ம:** இறந்தவர்களுக்காக நன்றாகப் பிரார்த்தனை செய். அது அவர்களை மிகவும் மகிழ்விக்கும். ஞானிக்கு உன் பிரார்த்தனைகள் தேவை இல்லை. உன் பிரார்த்தனைகளுக்கு அவர் விடையளிக் கிறார்.

**கே:** சாமான்ய மனிதன் இறப்பிற்குப் பிறகும் விழிப்புணர் வுடனும், செயல்பாட்டுடனும் இருப்பார். இறப்பிற்குப் பிறகு ஞானியின் நிலை என்ன?

**ம:** உடலைப் பொருத்தவரை ஞானி முன்பே இறந்துவிட்டவர். அவர் மறுபடியும் இறக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாயா?

**கே:** கண்டிப்பாக ஞானிக்கும் கூட உடல் அழிந்துபோவது ஒரு முக்கியமான நிகழ்ச்சி.

**ம:** யாரோ ஆன்மீகத்தின் உச்சமான இலக்கை அடைந்து விட்டார்கள் என்பதைத் தவிர ஞானிக்கு முக்கியமான நிகழ்ச்சி எதுவும் இல்லை. அப்போதுதான் அவர் மனம் குதூகலிக்கும். மற்றவை அனைத்தும் அவருக்குப் பொருட்டல்ல. முழுப் பிரபஞ்சமும் அவருடைய உடல்; எல்லா உயிரும் அவருடைய உயிர். விளக்குகளால் முழுவதும் ஒளிஊட்டப் பட்டுள்ள ஒரு நகரத்தில் ஒரு விளக்கு அணைவது பாதிப்பு எதையும் ஏற்படுத்தாது. அதுபோல ஒரு உடலின் இறப்பு மொத்த உயிர் வாழ்வதைப் பாதிக்காது.

**கே:** குறிப்பிட்ட ஒன்று முழுமைக்கு ஒரு பொருட்டல்ல. ஆனால் குறிப்பிட்ட ஒன்றிற்கு அது முக்கியமானது. முழுமை என்பது ஒரு வடிவமற்றது. குறிப்பிட்ட ஒன்றிற்கு வடிவம் உள்ளது. அது மெய்யானது.

**ம:** நீதான் அப்படிச் சொல்கிறாய். எனக்கு அது வேறு மாதிரியானது - முழுமை மெய்யானது, பகுதி வந்து போவது. குறிப்பிட்ட ஒன்று பிறக்கிறது, பெயரையும், உருவத்தையும் மாற்றி மறுபடியும் பிறக்கிறது. ஞானி என்பவர் மாற்றத்தைச் சாத்திய மாக்குகிற மாற்றமில்லாத மெய்மை. ஆனால் அவர் உன்னை மெய்மையைக் காணும்படி செய்ய முடியாது. அது உன் சுய

அனுபவத்தால் கிடைக்க வேண்டும். எனக்கு எல்லாமும் ஏகரூபம். எல்லாமும் சமமே.

**கே:** பாவமும் புண்ணியமும் ஒரே தன்மையானவையா?

**ம:** இவை எல்லாம் மனிதனால் ஏற்படுத்தப்பட்ட மதிப்பீடுகள். அவற்றைப் பற்றி எனக்கு என்ன? எது மகிழ்ச்சியைக் கொடுக்கிறதோ அது புண்ணியம். எது துன்பத்தைக் கொடுக்கிறதோ அது பாவம். இரண்டுமே மனதின் நிலைகள். என்னுடையது மனதின் ஒரு நிலை அல்ல.

**கே:** நாங்கள் பார்வை என்றால் என்ன என்று அறியாத குருடர்களைப்போன்று இருக்கிறோம்.

**ம:** நீ விரும்பியவாறு அதை விவரிக்கலாம்.

**கே:** மௌனத்தைப் பயிற்சி செய்வது என்னும் சாதனா பயனுள்ளதா?

**ம:** மெய்யறிதலுக்காக நீ செய்யும் ஒவ்வொன்றும் உன்னை அதன் அருகில் கொண்டுபோய்ச் சேர்க்கும். மெய்யறிதலை மனதில் கொள்ளாமல் நீ செய்யும் ஒவ்வொன்றும் உன்னை அதிலிருந்து விலகிச் செல்ல வைக்கும். ஆனால் ஏன் சிக்கலாக்க வேண்டும்? வெறுமனே நீ எல்லாப் பொருள்களுக்கும், எண்ணங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்று அறிந்துகொள். நீ என்னவாக விரும்பு கிறாயோ அதுவாக முன்பே இருக்கிறாய். இதை உறுதியாக அறிவது நல்லது. அதை மட்டும் கவனத்தில் வைத்திரு.

**கே:** நீங்கள் சொல்வதைக் கேட்கத்தான் முடிகிறதே ஒழிய என்னால் நம்ப முடியவில்லை.

**ம:** நானும் இதே நிலையில்தான் இருந்தேன். ஆனால் நான் என் குருவை நம்பினேன். அவர் தன்னைச் சரி என்று நிரூபித்தார். உன்னால் முடிந்தால் என்னை நம்பு. நான் சொல்வதைக் கவனமாக மனதில் வைத்திரு: எதற்கும் ஆசைப்படாதே; ஏனெனில் உன்னிடம் இல்லாதது எதுவும் இல்லை. நீ தேடுவதுதான் கண்டுபிடிப்பதைத் தடுக்கிறது.

**கே:** நீங்கள் எல்லாவற்றின்மேலும் உதாசீனமாக இருக்கிறீர்கள்.

**ம:** நான் உதாசீனமாக இருக்கவில்லை. பாகுபாடு அற்று இருக்கிறேன். நான் எனக்கும், என்னுடையதிற்கும் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. ஒரு கூடை மண், ஒரு கூடை நகை - இரண்டுமே எனக்குத் தேவையற்றது. வாழ்தலும் இறப்பும் எனக்கு ஒன்றேதான்.

**கே:** பாகுபாடற்ற தன்மை உங்களை உதாசீனமாக இருக்கச் செய்கிறது.

**ம:** மாறாக வாஞ்சையும், அன்பும்தான் என்னுடைய மையம். எந்தப் பாரபட்சமும் இல்லாததால் நான் அன்பை ஊற்றச் சுதந்திரமானவன்.

**கே:** மெய்யறிதல் என்னும் கருத்து மிகவும் முக்கியமானது என்று புத்தர் கூறி இருக்கிறார். பலபேர் மெய்யறிதல் என்னும் ஒன்று இருப்பதாகத் தெரியாமலே வாழ்ந்து முடிக்கிறார்கள். அதற்கு முயல்வது என்பது அவர்களுக்கு மிகவும் தூரமானது. ஒருமுறை அவர்கள் அதைப் பற்றி கேட்டுவிட்டால் ஒரு விதை விதைக்கப் பட்டுவிடும். அது வீணாக முடியாது. எனவே அவர் தன்னுடைய பிக்குகளை வருடத்திற்கு எட்டு மாதங்கள் இடையறாது ஞான உபதேசம் செய்யுமாறு அனுப்பிவிடுவார்.

**ம:** 'ஒருவர் உணவு, உடை, வீடு, அறிவு, அன்பு ஆகியவற்றைக் கொடுக்கலாம். ஆனால் அதிகபட்ச உயர்வான பரிசு மெய்யறிதல் என்பதைப் பற்றிய நற்செய்தியே' என்று என் குரு சொல்வார். நீ சொல்வது சரி. மெய்யறிதல்தான் அதிகபட்சமான நல்லது. உனக்கு அது கிடைத்துவிட்டால் யாரும் உன்னிடமிருந்து அதைப் பிரித்து எடுக்க முடியாது.

**கே:** இந்த மாதிரி மேற்கத்திய நாடுகளில் நீங்கள் பேசினால் மக்கள் உங்களைப் பைத்தியம் என்று சொல்வார்கள்.

**ம:** ஆமாம். அப்படித்தான் சொல்வார்கள். அறியாமையோடு இருப்பவர்களுக்கு, அவர்களால் புரிந்துகொள்ள முடியாத அனைத்தும் பைத்தியக்காரத்தனமே. அதைப் பற்றி என்ன? அவர்கள் இருப்பதைப் போல் இருக்கட்டும். என்னுடைய எந்தச்

சிறப்பாலும் அல்லாமல் நான் நானாகவே இருக்கிறேன். அவர்கள் தங்களுடைய எந்த குறையோடும் இல்லாமல் அவர்களாகவே இருக்கிறார்கள். உச்ச உயர்வான மெய் தன்னைக் கணக்கற்ற வழிகளில் பரிணமிக்கச் செய்கிறது. அதன் பெயர்களும், வடிவங்களும் முடிவற்ற எண்ணிக்கையிலானவை. எல்லாமும் ஒரே கடலிலேயே தோன்றி மறைகின்றன. அனைத்திற்கும் மூல ஆதாரம் ஒன்றுதான். காரணத்தையும் விளைவையும் காண்பது மனதின் பொழுதுபோக்கு. மூலத்தில் என்ன இருக்கிறதோ அது இயல்பாகவே அன்பு செலுத்தப்படக் கூடியது. அன்பு என்பது விளைவு அல்ல. அதுதான் இருத்தலின் அடிப்படை ஆதாரம். நீ எங்கு சென்றாலும் இருத்தல் - விழிப்புணர்வு - பேரானந்தம் ஆகியவற்றைக் காண்பாய். எதற்காக, எதன் பொருட்டு விருப்பு, வெறுப்பிற்கு முன்னுரிமை தர வேண்டும்?

**கே:** வெள்ளத்தினாலும், நில நடுக்கத்தாலும் நடப்பதுபோல இயற்கையான காரணங்களால் ஆயிரக் கணக்கான, லட்சக் கணக்கான உயிர்கள் போவதைப் பற்றி நான் துக்கப்படுவதில்லை. ஆனால் ஒரு மனிதனின் கையால் இன்னொரு மனிதன் சாகும் போது நான் மிகவும் வேதனைப்படுகிறேன். தவிர்க்க முடியாதது அதன் மகத்துவத்தைக் கொண்டிருக்கிறது. ஆனால் கொலை தவிர்க்கக் கூடியது, அதனால் அது அசிங்கமானதும், மொத்தத்தில் கொடூரமானதும் ஆகும்.

**ம:** எல்லாமும் அவை நடப்பது போல் நடக்கின்றன. பேரழிவுகள், இயற்கையானவையாக இருந்தாலும், மனிதனால் ஏற்படுத்தப்பட்டவையாக இருந்தாலும் அவை காரணமின்றித் தானகவே நடக்கின்றன. அதற்காக வேதனைப்பட வேண்டியது இல்லை.

**கே:** காரணமில்லாமல் எப்படி ஒன்று நடக்க முடியும்?

**ம:** ஒவ்வொரு நிகழ்விலும் மொத்தப் பிரபஞ்சமும் பிரதிபலிக்கப் படுகிறது. அதன் மூல காரணத்தைக் கண்டுபிடிக்க முடியாது. காரண காரியம் என்னும் கருத்தே சிந்திப்பது மற்றும் பேசுவது ஆகியவற்றின் ஒரு வழி. நாம் காரணமற்ற வெளிப்பாட்டைக்

கற்பனை செய்து பார்க்க முடியாது. எப்படியாயினும் இது காரண காரியத் தன்மையை நிரூபிக்க முடியாது.

**கே:** இயற்கைக்குப் புத்தி கிடையாது. எனவே அது பொறுப்பற்றது. ஆனால் மனிதனுக்குப் புத்தி உள்ளது. அது ஏன் இவ்வளவு வக்கிரமாக இருக்கிறது?

**ம:** வக்கிரத் தன்மைக்கான காரணங்களும் பரம்பரை, சூழ்நிலை மற்றும் இது போன்ற இயற்கைத் தன்மையானவை. நீ பழித்துரைப் பதில் மிக விரைவாக இருக்கிறாய். மற்றவர்களைப் பற்றி நீ கவலைப்படாதே. முதலில் உன் மனதைப் பார். உன் மனமும் இயற்கையின் ஒரு பகுதி என்று நீ அறிந்தால் இருமைத் தன்மை போய்விடும்.

**கே:** இதில் என்னால் புரிந்து கொள்ள முடியாத ஏதோ ஒரு புதிர்த்தன்மை இருக்கிறது. மனம் எப்படி இயற்கையின் ஒரு பகுதியாக இருக்க முடியும்?

**ம:** ஏனெனில் இயற்கை மனதில் உள்ளது; மனம் என்பது இல்லாமல் இயற்கை எங்கே இருக்கும்?

**கே:** இயற்கை மனதில் இருக்குமானால், மனம் என்னுடையதாக இருக்கும்போது, என்னால் இயற்கையைக் கட்டுப் படுத்த முடிய வேண்டும். ஆனால் நிஜத்தில் அப்படி இல்லை. என்னுடைய கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட சக்திகள் என் நடத்தையைத் தீர்மானிக்கின்றன.

**ம:** சாட்சி மனப்பாங்கை வளர். அப்போது பற்றற்ற தன்மை கட்டுப்பாட்டைக் கொண்டு வருவதை உன் அனுபவத்திலேயே காண்பாய். சாட்சிபாவ நிலை சக்தி நிறைந்தது. அதில் வலிமையற்ற தன்மை எதுவும் கிடையாது.

# 42. மெய்யை வெளிப்படுத்த முடியாது

**கேட்பவர்:** பழைய சுயத்திலிருந்து சுதந்திரமான ஒரு புதுச் சுயம் எனக்குள் தோன்றுவதை நான் உணர்கிறேன். அவை எப்படியோ கூடவே இருக்கின்றன. பழைய சுயம் அதன் வழக்கமான வழிகளில் செல்கிறது. புதியது பழையதைத் தடுப்பதில்லை. ஆனால் தன்னை அதனுடன் அடையாளப் படுத்திக் கொள்வதில்லை.

**மஹராஜ்:** புதுச் சுயத்திற்கும், பழைய சுயத்திற்கும் என்ன முக்கியமான வேறுபாடு?

**கே:** பழைய சுயம் எல்லாவற்றையும் வரையறுக்கவும், விளக்கவும் வேண்டுகிறது. அது வார்த்தைகளுக்குள் ஒவ்வொன்றும் பொருந்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறது. வார்த்தைகளால் ஆன விளக்கங்களுக்கு புதுச் சுயம் முக்கியத்துவம் கொடுப்பதில்லை - ஞாபகத்தில் உள்ளவற்றோடு அவற்றை ஒப்பிட்டுப் பார்க்காமல் அது ஒவ்வொன்றையும் அவை இருக்கும்படியே ஏற்றுக்கொள்கிறது.

**ம:** வழக்கமான சுயத்திற்கும், ஆன்மீகத் தன்மையானதற்கும் உள்ள வித்தியாசத்தை முழுவதுமாகவும், எப்போதும் நீ அறிவாயா? புதுச் சுயத்திற்குப் பழைய சுயத்தின் மேல் என்ன மனப்பாங்கு உள்ளது?

**கே:** புதியது பழையதை வெறுமனே பார்க்கிறது. அது நட்புடனோ அல்லது விரோதத்துடனோ அதைப் பார்ப்பதில்லை. மற்றவை களுடன் பழைய சுயத்தையும் அது இயல்பாக ஏற்றுக் கொள்கிறது. அது இருப்பதை இது ஒப்புக்கொள்கிறது. ஆனால் அதற்கு உண்மையான எந்த மதிப்பையும் கொடுப்பதில்லை. அவ்வளவுதான்.

**ம:** புதிய சுயம் பழையதின் முழுமையான மறுத்தலாக இருக்கும். அனுமதிக்கும் புதியது உண்மையிலேயே புதியதல்ல. அது பழையதின் புது மனப்பாங்கு. அவ்வளவுதான். நிஜமான புதியது, பழையதை முழுவதுமாக இல்லாமல் செய்துவிடும். இரண்டும் சேர்ந்து இருக்க முடியாது. தன்னை எல்லாவற்றிலும் ஊடுருவச் செய்து, பழைய மதிப்பீடுகளையும், கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ள எப்போதுமே மறுக்கும், ஒரு சுய எதிர்ப்புச் செயல் நடைபெறுகிறதா? அல்லது பரஸ்பரமான சகிப்புத்தன்மை இருக்கிறதா? அவற்றிற்கு இடையே உள்ள தொடர்பு என்ன?

**கே:** குறிப்பிடும்படியான தொடர்பு எதுவும் இல்லை. அவை சேர்ந்து ஒரே சமயத்தில் இருக்கின்றன.

**ம:** பழைய சுயத்தைப் பற்றியும், புதுச் சுயத்தைப் பற்றியும் பேசும் போது எந்த சுயத்தை மனதில் வைத்துப் பேசுகிறாய்? இரண்டிற்கும் ஞாபகத்தில் தொடர்ச்சி இருப்பதால், ஒன்று மற்றொன்றை ஞாபகம் வைத்திருப்பதால், நீ எப்படி இரண்டு சுயங்களைப் பற்றிப் பேச முடியும்?

**கே:** ஒன்று பழக்கங்களுக்கு அடிமை. மற்றொன்று அவ்வாறில்லை. ஒன்று கருத்துக்களை உருவாக்குகிறது. மற்றொன்று கருத்துக்கள் இல்லாதது.

**ம:** இரண்டு சுயங்கள் எதற்காக? கட்டுப்பட்டதற்கும், சுதந்திரமானதற்கும் தொடர்பு ஒன்றும் இருக்க முடியாது. அவை இரண்டும் சேர்ந்து இருப்பதே அவற்றின் அடிப்படையான ஐக்கியத்தை நிரூபிக்கிறது. ஒரே சுயம்தான் உள்ளது - அது எப்போதும் தற்பொழுதில்தான் உள்ளது. நீ மற்றொரு சுயம் என்று சொல்வது - புதியதோ, பழையதோ - மூலச் சுயத்தின் மற்றொரு தன்மை. சுயம் ஒற்றையாக இருப்பது. நீதான் அந்தச் சுயம். நீ எப்படி இருந்தாய் அல்லது எப்படி இருப்பாய் என்னும் கருத்துக்களை அவை சுட்டிக் காட்டுகின்றன. ஆனால் ஒரு கருத்து சுயம் அல்ல. இப்போது, என் முன்னால் நீ உட்கார்ந்து இருக்கும் போது நீ எந்தச் சுயம்? புதியதா அல்லது பழையதா?

**கே:** இரண்டும் முரண்பட்டுக் கொண்டிருக்கின்றன.

**ம:** இருப்பதற்கும், இல்லாததற்கும் எப்படி முரண்பாடு இருக்க முடியும்? முரண்பாடு என்பது பழைய சுயத்தின் குணாதிசயம். புதியது வெளிப்படும்போது பழையது இல்லாமல் போகிறது. நீ புதிய சுயத்தைப் பற்றியும், முரண்பாட்டைப் பற்றியும் ஒரே மூச்சில் பேச முடியாது. புதியதைக் கொண்டுவரும் முயற்சியே பழைய துடையதுதான். முரண்பாடோ, முயற்சியோ, போராட்டமோ, புதிய சுயத்திற்கான மாற்றத்திற்காக ஏக்கமோ இருந்தால் புதியது வெளிப்படாது. முரண்பாடுகளை உருவாக்கவும், தொடரவும் செய்கின்ற பழக்கத்திலிருந்து எந்த அளவிற்கு நீ விடுபட்டவன்?

**கே:** இப்போது நான் ஒரு முற்றிலும் மாறுபட்ட மனிதன் என்று சொல்ல முடியாது. ஆனால் என்னைப் பற்றிச் சில புதியவற்றைக் கண்டு பிடித்துள்ளேன். அந்த நிலைகள் நான் முன்பே அறிந்தவை களைப் போல் இல்லை. ஆதலால் நான் அவற்றைப் புதியவை என்று சொல்வதில் தவறு இல்லை.

**ம:** பழைய சுயம் நீயேதான். காரணமின்றித் திடீரென்று தோன்றுகின்ற நிலையில் சுயத்தின் கறை இருக்காது. அதை நீ 'தெய்வீகம்' என்று சொல்லலாம். எதற்கு விதையும், வேரும் இல்லையோ, எது முளைத்து வளராதோ, பூத்துக் காய்க்காதோ, எது திடீரென்று முழு மாட்சிமையுடனும், புதிராகவும், அதிசயமாகவும் தோன்றுகிறதோ அதை நீ 'தெய்வீகம்' அல்லது 'கடவுள்' என்று சொல்லலாம். அது முற்றிலுமாக எதிர்பார்க்காதது; இருப்பினும் தவிர்க்க முடியாதது. அது மிகவும் பரிட்சயமானதாகவும், நெருக்க மானதாகவும் இருந்தாலும் மிகவும் அதிசயமானது, ஆச்சரியமானது. முடிவற்ற அளவிற்குப் பழக்கமானது. அது எல்லா எதிர்பார்ப்பு களுக்கும் அப்பாற்பட்டிருந்தாலும் முன்பே நிச்சயிக்கப்பட்டது. அதற்குக் காரணம் இல்லாததால் தடைகள் அற்றது. அது ஒரே ஒரு சட்டத்திற்குத்தான் கீழ்ப்படியும் - முழுச் சுதந்திரம் என்னும் சட்டம். எது ஒரு தொடர்ச்சியை, ஒரு வரிசைமுறையை, ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குக் கடந்து போவதைக் குறிக்கிறதோ அது மெய்யானதாக இருக்க முடியாது. மெய்யில் முன்னேற்றம் என்பது இல்லை. அது இறுதியானது, பூரணமானது, சுயம்புவானது.

**கே:** *அதை நான் எப்படிப் பெறுவது?*

**ம:** நீ என்ன செய்தாலும் அதைப் பெற முடியாது. ஆனால் அதற்கு நீ தடைகள் ஏற்படுத்துவதைத் தவிர்க்கலாம். உன் மனதைக் கவனி. அது எப்படி உருவாகிறது என்று பார். எப்படி இயங்குகிறது என்று பார். உன் மனதைக் கூர்ந்து கவனிக்கும் போது மனதை அறிபவராக உன்னைக் கண்டுபிடிப்பாய். நீ அசைவற்று இருக்கும் போது, கவனிப்பதை மட்டுமே செய்யும் போது, கவனிப்பவருக்குப் பின்னால் இருக்கும் அறிவின் ஒளியாக உன்னைக் கண்டு பிடிப்பாய். அந்த ஒளியின் ஆதாரம் இருண்டது. அறிவின் ஆதாரம் அறியப்படாதது. அந்த ஆதாரம் மட்டுமே மெய்யான இருத்தல். அந்த ஆதாரத்திற்குத் திரும்பிச் சென்று அதில் ஆழ்ந்திரு. அது எங்கும் வியாபித்திருக்கும் வெளியில்(இடத்தில்) இல்லை. கடவுள்தான் எஜமானர். அவர் உன்னதமும், அதிசயமுமானவர். உன்னதமும், அதிசயமுமான அனைத்தும் கடவுள்; நான் என்று ஒன்றுமே இல்லை. என்னிடம் எதுவும் இல்லை. என்னால் எதுவும் செய்ய முடியாது. இருப்பினும் எல்லாமும் என்னிலிருந்து வருகின்றன - அவற்றின் ஆதாரமும், வேரும், தோன்றுமிடமும் நான்.

உண்மையான மெய் உனக்குள் வெளிப்படும்போது அதை நீ கடவுள் அனுபவம் என்று சொல்லலாம். அல்லது அந்த அனுபவத்தைத் தருபவர் கடவுள் என்று சொல்வது மிகச் சரி. நீ உன்னை அறியும்போது கடவுள் உன்னை அறிவார். மெய் ஒரு தொடர்செய்கையின் விளைவு அல்ல. அது ஒரு வெடிப்பு. அது சந்தேகத்திற்கு இடமின்றி மனதிற்கு அப்பாற்பட்டது. ஆனால் நீ செய்யக் கூடியதெல்லாம் உன் மனதை நன்கு அறிவது தான். மனம் உனக்கு உதவமுடியும் என்பதல்ல. ஆனால் உன் மனதைத் தெளிவாக அறிவதால் அது உருவாக்கும் வலிமையற்ற தன்மையை நீ தவிர்க்கலாம். நீ மிகவும் உஷாராக இருக்கவேண்டும். இல்லாவிடில் உன் மனம் குரங்குத்தனமாக விளையாடி விடும். அது திருடனைக் கவனிப்பது போன்றது. நீ திருடனிடம் எதையும் எதிர்பார்ப்ப தில்லை. ஆனால் நீ திருடப்படாமல் இருப்பதற்காகக் கவனிப்பாய். அதே போல நீ மனதிடம் எதையும் எதிர்பார்க்காமல் முழுக் கவனத்தைச் செழுத்து.

அல்லது வேறு ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நாம் தூக்கத்திலிருந்து விழிக்கிறோம். தூங்குகிறோம். ஒரு முழு நாளைய வேலைக்குப் பிறகு தூக்கம் வருகிறது. அப்போது நான் தூங்கச் செல்கிறேனா அல்லது தூக்க நிலையின் குறிப்பிட்ட தன்மையான கவனமின்மை எனக்கு வருகிறதா? வேறு மாதிரியாகச் சொல்வ தென்றால் நாம் தூங்குவதால் விழிக்கிறோம். நான் விழிக்கிறேனா அல்லது விழிப்பு எனக்கு வருகிறதா? விழித்திருக்கும் நிலையில் அறியாமையினால் உலகம் வெளிப்பட்டு பகல் - கனவு நிலையில் விழித்திருக்கிறோம். தூக்கம் மற்றும் விழித்திருப்பது ஆகிய இரண்டுமே தவறாகக் குறிப்பிடப்படுபவை. நாம் கனவு நிலையில் மட்டுமே இருக்கிறோம். நிஜமான விழிப்பையும், நிஜமான தூக்கத்தையும் ஞானி மட்டுமே அறிவார். நாம் விழித்திருப்பதாகக் கனவு காண்கிறோம். நாம் தூங்குவதாகக் கனவு காண்கிறோம். மூன்று நிலைகளும் கனவு நிலையின் வெவ்வேறான தன்மைகளே. எல்லாவற்றையும் கனவு என்று அறிவது முக்தி அளிக்கிறது. நீ கனவுகளுக்கு மெய்த்தன்மையைக் கொடுக்கும் வரை அவற்றின் அடிமை. நீ இதுவாகவோ, அதுவாகவோ பிறந்திருப்பதாகக் கற்பனை செய்தால் நீ அந்த இதுவிற்கோ, அதுவிற்கோ அடிமை ஆகி விடுவாய். அடிமைத்தனத்தின் சாராம்சம் என்னவென்றால் உன்னை ஒரு தொடர்செயல் என்றும், உனக்குக் கடந்தகாலமும் எதிர் காலமும் இருப்பதாகவும், சரித்திரம் இருப்பதாகவும் கற்பனை செய்வதுதான். உண்மையில் நமக்குச் சரித்திரம் கிடையாது. நாம் ஒரு தொடர் செயல் அல்ல. நாம் வளர்வதோ குறைவதோ இல்லை. எல்லாவற்றையும் ஒரு கனவாகப் பார்த்து அதிலிருந்து வெளியேறி முக்தி அடை.

**கே:** உங்கள் பேச்சைக் கேட்பதால் நான் என்ன பயன் அடைகிறேன்?

**ம:** நான் உன்னை உன்னிடமே திரும்புமாறு அழைக்கிறேன். நான் உன்னைக் கேட்பதெல்லாம் உன்னை நெருக்கமாகப் பார், உனக்குள் ஆழமாகப் பார் என்பதே.

**கே:** எதற்காக?

**ம:** நீ உயிர் வாழ்கிறாய், நீ உணர்கிறாய், நீ சிந்திக்கிறாய். நீ வாழ்வதன் மேலும், உணர்வதன் மேலும், சிந்திப்பதன் மேலும் கவனத்தைச் செலுத்துவதால் நீ அவற்றிலிருந்து விடுபட்டு அவற்றிற்கு அப்பால் செல்வாய். உன் நபர்த்தன்மை கரைந்துபோய் சாட்சி மட்டுமே மிஞ்சும். பிறகு சாட்சிக்கும் அப்பால் செல்வாய். அது எப்படி நடக்கும் என்று கேட்காதே. வெறுமனே உனக்குள் தேடு.

**கே:** நபருக்கும் சாட்சிக்கும் என்ன வித்தியாசம்?

**ம:** இரண்டுமே விழிப்புணர்வின் தன்மைகள். ஒன்றில் நீ ஆசையும், அச்சமும் படுகிறாய். இன்னொன்றில் இன்ப துன்பங் களால் பாதிப்படைவதில்லை; நிகழ்வுகளால் தொல்லைப் படுவதில்லை. நீ அவற்றை வந்து போக விட்டுவிடுவாய். நீ அவற்றில் பங்கு கொள்ள மட்டாய்!

**கே:** ஒருவர் எப்படித் தூய சட்சிபாவ நிலையான உயர் நிலையில் தன்னை நிலைநிறுத்துவார்?

**ம:** விழிப்புணர்வு தானாகவே மிளிர்வதில்லை. அது தனக்கு அப்பால் உள்ள ஒளியினால் மிளிர்கிறது. விழிப்புணர்வின் கனவுபோன்ற தன்மையைப் பார்த்தபிறகு எந்த ஒளியில் அது தோன்றுகிறது, எது அதற்கு இருத்தலைக் கொடுக்கிறது என்று பார். அதில் விழிப்புணர்வின் உள்ளடக்கமும், அதைப் பற்றிய அறிவும் இருக்கும்.

**கே:** எனக்குத் தெரியும். மற்றும் எனக்குத் தெரியும் என்பதும் எனக்குத் தெரியும்.

**ம:** ஆமாம் - இரண்டாவதாகச் சொல்லப் படும் அறிவு நிபந்தனை யற்றும், காலமற்றும் இருந்தால். அறிந்ததை மறந்துவிடு. ஆனால் நீதான் அறிபவர் என்பதை ஞாபகத்தில் வைத்திரு. எப்போதும் உன் அனுபவங்களில் மூழ்கி இருக்காதே. நீ அனுபவங்களைக் கடந்தவன் என்பதையும், எப்போதுமே பிறக்கவில்லை என்பதையும், இறப்பற்றவன் என்பதையும் ஞாபகத்தில் வைத்திரு. அதை ஞாபகத்தில் வைத்திருப்பதால் தூய அறிவின் தன்மையும், அளவற்ற ஞான ஒளியும் தோன்றும்.

**கே:** எப்போது ஒருவர் மெய்யை அனுபவப்படுவார்?

**ம:** அனுபவம் மாறக் கூடியது. அது வரும். போகும். மெய் ஒரு நிகழ்வு அல்ல. அதை அனுபவப்பட முடியாது. ஒரு நிகழ்வை உணர்ந்து அறிவது போல் அதை உணர்ந்து அறிய முடியாது. மெய் வரும் என்னும் ஒரு நிகழ்விற்காகக் காத்திருந்தால், நீ எப்போதும் காத்திருக்க வேண்டியதுதான். ஏனெனில் மெய் வருவதும் இல்லை. போவதும் இல்லை. அது பிரக்தியட்சமாகத் தரிசிக்க வேண்டிய ஒன்று. எதிர்பார்த்திருக்க வேண்டிய ஒன்றல்ல. அதற்காகத் தயாராவதோ, அதைப் பற்றிய கருத்தோ தேவை இல்லை. ஆனால் மெய்யிற்காக மனமார்ந்து ஏங்குவதும், தேடுவதும் மெய்யின் அசைவிற்கும், இயக்கத்திற்கும் ஏதுவாக்கும். நீ செய்யக் கூடியதெல்லாம் மெய் ஒரு நிகழ்வல்ல, அது ஏற்படுவதல்ல, எது ஏற்படுகிறதோ, வந்து போகிறதோ அது மெய் அல்ல என்னும் நடுப் புள்ளியைப் பற்றிக்கொள்வதுதான். நிகழ்வை நிகழ்வாகவும், கண நேரத்தியதை கண நேரத்தியதாகவும், அனுபவத்தை அனுபவ மாகவும் பார். அது மட்டுமே நீ செய்யக் கூடியது. அப்போது நீ திறந்தும், சுதந்திரமாகவும் மெய்யிற்கு ஏதுவாகக் கூடிய நிலையில் இருப்பாய். நிகழ்வுகளுக்கும், அனுபவங்களுக்கும் மெய்த் தன்மையைக் கொடுத்தபோது கொண்டிருந்த கவசத்திலிருந்து விடுபட்டுவிடுவாய். ஆனால் சிறிது விருப்பமோ, வெறுப்போ ஏற்பட்டவுடனே நீ ஒரு திரையை உருவாக்கி விடுவாய்.

**கே:** மெய்யை அறிவைவிட செயலில்தான் கண்டுபிடிக்க முடியும் என்று நீங்கள் சொல்கிறீர்களா? அல்லது அது ஒருவிதமான உணர்வா?

**ம:** செயலிலோ, உணர்ச்சியிலோ, எண்ணத்திலோ மெய்யைக் கண்டுபிடிக்க முடியாது. மெய்யைக் கண்டுபிடித்தல் என்பது இல்லை. இல்லாத ஒரு இருமைத்தன்மையை நீ நுழைக்கிறாய். மெய் மட்டுமே உள்ளது. வேறு ஒன்றும் கிடையாது. விழித் திருப்பது, தூங்குவது, கனவு காண்பது ஆகிய மூன்று நிலைகளும் நான் அல்ல. நான் அவற்றிலும் இல்லை. நான் இறந்தால் உலகம் 'மஹராஜ் இறந்துவிட்டார்' என்று சொல்லும். ஆனால் என்னைப் பொறுத்த வரை இந்த வார்த்தைகளுக்குப் பொருள் இல்லை.

அவற்றிற்கு அர்த்தம் எதுவும் இல்லை. சத்குருவின் படத்திற்கு முன் வழிபாடு செய்யும் போது அவர் விழித்து, எழுந்து, குளிப்பது, சாப்பிடுவது, ஓய்வெடுப்பது, உலாவச் சென்று திரும்புவது, எல்லோருக்கும் ஆசி வழங்குவது, பின் உறங்கச் செல்வது ஆகிய அனைத்தும் அவர் வாழ்ந்த போது நடந்தாற்போல் நடக்கின்றன. எல்லாமும் துல்லியமாக நடக்கின்றன. இருப்பினும் அவற்றைப் பற்றிய ஒரு மெய்யற்ற தன்மை உள்ளது. அதே போல்தான் எனக்கும். தேவையானதெல்லாம் நடக்கிறது. ஆனால் எதுவுமே நடப்ப தில்லை. நான் தேவையானது போல் தோன்றுவதை எல்லாம் செய்கிறேன். ஆனால் அதே நேரத்தில் உண்மையில் எதுவுமே எனக்குத் தேவை இல்லை. வாழ்க்கையே ஒருமாதிரியான நாடகம்தான்.

**கே:** அப்படியானால் எதற்காக வாழ வேண்டும்? எதற்குத் தேவையில்லாத வருவதும் போவதும், விழிப்பதும் தூங்குவதும், உண்பதும் செரிப்பதும்?

**ம:** உண்மையில் நான் எதுவுமே செய்வதில்லை. ஒவ்வொன்றும் தானாகவே நடக்கிறது. நான் எதிர்பார்ப்பதில்லை. திட்டமிடு வதில்லை. நான் வெறுமனே நிகழ்வுகள் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன் - அவை நிஜமற்றவை என்று அறிந்து.

**கே:** நீங்கள் ஞானம் அடைந்த கணத்திலிருந்து இவ்வாறுதான் இருக்கிறீர்களா?

**ம:** வழக்கம் போல மூன்று நிலைகளும் மாறி மாறி வருகின்றன - விழிப்பதும், உறங்குவதும், திரும்ப விழிப்பதும். ஆனால் அவை எனக்கு நிகழ்வதில்லை. அவை வெறுமனே நிகழ்கின்றன. எனக்கு எதுவுமே ஒருபோதும் நிகழ்வதில்லை. அந்த நிலை மாறாத, அசைவில்லாத, மலை போல ஸ்திரமான, பாறை போன்ற துளைக்க முடியாத நிலை. ஒரு கெட்டித் திரட்சியான தூய இருத்தல் - விழிப்புணர்வு - ஆனந்தம் என்பது இருக்கிறது. நான் அதிலிருந்து ஒருபோதும் வெளியே இல்லை.

**கே:** இருப்பினும் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கிறீர்கள்.

**ம:** ஆமாம் மற்றும் இல்லை. ஆழமான, அசைக்க முடியாத, அளவற்ற அமைதி இருக்கிறது. நிகழ்வுகள் ஞாபகத்தில் பதிந்து கொள்ளப்படுகின்றன. ஆனால் அவற்றிற்கு முக்கியத்துவம் இல்லை. அறிதாகவே நான் அவற்றைக் கவனத்தில் கொள்கிறேன்.

**கே:** சரியாகச் சொல்வதானால் இந்த நிலை தயாராவதாலோ அல்லது பயிற்சியினாலோ வருவதல்ல என்று எனக்குத் தோன்றுகிறது.

**ம:** வருவது என்பது இல்லை. ஆத்ம ஞான நிலை உள்ளது; எப்போதும் அப்படித்தான் உள்ளது. கண்டுபிடித்தல் உள்ளது - திடீரென்று. நீ பிறந்த போது உலகத்தை எப்படித் திடீரென்று கண்டுபிடித்தாயோ அப்படித் திடீரென்று நான் என் மெய்யான இருத்தலைக் (சத்ய ஸ்வரூபத்தைக்) கண்டுபிடித்தேன்.

**கே:** அது மறைக்கப்பட்டிருந்து, உங்கள் சாதனா அந்த மறைத்தலைக் கரைத்ததா? உங்களுடைய மெய்யான இருத்தல் உங்களுக்குத் தெளிவான பிறகு அது தெளிவாகவே இருந்ததா அல்லது மீண்டும் மறைக்கப்பட்டதா? உங்களுடைய இந்த நிலை நிரந்தரமானதா அல்லது வந்து போகக் கூடியதா?

**ம:** அது முழுமையானது, ஸ்திரமானது, நிரந்தரமானது. நான் எதைச் செய்தாலும் அது மலை போல அசைவில்லாமல் இருக்கிறது. ஒருமுறை நீ உன் சத்ய ஸ்வரூபத்தில், மெய்யிற்குள் விழித்து விட்டால் நீ அதில் ஸ்திரமாகிவிடுவாய். தங்கி விடுவாய். ஒரு பிறந்த குழந்தை கருப் பைக்குள் திரும்பச் செல்லாது. அது ஒரு எளிமையான நிலை. மிகச் சிறியதை விடச் சிறியது. மிகப் பெரியதை விடப் பெரியது. அது தானாகவே அடையப்பட்டது - இருப்பினும் விவரிப்புகளுக்கு அப்பாற்பட்டது.

**கே:** ஆத்ம ஞான நிலையை அடைய ஏதாவது ஒரு வழி உள்ளதா?

**ம:** உனக்கு மனமார்ந்த ஆர்வமிருந்தால் ஒவ்வொன்றும் ஒரு வழியாக உபயோகமாகும். என் வார்த்தைகளின் ரகசியத்தைப் பற்றிச் சிந்திப்பதும், அவற்றின் முழு அர்த்தத்தையும் கிரகிப்பதும் ஒரு சாதனா. அதுவே இருமைத் தன்மை உருவாக்குகின்ற சுவற்றை இடித்துத் தள்ளப் போதுமானது. எதுவுமே என்னைத் தொந்தரவு

செய்வதில்லை. நான் தொந்தரவுகளுக்குத் தடை எதுவும் செய்வ தில்லை. எனவே அவை என்னிடம் தங்குவதில்லை. உன்னிடம் நிறையத் தொல்லைகள் உள்ளன. என்னிடம் தொல்லைகளே இல்லை. என் பக்கம் வா. நீ தொல்லைகளுக்கு மதிப்புக் கொடுப் பவன். நான் பாதிப்பற்றவன். என்னிடம் வா. உண்மையான ஆர்வம்தான் அவசியமாகத் தேவை. உள்ளார்ந்த ஆர்வத் தேடல் அதை அடையச் செய்கிறது.

**கே:** அது என்னால் முடியுமா?

**ம:** கண்டிப்பாக முடியும். நீ இருமைத் தன்மையைத் தாண்டி வரக் கூடிய வலிமை உள்ளவன். மனமார்ந்த ஈடுபாட்டுடன் மட்டுமே இரு.



# 43. அறியாமையை அடையாளம் கண்டுகொள்ளலாம், ஞானத்தை அல்ல

**கேட்பவர்:** பல வருடங்களாக உங்களுடைய போதனை ஒரே மாதிரியாக இருக்கிறது. நீங்கள் எங்களுக்குச் சொல்வதில் எந்த முன்னேற்றமும் இருப்பதுபோல் தெரியவில்லை.

**மஹராஜ்:** ஒரு மருத்துவ மனையில் நோயுற்றவர்களுக்கு வைத்தியம் செய்யப் பட்டு அவர்கள் சுகம் அடைகிறார்கள். அவர்களுக்குச் செய்யப்படும் மருத்துவம் மாற்றம் அதிகமில்லாத வழக்கமானதுதான். ஆனால் உடல் நலம் என்பதில் சலிப்புத் தன்மை கிடையாது. என்னுடைய போதனைகள் வழக்கமானதாக இருக்கலாம். ஆனால் அதன் பலன் ஒருவருக்கு ஒருவர் புதிது புதிதாக இருக்கும்.

**கே:** ஆத்ம ஞானம் அடைதல் என்றால் என்ன? ஞானம் அடைந்த மனிதர் யார்? ஞானி எவ்வாறு அடையாளம் கண்டு கொள்ளப்படுவார்?

**ம:** ஞானத்திற்குத் தனிப்பட்ட அடையாளங்கள் கிடையாது. அறியாமையை மட்டும்தான் அடையாளம் காணலாம். ஞானத்தை அல்ல. ஞானியும் தன்னை ஒரு முக்கியமானவராகக் காட்டிக் கொள்ள மாட்டார். தங்களின் சிறப்பையும், தனித்துவத்தையும் பறைசாற்றும் எவரும் ஞானி அல்ல. தனிப்பட்ட நபர்த்தன்மையில் சில வழக்கத்திற்கு மாறான முன்னேற்றங்களை ஞானம் என்று புரிந்துகொள்கிறார்கள். ஞானிக்குத் தன்னை ஞானியாக வெளிக் காட்டுவதற்குச் சிறிது கூட முனைப்பு இருக்காது. அவர் தன்னை முழுமையாக இயல்பானவராக, தன் மெய்யான நிலையில்

உறுதியாக இருப்பார். தன்னைச் சர்வ வல்லமையுடையவராகவும், சர்வ ஞானமும் பெற்றவராகவும், கடவுளாகவும் பறைசாற்றுவது அறியாமையின் தெளிவான அறிகுறி.

**கே:** ஞானி தன்னுடைய அனுபவங்களை அறியாமையுடன் இருப்பவர்களிடம் பகிர்ந்து கொள்வாரா? ஞானத்தை ஒரு மனிதரிடமிருந்து மற்றொருவருக்கு பரப்ப முடியுமா?

**ம:** ஆமாம். முடியும். ஞானியின் வார்த்தைகளுக்கு மனதில் இருக்கும் அறியாமையையும், இருளையும் போக்கும் சக்தி உள்ளது. வார்த்தைகள் முக்கியமல்ல. அவற்றிற்குப் பின்னால் இருக்கும் சக்தியால் காரியங்கள் செய்து முடிக்கப்படுகின்றன.

**கே:** அது என்ன சக்தி?

**ம:** அது சுயத்தை அறிந்துகொள்வது மற்றும் தன்னுடைய நேரடி அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட திடமான நம்பிக்கையின் சக்தி.

**கே:** சில ஞானமடைந்தவர்கள், அறிவைச் சம்பாதிக்க வேண்டும்; அது மற்றவரிடமிருந்து பெறுவது அல்ல என்று சொல்கிறார்கள். மற்றவர்கள் கற்பிக்க மட்டுமே முடியும். ஆனால் கற்பது ஒருவர் தானே சொந்தமாகச் செய்வது.

**ம:** இதுவும் அதற்கேதான் வருகிறது.

**கே:** பலர் யோகாவை வருடக்கணக்கில் பயிற்சி செய்தும் பலன் எதுவும் பெறுவதில்லை. அவர்களுடைய தோல்விக்கு என்ன காரணம்?

**ம:** சிலர் தங்களுடைய விழிப்புணர்வைத் தனித்து இருக்கவிட்டு, மெய்மறந்த நிலையில் இருப்பதில் லயித்து விடுகிறார்கள். முழு விழிப்புணர்வும் இல்லாமல் என்ன முன்னேற்றம் இருக்க முடியும்?

**கே:** பலர் சமாதி நிலையை பயிற்சி செய்கிறார்கள். சமாதி நிலையில் விழிப்புணர்வு மிகவும் தீவிரமாக இருக்கும். ஆனாலும் அது எந்த விளைவையும் கொடுப்பதில்லை.

**ம:** என்ன விளைவுகளை எதிர்பார்க்கிறாய்? ஞானம் எதற்காக ஒன்றின் விளைவாக இருக்கவேண்டும்? ஒன்று மற்றொன்றிற்கு

வழிவகுக்கிறது. ஆனால் ஞானம் என்பது காரண காரியங்களாலும், விளைவுகளாலும் கட்டுப்படுத்தப்பட்டதல்ல. அது காரண காரியத்தன்மைக்கு முற்றிலும் அப்பாற்பட்டது. ஞானம் என்பது ஆத்ம நிலை. யோகி பல அதிசயங்களை தெரிந்து கொள்வார். ஆனால் தன் சுயத்தைப் பற்றி அவருக்கு ஒன்றும் தெரியாமல் இருக்கலாம். ஞானி பார்ப்பதற்கும், உணர்வதற்கும் மிகவும் சாதாரணமாகத் தெரிவார். ஆனால் தன் சுயத்தை அவர் நன்கு அறிவார்.

**கே:** பலர் சுயத்தைப் பற்றி அறிய முழு முயற்சி செய்கிறார்கள். ஆனால் பலன் இல்லை. அதற்கு என்ன காரணம்?

**ம:** அறிவின் மூலத்தை அவர்கள் போதுமான அளவிற்கு ஆராயவில்லை. அவர்களுடைய உணர்ச்சிகள், உணர்வுகள், எண்ணங்கள் ஆகியவற்றை அவர்கள் நன்கு அறியமாட்டார்கள். இது தாமதத்திற்குக் காரணமாக இருக்கலாம். மற்றொரு காரணம் இன்னும் சில ஆசைகள் இருப்பது.

**கே:** சாதனாவில் ஏற்ற தாழ்வுகளைத் தவிர்க்க முடியாது. இருப்பினும் அவற்றைப் பொருட்படுத்தாமல் தீவிரமான தேடுதல் உடையவர் முயற்சி செய்துகொண்டே இருக்கிறார். அம்மாதிரியான தேடுதல் உடையவருக்கு ஞானி என்ன செய்ய முடியும்?

**ம:** தேடுபவர் தீவிரமாக இருந்தால் ஒளியைக் கொடுக்க முடியும். ஒளி எல்லோருக்குமானது. எப்போதும் இருப்பது. ஆனால் தேடுபவர்கள் சிலரே. அந்தச் சிலரிலும் தயாராக இருப்பவர்கள் அபூர்வம். இதயமும், மனமும் கனிந்திருப்பது அத்யாவசியம்.

**கே:** உங்களுடைய ஆத்ம ஞானத்தை முயற்சியினால் பெற்றீர்களா அல்லது குருவின் அருளினாலா?

**ம:** அவருடையது போதனை. என்னுடையது அதன்மீது நம்பிக்கை. அவர்மீது நான் வைத்திருந்த நம்பிக்கை அவருடைய வார்த்தைகளை உண்மை என ஏற்க வைத்தது. அவற்றில் ஆழமாகச் செல்ல வைத்தது. அவற்றுடன் வாழ வைத்தது. அவ்வாறுதான் நான் யார் என்பதை அறிந்தேன். சத்குருவும், அவருடைய வார்த்தைகளும் அவரை நம்பவைத்தன. என்னுடைய நம்பிக்கை பலனளித்தது.

**கே:** ஆனால் ஒரு குரு, வார்த்தைகள் இல்லாமல், நம்பிக்கை அற்றவருக்கு, எந்த விதத்திலும் தயாராகாமல் இருப்பவருக்குச் சுலபமாக சுயம் அறிதலைக் கொடுக்க முடியுமா?

**ம:** ஆமாம், முடியும். ஆனால் அவ்வாறு பெற்றுக்கொள்ள யார் இருக்கிறார்கள்? நான் என் சத்குருவிடம் மிகவும் ஒத்திசைவாக இருந்தேன். அவரை முற்றிலுமாக நம்பினேன். என்னிடம் எதிர்ப்பு என்பது மிக மிகக் குறைவு. ஆகையால் அவை எல்லாம் சுலப மாகவும் விரைவாகவும் நடந்தன. ஆனால் எல்லோரும் அவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் அல்ல. ராஜச குணமும், தாமச குணமும் அடிக்கடி குறுக்கே நிற்கின்றன. அவற்றைக் கண்டு பிடித்து நீக்கும் வரை முன்னேற்றம் மெதுவாகத்தான் இருக்கும். வெறும் தொடுதலால் அந்தக் கணத்தில் ஞானம் பெற்ற அனைவரும் அதற்குத் தயாராக இருந்திருப்பார்கள். ஆனால் அப்படிப் பட்டவர்கள் மிகக் குறைவானவர்களே. பெரும்பாலானவர்களுக்கு முதிர்வதற்கு அவகாசம் தேவைப்படுகிறது. சாதனா முதிர்வதை வேகப்படுத்தும்.

**கே:** எது ஒருவரை முதிர வைக்கிறது? முதிர வைக்கும் காரணி என்ன?

**ம:** பக்திதான். அது முழு ஈடுபாட்டுடன் கூடிய தீவிரத்தன்மை. எல்லோரையும் விட சுயம் அறிந்தவர் மிகவும் முழு ஈடுபாட்டுடன் கூடிய தீவிரமானவர். அவர் எதைச் செய்தாலும் அதை முழுமை யாகச் செய்வார். நேர்மையான ஒருமைப்பாடு உன்னை மெய்யிடம் கொண்டுபோய் சேர்க்கும்.

**கே:** நீங்கள் உலகில் உள்ள அனைவரையும் நேசிக்கிறீர்களா?

**ம:** நீ அடிபட்டால் அழுகிறாய். ஏன்? ஏனெனில் உன்னை நீ நேசிக்கிறாய். உன் அன்பை உன் உடலுக்கு மட்டும் என்று அடக்கிக் கொள்ளாதே. அதை திறந்து வை. பிறகு அது எல்லோருக்குமான அன்பாக ஆகும். பொய்யான சுய அடையாளங்கள் வீசி எறியப் பட்டால் மிஞ்சுவது எல்லோரையும் அணைக்கும் அன்பாகும். உன்னைப் பற்றிய எல்லாக் கருத்துக்களையும் விட்டுவிடு. நீ தெய்வீகமானவன் என்னும் கருத்தையும் கூட. எந்தச் சுய அடையாளமும் செல்லத்தக்கதல்ல.

**கே:** நான் சத்தியப் பிரமாணங்களினால் ஓய்ந்துவிட்டேன். சாதனாவினாலும் ஓய்ந்துவிட்டேன். அவை என் நேரத்தையும் சக்தியையும் எடுத்துக் கொண்டு எந்த விளைவையும் கொடுப்பதில்லை. நான் மெய்யை இங்கேயே, இப்போதே வேண்டுகிறேன். நான் அதைப் பெற முடியுமா?

**ம:** கண்டிப்பாக முடியும் - நீ உன் சாதனா உட்பட எல்லாவற்றிலும் உண்மையாகவே சலித்துப் போயிருந்தால். நீ உலகத்திடமிருந்தும், கடவுள் உட்பட எதையும் வேண்டாதிருந்தால், எதுவும் தேவைப்படாமல் இருந்தால், எதையும் தேடாதிருந்தால், எதையும் எதிர்பார்க்காமல் இருந்தால் உச்ச உயர்வு நிலை வேண்டப் படாமலும், எதிர்பார்க்காமலும் உன்னிடம் வரும்.

**கே:** ஒருவர் குடும்ப வாழ்க்கையிலும், லோகாயத விசயங்களிலும் மூழ்கி இருந்துகொண்டு, வேத நூல்களில் கூறியவாறு சாதனாவை முறைப்படி செய்துகொண்டிருந்தால் பலன் பெறுவாரா?

**ம:** ஏதாவது பலன் அவருக்குக் கிடைக்கும். ஆனால் பட்டுப் பூச்சிக் கூடு போல லோகாயத விஷயங்களால் அவர் சுற்றப் பட்டிருப்பார்.

**கே:** பல ஞானிகள் நீ முதிர்ந்து தயாராக இருந்தால் ஞான லாபம் அடைவாய் என்று சொல்கிறார்கள். அவர்கள் சொல்வது உண்மையாக இருக்கலாம். ஆனால் அவற்றால் பிரயோஜனம் மிகக் குறைவு. காலம் தேவைப்படுகின்ற முதிர்வையும், முயற்சி தேவைப் படுகின்ற சாதனாவையும் தவிர்த்து வேறு ஒரு வழி இருக்க வேண்டும்.

**ம:** அதை ஒரு வழி என்று சொல்லாதே. அது ஒருவகையான செயல் திறம். அது அதுகூட இல்லை. திறந்தவாறும், அமைதியாகவும் இரு. அவ்வளவுதான். நீ தேடுவது உனக்கு மிக அருகாமையில் இருக்கிறது. அங்கு அதற்கு ஒரு வழிக்கான இடமே இல்லை.

**கே:** இந்த உலகத்தில் அஞ்ஞானிகள் பலர் இருக்கிறார்கள். ஞானிகள் மிகச் சிலரே. இதற்கு என்ன காரணம்?

**ம:** மற்றவர்களைப் பற்றி அக்கறை கொள்ளாதே. உன்னைக் கவனித்துக்கொள். நீ இருக்கிறாய் என்று நீ அறிவாய். உன்னைப் பெயர்களால் சுமைப் படுத்திக் கொள்ளாதே. வெறுமனே இருப்பது போல் இரு. உனக்கு நீ கொடுக்கும் பெயரும், வடிவமும் உன் மெய்யான தன்மையை மறைக்கின்றன.

**கே:** ஞான லாபம் பெறுவதற்கு முன்பே ஒருவருக்கு ஏன் தேடுதல் முடிவடைகிறது?

**ம:** மெய்யறிதலின் மேல் கொள்ளும் ஆசைதான் ஆசைகளிலேயே மிகப் பெரிய ஆசை. இருப்பினும் அதுவும் ஒரு ஆசைதான். மெய்யின் அனுபவத்தைப் பெற எல்லா ஆசைகளையும் விட்டுவிட வேண்டும். நீ இருக்கிறாய் என்பதை மட்டும் ஞாபகத்தில் வை. இதுதான் உன் நடைமுறை மூலதனம். அதைப் பலமுறை உபயோகப் படுத்து. நிறைய லாபம் கிடைக்கும்.

**கே:** ஏதாவது ஒன்றை அடைவதற்குத் தேடுதல் எதற்காக?

**ம:** உயிர் வாழ்தலே தேடுதல்தான். தேடுதல் இல்லாமல் வாழ்க்கை ஒழுங்காக இருக்காது. எல்லாத் தேடுதலின் முடிவுதான் உச்ச உயர்வான ஆத்மானுபவம்.

**கே:** உச்ச உயர்வான ஆத்மானுபவம் ஏன் வந்து போக வேண்டும்?

**ம:** அது வருவதும் இல்லை. போவதும் இல்லை. அது எப்போதும் இருக்கிறது.

**கே:** நீங்கள் உங்கள் சொந்த அனுபவத்திலிருந்து பேசுகிறீர்களா?

**ம:** ஆமாம். ஆத்மானுபவம் காலமற்ற நிலை. எப்போதும் இப்போது இருப்பது.

**கே:** எனக்கு அது வந்து போகிறது. உங்களுக்கு அவ்வாறில்லை. ஏன் இந்த வித்தியாசம்?

**ம:** எனக்கு எந்த ஆசையும் இல்லாமல் இருப்பதாலோ என்னவோ. அல்லது நீ உச்ச உயர்வைப் போதுமான அளவிற்குத் தீவிரமாகத் தேடாததால் இருக்கலாம். ஆராய்ச்சியை முடிக்க இறுதிக் கட்டத்தில் போராடுபவனாக நீ உணரவேண்டும்.

**கே:** என் வாழ்க்கை முழுவதும் நான் போராடுகிறேன். அடைந்ததோ மிகக் குறைவு. நான் நிறைய வாசித்தேன், நிறையக் கேட்டேன். எல்லாமும் வீண்.

**ம:** கேட்பதும், வாசிப்பதும் உன்னுடைய வழக்கமாக மாறிவிட்டன.

**கே:** நான் அதையும் விட்டு விட்டேன். நான் சமீப காலமாக வாசிப்பது கூட இல்லை.

**ம:** நீ எவற்றை எல்லாம் விட்டு விட்டாய் என்பது இப்போது முக்கியமல்ல. நீ எதை விடவில்லை? அதைக் கண்டுபிடித்து விட்டுவிடு. சாதனா என்பது எதை விடவேண்டும் என்பதற்கான தேடுதல். உன்னை முழுமையாகக் காலி செய்.

**கே:** ஒரு முட்டாள் எப்படி ஞானத்தை விரும்ப முடியும்? விரும்புவதற்கு முன் ஒருவர் தான் விரும்பும் ஒன்றைப் பற்றி அறிந்திருக்க வேண்டும். உச்ச உயர்வானதைப் பற்றித் தெரியாமல் எப்படி அதை விரும்ப முடியும்?

**ம:** மனிதன் இயற்கையாக முதிர்ந்து மெய்யறிதலுக்குத் தயாராகிறான்.

**கே:** ஆனால் முதிர்வதற்கான காரணி என்ன?

**ம:** சுயத்தைப் பற்றிய ஞாபகம், 'நான்' என்பதைப் பற்றிய பிரக்ஞை அவனை வலிமையுடனும், வேகமாகவும் முதிரச் செய்கிறது. உன்னைப் பற்றிய எல்லாக் கருத்துக்களையும் விட்டு விட்டு, வெறுமனே எப்படி இருக்கிறாயோ அப்படி இரு.

**கே:** நான் எல்லா வழிகள், உபாயங்கள், திறமைகள், யுக்திகள் மற்றும் இது போன்ற எல்லா மனோவயப்பட்டவற்றாலும் ஓய்ந்து போய்விட்டேன். மெய்யை நேரடியாகவும் உடனடியாகவும் உணர ஏதாவது ஒரு வழி இருக்கிறதா?

**ம:** உன் மனதை உபயோகப் படுத்துவதை நிறுத்திவிட்டு என்ன நடக்கிறது என்று பார். இது ஒன்றை மட்டும் சரியாகச் செய். அவ்வளவுதான்.

**கே:** நான் இளமையாக இருந்த போது, ஒன்றுமே இல்லாத வனாக, ஆனால் முழு விழிப்புடன் இருப்பதாக, குறுகிய ஆனால் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக் கூடிய அற்புதமான உணர்வுகள் எனக்கு வருவதுண்டு. ஆனால் அதிலுள்ள அபாயம் என்ன வென்றால், ஒருவருக்குக் கடந்து போன கணங்களை ஞாபகத் திலிருந்து திரும்பவும் உருவாக்குகின்ற ஆசை இருப்பதுதான்.

**ம:** இவை எல்லாம் கற்பனை. விழிப்புணர்வின் ஒளியில் எல்லாவிதமானவையும் நடக்கின்றன. ஒருவர் எதற்கும் சிறப்பான முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதில்லை. ஒரு பூவைக் காண்பது கடவுளைக் காண்பதைப் போன்றே அதி அற்புதமானது. அவை இருப்பதைப் போன்றே இருக்கட்டும். எதற்காக அவற்றை ஞாபகம் வைத்திருக்க வேண்டும்? பிறகு ஞாபகத்தை ஏன் ஒரு பிரச்சனை ஆக்க வேண்டும்? அவற்றைப் பற்றி கண்டுகொள்ளாமல் இரு. அவற்றை உயர்வானவை மற்றும் தாழ்வானவை, அகம் சார்ந்தவை மற்றும் புறம் சார்ந்தவை, நீடித்திருப்பவை மற்றும் கண நேரத்தியது என்று பாகுபடுத்தாதே. அவற்றிற்கு அப்பால் செல். அவற்றின் மூலத்திற்குச் செல். எது நடந்தாலும் மாறாமல் இருக்கின்ற சுயத்திடம் செல். நீ இந்த உலகத்தில் பிறந்திருக்கிறாய் என்னும் உன் உறுதியான எண்ணத்தால்தான் நீ வலிமையற்று இருக்கிறாய். உண்மையில் இந்த உலகம் உனக்குள், உன்னால் திரும்பத் திரும்ப உருவாக்கப் படுகிறது. உன் சுய இருத்தலின் மூலமாகிய ஒளியில் எல்லாமும் வெளிப்படுவதைப் பார். அந்த ஒளியில் அன்பும், அளவற்ற சக்தியும் இருப்பதை நீ காண்பாய்.

**கே:** நானே அந்த ஒளியாக இருந்தால் எப்படி அதை நான் அறியாமல் இருப்பேன்?

**ம:** அதை அறிய உனக்கு அறியும் மனம், அறியக்கூடிய திறமை உடைய மனம் தேவை. ஆனால் உன் மனம் எப்பொழுதும் ஓடிக் கொண்டிருக்கிறது. நிலையாக இருப்பதே இல்லை. முழுமையாகப் பிரதிபலிப்பதே இல்லை. கண் நோயுற்றிருந்தால் நீ எப்படி நிலவை அதன் முழு அழகுடன் பார்ப்பாய்?

**கே:** சூரியன் நிழலுக்குக் காரணமாக இருந்தாலும் நிழலில் சூரியனைப் பார்க்க முடியாததைப் போன்றது இது என்று சொல்லலாமா? அதற்கு ஒருவர் திரும்பிப் பார்க்க வேண்டும்.

**ம:** மறுபடியும் சூரியன், பொருள், நிழல் என்னும் முத்தன்மையை (திரிபுடியை) நுழைத்துவிட்டாய். மெய்யில் அவ்வாறான பிரிவுகள் இல்லை. நான் சொல்லிக் கொண்டிருப்பதற்கும் இருமை, முத்தன்மை ஆகியவற்றிலும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. மனதளவிற்கும், வார்த்தைகளாகவும் மாற்றாதே. வெறுமனே பார். இருப்பதுபோல் இரு.

**கே:** இருப்பதுபோல் இருப்பதற்கு நான் பார்க்க வேண்டுமா?

**ம:** நீ யார் என்று பார். மற்றவர்களைக் கேட்காதே. உன்னைப் பற்றி மற்றவர்கள் சொல்லக் கேட்காதே. உனக்குள் பார். குரு உனக்கு இதைத்தான் சொல்வார். ஒரு குருவிடமிருந்து மற்றொருவரிடம் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. எல்லாக் கிணற்றிலும் ஒரே தண்ணீர்தான் இருக்கிறது. நீ அருகாமையில் உள்ளதிலிருந்து நீரை எடு. என்னைப் பொறுத்தவரை தண்ணீர் எனக்குள் இருக்கிறது. நானேதான் தண்ணீர்.



# 44. 'நான்' என்பது உண்மை. மற்றவை எல்லாம் குறிப்பால் உணரப்படுபவையே

**மஹராஜ்:** உலகத்தை உணர்ந்து அறிபவர் உலகிற்கு முன்பே உள்ளாரா அல்லது உலகத்தோடு சேர்ந்து உருவாகிறாரா?

**கேட்பவர்:** என்ன ஒரு வினோதமான கேள்வி! இது போன்ற கேள்விகளை ஏன் கேட்கிறீர்கள்?

**ம:** சரியான பதில் உனக்குத் தெரியாவிட்டால் நீ அமைதியைக் காண முடியாது.

**கே:** நான் காலையில் கண் விழித்து எழும்போது உலகம் எனக்காகக் காத்துக் கொண்டு முன்பே இருக்கிறது. கண்டிப்பாக உலகம் முன்பே உருவாக்கப்பட்டிருக்கிறது. நான் இருத்தலுக்கு வருகிறேன். ஆனால் பிறகுதான். அதிகபட்சம் முன்பாக என்றால் என் பிறப்பின் போது. உடல் எனக்கும் உலகத்திற்கும் இடையில் இணைப்பாக இருக்கிறது. உடல் இல்லாமல் நானோ உலகமோ இருக்க முடியாது.

**ம:** உடல் உன் மனதில் தோன்றுகிறது. உன் மனம் விழிப் புணர்வின் உட்பொருள்; நீ, உன்னை எந்தவிதத்திலும் மாற்றாமல் சாசுவதமாய் மாறிக்கொண்டிருக்கும் விழிப்புணர்வு என்னும் ஆற்றின் அசைவற்ற சாட்சி. உன்னுடைய மாற்றமில்லாத தன்மை உன்னால் கவனிக்கப் படாத அளவில் வெளிப்படையாக இருக்கிறது. உன்னை நன்கு பார். அப்போது இந்தத் தவறான புரிதல்கள் மற்றும் தவறான கருத்துக்கள் எல்லாமும் கரைந்து விடும். எப்படி எல்லா நீர் உயிரினங்களும் தண்ணீரில் உள்ளனவோ, தண்ணீரில்லாமல் அவை இருக்க முடியாதோ அப்படி முழுப் பிரபஞ்சமும் உன்னில் உள்ளது. நீ இல்லாமல் அது இருக்க முடியாது.

**கே:** நாங்கள் அதைக் கடவுள் என்கிறோம்.

**ம:** கடவுள் உன் மனதில் உள்ள ஒரு கற்பனை மட்டுமே. நீ தான் நிஜம். நீ தீர்க்கமாக அறிந்த ஒன்றே ஒன்று 'இப்போது நான் இருக்கிறேன்' என்பது மட்டும்தான். இதில்'இப்போதை' நீக்கு. 'நான் இருக்கிறேன்' என்பது அதைப்பற்றிய விவாதம் எதுவும் இல்லாமல் மிஞ்சும். வார்த்தைகள் இருப்பது ஞாபகத்தில்; ஞாபகம் இருப்பது விழிப்புணர்வில்; விழிப்புணர்வு இருப்பது பிரக்ஞையில். பிரக்ஞை என்பது இருத்தல் (உளதாம் தன்மை) என்னும் நீரின் மேல் பிரதிபலிக்கப் படும் அவியக்தாவின் ஒளி.

**கே:** இருப்பினும், 'நான் உலகில் இருக்கிறேன்' என்பது வெளிப் படையாகத் தெரியும்போது அதற்கு எதிர்மறையாக எவ்வாறு உலகம் எனக்குள் இருக்கமுடியும் என்று என்னால் காண முடியவில்லை.

**ம:** 'நான் உலகம், உலகம் எனக்குள் இருக்கிறது' என்று சொல்வது கூட அறியாமையின் ஒரு அடையாளமே. ஆனால் உலகத் துடனான என் இந்த அடையாளத்தை மனதில் வைத்து வாழ்க்கையில் உறுதிசெய்யும் செய்யும்போது, ஒரு சக்தி உருவாகி அந்த அறியாமையை அழித்து, முற்றிலுமாக எரித்துவிடுகிறது.

**கே:** அறியாமையின் சாட்சி அறியாமையிலிருந்து தனித்ததா? 'நான் அறியாதவன்' என்று சொல்வது அறியாமையின் ஒரு பகுதி அல்லவா?

**ம:** ஆமாம். நாம் உண்மையாகச் சொல்லக்கூடியது எல்லாம்: 'நான்' என்பது மட்டுமே. மற்றவை எல்லாம் குறிப்பால் உணரப் படுபவை. ஆனால் குறிப்பால் உணரப்படுவது ஒரு வழக்கமாகி விட்டது. குறிப்பால் உணரும் வழக்கத்தை ஒழித்து விடு. 'நான்' என்னும் உணர்வு ஒரு மூல காரணத்தின் வெளிப்பாடு. அதை நீ சுயம் என்றோ, கடவுள் என்றோ, மெய் என்றோ அல்லது வேறு எந்தப் பெயரிலோ அழைக்கலாம். 'நான்' என்னும் உணர்வு மனதால் உருவாக்கப்பட்ட இந்த உலகில் உள்ளது; ஆனால் அது உலகிற்கு அப்பால் செல்வதற்கான கதவைத் திறப்பதற்கான சாவி. நீரின் மேல் நடனமாடும் நிலா நீருக்குள் தெரியும். ஆனால் அது வானத்தில் இருக்கும் நிலவால் ஏற்படுத்தப்படுவது. நீரால் அல்ல.

**கே:** இருப்பினும் முக்கியமான கருத்து எனக்குப் பிடிபடவில்லை. நான் வசிக்கும், இயங்கும், என் இருத்தலை கொண்டிருக்கும் இந்த உலகம் என்னால் உருவாக்கப்பட்டது என்பதை ஒப்புக் கொள்கிறேன். அது என்னுடைய சொந்த உருவாக்கம். அது அறியப் படாத, மூலமான, மெய்யான உலகம் என்னும் திரையின்மேல், என்னுடைய கற்பனை உருவாக்கிய கருத்து. அந்த மூல உலகத்தின் சாரம் என்னவாக வேண்டுமானாலும் இருக்கலாம். எப்படி திரைப்படத் திரை அதன் மேல் வெளிப்படுத்தப் படும் படங்களைப் போன்றதில்லையோ அப்படி என்னால் உருவாக்கப்பட்ட உலகம் மூல உலகத்திலிருந்து வித்தியாசமாக உள்ளது. ஆனாலும், என்னிலிருந்து சுதந்திரமாக, தீர்க்கமாக உள்ளது.

**ம:** நீ சொல்வது முற்றிலும் சரி. எதன்மேல் உன் மனம் சார்புடைய, மெய்மையற்ற உலகத்தை உருவகிக்கிறதோ அந்தத் தீர்க்கமான, மூலமான, மெய்மையால் ஆன உலகம் உன்னிலிருந்து சுதந்திரமானது. ஏனெனில் அது நீதான் என்னும் சாதாரணமான காரணத்தால்.

**கே:** வார்த்தைகளில் முரண்பாடு இல்லையா? எவ்வாறு சுதந்திரமாக இருப்பது ஏக ரூபத்தை நிரூபிக்கும்?

**ம:** மாற்றத்தின் அசைவைப் பார். அப்போது காண்பாய். நீ மாறாமல் இருக்கும்போது மாறக்கூடிய ஒன்று உன்னிலிருந்து சுதந்திரமானது என்று சொல்லலாம். ஆனால் மாற்றமில்லாதது, மற்ற மாற்றமில்லாதவைகளுடன் ஒன்றானதாக இருக்க வேண்டும். ஏனெனில் இருமை என்பது ஒன்றுக்கொன்று பரஸ்பர செயல் பாட்டில் இருப்பதைக் குறிக்கிறது. பரஸ்பர செயல்பாடு மாற்றத்தைக் குறிக்கிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால் முற்றிலும் பருப்பொருள் மயமானதும், முற்றிலும் ஆன்மீக மயமானதும் உண்மையாகவும், சாரத்திலும் ஒரே மாதிரியானவை.

**கே:** எப்படி ஒரு முப்பரிமாணப் படத்தில் ஒளி அதன் சுய திரையை வடிவமைக்கிறதோ அப்படி.

**ம:** எந்த உவமானமும் பொருந்தும். முக்கியமான கருத்து என்னவென்றால் உன் ஸ்வரூபத்தின் மேல் நீ ஞாபகங்களையும், ஆசைகளையும், அச்சங்களையும் அடிப்படையாகக் கொண்ட உன்

சொந்தக் கற்பனையாலான உலகத்தை உருவகப்படுத்தி உள்ளாய். அதில் உன்னைச் சிறைப்படுத்திக் கொண்டுள்ளாய். அந்த ஹிப்னாட்டிச நிலையிலிருந்து வெளியேவந்து சுதந்திரமாக இரு.

**கே:** ஒருவர் எப்படி அந்த ஹிப்னாட்டிச நிலையை அழிப்பது?

**ம:** எண்ணத்திலும், செயலிலும் உறுதியாக உன் சுதந்திரத்தை வெளிப்படுத்து. எல்லாமும் உன் மேல் நீ கொண்டுள்ள நம்பிக்கையில், நீ பார்ப்பது மற்றும் கேட்பது, சிந்திப்பது மற்றும் உணர்வது ஆகியவை மெய்யானவை என்னும் உன் தீர்க்கமான முடிவைச் சார்ந்துள்ளன. உன் நம்பிக்கையை ஏன் கேள்வி கேட்கக் கூடாது? விழிப்புணர்வு என்னும் திரையின் மேல் இந்த உலகம் உன்னால் வரையப்பட்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. மற்றும் அது முழுவதுமாக உன்னுடைய தனிப்பட்ட உலகம். உன்னுடைய 'நான் உள்ளேன்' என்னும் உணர்வு இந்த உலகத்தில் இருந்தாலும் உலகத்துடையது அல்ல. எந்தத் தர்க்க சாஸ்திரத் தாலும், கற்பனையாலும் 'நான் உள்ளேன்' என்பதை உன்னால் 'நான் இல்லை' என்று மாற்ற முடியாது. உன் இருத்தலை மறுப்பதே அது இருப்பதை உறுதி செய்கிறது. ஒருமுறை நீ இந்த உலகம் உன் சொந்த உருவகம் என்று அறிந்தால் அதிலிருந்து விடுபடுவாய். உன் சொந்தக் கற்பனையில் அல்லாமல் வேறுவிதமாக இல்லாத ஒரு உலகத்திலிருந்து நீ உன்னை விடுவிக்க வேண்டியதில்லை. படம் அழகாகவோ, அசிங்கமாகவோ இருந்தாலும் நீதான் அதை வரைகிறாய். அதனால் கட்டுப்பட்டவன் அல்ல. அதை உன் மேல் கட்டாயப்படுத்த யாரும் கிடையாது என்றும், கற்பனையானதை மெய்யானது என்று எடுத்துக் கொள்ளும் பழக்கத்தால் வருவது என்றும் அறிந்துகொள். கற்பனையானதைக் கற்பனையானது என்று பார்த்து அச்சமற்று இரு.

எப்படி இந்தத் தரை விரிப்பில் உள்ள வர்ணங்கள் ஒளியினால் வெளிக்கொணரப்பட்டாலும் ஒளியே வர்ணம் இல்லையோ, அப்படி உலகம் உன்னால் உருவாக்கப் பட்டது. நீ உலகம் அல்ல.

எது உலகத்தை உருவாக்கிப் பேணுகின்றதோ அதை நீ கடவுள் என்றோ தெய்வீகம் என்றோ, அழைக்கலாம். ஆனால் முடிவாக நீதான் கடவுள் இருப்பதற்கு அத்தாட்சி. எதிர் விதமாக அல்ல.

ஏனெனில் கடவுளைப் பற்றி எந்தக் கேள்வியைக் கேட்பதற்கு முன்பும் நீ அங்கு இருக்க வேண்டும்.

**கே:** கடவுள் காலத்தில் உள்ள ஒரு அனுபவம். ஆனால் அனுபவிப்பவர் காலமற்றவர்.

**ம:** அனுபவிப்பவர் கூட இரண்டாம் பட்சம்தான். பரமாகாசம் தான் மூலம். இருந்த, இருக்கின்ற, இருக்கப் போகின்ற எல்லா வற்றிற்குமான, அளவிட முடியாத உள்ளார்ந்த ஆற்றல் பரமாகாசம். அதுவேதான் பரம சக்தி. நீ எதைப் பார்த்தாலும் அதுதான் உச்சமான முடிவானது. ஆனால் நீ ஒரு மேகத்தையோ அல்லது ஒரு மரத்தையோ பார்ப்பதாகக் கற்பனை செய்துகொள்கிறாய்.

கற்பனை செய்யாமல் பார்க்கவும், சிதறாமல் கேட்கவும் கற்றுக் கொள். அவ்வளவுதான். அடிப்படையாகப் பெயரற்றதற்கும், உருவமற்றதற்கும் பெயரையும், உருவத்தையும் கொடுப்பதை நிறுத்து. ஒவ்வொரு உணர்ந்து அறிகின்ற வகையும் அக எண்ணம் சார்ந்தது, பார்த்தது மற்றும் கேட்டது, தொடப்பட்டது மற்றும் முகரப்பட்டது, உணரப்பட்டது மற்றும் எண்ணப்பட்டது, எதிர் பார்த்தது மற்றும் கற்பனை செய்யப்பட்டது எல்லாமும் மனதில் மட்டுமே உள்ளன என்றும், மெய்யாக இல்லை என்றும் அறிந்து கொள். அப்போது நீ அமைதியை அனுபவிப்பாய். அச்சத்திலிருந்து விடுபடுவாய்.

'நான் உள்ளேன்' என்னும் உணர்வில்கூட தூய ஒளியும், இருத்தல் என்னும் உணர்வும் உள்ளன. 'நான்' என்பது 'உள்ளேன்' என்பது இல்லாமலே இருக்கிறது. அது போலவே 'நான்' என்று நீ சொல்கிறாயோ இல்லையோ, தூய ஒளி இருக்கிறது. அந்தத் தூய ஒளியைப் பற்றிய விழிப்புணர்வு உனக்கு வர அனுமதி. அதை ஒருபோதும் இழக்க மாட்டாய். இருத்தலில் உள்ள இருப்பு, விழிப்புணர்வைப் பற்றிய பிரக்ஞை, ஒவ்வொரு அனுபவத்தின் சாரம் - இவை எல்லாம் விவரிக்க முடியாதவை. இருப்பினும் கச்சிதமாக அணுகக் கூடியவை. ஏனெனில் அவற்றைத் தவிர வேறு ஒன்றும் இல்லை.

**கே:** நீங்கள் மெய்யைப் பற்றி நேரடியாக எல்லாவற்றிலும் ஊடுருவி இருப்பதாக, எப்போதும் இருப்பதாக, சாசுவதமானதாக,

எல்லாமும் அறிந்ததாக, எல்லாவற்றிற்கும் சக்தி கொடுப்பதாகப் பேசுகிறீர்கள். மற்ற ஆசிரியர்கள் மெய்யைப் பற்றி விவாதம் செய்ய அறவே மறுக்கிறார்கள். அவர்கள் மெய் மனதிற்கு அப்பாற்பட்டது என்றும், மெய்யற்றதற்கு உறைவிடமாக இருக்கின்ற மனதிற்கு உட்பட்டவைதான் எல்லா விவாதங்களும் என்றும் சொல்கிறார்கள். அவர்களுடைய அணுகுமுறை எதிர்மறையானது. அவர்கள் மெய்யற்றதைச் சுட்டிக்காட்டி அதன்மூலம் அதைக் கடந்து மெய்யிற்குள் செல்கிறார்கள்.

**ம:** வித்தியாசம் வார்த்தைகளில்தான் உள்ளது. நான் மெய்யைப் பற்றிப் பேசும்போது அதை மெய்யற்றது அல்ல, இடமற்றது, காலம் அற்றது, ஆரம்பமும் முடிவும் அற்றது என்றுதான் விவரிக்கின்றேன். மொத்தத்தில் இரண்டு விதமும் ஒன்றே. அது ஞானம் அடைய வழிவகுப்பதால் வார்த்தைகளுக்கு என்ன முக்கியத்துவம் இருக்கிறது? வண்டி நகர அதை நீ தள்ளினால் என்ன, இழுத்தால் என்ன? நீ மெய்யால் ஈர்க்கப்படுவதாக சில நேரமும், மெய்யற்ற தால் துரத்தப்படுவதாக சில நேரமும் உணரலாம்; இவை எல்லாம் மாறி மாறி வருகின்ற மனோ நிலைகள்; இரண்டுமே பூரணமான சுதந்திரத்திற்கு அவசியம். நீ ஒரு வழியிலோ அல்லது மற்றொரு வழியிலோ செல்லலாம். ஆனால் ஒவ்வொரு முறையும் அந்தக் கணத்தில் அதுதான் சரியான வழியாக இருக்கும். முழு மனதுடன் ஈடுபடு. சந்தேகப்படுவதிலோ, தயங்கியோ நேரத்தை வீணாக் காதே. குழந்தை வளர்வதற்குப் பலவிதமான உணவுகள் தேவை. ஆனால் சாப்பிடுவது என்பது ஒன்றுதான். கோட்பாட்டின்படி எல்லா அணுகுமுறைகளும் சரியானவையே. செயலின் போது, ஒரு குறிப்பிட்ட கணத்தில், நீ ஒரு பாதையில் மட்டுமே செல்வாய். மெய்யாலுமே கண்டுபிடிக்க ஒரே இடத்தில் மட்டுமேதான் தோண்ட வேண்டும் என்று சீக்கிரமோ அல்லது பிறகோ அறிந்து கொள்வாய் - உனக்குள்தான் அந்த இடம்.

உன் உடலோ, மனமோ நீ தேடுவதை - ஆத்ம ஞானம் மற்றும் அதனோடு வருகின்ற மாபெரும் ஆனந்தம் - இவற்றைக் கொடுக்க முடியாது.

**கே:** கண்டிப்பாகச் சில செல்லுபடியாகக் கூடிய மற்றும் மதிப்பு மிக்கவை ஒவ்வொரு அணுகுமுறையிலும் உள்ளன.

**ம:** ஒவ்வொரு அணுகுமுறையும், உன்னை உனக்குள் தேட வைப்பதுதான் முக்கியம். பல்வேறான அணுகுமுறைகளுடன் விளையாடுவது உனக்குள் செல்ல உன்னிடம் உள்ள தடையாலோ, ஏதோ ஒன்றாகவோ, அல்லது குறிப்பிட்ட ஒருவராகவோ இருப்பதான மாயையைக் கைவிட வேண்டியிருக்கும் என்னும் அச்சத்தாலோ இருக்கலாம். தண்ணீரைக் கண்டுபிடிக்க நீ சிறு குழிகளை எல்லா இடத்திலும் தோண்டாமல் ஒரே இடத்தில்தான் ஆழமாகத் தோண்டுவாய். அதேபோல உன்னைக் காண உன்னை நீ ஆராய வேண்டும். நீ உன்னை உலகின் ஒளி என்று அறியும் போது, நீ அதன் அன்பு என்பதையும், அறிதல் என்பது அன்பு செலுத்துவது என்பதையும், அன்பு செலுத்துவது என்பது அறிதல் என்பதையும் தெரிந்து கொள்வாய்.

எல்லாவற்றிலும் சுயஅன்புதான் முதலில் வருகிறது. உனக்கு உலகத்தின் மீது இருக்கின்ற அன்பு உன்மேல் உனக்கு இருக்கும் அன்பின் பிரதிபலிப்பு. ஏனெனில் உன் உலகம் உன்னால் உருவாக்கப்பட்டது. ஒளியும், அன்பும் தனிநபர்ப் பட்டவை அல்ல. ஆனால் தன்னை அறிவதாகவும், நலமுடன் இருக்க விரும்பு வதாகவும் அவை உன் மனதில் பிரதிபலிக்கப்படுகின்றன. நாம் எது செய்தாலும் நம் நன்மைக்காகவே செய்கிறோம். நம் மீது நாம் எப்போதும் நட்புடன் இருக்கிறோம். ஆனால் அறிவுச்செறிவோடு அல்ல. யோகி என்பவர் தன்னுடைய நல்லெண்ணத்தை அறிவுச் செறிவுடன் இணக்கமாக வைத்திருப்பவர்.

# 45. எது வந்து போகிறதோ அதற்கு இருத்தலாகிய தன்மை என்பது கிடையாது

**கேட்பவர்:** நான் நீங்கள் பேசுவதைக் கேட்பதை விட உங்களுடன் இருப்பதற்கு வந்துள்ளேன். வார்த்தைகளில் குறைந்த அளவே சொல்ல முடியும். நிசப்தத்தில் அதைவிட அதிகமாகப் புரிந்து கொள்ள முடியும்.

**மஹராஜ்:** முதலில் வார்த்தைகளில். பிறகு நிசப்தத்தில். ஒருவர் நிசப்தத்தில் இருக்க பக்குவப்பட வேண்டும்.

**கே:** நான் நிசப்தத்தில் வாழ முடியுமா?

**ம:** சுயநலமற்ற வேலை நிசப்தத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். ஏனெனில் நீ சுயநலமற்று வேலை செய்தால் உதவியைக் கேட்க வேண்டியதில்லை. விளைவுகளைப் பற்றி கவலைப்படாமல் நீ மிகவும் குறைந்த அளவு வசதிகளுடன் வேலை செய்ய ஆயத்தமாக உள்ளாய். நீ மிகவும் வளத்துடனோ, நன்கு ஆயத்தப் பட்டிருக்கவோ வேண்டுவதில்லை. நீ அங்கீகாரத்தையோ உதவியையோ கேட்பதில்லை. வெற்றியையும், தோல்வியையும் நம்மால் அறியப்படாத ஒன்றிடம் விட்டு விட்டு, நீ என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறாய். ஏனெனில் ஒவ்வொன்றும் கணக்கற்ற காரணிகளால் தோற்றுவிக்கப்படுகின்றன. அதில் உன் செயல்பாடும் ஒன்று. இருப்பினும் மனித மனம் மற்றும் இதயத்தின் விந்தை என்னவென்றால் மனிதச் சங்கல்பமும், அன்பும் கூடி இழுத்தால் மிகவும் நம்புதற்கரியவையும் நிகழும்.

**கே:** செய்கின்ற வேலை மதிப்புள்ளதாக இருக்கும் போது உதவியைக் கேட்பதில் என்ன தவறு?

**ம:** கேட்பதற்கு என்ன தேவை இருக்கிறது? அது வெறுமனே வலிமையற்று இருப்பதையும், பதட்டத்தையும்தான் காண்பிக்கும். வேலையைச் செய். பிரபஞ்சம் உன்னுடன் வேலை செய்யும். சரியானவற்றை செய்ய வேண்டும் என்னும் கருத்து அறியப் படாததிலிருந்து உனக்கு வருகிறது. விளைவுகளைப் பொறுத்த மட்டில் அறியப்படாததிடம் விட்டு விட்டு, அவசியமான செயல்களை மட்டும் செய். நீ காரண காரியத் தொடர்பாகிய நீண்ட சங்கிலியில் ஒரு கண்ணி மட்டுமே. அடிப்படையில் எல்லாமும் மனதில்தான் நடக்கின்றன. ஒன்றிற்காக நீ முழு மனதுடனும் உறுதியாகவும் உழைத்தால் அது நடக்கும். ஏனெனில் மனதின் செயல்பாடு நிகழச் செய்வது. மெய்யில் எதுவுமே குறைவாக இல்லாமலோ, எதுவுமே தேவையாகவோ இல்லை. எல்லா வேலையும் மேற்பரப்பில் மட்டுமே. ஆழத்தில் பூரணமான அமைதி இருக்கிறது. எல்லாப் பிரச்சனைகளும் நீ உன்னை வரையறுத்துக் கொண்டு, அதற்குள் உன்னை அடக்கிக் கொள்வதனால் வருவது. நீ உன்னை இதுவாகவோ அல்லது அதுவாகவோ நினைக்கவில்லை என்றால் எல்லா முரண்பாடுகளும் நீங்கிவிடும். வித்தியாசங்களையும், விருப்பு வெறுப்புகளையும் விட்டு விடு. அவ்வளவுதான். உன் பிரச்சனைகளைத் தீர்க்க நீ செய்யும் ஒவ்வொரு முயற்சியும் வீணானது. ஏனெனில் ஆசையால் உருவாக்கப்பட்டது ஆசையிலிருந்து விடுதலை அடைவதால் மட்டுமே தீர்க்கப் படும். உன்னைக் காலத்திலும், இடத்திலும் சூழ வைத்துக் கொண்டாய். ஒரு ஆயுள்காலத்திற்குள்ளும், ஒரு உடலுக்குள்ளும் உன்னை அடக்கிக் கொண்டுள்ளாய். அதனால் வாழ்தல் மற்றும் இறத்தல், சுகம் மற்றும் வலி, எதிர்பார்ப்பு மற்றும் அச்சம் ஆகிய கணக்கற்ற வாழ்வின் முரண்பாடுகளை உருவாக்கிக் கொண்டுள்ளாய். ப்ரம்மைகளை விட்டு ஒழிக்காமல் உன்னால் பிரச்சனைகளில் இருந்து விடுபட முடியாது.

**கே:** ஒரு நபர் இயல்பாகவே வரையறுக்கப் பட்டவர்.

**ம:** நபர் என்று ஒன்றும் கிடையாது. கட்டுப்பாடுகளும், அளவுகளும் மட்டுமே உள்ளன. இவற்றின் மொத்தமே ஒரு நபரைத் தீர்மானிக்கிறது. நீ என்ன என்பதை அறிவதாக உணர்ந்தால்

உன்னை அறிந்ததாக நினைத்துக் கொள்கிறாய். ஆனால் நீ என்ன என்பதை ஒருபோதும் நீ அறியமாட்டாய். எப்படிப் பானைக்கு உள்ளே உள்ள இடம் பானையின் வடிவம், அளவு, வாசம் ஆகியவற்றைக் கொண்டுள்ளதாகத் தெரிகிறதோ அப்படி நபர் தோற்றமளிக்கிறார். நீ என்னவாக உன்னை நினைக்கிறாயோ அப்படி இல்லை என்பதை அறிந்து கொள். உன் முழுச் சக்தியையும் பிரயோகித்து நீ பெயரிடப்படக் கூடியவன், விவரிக்கப்படக் கூடியவன் என்னும் கருத்தை எதிர். நீ அவ்வாறு இல்லை. உன்னை இதுவாகவோ, அதுவாகவோ நினைப்பதை மறு. ஆராயாமல் கண் மூடித்தனமாக உனக்கு நீ உருவாக்கிக் கொண்டுள்ள துயரத் திலிருந்து வெளியேற வேறு வழி இல்லை. துக்கப்படுதல் விசாரத் திற்கான அழைப்பு. எல்லாத் துக்கங்களும் ஆராயப்பட வேண்டியவை. அவ்வாறு சிந்திக்கச் சோம்பேறித்தனப் படாதே.

**கே:** செயல்பாடு மெய்யின் சாரம். செயல்படாமல் இருப்பதில் சிறப்பு எதுவும் இல்லை. விசாரத்துடன் கூட ஏதாவது செய்யப்பட வேண்டும்.

**ம:** இந்த உலகத்தில் வேலை செய்வது என்பது கடினம். தேவை இல்லாத வேலையைத் தவிர்ப்பது அதைவிடக் கடினம்.

**கே:** எனக்கு இவை எல்லாம் சாத்தியமில்லாததாகத் தோன்றுகிறது.

**ம:**உன்னைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? நீ மெய்மையில் என்னவாக இருக்கிறாயோ அப்படிதான் இருக்க முடியும். நீ என்னவாக இல்லையோ அப்படித்தான் தோன்றுவாய். பரிபூரணத் திலிருந்து நீ ஒருபோதும் விலகவில்லை. சுய முன்னேற்றம் பற்றிய எல்லாக் கருத்துக்களும் வழக்கமானவை மற்றும் வார்த்தைகளால் ஆனவை. எப்படி சூரியன் இருளை அறியாதோ அப்படி சுயமற்றதை சுயம் அறியாது. மனம்தான் மற்றதை அறிவதால் மற்றதாகிறது. இருப்பினும் மனம் என்பது ஜீவாத்மாவைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. அந்த ஜீவாத்மாதான் வேறுமாதிரி சொன்னால் அனாத்மா ஆகிறது. இருப்பினும் அந்த ஜீவாத்மா உள்ளது. மற்றவை எல்லாம் ஒரு கற்பனையே. எப்படி ஒரு மேகம் சூரியனை பாதிக்காமல் அதை

மறைக்கிறதோ, அப்படி யூகம் மெய்யைப் பாதிக்காமல் அதை மறைக்கிறது. மெய்யை அழிப்பது என்னும் கருத்தே நகைப்பிற் குரியது. எப்போதுமே அழிப்பவர் அழிக்கப்படுவதை விட நிஜமானவர். மெய்தான் முடிவாக அழிப்பது. எல்லாப் பிரிவினைகளும், தன்னைத் தவிர வேறொன்று என்பதும், விரோதத் தன்மையும் பொய்யானவை. எல்லாமுமே ஏக ரூபம் - இதுதான் ஒவ்வொரு முரண்பாட்டிற்கும் முடிவான தீர்வு.

**கே:** எதனால் இவ்வளவு போதனைகள் மற்றும் உதவிக்குப் பிறகும் நாங்கள் முன்னேற்றம் எதுவும் அடைவதில்லை?

**ம:** நாம் நம்மைத் தனித்தனி நபர்களாக, ஒருவர் மற்றவரிட மிருந்து பிரிந்து உள்ளதாகக் கற்பனை செய்துகொள்ளும் வரை நம்மால் நபர்த்தன்மையற்ற மெய்யைப் புரிந்து கொள்ள முடியாது. முதலில் நம்மை சாட்சியாக, உருவமற்ற, காலமற்ற கவனித்து உணரும் மையங்களாக மட்டுமே அறிய வேண்டும். பிறகு மனமும் பொருளுமாகவும், இரண்டிற்கும் அப்பால் உள்ளதுமான மாபெரும் தூய விழிப்புணர்வுக் கடலை அறிய வேண்டும்.

**கே:** நான் மெய்மையில் என்னவாக இருந்தாலும் என்னை ஒரு சிறிய தனிப்பட்ட நபராக, பலபேரில் ஒருவனாகவே உணர்கிறேன்.

**ம:** நீ நபராக இருப்பது காலம் மற்றும் வெளியைப் பற்றிய மாயக் கருத்தால் வருவது; நீ உன்னை ஒரு குறிப்பிட்ட புள்ளியில் ஒரு குறிப்பிட்ட அளவு கொள்ளளவை ஆக்கிரமித்துக் கொள்பவனாகக் கற்பனை செய்துகொள்கிறாய்; உன் நபர்த்தன்மை உன்னை நீ உடலுடன் அடையாளப் படுத்திக்கொள்வதால் வருவது. உன் எண்ணங்களும், உணர்ச்சிகளும் அடுத்தடுத்து தொடர்ந்து இருக்கின்றன. அவை குறுகிய கால அளவைக் கொண்டிருக் கின்றன. மேலும் ஞாபகத்தன்மையினால் உனக்குக் கால அளவு உள்ளதாக உன்னைக் கற்பனை செய்ய வைக்கின்றன. அவை உணர்ந்து அறியும் விதங்கள். ஆனால் அது மட்டும் அல்ல. உண்மையாகக் காலமும், வெளியும் உனக்குள் உள்ளன. நீ அவற்றிற்குள் இல்லை. காலமும், வெளியும் காகிதத்தின் மேல் எழுதப்பட்ட வார்த்தைகள் போன்றவை; காகிதம் மெய்யானது.

வார்த்தைகள் வெறுமனே ஒரு வழக்கமே. உனக்கு என்ன வயதாகிறது?

**கே:** நாற்பத்தி எட்டு.

**ம:** எது உன்னை நாற்பத்தி எட்டு எனச் சொல்ல வைக்கிறது? எது உன்னை 'நான் இங்கு இருக்கிறேன்' என்று சொல்ல வைக்கிறது? யூகத்தால் பிறக்கும் பேசும் பழக்கம். மனம் காலத்தையும், வெளியையும் உருவாக்கி அதன் சொந்த உருவாக்கங்களையே மெய் என்று எடுத்துக் கொள்கிறது. எல்லாமும் இங்கேயே, இப்போதே இருக்கின்றன. ஆனால் நாம் அதைப் பார்ப்பது இல்லை. உண்மையாக எல்லாமும் என்னுள் இருக்கின்றன. என்னால் இருக்கின்றன. வேறு ஒன்றும் இல்லை. 'வேறு' என்னும் கருத்தே ஒரு பேரழிவு. ஒரு பேரிடர்.

**கே:** நபர்த்தன்மைப் படுத்திக் கொள்வதற்கும், காலத்திலும் இடத்திலும் சுய அடக்கப் படுத்திக் கொள்வதற்கும் என்ன காரணம்?

**ம:** இல்லாத ஒன்று காரணத்தைக் கொண்டிருக்க முடியாது. தனி நபர் என்று ஒன்றும் கிடையாது. அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு பார்த்தாலும் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றிற்கும் காரணம் என்பது வெளிப்படை. ஒவ்வொன்றும் உள்ளவாறே உள்ளன; ஏனெனில் முழுப் பிரபஞ்சமும் உள்ளவாறே உள்ளது.

**கே:** இருப்பினும் நபர்த்தன்மை ஒரு காரணத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

**ம:** நபர்த்தன்மை எவ்வாறு வருகிறது? ஞாபகத்தால். தற்போதுள்ளதைக் கடந்ததுடனும், அதை எதிர்காலத்திற்கு விரிப்பதாலும் அது இருக்கிறது. உன்னை கடந்த காலமும், எதிர் காலமும் இல்லாதவனாக, கணநேரமே இருப்பதாக நினை. அப்போது உன் நபர்த்தன்மை கரைந்து விடும்.

**கே:** 'நான்' என்பது மிஞ்சாதா?

**ம:** 'மிஞ்சுவது' என்பது பொருந்தாது. 'நான்' என்பது எப்போதும் பசுமையாக இருப்பது. நீ இருப்பதற்கு ஞாபகம் வைத்திருக்க

வேண்டியதில்லை. நீ எதையும் அனுபவப்படுவதற்கு முன் இருத்தல் என்னும் உணர்வு இருக்க வேண்டும். தற்போது உன் இருத்தல் அனுபவத்தோடு கலந்துள்ளது. உனக்கு என்ன தேவை என்றால் அனுபவங்களின் சிக்கல்களிலிருந்து இருத்தலை விடுவிப்பதே. ஒருமுறை நீ தூய இருத்தலை இது அல்லது அதுவாக இல்லை என்று அறிந்து கொண்டால் நீ அனுபவங்களிலிருந்து அதைப் பிரித்து விடுவாய். மேற்கொண்டு பெயர்களிலும், வடிவங்களிலும் சிக்கிக் கொள்ள மாட்டாய்.

நபர்த்தன்மையின் ஆதாரமே சுயத்தைக் குறுக்கிக் கொள்வதுதான்.

**கே:** நான் எப்படிப் பிரபஞ்சமயமாவது?

**ம:** நீ பிரபஞ்சமயமானவன்தான். நீ என்னவாக உள்ளாயோ அப்படி மாற உனக்குத் தேவையும் இல்லை. உன்னால் மாறவும் முடியாது. குறிப்பிட்ட ஒன்றாக இருப்பதாக உன்னைக் கற்பனை செய்வதை மட்டும் நிறுத்து. எது வந்து போகிறதோ அதற்கு இருத்தலாகிய தன்மை கிடையாது. அதன் தோற்றத்திற்கு அது மெய்யைச் சார்ந்து இருக்கிறது. ஒரு உலகம் இருக்கிறதென்று உனக்குத் தெரியும். ஆனால் உலகத்திற்கு உன்னைத் தெரியுமா? எல்லா அறிவும் உன்னிலிருந்து எல்லா இருப்பவைகளாகவும், எல்லா ஆனந்தமாகவும் பிரவகிக்கிறது. நீதான் சாசுவதமான மூலம் என்று அறி. எல்லாவற்றையும் உன்னுடையது என்று ஒப்புக்கொள். அப்படியான ஒப்புதல்தான் உண்மையான அன்பு.

**கே:** நீங்கள் சொல்வதெல்லாம் மிகவும் அழகாகத் தெரிகின்றன. ஆனால் எப்படி ஒருவர் அதை வாழும் வகையாக மாற்றுவது?

**ம:** வீட்டை விட்டு வெளியேறாமலே வீட்டிற்கு நீ வழி கேட்கிறாய். தவறான கருத்துக்களை ஒழி. அவ்வளவுதான். சரியான கருத்துக்களைச் சேகரிப்பதும் உன்னை எங்கும் கொண்டுபோய்ச் சேர்க்காது. வெறுமனே கற்பனை செய்வதை நிறுத்து.

**கே:** அது அடைகின்ற சமாசாரமல்ல. புரிந்துகொள்கின்ற ஒன்று.

**ம:** புரிந்து கொள்ள முயற்சிக்காதே. நீ தவறாகப் புரிந்து கொள்ளாமல் இருந்தாலே போதும். விடுதலைக்கு உன் மனதைச்

சார்ந்திருக்காதே. மனம்தான் உன்னை பந்தப்படுத்தி இருக்கிறது. முற்றிலுமாக அதைக் கடந்து செல்.

ஆரம்பமற்றது காரணத்தைக் கொண்டிருக்க முடியாது. நீ யார் என்பதை அறிந்து பிறகு மறக்க வில்லை. ஒருமுறை அறிந்தால் பிறகு மறக்க முடியாது. அறியாமைக்கு ஆரம்பம் கிடையாது. ஆனால் முடிவு இருக்கலாம். யார் அறியாமையுடன் இருப்பது என்று விசாரம் செய். பிறகு அறியாமை கனவு போலக் கரைந்துவிடும். உலகத்தில் நிறைய முரண்பாடுகள் உள்ளன. அதனால்தான் நீ இணக்கத்தையும், அமைதியையும் தேடுகிறாய். இவற்றை நீ உலகத்தில் காண முடியாது. ஏனெனில் உலகம் குழப்பத்தின் குழந்தை. ஒழுங்கைக் கண்டுபிடிக்க நீ உனக்குள் தேட வேண்டும். நீ ஒரு உடலில் பிறந்த பிறகுதான் உலகம் உருவாகிறது. உடல் இல்லையென்றால் உலகம் இல்லை. முதலில் நீ உடலா அல்லது என்ன என்று விசாரி. உலகத்தைப் புரிந்துகொள்வது பிறகு வரும்.

**கே:** *நீங்கள் சொல்வது ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கிறது. ஆனால் தன்னை உலகத்தில் இருப்பதாகவும், தான் உலகத்தால் ஆனதாகவும் கருதும் தனி நபருக்கு இது எந்த விதத்தில் பிரயோஜனம்?*

**ம:** லட்சக் கணக்கானவர்கள் ரொட்டி சாப்பிடுகிறார்கள். ஆனால் சிலர் மட்டுமே கோதுமையைப் பற்றி அறிவார்கள். கோதுமையைப் பற்றித் தெரிந்தவர்களால்தான் அதை மேலும் சிறப்பாக்க முடியும். அதைப் போல சுயத்தைப் பற்றி அறிந்தவர் களால்தான், உலகத்தை அதற்கு அப்பால் பார்த்தவர்களால்தான் அதை முன்னேற்ற முடியும். சாதாரண மனிதர்களுக்குச் சுயம் அறிந்தவர்களைப் பற்றிய மதிப்பு அளவற்றது. ஏனெனில் அவர்கள்தான் மீட்சிக்கான ஒரே நம்பிக்கை. உலகத்தில் உள்ள ஒன்றால் அதைக் காப்பாற்ற முடியாது; நீ நிஜமாகவே உலகத்தைக் காப்பாற்ற அக்கறை கொண்டிருந்தால் அதை விட்டு வெளியே வர வேண்டும்.

**கே:** *ஆனால் ஒருவர் உலகத்திலிருந்து வெளியே வர முடியுமா?*

**ம:** யார் முதலில் பிறந்தது - நீயா, உலகமா? நீ உலகத்திற்கு முதலிடம் கொடுக்கும் வரையில் அதனால் கட்டுப்பட்டவன். சிறிது கூட சந்தேகம் இல்லாமல் உலகம் உன்னில் உள்ளது; நீ அதில் இல்லை என்று அறிந்து கொண்டால் நீ அதற்கு வெளியில் வந்து விடுவாய். உன் உடல் உலகில் உள்ளது, உலகத்தால் ஆனது என்பது வாஸ்தவம். ஆனால் நீ அதனால் குழம்பவில்லை. எல்லாச் சமய சாஸ்திரங்களும் உலகம் தோன்றுவதற்கு முன் தோற்றுவித்தவர் இருந்தார் என்று சொல்கின்றன. தோற்றுவித்தவரை யாருக்குத் தெரியும்? தோற்றுவித்தவருக்கு முன்பே எது இருந்ததோ அது. அதுதான் உன்னுடைய சொந்த ஸ்வரூபம், எல்லா உலகங்களுக்கும், அதைத் தோற்றுவித்தவருக்கும் ஆதாரம்.

**கே:** நீங்கள் சொல்வதெல்லாம் இந்த உலகம் எங்களுடைய உருவகம் என்னும் யூகத்தினால் பிணைக்கப்பட்டிருக்கின்றது; நம் தனிப்பட்ட, அக எண்ணம் சார்ந்த உலகத்தில், நம் புலன்களாலும், மனதாலும் ஏற்படுத்தியுள்ள உலகத்தில் நாம் ஒவ்வொருவரும் தன் சொந்த உருவகத்தால் ஆன உலகத்தில் வாழ்கிறோம் என்பது. இந்தத் தனிப்பட்ட உலகங்கள் ஒன்றை ஒன்று ஒருபோதும் தொடர்பு கொள்வதில்லை. அவை அவற்றின் மையத்தில் உள்ள 'நான்' என்பதிலிருந்து எழும்பி அடங்குகின்றன. ஆனால் கண்டிப்பாக இந்தத் தனிப்பட்ட உலகங்களுக்குப் பின்னால் ஒரு சாதாரணமான, புறவயப் பட்ட உலகம் இருக்க வேண்டும். அந்தத் தனிப்பட்ட உலகங்கள் எல்லாம் புறவயப்பட்ட உலகத்தின் வெறும் நிழல்களே. நீங்கள் எல்லோருக்கும் பொதுவான, அந்த மாதிரியான புறப் பொருளுக்குரிய உலகம் இருப்பதை மறுக்கிறீர்களா?

**ம:** மெய் என்பது அகம் சார்ந்ததோ புறம் சார்ந்ததோ அல்ல. அது மனமோ, பொருளோ அல்ல. அது காலமோ, இடமோ அல்ல. இந்தப் பிரிவினைகள் எல்லாம் ஏற்பட ஒரு விழிப்புணர்வுள்ள தனிப்பட்ட மையத்தைக் கொண்டுள்ள ஒருவர் தேவை. ஆனால் மெய் என்பது எல்லாமும், ஒன்றுமில்லாததும், ஒன்று சேர்ந்த மொத்தமும், விடுபட்டவையும், நிறைந்ததும், காலியானதும், முற்றிலும் முறையானதும், தீர்க்கமாகக் குழப்பமானதும் ஆகும். நீ அதைப் பற்றி பேச முடியாது. ஆனால் அதில் உன்னை இழக்கலாம். மெய்யை எந்த ஒன்றுமே இல்லை என்று நீ மறுத்தாலும் மறுக்க

முடியாத ஒன்று மிஞ்சும். நீ அந்த மிஞ்சும் ஒன்றோடு இருக்கும் போது அந்த மிச்சம்தான் நீ மறுத்த எல்லாமுமே என்று அறிவாய்.

ஞானத்தைப் பற்றிய எல்லாப் பேச்சுகளும் அறியாமையின் குறியீடுகளே. மனம்தான் தனக்குத் தெரியாது என்றும், பிறகு தெரிந்து கொண்டதாகவும் கற்பனை செய்து கொள்கிறது. பிறகு தன்னை மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்துத் தன் உயர்வைப் பற்றிப் பறை சாற்றுகிறது. மெய்யிற்கு இந்த முரண்பாடுகள் எதுவும் தெரியாது. கடவுள்தான் உருவாக்குபவர் என்னும் கருத்து கூட தவறு. என்னுடைய இருத்தல் வேறு ஏதாவது ஒன்று இருப்பதாலா? நான் இருப்பதால் எல்லாமும் இருக்கின்றன.

**கே:** அது எப்படி? குழந்தை உலகத்தில் பிறக்கிறது. உலகம் குழந்தைக்குள் அல்ல. உலகம் பழமையானது. குழந்தை புதியது.

**ம:** குழந்தை உன் உலகத்தில் பிறந்துள்ளது. இப்போது, நீ உன் உலகத்தில் பிறந்துள்ளாயா அல்லது உன் உலகம் உனக்குள் தோன்றி உள்ளதா? பிறப்பது என்பது உன்னை மையமாக வைத்து சுற்றிலும் ஒரு உலகத்தை ஏற்படுத்துவது. ஆனால் நீ உன்னை எப்போதாவது உருவாக்கி உள்ளாயா? அல்லது யாராவது உன்னை உருவாக்கி உள்ளார்களா? ஒவ்வொருவரும் தனக்காக ஒரு உலகத்தை உருவாக்கிக் கொண்டு, சொந்த அறியாமையினால் சிறைப்பட்டு, அதில் வாழ்கிறார்கள். அந்தச் சிறையின் மெய்த்தன்மையை மறுப்பதுதான் ஒருவர் செய்ய வேண்டியது.

**கே:** எப்படி விழித்த நிலை விதை வடிவில் தூங்கும் போது இருக்கிறதோ அப்படி பிறந்தபோது குழந்தை உருவாக்கும் உலகம் அது பிறப்பதற்கு முன்பே இருக்கிறது. யாருடன் அந்த விதை இருக்கிறது?

**ம:** யார் பிறப்பிற்கும், இறப்பிற்கும் சாட்சியாகவும், ஆனால் பிறப்போ, இறப்போ இல்லாமலும் இருக்கிறாரோ அவரிடம். அவர் மட்டுமே உருவாகுதலின் விதை மற்றும் மிச்சம். மனதிற்கு அப்பாற்பட்டதை மனதிடம் உறுதிப்படுத்தச் சொல்லாதே. எளிய அனுபவம் ஒன்றுதான் செல்லத்தக்க அத்தாட்சி.

# 46. இருத்தலைப் பற்றிய பிரக்ஞையே பேரின்பம்

**கேட்பவர்:** தொழிலால் நான் ஒரு மருத்துவர். அறுவை சிகிச்சையில் ஆரம்பித்து, மன நல மருத்துவத்தைத் தொடர்ந்தேன். மன நலத்தைப் பற்றியும், நம்பிக்கையால் குணமாக்குதல் பற்றியும் சில புத்தகங்களையும் எழுதி உள்ளேன். ஆன்மீக நலத்தைப் பற்றி கற்றுக் கொள்ள தங்களிடம் வந்துள்ளேன்.

**மஹராஜ்:** ஒரு நோயாளியைக் குணப்படுத்த நீ முயலும் போது, குறிப்பிட்டவாறு எதைக் குணப்படுத்த முயல்கிறாய்? குணமாவது என்றால் என்ன? எப்போது ஒரு மனிதன் குணமடைந்துவிட்டான் என்று சொல்வாய்?

**கே:** நான் உடலைக் குணமாக்கவும், உடலுக்கும், மனதிற்கும் உள்ள இணைப்பை மேம்படுத்தவும் விழைவேன். மனதைச் சரிப்படுத்தவும் விழைவேன்.

**ம:** மனதிற்கும், உடலுக்கும்இடையே உள்ள தொடர்பை நீ ஆராய்ந்திருக்கிறாயா? அவை எந்தப் புள்ளியில் இணைக்கப் பட்டுள்ளன?

**கே:** உடலுக்கும், அதற்குள் வசிக்கும் விழிப்புணர்விற்கும் இடையில் மனம் உள்ளது.

**ம:** உடல் உணவால் ஆனதல்லவா? உணவில்லாமல் மனம் இருக்க முடியுமா?

**கே:** உடல் உணவால் உருவாக்கப் பட்டு பராமரிக்கப் படுகிறது. உணவில்லாவிட்டால், வழக்கமாக மனம் வலிமையற்றுவிடும். ஆனால் மனம் வெறுமனே உணவு மட்டுமல்ல. உடலில் மனதை

உருவாக்குகிற ஒரு மாற்றக்கூடிய காரணி உள்ளது. அந்த மாற்றக்கூடிய காரணி என்ன?

**ம:** எப்படி விறகு தீயை உருவாக்கினாலும் தீ விறகில்லையோ அதே போல, உடல் மனதை உருவாக்கினாலும் மனம் உடல் அல்ல. ஆனால் யாருக்கு மனம் தோன்றுகிறது? நீ மனம் என்று சொல்கின்ற எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் யார் அனுமானிப்பது? விறகு உள்ளது, நெருப்பு உள்ளது, நெருப்பை அனுபவித்து மகிழ்பவர் உள்ளார். யார் மனதை அனுபவித்து மகிழ்பவர்? அனுபவித்து மகிழ்வதும் உணவின் ஒரு விளைவா அல்லது அது சுதந்திரமானதா?

**கே:** உணர்ந்தறிபவர் சுதந்திரமானவர்.

**ம:** உனக்கு எப்படித் தெரியும்? உன் சொந்த அனுபவத்திலிருந்து பேசு. நீ உடலோ, மனமோ அல்ல. நீதான் அவ்வாறு சொல்கிறாய். உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** உண்மையாலுமே எனக்குத் தெரியாது. அவ்வாறு நான் யூகிக்கின்றேன்.

**ம:** உண்மை நிலையானது. மெய் மாற்றமில்லாதது. எது மாறுகிறதோ அது மெய்யானதல்ல. எது மெய்யானதோ, அது மாறாது. இப்போது, உன்னிடம் உள்ள எது மாறாதது? உணவு என்பது இருக்கும் வரை உடலும், மனமும் இருக்கும். உணவை நிறுத்தினால் உடல் இறந்துவிடும். மனம் கரைந்து விடும். ஆனால் கவனிப்பவர் அழிந்து விடுவாரா?

**கே:** இல்லை என்று யூகிக்கிறேன். ஆனால் என்னிடம் ஆதாரம் இல்லை.

**ம:** நீயேதான் ஆதாரம். உன்னிடம் வேறு ஆதாரம் கிடையாது; இருக்கவும் முடியாது. நீ நீயேதான்; நீ உன்னை அறிவாய்; நீ உன்னை நேசிக்கிறாய். மனம் என்ன செய்தாலும் அது தன் சொந்த சுயத்தின் மேல் கொண்டுள்ள அன்பால் செய்கிறது. சுயத்தின் அடிப்படை இயல்பே அன்புதான். அது நேசிக்கப்பட்டது, நேசிப்பது, நேசிக்கத்தக்கது. சுயம்தான் உடலையும், மனதையும்

மிகுந்த சுவாரசியமானதாகவும், மிகுந்த நெருக்கமுடையதாகவும் செய்கிறது. உடலுக்கும் மனதிற்கும் கொடுக்கப்படும் கவனமுமே சுயத்திலிருந்துதான் வருகிறது.

**கே:** சுயம் உடலோ, மனமோ அல்ல என்றால், அது உடலும், மனமும் இல்லாமல் இருக்க முடியுமா?

**ம:** ஆமாம். இருக்க முடியும். சுயம் மனதிலிருந்தும், உடலிலிருந்தும் சுதந்திரமாக இருப்பது பிரக்தியட்சமான அனுபவம். அது சத் - சித் - ஆனந்தம். இருத்தலைப் பற்றிய பிரக்ஞையே ஆனந்தம்.

**கே:** உங்களுக்கு அது பிரக்தியட்சமான அனுபவமாக இருக்கலாம். ஆனால் எனக்கு அவ்வாறில்லை. நான் அந்த அனுபவத்தைப் பெறுவது எப்படி? எந்த வழக்கத்தைப் பின்பற்றுவது? என்ன பயிற்சியை எடுத்துக் கொள்வது?

**ம:** நீ உடலோ மனமோ அல்ல என்று அறிந்துகொள்ள, உன்னை விழிப்புடன், சதாகாலமும் கவனி. உன் உடலாலும், மனதாலும் பாதிக்கப்படாதவாறு, முற்றிலுமாக விட்டேத்தியாக, நீ இறந்தது போல் வாழ். அதற்கு அர்த்தம் என்னவென்றால் உனக்கு உடலிலோ, மனதிலோ எந்தவிதமான அக்கறையும் கிடையாது என்பது.

**கே:** விபரீதமானது!

**ம:** நான் உன்னைத் தற்கொலை செய்யச் சொல்லவில்லை. உன்னால் அது முடியாதும் கூட. நீ உடலைக் கொல்லலாம். உன்னால் மன இயக்கத்தையும் நிறுத்த முடியும். அல்லது நீ என்று நினைத்துக் கொண்டிருக்கும் நபரையும் நாசம் செய்ய முடியும். உன்னுடைய சுய இருத்தல் ஏதொன்றின் விளைவும் அல்ல. இந்த முழுமையான விட்டேத்தியான தன்மை, உடலின்மீதும், மனதின் மீதும் அக்கறையில்லாமல் தனித்து இருப்பதுதான் உன்னுடைய இருத்தலின் மையத்தில் நீ உடலோ மனமோ அல்ல என்பதற்குச் சிறந்த அத்தாட்சி. உடலுக்கும் மனதிற்கும் நடப்பது உன் மாற்றக் கூடிய சக்திக்கு உட்படாததாக இருக்கலாம். ஆனால் நீ உன்னை உடலாகவோ, மனமாகவோ கற்பனை செய்வதை எப்போதும் நிறுத்தலாம். எது நடந்தாலும் உன் உடலோ, மனமோதான் பாதிக்கப்படுகிறது, நீ அல்ல என்று ஞாபகம் வைத்திரு. எதை

ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டுமோ அதை மட்டும் ஞாபகம் வைத்திருக்க நீ எவ்வளவு தீவிர ஆர்வத்துடன் இருக்கிறாயோ அவ்வளவு சீக்கிரம் உன்னை நீ உள்ளபடி அறிவாய். ஏனெனில் ஞாபகம் அனுபவமாக மாறும். தீவிர ஆர்வம், இருத்தல் தன்மையை வெளிக்கொணர்கிறது. எது கற்பனை செய்யப்பட்டு வேண்டப்படு கிறதோ அது நிஜமாகிறது. இங்கு ஆபத்தும், கூடவே வெளியேற வழியும் இருக்கின்றன.

உனக்குள் இருக்கும் மாறாத உன் சத்ய ஸ்வரூபத்தை உன் உடலிலிருந்தும், மனதிலிருந்தும் பிரிக்க நீ என்ன முயற்சி செய்தாய் என்று எனக்குச் சொல்.

**கே:** நான் ஒரு மருத்துவர். நிறையப் படித்திருக்கிறேன். உடற் பயிற்சியினாலும், குறித்த கால இடைவெளியில் உபவாசம் இருப்பதினாலும் எனக்கு ஒரு கடினமான ஒழுங்கு முறையை வகுத்துக் கொண்டேன். நான் சைவ உணவு மட்டுமே உண்பவன்.

**ம:** ஆனால் உன் மனதின் ஆழத்தில் நீ என்ன வேண்டுகிறாய்?

**கே:** மெய்யைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுகிறேன்.

**ம:** மெய்யிற்காக என்ன விலை கொடுக்க நீ தயார்? எந்த விலையையும் கொடுப்பாயா?

**கே:** கோட்பாட்டின்படி நான் எந்த விலையையும் கொடுக்கத் தயார். ஆனால் நிஜ வாழ்க்கையில் எனக்கும், மெய்யிற்கும் இடையில் குறுக்கிடும் விதமாக நடந்து கொள்ளும்படி திரும்பத் திரும்ப உந்தப்படுகிறேன். ஆசையால் நான் அடித்துச் செல்லப்படு கிறேன்.

**ம:** மெய்யைத் தவிர வேறொன்றாலும் நிறைவேற்ற முடியாதபடி உன் ஆசைகளை அதிகமும், அகலமும் படுத்து. ஆசையில் தவறில்லை. ஆனால் அதன் குறுகிய மற்றும் மோசமான தன்மை தான் தவறு. ஆசை என்பது பக்தி. எல்லா வகையிலும் நிஜமான, முடிவற்ற, சாசுவதமான மெய்யின் இதயத்தின் மேல் பக்தியோடு இரு. ஆசையை அன்பாக மாற்று. நீ வேண்டுவதெல்லாம் மகிழ்ச்சியோடு இருப்பதே. உன் எல்லா ஆசைகளுமே, அவை

எதுவாக இருந்தாலும், நீ மகிழ்ச்சிக்காக ஏங்குவதன் வெளிப்பாடே. அடிப்படையில் நீ நன்றாக இருக்க ஆசைப்படுகிறாய்.

**கே:** நான் அவ்வாறு இருக்கக் கூடாது என்று எனக்குத் தெரியும்....

**ம:** பொறு. யார் சொன்னது நீ அவ்வாறு ஆசைப்படக் கூடாது என்று? மகிழ்ச்சியாக இருக்க வேண்டுவதில் என்ன தவறு?

**கே:** 'நான்' என்பது போக வேண்டும் என்பது எனக்குத் தெரியும்.

**ம:** ஆனால் 'நான்' அங்கு உள்ளது. உன் ஆசைகள் அங்கு உள்ளன. உன் மகிழ்ச்சிக்கான ஏக்கம் அங்கு உள்ளது. ஏன்? ஏனெனில் நீ உன்னை நேசிக்கிறாய். உன் ஆசைகள் முட்டாள் தனமாகவோ அல்லது புத்திசாலித்தனமாகவோ இருக்கலாம். எல்லா வகையிலும் நீ உன்னை நேசி - புத்திசாலித்தனத்துடன். எது தவறு என்றால் வேதனைப்படுத்திக் கொள்ளும் விதமாக உன்னை முட்டாள்தனமாக நேசிப்பது தான். புத்திசாலித்தனமாக உன்னை நேசி. மூழ்கித் திளைப்பதும், விரதத்துவமும் ஒரே காரணத்தைக் கொண்டிருக்கின்றன - உன்னை மகிழச் செய்வது. மூழ்கித் திளைப்பது முட்டாள்தனமான வழி. விரதத்துவம் புத்திசாலித் தனமான வழி.

**கே:** விரதத்துவம் என்றால் என்ன?

**ம:** ஒரு அனுபவத்தைப் பெற்ற பிறகு அதே அனுபவத்திற்குள் திரும்பவும் செல்லாமல் இருப்பது விரதத்துவம். தேவையில்லாததை விட்டொழிப்பது விரதத்துவம். இன்பத்தையோ, துக்கத்தையோ எதிர்பார்க்காதிருப்பது விரதத்துவம். இருப்பனவற்றை எப்போதும் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பது விரதத்துவம்.

ஆசைப் படுவது தவறல்ல. நீ தேர்வு செய்திருப்பவைதான் தவறு. சில சமாச்சாரங்கள் - உணவு, உடலுறவு, அதிகாரம், புகழ் - இவையெல்லாம் உனக்கு மகிழ்ச்சியைத் தரும் என்று கற்பனை செய்வது முற்றிலும் தவறு. உன் விரிந்த மற்றும் ஆழமான, மெய்யான சுயம் ஒன்றுதான் உன்னை உண்மையாகவும், நிலையாகவும் மகிழ்விக்கும்.

**கே:** *சுயத்தின் அன்பை வெளிப்படுத்துவதாக ஆசை இருப்பதில் அடிப்படையான தவறு எதுவும் இல்லை என்பதால் ஆசையை எவ்வாறு சமாளிப்பது?*

**ம:** உன் ஆழமான சுயத்தின் விருப்பங்களை எப்போதும் மனதில் வைத்துக் கொண்டு உன் வாழ்க்கையை புத்திசாலித்தனத்துடன் வாழ். உனக்கு உண்மையிலேயே என்ன தேவை? பூரணத்துவம் அல்ல. ஏனெனில் நீ முன்பே பூரணமானவன். நீ செய்வதெல்லாம் நீ என்னவோ அதைச் செயலில் காண்பிப்பதுதான். இதற்கு உன்னிடம் முன்பே ஒரு உடலும், ஒரு மனமும் இருக்கின்றன. அவற்றை கைக்கொண்டு உனக்குப் பணிபுரிய வை.

**கே:** *யார் இங்கு இயக்குபவர்? யார் உடல் - மனதைக் கைக்கொள்வது?*

**ம:** தூய்மையாக்கப்பட்ட மனம் சுயத்தின் நம்பிக்கையான ஊழியன். அது அகத்திலும், புறத்திலும் உள்ளவற்றைப் பொறுப்பில் எடுத்துக் கொண்டு அதன் நோக்கங்களுக்காக உழைக்கச் செய்கிறது.

**கே:** *அவற்றின் நோக்கங்கள் என்ன?*

**ம:** சுயம் பிரபஞ்ச மயமானது. அதன் குறிக்கோள்களும் பிரபஞ்ச மயமானவை. சுயத்தைப் பற்றித் தனிப்பட்டது எதுவுமே இல்லை. மிகவும் முறையான வாழ்க்கையை வாழ். ஆனால் அதையே குறிக்கோளாக மாற்றிவிடாதே. ஒரு மாபெரும் சாகசத்திற்கு அது ஆரம்பப் புள்ளியாக இருக்க வேண்டும்.

**கே:** நான் இந்தியாவிற்கு திரும்பத் திரும்ப வர வேண்டும் என எனக்கு அறிவுரை சொல்கிறீர்களா?

**ம:** நீ தீவிரமான ஆர்வத்தோடிருந்தால் அங்கும் இங்கும் போக வேண்டியதில்லை. நீ எங்கிருந்தாலும் நீதான். உன்னுடைய சொந்தச் சூழ்நிலையை நீயே உருவாக்கிக் கொள்வாய். பிரயாணமும், ஊர் சுற்றுவதும் உனக்கு மீட்சியைத் தராது. நீ உடல் அல்ல. உடலை ஊர் ஊராக இழுத்துக் கொண்டு செல்வதால் உனக்கு லாபம் எதுவும் இல்லை. விழித்திருத்தல், கனவு, தூக்கம் ஆகிய மூவுலகங்களிலும் சுற்றித் திரிய உன் மனதிற்குச் சுதந்திரம் உள்ளது. அதை முழுமையாக உபயோகப்படுத்திக் கொள்.

**கே:** நான் சுதந்திரமானவன் என்றால் நான் ஏன் ஒரு உடலில் இருக்க வேண்டும்?

**ம:** நீ உடலில் இல்லை. உடல்தான் உன்னில் இருக்கிறது. மனம் உன்னில் இருக்கிறது. அவை உனக்கு ஏற்படுகின்றன. அவற்றை நீ சுவாரசியமானவையாக நினைப்பதால் அவை அங்கு உள்ளன. உன் அடிப்படை இயல்பு அனுபவித்து மகிழ்வதற்கு அளவில்லாத வல்லமையைக் கொண்டுள்ளது. அதில் ஆர்வமும், பிரியமும் நிறைந்துள்ளது. அதன் விழிப்புணர்வின் மையத்திற்குள் வரும் அனைத்தின்மீதும் அது அதன் சைதன்யத்தை பொழிகிறது. எதுவுமே விலக்கல்ல. அதற்குத் தீயதோ, அழகற்றதோ தெரியாது. அது நம்பிக்கையுடன் இருக்கிறது, அது நம்புகிறது, அது நேசிக்கிறது. உங்களுடைய சொந்த உண்மையான சுயத்தை அறியாததால் நீங்கள் எவ்வளவு இழக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. நீ உடலோ மனமோ அல்ல. நீ எரிபொருளும் அல்ல, நெருப்பும் அல்ல. அவை அவற்றின் சொந்த விதிகளின் படி தோன்றி மறைகின்றன.

நீ என்னவோ அதை, உன் மெய்யான சுயத்தை, நேசிக்கிறாய். நீ எதைச் செய்தாலும் அதை உன் சொந்த சந்தோசத்திற்காகச் செய்கிறாய். அதைக் கண்டு பிடிப்பது, அதை அறிவது, அதை அன்புக்குரியதாகக் கருதுவது உன் அடிப்படை உந்துதல். காலா காலமாக நீ உன்னை நேசித்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் முட்டாள்தனமாக. உன் உடலையும் மனதையும் சுயத்திற்குப் பணிவிடை செய்யப் புத்திசாலித்தனமாக உபயோகி. அவ்வளவு தான். உன் சொந்த சுயத்திற்கு உண்மையாக இரு. உன் சுயத்தைத் தீர்க்கமாக நேசி. உன்னை நேசிப்பது எப்படி உண்மையில்லையோ அப்படி மற்றவர்களை நேசிப்பதாகப் பாசாங்கு செய்யாதே. அவர்களை உன்னோடு ஒன்றாக அறிந்தால் ஒழிய உன்னால் அவர்களை நேசிக்க முடியாது. நீ என்னவாக இல்லையோ அவ்வாறு இருப்பதாக நடிக்காதே. நீ என்னவோ அவ்வாறு இருக்க மறுக்காதே. மற்றவர்களின் மேல் நீ கொண்டுள்ள அன்பு சுய அறிவின் பலனே ஒழிய, அதன் காரணம் அல்ல. ஆத்ம ஞானம் அடையாவிட்டால் எந்தச் சிறப்பும் அசலானது அல்ல. சந்தேகமில்லாமல் இருப்பன எல்லாவற்றிலும் ஒரே உயிர்தான்

ஓடுகிறது என்றும், நீதான் அந்த உயிர் என்றும் அறியும்போது நீ எல்லாவற்றையும் இயல்பாகவும், தன்னிச்சையாகவும் நேசிப்பாய். உன்மேல் நீ கொண்டுள்ள அன்பின் ஆழத்தையும், முழுமையையும் நீ அறிந்து உணரும் போது ஒவ்வொரு வாழும் உயிரினமும், முழுப் பிரபஞ்சமும் உன் நேசத்தில் அடங்கியவை என்று நீ அறிவாய். ஆனால் எதையாவது உன்னிலிருந்து தனிப்பட்டதாக நீ நினைத்தால் உன்னால் அதை நேசிக்க முடியாது. ஏனெனில் உனக்கு அதன்மேல் பயம். அந்நியத் தன்மை அச்சத்தையும், அச்சம் அந்நியத்தன்மையை ஆழப்படுத்தவும் செய்கின்றன. அது ஒரு தொடர் வளையம். சுயம் அறிதல் மட்டுமே அதை உடைக்க முடியும். அதற்கு பின்வாங்காமல், உறுதியுடன் செல்.



# 47. மனதைக் கவனி

**கேட்பவர்:** அத்யாவசியத்திற்கான தேடுதலில், ஒருவர் சீக்கிரமே தன்னுடைய இயலாமையையும், ஒரு வழிகாட்டியோ, குருவோ தேவை என்பதையும் புரிந்துகொள்கிறார். அதற்கு ஒரு ஒழுங்கு தேவைப்படுகிறது. ஏனெனில் தன் குருவை தான் நம்பவேண்டும் என்றும், அவருடைய அறிவுரையையும், வழிகாட்டுதலையும் சரியாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது. இருப்பினும் சமூக அவசரங்களும், நிர்பந்தங்களும் மிக அதிகமாக இருப்பதாலும், சுய ஆசைகளும், அச்சங்களும் மிக வலிமையாக இருப்பதாலும் கீழ்படிதலுக்கு அவசியமான எளிமையான மனம் மற்றும் மனோ உறுதி இருப்பதில்லை. எவ்வாறு ஒரு குருவின் தேவைக்கும், அவருக்குச் சரியாகக் கீழ்ப் படிதலில் உள்ள கடினத்திற்கும் இடையே சமநிலைப் படுத்துவது?

**மஹராஜ்:** சமூகத்தின் நிர்பந்தத்தாலும், சூழ்நிலைகளாலும் செய்யப்படும் எதையும் பெரிதாகப் பொருட்படுத்த வேண்டிய தில்லை. ஏனெனில் அவை பெரும்பாலும் இயந்திர கதியில் செய்யப் படுபவை; தாக்கங்களின் எதிர் வினை. நடப்பவைகளிலிருந்து தன்னை முற்றிலுமாகத் தனிமைப்படுத்திக் கொள்ள, தன்னை விருப்பு வெறுப்பற்றும், விழிப்புடனும் கவனித்தால் போதுமானது. கண்மூடித்தனமாக, மனதைச் செலுத்தாமல் செய்யப்படுவது வேண்டுமானால் ஒருவருடைய கர்மாவில் சேரலாம். மற்றபடி அது ஒரு பொருட்டே அல்ல. குரு வேண்டுவதெல்லாம் ஒன்றே ஒன்று தான்: குறிக்கோளின் மேல் தெளிவுடனும், விடாப்பிடியுடனும் இருப்பதும், ஒருவர் தன் மேல் பொறுப்பாக, விழிப்புடன் இருப்பதும் மட்டுமே. உலகத்தின் மெய்த்தன்மையையே கேள்விக்கு உட்படுத்த வேண்டும். முடிவாகக் குரு என்பவர் யார்? அவர் உலகமோ அல்லது அதைப் பற்றிய எண்ணமோ இல்லாத நிலையை அறிந்த ஒருவர். அவர்தான் சத்குரு. அவரைத் தேடிக்

கண்டுபிடிப்பது என்றால் கற்பனையை மெய்யானது என்று எடுத்துக் கொள்ளாத நிலையை அடைவது. மெய்மை, உண்மை, மூலத்தில் இருப்பது எதுவோ அதை குரு தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறார் என்று தெளிவாக அறிந்துகொள். மெய் அறிந்தவர் என்னும் பதத்தின் சரியான அர்த்தம் அவர். மனம் மற்றும் அதன் ப்ரம்மைகளுக்கு உடன்படாதவர். உடன்படவும் மாட்டார். அவர் உன்னை மெய்யிற்கு எடுத்துச் செல்ல வருகிறார்; அவர் வேறு எதுவும் செய்ய எதிர்பார்க்காதே.

நீ மனதில் உருவகப்படுத்தியிருக்கும், தகவலும், குறிப்புகளும் தரும் குரு நிஜமான குரு அல்ல. தோற்றங்களின் பகட்டுகளுக்கு அப்பால் இருக்கும் மெய்யை அறிந்தவர்தான் நிஜமான குரு. அவருக்கு கீழ்படிதல் மற்றும் ஒழுக்கத்தைப் பற்றிய உன்னுடைய கேள்விகள் ஒரு பொருட்டே அல்ல. ஏனெனில் அவருடைய கண்களுக்கு உன்னைப்பற்றி நீ நபராக நினைத்துக் கொண்டிருப் பவர் இருப்பதில்லை. உன்னுடைய கேள்விகள் எல்லாம் இல்லாத ஒரு நபரைப் பற்றியதே. உனக்கு இருப்பதாகத் தெரிவதெல்லாம் அவருக்கு இருப்பதாகத் தெரிவதில்லை. நீ சரி என்று ஏற்றுக் கொண்டவைகளை அவர் முற்றிலும் மறுக்கிறார். அவர் எவ்வாறு உன்னைப் பார்க்கிறாரோ அவ்வாறு நீ உன்னைப் பார்க்க விரும்புகிறார். பிறகு உனக்கு கீழ்ப்படியவும், பின்பற்றவும் ஒரு குரு தேவை இல்லை. ஏனெனில் நீ உன் சுய மெய்மையை ஏற்றுக் கொள்வாய்; பின்பற்றுவாய். உன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாயோ, நீ என்ன செய்கிறாயோ அது நிகழ்கிறது; நீ பார்க்க மட்டுமே செய்கிறாய். எது நடந்தாலும், வந்து போனாலும், மாறக் கூடியதில் உள்ள மாறாததாக, அனுமானிக்கக் கூடியவை களில் உள்ள தானாகவே நிறைவான ஸ்வரூபம் நீ என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள். அறியப்படுவதிலிருந்து அறிபவரைப் பிரி. பொய்யான அடையாளங்களை விட்டுவிடு.

**கே:** நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. தயவுசெய்து ஒரு குரு எனக்குத் தேவையா என்று சொல்லுங்கள்.

**ம:** உனக்கு ஒரு குரு தேவை. ஆனால் அவரைக் கடைத்தெருவில் கண்டுபிடிக்க முடியாது. தங்களைக் குருவாக விளம்பரப்படுத்திக்

கொள்பவர்கள் தர்ம சாஸ்திரங்களைப் படிப்பதிலும், அவற்றை விளக்கிச் சொல்வதிலும் தங்கள் நேரத்தைச் செலவிடுகிறார்கள். அவர்கள் உண்மையான குருக்கள் அல்ல. உன்னுடைய தற்போதைய நிலையையும், உண்மையான இருத்தலையும் அறிந்தவர்தான் நிஜமான குரு.

**கே:** மெய்யை அறிய ஒருவர் வழியில் நிற்கும் அனைத்தையும் ஒதுக்கித் தள்ள வேண்டும். அதே சமயம், ஒரு சமுதாயத்தில் வாழும் தேவை ஒருவரைப் பல காரியங்களைச் செய்யவும், பொறுத்துக் கொள்ளவும் நிர்பந்திக்கிறது. மெய்யை அறிய ஒருவர் தன் தொழிலையும், தன்னுடைய சமுதாய நிலையையும் விட்டு விட வேண்டுமா?

**ம:** உன் வேலையைச் செய். ஒரு கண நேரம் உனக்கு கிடைத்தாலும் அமைதியாக இரு; உனக்குள் பார். எது முக்கியமென்றால் வாய்ப்பு கிடைக்கும்போது அதைத் தவற விடாமல் இருப்பது. நீ தீவிர அக்கறையுடனான ஆர்வத்துடன் இருந்தால் உன் ஓய்வு நேரத்தை அதற்கு முற்றிலும் உபயோகிப்பாய். அது போதும்.

**கே:** என்னுடைய அவசியமானதைத் தேடுவதிலும், அவசிய மற்றதை ஒதுக்குவதிலும் படைப்புத் திறனுக்குச் சாத்தியம் உள்ளதா? உதாரணத்திற்கு ஓவியம் வரைவதை நான் விரும்பு கிறேன். என் ஓய்வு நேரத்தை ஓவியம் வரைவதற்கு செலவிட்டால் அது உதவுமா?

**ம:** நீ எதைச் செய்ய வேண்டி இருந்தாலும் உன் மனதைக் கட்டுப் பாட்டில் வைத்திரு. கூடவே உன் மனம் முற்றிலும் அசைவற்று இருக்கும் போது நீ முழுமையான உள் அமைதியையும், மோனத்தையும் பெற்றிருக்க வேண்டும். நீ அதைத் தவற விட்டால் முழுவதையும் தவற விடுவாய். அல்லது தவற விடாவிட்டால் மனதின் நிசப்தம் எல்லாவற்றையும் கரைத்து, உள்ளே ஈர்த்துக் கொள்ளும்.

உன் பிரச்சனை நீ மெய்யை வேண்டுவதிலும், அதே சமயம் அதற்குப் பயப்படுவதிலும் இருக்கிறது. அதைப் பற்றித் தெரியாததால் நீ அதற்குப் பயப்படுகிறாய். பரிட்சயமானவையைப்

பற்றி அறிந்துள்ளதால் அவற்றுடன் இடரற்று இருக்கிறாய். அறியப் படாதது நிச்சயமற்றது. அதனால் அபாயகரமானது. ஆனால் நிஜமான மெய்யை அறிவது என்பது அதனுடன் ஐக்கியமாக இருப்பது. ஐக்கியத்தில் அச்சத்திற்கு இடம் இல்லை.

ஒரு குழந்தை தன் உடலை அறியும். ஆனால் உடல் சார்ந்த வித்தியாசங்களை அறியாது. அது வெறுமனே விழிப்புணர் வுடனும், ஆனந்தமாகவும் இருக்கும். அதுதான் அது பிறந்ததின் நோக்கம். இருத்தலால் ஏற்படும் ஆனந்தம்தான் சுய அன்பின் மிக எளிய வடிவம். அது பிறகு சுயத்தின் அன்பாக மாறுகிறது. உடலுக்கும், சுயத்திற்கும் இடையில் எதுவும் இல்லாத குழந்தையைப் போல் இரு. அப்போது மனோ வாழ்க்கையின் தொடர்ந்த குழப்பம் இருக்காது. ஆழ்ந்த நிசப்தத்தில் சுயம் உடலை உணர்த்துகிறது. அது எதுவும் இன்னும் எழுதப்படாத வெள்ளைத் தாள் போன்றது. அந்தக் குழந்தையைப் போல் இரு. இதுவாகவோ அல்லது அதுவாகவோ இருக்க முயற்சிக்காமல், இருத்தலில் ஆனந்தத்தை அனுபவி. அதற்கு அர்த்தம் நீ குழந்தையாக ஆக முடியாது. ஆனால், விழிப்புணர்வுப் புலத்தின் முழுவதும் விழிப்படைந்த சாட்சியாக நீ இருப்பாய்; உனக்கும், அந்தப் புலத்திற்கும் இடையில் நிற்க எந்த உணர்ச்சியோ, கருத்தோ இருக்கக் கூடாது.

**கே:** வெறும் இருத்தல் என்பதுடன் திருப்திப்படுவதென்பது மிகவும் சுயநலமாக நேரத்தைக் கடத்துவது போலத் தெரிகிறது.

**ம:** சுய நலத்துடன் இருப்பதில் இதுதான் எல்லாவற்றிலும் சிறந்த வழி. சுயத்தைத் தவிர அனைத்தையும் விட்டுவிட்டு எல்லா வகையிலும் கண்டிப்பாகச் சுயநலமாக இரு. நீ மற்ற அனைத்தையும் விட்டுவிட்டு, சுயத்தை மட்டும் நேசித்தால் சுயநலம் மற்றும் சுயநலமற்றதைக் கடந்து விடுவாய். அப்போது எல்லா வேறுபாடு களும் அவற்றின் அர்த்தத்தை இழந்துவிடும். ஒருவர் மீதுள்ள அன்பும், எல்லோர் மீதுள்ள அன்பும், தூய மற்றும் எளிய, குறிப்பிட்ட யார் மேலும் செலுத்தப் படாத, யாருக்கும் மறுக்கப் படாத அன்பில் கலக்கும். அந்த அன்பில் இரு. அதில் ஆழமாக, ஆழமாகச் செல். உன்னை ஆராய். அந்த ஆராய்ச்சியை விரும்பு.

அப்போது நீ உன் சொந்தப் பிரச்சனைகளை மட்டுமல்லாமல் மனித குலத்தின் பிரச்சனைகளையும் தீர்க்க முடியும். உனக்கு என்ன செய்வதென்பது தெரியும். மேலோட்டமான கேள்விகளைக் கேட்காதே. உன் இருத்தலின் அடித்தளத்தில் கவனம் செலுத்து. இதுதான் அடிப்படையான விஷயம்.

**கே:** என் சுயம் அறிதலை வேகப்படுத்த ஏதாவது ஒரு வழி எனக்கு உள்ளதா?

**ம:** கண்டிப்பாக இருக்கிறது.

**கே:** யார் அந்த வேகப்படுத்தலைச் செய்வது? எனக்கு நீங்கள் செய்ய முடியுமா?

**ம:** நீயோ நானோ செய்யமுடியாது. அது தானாக நிகழும்.

**கே:** நான் இங்கு வந்ததால் அது நிகழ்ந்தது. இந்த வேகமடைதல் புனிதமானவர்களுடன் இருப்பதாலா? கடந்த முறை நான் கிளம்பிச் சென்ற போது திரும்ப வருவேன் என்று நம்பினேன். வந்துள்ளேன். இப்போது இங்கிலாந்து செல்லச் சீக்கிரமாகக் கிளம்பவேண்டும் என்ற நிர்பந்தம் அதிகமாக உள்ளது. அதற்காக வருந்துகிறேன்.

**ம:** இங்கு கிடைத்துள்ள சகவாசம் ஒரு குழந்தையின் பிறப்பைப் போன்றது. அது முன்பே உள்ளது; ஆனால் அதன் இருத்தலைப் பற்றிய விழிப்புணர்வு இல்லாமல். அது பிறந்த போது ஒரு உலகம் அதனுள் எழுந்தது. அதனுடன் இருத்தலைப் பற்றிய விழிப்புணர்வும். இப்போது நீ விழிப்புணர்வில் மட்டுமே வளர வேண்டும். ஒரு குழந்தை, உலகத்தின் ராஜாவின் வாரிசு, வளரும் போது அதன் அரசைப் பொறுப்பேற்றுக் கொள்கிறது. அதன் குழந்தைப் பருவத்தில் மிகவும் நோய்வாய்ப் பட்டதாகவும், அதை மருத்துவர் குணமாக்கியதாகவும் கற்பனை செய். அப்படியானால் அந்த இளம் அரசன் தன்னுடைய ராஜாங்கத்தை அந்த மருத்துவருக்கு கொடுக்கக் கடமைப் பட்டவனா? குணப் படுத்தியது பல காரணி களில் ஒன்று. வேறு பலவும் உள்ளன. எல்லாமும் காரணிகளாக. ஆனால் முக்கியமான, மிகவும் அவசியமான காரணி அவன் ஒரு அரசனின் மகனாகப் பிறந்தது.

அதைப் போல குரு உதவலாம். ஆனால் முக்கியமாக உதவுவது என்னவென்றால் நிஜமான மெய்யை உள்ளுக்குள் வைத்திருப்பது. அது தன் வலிமையைக் காண்பிக்கும். நீ கவலைப்பட வேண்டியதில்லை. நீ இங்கு வந்தது கண்டிப்பாக உனக்கு உதவியது. ஆனால் அது மட்டுமே உனக்கு உதவவில்லை. மேலும் பல உதவின. உன் சொந்த இருத்தல்தான் முக்கியமானது. உன் மெய்யார்வமே அதை உறுதிப் படுத்தும்.

**கே:** என் வாழ்க்கைத் தொழிலை மேற்கொள்வது என் மெய்யார்வத்திற்கு இடையூறு செய்யுமா?

**ம:** நான் முன்பே சொல்லி உள்ளேன். நீ அமைதியான கணங் களைப் பெருமளவில் உனக்குள் அனுமதித்தால் உன் மதிப்பான வாழ்க்கைத் தொழிலைப் பாதுகாப்பாகச் செய்யலாம். இந்த உள் அமைதிக் கணங்கள் எல்லாத் தடைகளையும் கண்டிப்பாக முற்றிலும் எரித்துவிடும். அதன் வல்லமையைப் பற்றி சந்தேகப் படாதே. முயன்று பார்.

**கே:** ஆனால் நான் முயற்சித்து உள்ளேன்.

**ம:** ஒருபோதும் நம்பிக்கையுடனும், உறுதியாகவும் அல்ல. இல்லாவிட்டால் நீ இந்த மாதிரியான கேள்விகளைக் கேட்க மாட்டாய். உன்னைப் பற்றி நீ உறுதியாக இல்லாததால் கேட்கிறாய். உன்னைப் பற்றி ஏன் உறுதியாக நீ இல்லை என்றால் ஒருபோதும் உன்மேல் நீ கவனம் செலுத்தியது இல்லை. உன் அனுபவங்களின் மேல்தான் கவனத்தைச் செலுத்துகிறாய். எல்லா அனுபவங்களையும் கடந்து உன்மேல் ஆர்வத்துடன் இரு. உன்னுடன் இரு. உன்னை நேசி. சுய அறிவில்தான் முடிவான உறுதியைக் காணலாம். மெய்யார்வமே முக்கியம். உன்னை ஏமாற்றிக்கொள்ளாமல் உண்மையாக இரு. அப்போது எல்லோரும் உன்னுடன் உண்மையாக இருப்பார்கள்.

உன்னதமான குணங்களும், வல்லமைகளும் குழந்தைகளின் விளையாட்டுகளே. அவை உலகத்தில் உபயோகமானவை. ஆனால் அதற்கு வெளியே உன்னைக் கொண்டு போக மாட்டா. கடந்து போக உனக்கு உஷாரான சமநிலையும், அமைதியான கவனமும் தேவை.

**கே:** பிறகு ஒருவரின் பௌதீக உடலுக்கு என்ன ஏற்படுகிறது?

**ம:** நீ நலமுடன் இருக்கும் வரை வாழ்வாய்.

**கே:** இந்த உள் அசைவற்ற வாழ்க்கை ஒருவருடைய உடல் நலத்தைப் பாதிக்காதா?

**ம:** உன் உடல் என்பது உணவின் மாற்றம். உன் பௌதீக மற்றும் நுட்பமான உணவு எப்படியோ, அப்படி உன் உடல் நலம் இருக்கும்.

**கே:** புலன் இன்ப உணர்ச்சிக்கு என்ன நடக்கிறது? எப்படி அதைக் கட்டுப் படுத்துவது?

**ம:** அதைக் கடந்து போ. உன் கவனம் உடலின் மீது இருக்கும் வரை நீ இயற்கை அன்னையின் பிடியில் இருப்பாய். நீ உணவு மற்றும் புலன் இன்பம், அச்சம் மற்றும் இறப்பு ஆகியவற்றால் கட்டப் பட்டிருப்பாய். உன்னைச் சோதி. அப்போது எல்லாமும் ஆனந்த மயமாகிவிடும்.



# 48. பிரக்ஞை சுதந்திரமானது

**கேட்பவர்:** நான் ஸ்ரீ ரமணாஸ்ரமத்திலிருந்து தற்போது வந்துள்ளேன். ஏழு மாத காலத்தை அங்கு கழித்தேன்.

**மஹராஜ்:** ஆஸ்ரமத்தில் என்ன பயிற்சி மேற்கொண்டாய்?

**கே:** என்னால் முடிந்தவரையில் 'நான் யார்' என்பதின் மீது கவனம் செலுத்தினேன்.

**ம:** எந்த வகையில் அதைச் செய்தாய்? சப்தமாக வாய்விட்டா?

**கே:** பகற்பொழுதில் எனக்கு நேரம் கிடைத்தபோதெல்லாம். சிலசமயம் 'நான் யார்', 'நான் இருக்கிறேன். ஆனால் நான் யார்' என்று முனகுவேன். அல்லது அதை மனதுக்குள் செய்வேன்.

**ம:** உனக்கு என்ன கிடைத்தது?

**கே:**எப்போதாவது எனக்கு இனிமையான உணர்வு வரும் அல்லது மிக மகிழ்ச்சியான மனோ நிலைக்குள் செல்வேன். மொத்தத்தில் நான் அனுபவங்களுக்காகப் பிரயத்தனப்படாமல் அமைதியாகவும், பெற்றுக்கொள்ளவும் முயற்சித்தேன்.

**ம:** நீ சரியான மனோ நிலையில் இருந்தபோது என்ன அனுபவத்தை நிஜமாகப் பெற்றாய்?

**கே:** உள் அசைவற்ற, அமைதியும், நிசப்தமும் கூடிய உணர்வை.

**ம:** நீ உணர்வற்றுப்போவதைக் கவனித்தாயா?

**கே:** ஆமாம். எப்போதாவது, ஒரு மிகச் சிறிய நேரத்திற்கு. மற்றபடி நான் உள்ளேயும், வெளியேயும் அமைதியாக இருந்தேன்.

**ம:** அது எந்தமாதிரியான அமைதி? ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதைப் போன்று அதே சமயத்தில் விழிப்புணர்வுடன், எல்லா நேரத்திலும் விழித்தவாறே தூங்குவதைப் போன்றா?

**கே:** ஆமாம், உஷாராகத் தூங்குவது (ஜாக்ரித் - சுசுப்தி)

**ம:** முக்கியமானது காமம், குரோதம் போன்ற மனதின் ஆறு எதிரிகளான எதிர்மறை எண்ணங்கள் இல்லாமல் இருப்பது. மனதில் அவை இல்லாமல் இருந்தால் மற்றவை சுலபமாக வரும். எப்படி சோப்புத் தண்ணீரில் ஊறவைக்கப் பட்ட துணியிலிருந்து அழுக்கு போகுமோ அப்படி சாத்வீக உணர்வு ஓட்டத்தில் மனம் தூய்மை ஆக்கப்படும்.

நீ அமைதியாக அமர்ந்து உன்னைக் கவனித்தால் எல்லா வகையானவையும் மேற்பரப்பிற்கு வரும். அவற்றை எதுவும் செய்யாதே. அவற்றிற்கு எதிர்வினை புரியாதே. அவை வந்தவாறே தானாகவே போய்விடும். எது முக்கியம் என்றால் மனம் விழிப்புடன் இருப்பது. தன்னைப் பற்றிய, குறிப்பாகத் தன் மனதைப் பற்றிய முழுப் பிரக்ஞையுடன் இருப்பது.

**கே:** 'தன்னைப் பற்றி' என்றால் ஒருவருடைய 'தினசரி நான்' என்று சொல்வதைப் பற்றியா?

**ம:** ஆமாம். வியக்தி ஒரு பொருட்டாகக் கவனிக்கச் சாத்தியமுள்ள நபர். கவனிப்பவர் கவனிப்பிற்கு அப்பாற்பட்டவர். கவனிக்க முடிவது எதுவோ அது மெய்யான நாம் அல்ல.

**கே:** முடிவில்லாத பின்னடைவுடன் நான் கவனிப்பவரை எப்போதும் கவனிக்க முடியும்.

**ம:** உன்னால் கவனிப்பதைக் கவனிக்க முடியும். ஆனால் கவனிப்பவரை அல்ல. நேரடியான உள்முகப் பார்வையினால் மட்டுமே நீ இறுதியான கவனிப்பவர் என்று உனக்குத் தெரியும். கவனிப்பதை அடிப்படையாகக் கொண்ட ஒரு தர்க்க செய்முறையினால் அல்ல. நீ எப்படி இருக்கிறாயோ அப்படித்தான் இருக்கிறாய். நீ என்னவாக இல்லையோ அதை நீ அறிவாய். இருப்பது (BEING) என்று ஆத்மா அறியப் படுகிறது. இல்லாதது என்று அனாத்மா அறியப் படுகிறது. ஆனால் நிஜத்தில் எல்லாமும் மனதில்தான் உள்ளன. கவனிக்கப்படுவது, கவனிப்பது, கவனிப்பவர் ஆகிய எல்லாமும் மன உருவகங்கள். ஆத்மா மட்டுமே 'இருக்கிறது'.

**கே:** மனம் ஏன் இவ்வகையான பிரிவுகளை ஏற்படுத்துகிறது?

**ம:** பிரிப்பதும், குறிப்பிட்டுச் சுட்டுவதும் மனதின் அடிப்படை இயல்பு. பிரிப்பதில் தவறு எதுவும் இல்லை. ஆனால் பிரிவு உண்மைக்கு எதிராகப் போகிறது. பொருட்களும், மக்களும் வித்தியாசமானவர்கள்; ஆனால் தனித்தனியாகப் பிரிந்து இல்லை. இயற்கை என்பது ஒன்றே. மெய் என்பது ஒன்றே. அவைகள் எதிர் எதிரில் உள்ளன. ஆனால் எதிரானவை அல்ல.

**கே:** இயல்பாக நான் மிகவும் துருதுருப்பானவன். இங்கு நான் செயல் படாமல் இருக்க அறிவுறுத்தப்படுகிறேன். நான் எவ்வளவுக்கெவ்வளவு செயல்படாமல் இருக்க முயற்சிக்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு ஏதாவது செய்ய வேண்டும் என்னும் உந்துதல் ஏற்படுகிறது. இதனால் நான் புறத்தில் செயல் துடிப்புடன் இருப்பதோடு மட்டுமல்லாமல், உள்ளுக்குள் என் இயல்பாக இல்லாதவாறு இருக்கக் கஷ்டப்படுகிறேன். வேலை செய்வதற்கான ஏக்கத்திலிருந்து விடுபட ஏதாவது வழி உள்ளதா?

**ம:** வேலைக்கும், போராடுவதற்கும் ஒரு வித்தியாசம் உள்ளது. முழு இயற்கையும் வேலை செய்கிறது. வேலை செய்வது இயற்கை. இயற்கையே வேலை. மறு பக்கத்தில் பார்த்தால் போராடுவது என்பது ஆசையையும், அச்சத்தையும், உடமையாக்கிக் கொள்ளவும், அனுபவிக்கவும் உள்ள ஏக்கத்தையும், துக்கம் மற்றும் இல்லாமல் போவதான அச்சத்தையும் அடிப்படையாகக் கொண்டது. வேலை என்பது முழுவதற்காக முழுவதால் செய்யப் படுவது. போராடுவது என்பது ஒன்றால் ஒன்றிற்காகச் செய்யப் படுவது.

**கே:** போராடுவதிலிருந்து விடுபட ஏதாவது வழிவகை உள்ளதா?

**ம:** விழிப்புடன் கவனி. அப்போது அது இல்லாமல் போய் விடும். எல்லாச் சந்தர்ப்பங்களையும் நீ கட்டுண்டு இருக்கிறாய் என்றும், எது உனக்கு நடந்தாலும் அது உன் உடல் ரீதியான இருத்தலினால் என்றும் ஞாபகப்படுத்த உபயோகி. ஆசை, அச்சம், தொந்தரவு, மகிழ்ச்சி - இவை எல்லாம் தோன்றுவதற்கு நீ இல்லாவிட்டால் தோன்ற முடியாது. இருப்பினும், எது நடந்தாலும் அது ஒரு

அனுமானிக்கும் மையமாக உன் இருத்தலைச் சுட்டுகிறது. சுட்டுபவரை ஒதுக்கித் தள். அவர் எதைச் சுட்டுகின்றாறோ அதைப் பற்றிய பிரக்ஞையுடன் இரு. அது மிகவும் எளிது. ஆனால் அதைச் செய்ய வேண்டும். எது முக்கியமென்றால் விடாப் பிடியாக நீ உனக்குள் திரும்புவதுதான்.

**கே:** எனக்குள் ஆழ்ந்திருக்கும் வினோதமான நிலைகளை நான் அடைகிறேன். ஆனால் எதிர்பாராமலும், கண நேரத்திற்கும்தான். அந்த மாதிரியான நிலைகளை என் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடிவதில்லை.

**ம:** உடல் என்பது பொருளால் ஆனது. மாறுவதற்கு அதற்கு அவகாசம் தேவை. மனம் இருக்கிறது. ஆனால் ஒரு மனோ வழக்கத்தொகுதியாக, சிந்திக்கும் மற்றும் உணரும் வழிகளின் தொகுதியாக. மாற்ற அவற்றை மேற்பரப்பிற்குக் கொண்டுவந்து ஆராய வேண்டும். இதற்கும் கால அவகாசம் தேவை. வெறுமனே தீர்மானித்து, விடாப் பிடியான முயற்சியை செய். மீதியை அதுவே பார்த்துக் கொள்ளும்.

**கே:** நான் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிய தெளிவான கருத்து கிடைத்துவிட்டதாகத் தோன்றுகிறது. ஆனால் நான் மனச் சோர்வும், வெறுப்பும் அடைந்து, மற்றவர்களோடு நேரத்தைச் செலவிடுகிறேன். அதனால் தனிமைக்கும், தியானத்திற்கும் தரவேண்டிய நேரத்தை வீணடிக்கிறேன்.

**ம:** நீ என்ன செய்ய விரும்புகிறாயோ அதைச் செய். உன்னைச் சிரமப்படுத்திக் கொள்ளாதே. வன்முறை உன்னை மாற முடியாத வனாகவும், விறைப்பாகவும் ஆக்கும். தடை ஏற்படுத்துபவையாக நீ நினைப்பவைகளுடன் போரிடாதே. வெறுமனே அவற்றில் ஆர்வத்துடன் இரு, அவற்றைக் கண்காணி, கவனி, விசாரி. நல்லதோ, கெட்டதோ எது வேண்டுமானாலும் நடக்க விடு. ஆனால் உன்னை நடப்பவற்றில் மூழ்க விடாதே.

**கே:** எல்லா நேரமும் ஒருவரைக் கண்காணிப்பவர் என்று ஞாபகப் படுத்திக் கொண்டே இருப்பதில் என்ன பயன்?

**ம:** அசைகின்ற மனதிற்கு அப்பால் மாறாத பிரக்ஞையின் பின் புலம் உள்ளதென்று மனம் கற்றுக் கொள்ள வேண்டும். மனம் உண்மையான சுயத்தை அறியவும், மதிக்கவும் பழக்கப்பட வேண்டும். சுயத்தை மறைப்பதையும், மறப்பதையும் மனம் விட்டு விட வேண்டும். பகலில் எப்படி நிலா சூரியனை மறைக்காதோ அப்படி மனம் இருக்க வேண்டும். கவனிக்கக் கூடிய, அனுபவப் படக்கூடிய எதுவுமே நீ அல்ல என்றும், உன்னைக் கட்டுப்படுத்தாது என்றும் அறி. நீ என்னவாக இல்லையோ அதைப் பொருட் படுத்தாதே.

**கே:** நீங்கள் எனக்குச் சொல்வதைச் செய்ய நான் இடைவிடாமல் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.

**ம:** விழிப்புணர்வுடன் இருப்பதற்கு விழித்திருக்க வேண்டும். விழிப்புணர்வற்றிருப்பது என்பது தூங்குவது. எவ்வாறானாலும் நீ பிரக்ஞை உடையவன். அவ்வாறிருக்க நீ முயற்சிக்க வேண்டிய தில்லை. என்ன உனக்குத் தேவை என்றால் நீ பிரக்ஞையுடன் இருக்கின்றாய் என்னும் விழிப்புணர்வுதான். வெளிப்படை யாகவும், விழிப்போடும் விழிப்புணர்வோடு இரு. விழிப்புணர்வின் புலத்தை அகலமும், ஆழமும் படுத்து. நீ எப்போதும் மனதைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருப்பாய். ஆனால் விழிப்புணர்வுடன் நீ இருப்பதைப் பற்றி அறிய மாட்டாய்.

**கே:** நான் புரிந்துகொண்ட வரை நீங்கள் 'மனம்', 'விழிப்புணர்வு', 'பிரக்ஞை' ஆகிய வார்த்தைகளுக்குத் தனித்தனியான அர்த்தங் களைக் கொடுக்கிறீர்கள்.

**ம:** இவ்வாறு பார்: நீ பார்க்காத போது கூட மனம் இடை விடாமல் எண்ணங்களை ஏற்படுத்துகிறது. உன் மனதில் என்ன நடக்கிறது என்று நீ அறிந்தால் அது விழிப்புணர்வு. இது உன் விழித்த நிலை - ஒரு உணர்விலிருந்து இன்னொரு உணர்விற்கு, ஒரு அனுபவத்திலிருந்து இன்னொன்றிற்கு, ஒரு கற்பனையிலிருந்து இன்னொரு கற்பனைக்கு, முடிவற்ற தொடர்ச்சியாக உன் விழிப்புணர்வு மாறுகிறது. அதற்குப் பிறகு, பிரக்ஞை என்பது முழு

விழிப்புணர்விற்குள்ளும் நேரடியான உட்பார்வை, மனதின் முழுமை. உடல் என்னும் அடித்தளத்தின் மேல் இடையறாது பாய்ந்து கொண்டிருக்கும் நதி போன்றது மனம். ஒரு சில குறிப்பிட்ட அலையுடன் உன்னை ஒரு கணத்திற்கு அடையாளப் படுத்திக் கொண்டு அதை 'என் எண்ணம்' என்று நீ சொல்கிறாய். நீ விழிப்புணர்வுடன் இருப்பதெல்லாம் உன் மனதைப் பற்றித்தான். பிரக்ஞை என்பது முழுமையாக விழிப்புணர்வைப்பற்றி விழிப்புணர்வுடன் இருப்பது.

**கே:** ஒவ்வொருவரும் விழிப்புணர்வு உடையவர்கள். ஆனால் ஒவ்வொருவரும் பிரக்ஞை உடையவர்கள் அல்ல.

**ம:** 'ஒவ்வொருவரும் விழிப்புணர்வு உடையவர்கள்' என்று சொல்லாதே. 'விழிப்புணர்வு இருக்கிறது, அதில் எல்லாமும் தோன்றுகின்றன, மறைகின்றன' என்று சொல். நம் மனங்கள் விழிப்புணர்வு என்னும் கடலின் மேல் உள்ள அலைகள் மட்டுமே. அலைகளைப் போல அவை வந்து போகின்றன. கடலைப் போல அவை அளவற்றவை மற்றும் சாசுவதமானவை. நீ இருத்தல் என்னும் கடல் மற்றும் எல்லா இருத்தலுக்குமான மையம் என்று அறி. இவை எல்லாம் உருவகங்கள் மட்டுமே. மெய் விவரிப்பிற்கு அப்பாற்பட்டது. அதுவாக இருப்பதால் மட்டுமே அதை நீ அறியலாம்.

**கே:** அதற்கான தேடலுக்கான சிரமம் அந்த அளவு மதிப்பானதா?

**ம:** அதைத் தவிர்த்து எல்லாமும் தொந்தரவு. நீ புத்தியுடனும், உருவாக்கும் வகையிலும், மகிழ்ச்சியாகவும் வாழ மற்றும் அளவில்லாத ஆத்ம ஐஸ்வர்யத்தில் பங்கு கொள்ள விரும்பினால் உன் சுயம் என்ன என்பதைத் தேடு.

மனம் உடலில் மையம் கொண்டும், விழிப்புணர்வு மனதில் மையம் கொண்டும் இருக்கின்றன. ஆனால் பிரக்ஞை சுதந்திர மானது. உடல் அதன் உந்துதல்களைக் கொண்டுள்ளது. மனம் அதன் சுக, துக்கங்களையும் கொண்டுள்ளது. பிரக்ஞை ஈடுபடாதது மற்றும் அசைக்கப்பட முடியாதது. அது ஆசையோ, அச்சமோ இல்லாமல்

தெளிவானது, அமைதியானது, சாந்தமானது, உஷாரானது மற்றும் பயமில்லாதது. அதை உன் தூய இருத்தலாகத் தியானி. உன் தினசரி வாழ்க்கையில் அதாக இருக்க முயற்சி செய். அப்போது அதன் பூர்ணமான ஞானம் கிடைக்கும்.

மனம் நடப்பவைகளில் ஆர்வமுடையது. ஆனால் பிரக்ஞையோ மனதில் ஆர்வமுடையது. குழந்தை பொம்மையுடன் விளை யாடிக் கொண்டிருக்கும். ஆனால் தாயோ குழந்தையைத்தான் கவனித்துக் கொண்டிருப்பார். விளையாட்டை அல்ல.

சோர்வில்லாமல் பார்த்துக் கொண்டிருப்பதால் நான் ஒன்றுமில்லாத வெறுமையாகி விடுகிறேன். அந்த வெறுமையில் மனதைத் தவிர எல்லாமும் எனக்குத் திரும்பி வந்து விடுகின்றன. மனதை நிரந்தரமாக இழந்ததை நான் காண்கிறேன்.

**கே:** இப்போது எங்களிடம் பேசிக்கொண்டிருக்கும் போது நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கிறீர்களா?

**ம:** நான் விழிப்புணர்வுடனோ, விழிப்புணர்வற்றோ இல்லை. நான் மனதிற்கும், அதன் பல நிலைகளுக்கும், தன்மைகளுக்கும் அப்பாற்பட்டவன். வேறுபாடுகள் மனதால் உருவாக்கப் பட்டவை. மனதிற்கு மட்டுமே பொருந்துபவை. இருக்கின்ற அனைத்தையும் பற்றிய உடைபடாத பிரக்ஞையாகிய தூய விழிப்புணர்வே நான். உன்னுடையதை விட அதிகமான மெய்யான நிலையில் நான் இருக்கிறேன். ஏனெனில் ஒரு நபரை உருவாக்குகின்ற வித்தியாசங்களாலும், பிரிவினைகளாலும் நான் கவனச் சிதைவடைவதில்லை. உடல் இருக்கும் வரை மற்றவர் களைப் போல அதற்கும் தேவைகள் இருக்கும். ஆனால் என் மன இயக்கம் ஒரு முடிவிற்கு வந்து விட்டது.

**கே:** நீங்கள் சிந்திக்கின்ற ஒருவரைப் போல் நடந்து கொள்கிறீர்கள்.

**ம:** அதனாலென்ன? ஆனால் என் ஜீரணத்தைப் போல் என் சிந்தனையும் தன்னுணர்வற்றது, பயனுள்ளது.

**கே:** உங்கள் சிந்தனை தன்னுணர்வற்றிருந்தால் அது சரியான தென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

**ம:** அதைச் சிதைக்க ஆசையோ, அச்சமோ இல்லை. எது அதைத் தவறாக்க முடியும்? ஒருமுறை நான் என் சுயத்தையும், எதற்காக நான் இருக்கிறேன் என்பதையும் தெரிந்துகொண்டுவிட்டால் எல்லா நேரமும் என்னைச் சோதனை செய்துகொள்ள வேண்டிய தில்லை. உன் கடிகாரம் சரியான நேரத்தைக் காண்பிக்கிறது என்று நீ அறிந்தால் ஒவ்வொரு முறை அதை நீ பார்க்கும் போதும் சந்தேகப் பட வேண்டியதில்லை.

**கே:** இந்தக் கணத்தில் யார் பேசுகிறார்கள் - உங்கள் மனம் அல்ல என்றால்?

**ம:** எது இந்தக் கேள்வியைக் கேட்கிறதோ அது பதிலளிக்கிறது.

**கே:** யார் அது?

**ம:** யார் அல்ல, என்ன. நான் உனக்கு ஒரு நபராகத் தோன்றி னாலும், உன் வார்த்தை குறிக்கின்ற அர்த்தத்தின் படியான நபர் அல்ல நான். எல்லாமும் நிகழ்கின்ற அளவில்லாத விழிப்புணர்வுக் கடல் நான். நான் எல்லா இருப்பவைகளுக்கும், அனுமானிக்கக் கூடியவைகளுக்கும் அப்பாற்பட்டவன்; இருத்தலின் தூய பேரின்பம். நான் எதிலிருந்தும் தனித்து இருப்பதாக உணர்வ தில்லை. ஆகையால் நான் எல்லாமுமே. எதுவுமே நான் அல்ல. ஆகையால் நான் ஒன்றுமே இல்லை.

எந்தச் சக்தி தீயை எரிய வைக்கிறதோ, தண்ணீரை ஓட வைக் கிறதோ, விதைகளை முளைக்க வைக்கிறதோ, மரங்களை வளர வைக்கிறதோ அதே சக்தி உன் கேள்விகளுக்கு என்னைப் பதிலளிக்க வைக்கிறது. என் மொழியும், நடையும் தனிப்பட்டதாகத் தோன்றி னாலும் அதில் தனிப்பட்டது எதுவும் இல்லை. ஒரு நபர் என்பவர் ஒரு குறிப்பிட்ட ஆசைகள், எண்ணங்கள், அவற்றின் விளைவான செயல்களின் படிவம். எனக்கு அந்த மாதிரியான படிவம் கிடையாது. நான் ஆசைப்படுவதோ, அச்சப்படுவதோ எதுவும் கிடையாது. எவ்வாறு ஒரு படிவம் இருக்க முடியும்?

**கே:** கண்டிப்பாக நீங்கள் இறப்பீர்கள்.

**ம:** உயிர் விடுபடும்; உடல் இறக்கும். ஆனால் அது என்னைச் சிறிது கூட பாதிக்காது. காரணத்தால் அல்லாமல், ஏதொன்றின் காரணமாகவும் இல்லாமல், ஆனாலும் இருப்பவைகளை உருவாக்கி, வடிவமைப்பவனாக, காலத்தையும், வெளியையும் கடந்து நான் இருக்கிறேன்.

**கே:** இப்போதிருக்கும் நிலையை எப்படி அடைந்தீர்கள்?

**ம:** 'நான்' என்னும் உணர்வைச் சிக்கென பிடித்து, ஒரு கணம் கூட அதிலிருந்து திசை மாறாமல் இருக்குமாறு என் குரு எனக்குச் சொன்னார். அவருடைய அறிவுரையை அதிகபட்ச பிரயத் தனத்துடன் தொடர்ந்தேன். குறைந்த காலத்திலேயே அவருடைய போதனையின் உண்மையை எனக்குள் அறிந்தேன். நான் செய்த தெல்லாம் அவருடைய போதனையை, அவருடைய முகத்தை, அவருடைய வார்த்தைகளை இடையறாது ஞாபகத்தில் வைத்திருந்ததுதான். இது மனதை ஒரு முடிவிற்குக் கொண்டு வந்தது. மனதின் மௌன நிலையில் நான் என் முக்த ஸ்வரூபத்தைக் கண்டேன்.

**கே:** உங்களுடைய ஸ்வரூப ஞானம் எப்படிக் கிடைத்தது - திடீரென்றா அல்லது படிப்படியாகவா?

**ம:** இரண்டுவிதமாகவும் அல்ல. காலமற்று ஒருவர் எப்படி இருக்கிறாறோ அப்படித்தான் இருப்பார். தூய மனம் ஆசைகளி லிருந்தும், அச்சங்களிலிருந்தும் எப்போது விலகுகிறதோ அப்போது ஸ்வரூப ஞானத்தை அறிகிறது.

**கே:** ஸ்வரூப ஞானத்தை அடைவதற்கான ஆசையிலிருந்துமா?

**ம:** எப்படி அச்சப்படுவதற்கான அச்சம் ஒரு தனித்துவமான அச்சமோ அப்படி, எல்லா ஆசைகளுக்கும் ஒரு முடிவு வேண்டும் என்று ஆசைப் படுவது ஒரு மிகவும் தனித்துவமான ஆசை. ஒன்று அபகரிப்பதை நிறுத்துகிறது. மற்றொன்று விலகி ஓடுவதிலிருந்து நிறுத்துகிறது. நீ ஒரே வார்த்தைகளை உபயோகிக்கலாம். ஆனால் நிலைகள் ஒரே மாதிரியான மாதிரியானவை அல்ல. மெய்யறி

தலைத் தேடும் மனிதன் ஆசைகளுக்குப் பழக்க அடிமையானவன் அல்ல. யார் ஆசைகளுக்கு எதிராகச் சென்று அதைப் பின் தொடராமல் இருக்கிறாரோ அவர்தான் சாதகர். விடுதலைக்கான சாதாரண ஏக்கம் ஒரு ஆரம்பம் மட்டுமே. சரியான வழியைக் கண்டு பிடிப்பதும், அவற்றை உபயோகிப்பதும்தான் அடுத்த கட்டம். சாதகருக்கு ஒரே ஒரு இலக்குதான் உண்டு - தன்னுடைய சத்ய ஸ்வரூபத்தைக் கண்டு பிடிப்பது. எல்லா ஆசைகளிலும் மிகவும் பேராவலானது அதுதான். ஏனெனில் எதுவுமே, யாருமே அதைத் திருப்திப்படுத்த முடியாது. தேடுபவரும், தேடப்படுவதும் ஒன்றே. தேடல் மட்டுமே முக்கியம்.

**கே:** தேடல் ஒரு முடிவிற்கு வந்துவிடும். தேடுபவர் மிஞ்சுவார்.

**ம:** இல்லை. தேடுபவர் கரைவார். தேடல் மிஞ்சும். தேடல் என்பது முடிவான மற்றும் காலமற்ற மெய்த்தன்மையானது.

**கே:** தேடுதல் என்பது பற்றாக்குறையை, தேவையை, முழுமையடையாமையை, பூரணமில்லாமையைக் குறிப்பது.

**ம:** இல்லை. அது முழுமையற்றதையும், பூரணமில்லாமையையும் மறுப்பதையும், நிராகரிப்பதையும் குறிக்கிறது. மெய்யிற்கான தேடுதலே மெய்யின் அசைவுதான். ஒரு வகையில் எல்லாத் தேடுதல்களுமே மெய்யான பேரானந்தத்திற்கு அல்லது மெய்யினுடைய பேரானந்தத்திற்குத்தான். ஆனால் இங்கு தேடுதல் என்று நாம் குறிப்பது விழிப்புணர்வுடன் இருப்பதின் அடிப்படை யாகவும், மனதிற்கு அப்பால் இருக்கிற ஒளியாகவும் தன்னைத் தேடுவது. இந்தத் தேடல் ஒருபோதும் முடியாது. இருப்பினும் நிஜமான முன்னேற்றம் ஏற்பட, நன்றாக இருப்பதன்மேல் கொண்டுள்ள மோசமான மிகுவிருப்பம் முடிய வேண்டும்.

மெய், அல்லது கடவுள், அல்லது குரு மற்றும் சுயம் ஆகிய எல்லாவற்றிற்கான தேடலும் ஒன்றுதான் என்று ஒருவர் அறிய வேண்டும்; ஒன்றைக் கண்டால் எல்லாமும் அறியப் படும். 'நான்' மற்றும் 'கடவுள்' வேறுபடுத்தப்பட முடியாதபடி உன் மனதில் ஆகும் போது ஏதோ ஒன்று நடக்கும். அப்போது சிறிதுகூட சந்தேகத்திற்கு இடமில்லாமல் நீ இருப்பதால் கடவுள் இருக்கிறார்,

கடவுள் இருப்பதால் நீ இருக்கிறாய் என்று நீ அறிவாய். இரண்டும் ஒன்றே.

**கே:** எல்லாமும் முன்பே தீர்மானிக்கப்பட்டிருப்பதால், நம் மெய்யறிதலும் முன்பே தீர்மானிக்கப்பட்டுள்ளதா? அல்லது முடிவாக அதில் நாம் சுதந்திரமானவர்களா?

**ம:** விதி பெயரையும், உருவத்தையும் மட்டும் குறிக்கும். நீ உடலோ, மனமோ அல்ல என்பதால் உன்னை விதி கட்டுப் படுத்தாது. நீ முற்றிலுமாக சுதந்திரமானவன். ஒரு கோப்பை அதன் உருவத்தாலும், அது செய்யப்பட்ட பொருளாலும், உபயோகத் தாலும், இன்ன பிறவற்றாலும் கட்டுப் படுத்தப் பட்டிருக்கிறது. ஆனால் அதனுள் இருக்கும் வெளி (வெற்றிடம்) சுதந்திரமானது. அது கோப்பைக்குள் இருப்பதாகத் தோன்றுவது கோப்பையோடு சேர்த்துப் பார்த்தால் தான். இல்லாவிட்டால் அது வெறும் வெளி (வெற்றிடம்)தான். ஒரு உடல் இருக்கும் வரை நீ உடல் உருக்கொண்டவனாகத் தோன்றுவாய். உடலில்லாமல் நீ இல்லாதவனாக மாட்டாய் - நீ மட்டும் இருப்பாய்.

விதிகூட இருக்கிறது. ஆனால் ஒரு கற்பனையாக. வார்த்தை களைப் பலவழிகளில் இணைத்துப் போடலாம்! விவரிப்புகள் வித்தியாசப் படலாம். ஆனால் அவை நிஜமானதில் ஏதாவது மாற்றத்தை ஏற்படுத்த முடியுமா? இருப்பவற்றை விளக்கப் பல்வேறு கருத்துக்கள் உள்ளன - அவை எல்லாமே உண்மைபோல் தோன்றுபவை. அவற்றில் ஒன்று கூட உண்மையில்லை. நீ ஒரு வண்டியை ஓட்டும் போது இயக்கவியல் மற்றும் வேதியல் கோட்பாடுகளுக்கு உட்பட்டவன்: வண்டியை விட்டு இறங்கினால் நீ உடற்கூற்று இயல் (PHISIOLOGY) மற்றும் உயிர் வேதியல் (BIO CHEMISTRY) கோட்பாடுகளுக்கு உட்பட்டவன்.

**கே:** தியானம் என்பது என்ன? அதன் பயன்கள் என்ன?

**ம:** நீ தொடங்குபவராக இருக்கும் வரை சில தியானங்கள் அல்லது பிரார்த்தனைகள் உனக்கு நல்லது. ஆனால் மெய்யைத் தேடும் ஒருவருக்கு ஒரே ஒரு தியானம்தான் உள்ளது - எண்ணங் களுக்கு இடம் கொடுக்காமல் கடுமையாக மறுப்பது. எண்ணங் களிலிருந்து சுதந்திரமாக இருப்பதுவே தியானம்.

**கே:** *அதை எப்படிச் செய்வது?*

**ம:** எண்ணங்களைக் கடந்துபோகச் செய்து, அவற்றைக் கவனிப்பதில் ஆரம்பிக்கலாம். கவனிப்பதே மனதை மெதுவாக இயங்க வைத்து, நின்று போகச் செய்யும். ஒருமுறை மனம் அமைதி ஆனால் அதை அமைதியாகவே இருக்க விடு. அமைதியால் சோம்பலடைந்து விடாதே. அதற்குள் மூழ்கி இரு, அதற்குள் ஆழமாகச் செல்.

**கே:** *மற்ற எண்ணங்களை அப்புறப்படுத்த ஒரே எண்ணத்தைப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் எப்படி எல்லா எண்ணங்களையும் அப்புறப்படுத்துவது? அந்த எண்ணமும் ஒரு எண்ணம்தான்.*

**ம:** புதிதாகப் பரீட்சித்துப் பார். பழைய அனுபவங்களின்படி செல்லாதே. உன் எண்ணங்களைக் கவனி. எண்ணங்களைக் கவனிக்கும் சுயத்தைக் கவனி. எல்லா எண்ணங்களிலிருந்தும் சுதந்திரமாக இருக்கும் நிலை திடீரென்று நிகழும். அதன் பேரானந்தத்தால் அதை நீ அடையாளம் காண்பாய்.

**கே:** *உலகத்தின் நிலையைப் பற்றி உங்களுக்கு அக்கறை இல்லையா? கிழக்கு பாகிஸ்தானில் ( 1971, தற்போது பங்களா தேஷ்) உள்ள கொடுமைகளைப் பாருங்கள். அவை உங்களை உலுக்கவில்லையா?*

**ம:** நானும் செய்தித்தாள்களைப் படிக்கிறேன். என்ன நடக்கிறது என்று எனக்கும் தெரியும். ஆனால் என் எதிர் வினை உன்னுடையதைப் போன்றது அல்ல. நீ குணமாக்குவதற்காகப் பார்க்கிறாய். நான் வராமல் தடுப்பதற்காகப் பார்க்கிறேன். காரணங்கள் இருக்கும் வரை விளைவுகளும் இருக்கும். மக்கள் பிரிப்பதிலும், தனிமைப் படுத்துவதிலும் ஆர்வமாக இருக்கும் வரையிலும், சுயநலமாகவும், தாக்கும் விதமாகவும் இருக்கும் வரையிலும் அதுமாதிரியானவை நிகழும். உலகத்தில் அமைதியும், ஒத்திசைவும் வேண்டுமென்றால் உன் மனதிலும், இதயத்திலும் அமைதியும், ஒத்திசைவும் இருக்க வேண்டும். இந்த மாதிரியான மாற்றங்களைத் திணிக்க முடியாது.

அது உள்ளுக்குள் இருந்து வர வேண்டும். யுத்தத்தை ஒழிக்க நினைப்பவர்கள் அவர்களுடைய அமைப்பிலிருந்து யுத்தத்தை வேளியேற்ற வேண்டும். அமைதியை விரும்பும் மக்கள் இல்லாமல் உலகில் அமைதி எப்படி இருக்கும்? மக்கள் எப்படி இருக்கிறார் களோ அப்படியே இருக்கும் வரை உலகமும் அப்படியே இருக்கும். நான் என்னுடைய பங்காக மக்களை அவர்களுடைய துன்பத்திற்கு அவர்கள்தான் காரணம் என்று அறிய வைக்க முயற்சிக்கிறேன். அந்த அர்த்தத்தில் நான் உபயோகமான மனிதன். ஆனால் நான் எனக்குள் என்னவாக இருக்கிறேனோ, எது என் இயல்பான நிலையோ அதைச் சமூக அக்கறை மற்றும் உபயோகத்தின் அளவுகளில் வெளிப்படுத்த முடியாது.

நான் அதைப் பற்றிப் பேசலாம், உருவகங்களையும், உவமைக் கதைகளையும் உபயோகிக்கலாம். ஆனால் அது அவ்வாறில்லை என்று எனக்குத் தெரியும். அது அனுபவிக்க முடியாதது என்பது அல்ல. அது அனுபவமேதான்! ஆனால் பிரித்துப் பார்க்கும் மற்றும் அதைப் புரிந்து கொள்ள மறுக்கும் மனதின் மொழியில் அதை விவரிக்க முடியாது.

உலகம் தட்டச்சு செய்யப்பட்ட ஒரு வெள்ளைக் காகிதத்தைப் போன்றது. படிப்பதும், அர்த்தமும் படிப்பவர்களைப் பொருத்து மாறும். ஆனால் காகிதம் என்பது பொதுவான அம்சம். அது எப்போதும் இருப்பது. ஆனால் அரிதாகக் கவனிக்கப் படுகிறது. மைநாடாவை நீக்கிவிட்டால் தட்டச்சு செய்வது எந்தத் தடயத்தையும் காகிதத்தின் மேல் விடாது. அதுபோல்தான் என் மனமும் - பதிவுகள் வந்து கொண்டே இருக்கின்றன. ஆனால் தடயம் எதுவும் இருக்காது.

**கே:** நீங்கள் எதற்காக இங்கு அமர்ந்து மக்களுடன் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களுடைய உண்மையான நோக்கம் என்ன?

**ம:** ஒரு நோக்கமும் கிடையாது. நான் இங்கு அமர்ந்திருக்கிறேன் என்றும், எனக்கு ஒரு நோக்கம் இருக்க வேண்டும் என்றும் நீ சொல்கிறாய். நான் இங்கு உட்கார்ந்து இருக்கவில்லை. பேசுவதும்

இல்லை. நோக்கங்களைத் தேட அவசியமில்லை. என்னை உடலுடன் சேர்த்துக் குழப்பிக் கொள்ளாதே. நான் செய்வதற்கு ஒரு வேலையும் இல்லை. எந்தக் கடமையும் இல்லை. நீ கடவுள் என்று சொல்லக்கூடியது எனக்குள் இருக்கும் அம்சமாகிய உலகைப் பார்த்துக் கொள்ளும். கவனிக்கப் படவேண்டிய நிறைய தேவை களை உடைய உன்னுடைய இந்த உலகம் உன் விழிப்புணர்வில் வாழ்கிறது, நகர்கிறது. அதைத் தோண்டிப்பார். பதில்களை நீ அங்கு காண்பாய். அங்கு மட்டுமே காண்பாய். பிறகு வேறு எங்கிருந்து அவை வரும் என்று எதிர்பார்க்கிறாய்? உன் விழிப்புணர்விற்கு வெளியே எதற்காவது இருத்தல் இருக்குமா?

**கே:** எனக்குத் தெரியாமலே அதற்கு இருத்தல் இருக்கலாமா?

**ம:** எந்த மாதிரியான இருத்தலாக அது இருக்கும்? அறிதலிலிருந்து இருத்தலைப் பிரிக்க முடியுமா? எல்லா இருத்தலும், எல்லா அறிதலைப் போல உன்னைச் சார்ந்தவையே. ஒன்று இருக்கின்றது என்றால் அதை நீ உன் அனுபவத்தில் அல்லது உன் இருத்தலின் மூலமாக அறிவாய். உன் உடலும் மனமும் நீ வேண்டும்வரை இருக்கும். அவை உன்னுடையவை என்று நினைக்காமல் இரு. உடனே அவை கரைந்து விடும். எல்லா வகையிலும் உன் உடலையும், மனதையும் இயங்க விடு. ஆனால் உன்னைக் கட்டுப் படுத்தி அடக்க விடாதே. சரியற்ற தன்மைகளை நீ கவனித்தால் வெறுமனே கவனித்துக் கொண்டே இரு. நீ அவற்றிற்குக் கொடுக்கும் கவனமே உன் இதயத்தையும், மனதையும், உடலையும் சரியாக்கும்.

**கே:** என்னுடைய கடுமையான நோயையும் நான் அவற்றைப் பற்றி அறிவதால் மட்டுமே குணப் படுத்த முடியுமா?

**ம:** நோய்களைப் பற்றி மொத்த அறிவையும் பெறு; வெளி அடையாளங்களை மட்டுமல்ல. எல்லாச் சுகவீனங்களும் மனதில் தான் ஆரம்பிக்கின்றன. எல்லாத் தவறான கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் அடையாளம் கண்டு வெளியேற்றுவதன் மூலம் மனதை முதலில் பேணிக்கொள். சுகவீனத்தை உதாசீனம் செய்து வாழ். வேலை செய். அதைப் பற்றி மேற்கொண்டு எண்ணாதே. காரணத்தை நீக்குவதால் விளைவுகள் கண்டிப்பாக வெளியேறும்.

மனிதன் என்னவாகத் தன்னை நினைக்கிறானோ அவ்வாறு ஆவான். உன்னைப் பற்றிய எல்லாக் கருத்துக்களையும் விட்டுவிடு. அப்போது உடலுக்கோ அல்லது மனதிற்கோ நடக்கக்கூடிய அனைத்திற்கும் அப்பால் உன்னைத் தூய சாட்சியாகக் காண்பாய்.

**கே:** நான் என்னை என்னவாக நினைக்கிறேனோ அவ்வாறு ஆவேன் என்றால், நான் என்னை உச்ச உயர்வான மெய் என்று நினைக்க ஆரம்பித்தால் என் உச்ச உயர்வான மெய் வெறும் கருத்தாக மட்டுமே நின்றுவிடாதா?

**ம:** முதலில் அந்த நிலையை அடை. பிறகு கேள்வியைக் கேள்.



# 49. மனம் பாதுகாப்பின்மையை உருவாக்குகிறது

**கேட்பவர்:** மக்கள் உங்களிடம் உபதேசத்திற்காக வருகிறார்கள். என்ன பதில் சொல்வதென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

**மஹராஜ்:** கேள்வியை எப்படிக் கேட்கிறேனோ அப்படி பதிலையும் கேட்கிறேன்.

**கே:** உங்கள் பதில் சரியானதென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

**ம:** ஒருமுறை பதிலின் உண்மையான ஆதாரத்தைத் தெரிந்து கொண்டால் நான் அதைச் சந்தேகிக்க வேண்டியதில்லை. தூய ஆதாரத்திலிருந்து தூய தண்ணீர் மட்டும்தான் ஊற்றெடுக்கும். அதே போல நான் மக்களின் ஆசைகளையும், அச்சங்களையும் பொருட் படுத்துவது இல்லை. நான் உண்மைகளோடு ஒத்திசைவுடன் இருக்கிறேன்; அபிப்பிராயங்களோடு அல்ல. மனிதன் அவனுடைய பெயரையும், உருவத்தையும் தான் என்று நினைத்துக் கொள்கிறான். நான் என்னை ஏதொன்றுமாக இல்லாதவனாக அறிகிறேன். என்னை ஒரு பெயருடைய உடலாக நினைத்தால் என்னால் உன் கேள்வி களுக்குப் பதில் சொல்ல முடியாது. நான் உன்னை வெறுமனே உடலாக நினைத்தால் என் பதில்களால் உனக்கு எந்தப் பயனும் இல்லை. எந்த உண்மையான குருவும் வெவ்வேறு மார்க்கங்களில் திளைக்க மாட்டார். அவர் இருப்பவற்றை அவை உள்ளவாறு பார்ப்பார். அவற்றை உள்ளவாறு காண்பிப்பார். மக்கள் தங்களை என்னவாறு நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ அப்படி நீ அவர்களை எடுத்துக் கொண்டால், அவர்கள் எவ்வாறு மோசமாகத் தங்களை எல்லா நேரமும் வேதனைப்படுத்திக் கொள்கிறார்களோ அவ்வாறு நீ அவர்களை வேதனைப்படுத்துவாய். ஆனால் அவர்கள்

உண்மையாக எவ்வாறு உள்ளார்களோ அவ்வாறு நீ அவர்களைப் பார்த்தால் அது மிக அதிகமான நன்மைகளை அவர்களுக்குச் செய்யும். அவர்கள் உன்னை 'என்ன செய்வது, எந்தமாதிரியான பயிற்சிகளை மேற்கொள்வது, எந்த வாழ்க்கை முறையைப் பின்பற்றுவது' என்று கேட்டால், 'எதையும் செய்ய வேண்டாம், சும்மா இரு. இருத்தலில் எல்லாமும் இயல்பாக நடக்கும்' என்று சொல்.

**கே:** உங்கள் பேச்சுக்களில் நீங்கள் 'இயற்கையாக' மற்றும் 'விபத்து போல' ('அகஸ்மாத்தாக') என்னும் வார்த்தைகளில் சாதாரணமாக எதை வேண்டுமானாலும் உபயோகிக்கிறீர்கள். அந்த இரண்டு வார்த்தைகளின் அர்த்தத்தில் ஆழமான வித்தியாசம் இருக்கிற தென்று நான் கருதுகிறேன். இயற்கையானது என்பது ஒழுங்கு முறையானது, விதிகளுக்கு உட்பட்டது; ஒருவர் இயற்கையை நம்பலாம். விபத்து போல என்பது தாறுமாறானது, எதிர்பாராதது, முன்கூட்டிக் கணிக்க முடியாதது. இயற்கையின் விதிகளுக்குட் பட்டு எல்லாமுமே இயற்கையானது என்று ஒருவர் வாதாடலாம்; எல்லாமுமே எந்தக் காரணமும் இல்லாமல் விபத்துப் போல் திடீரென்று நடப்பவை என்று நிலை நிறுத்துவது கண்டிப்பாக மிகைப் படுத்துவதே.

**ம:** 'விபத்து போல' என்னும் வார்த்தைக்குப் பதிலாக நான் 'தானாக' என்னும் வார்த்தையை உபயோகித்தால் நீ விரும்பு வாயா?

**கே:** 'விபத்து போல 'என்னும் வார்த்தைக்குப் பதிலாக நீங்கள் 'தானாக' அல்லது 'இயற்கையான' என்னும் வார்த்தைகளை உபயோகிக்கலாம். 'விபத்து போல' என்பதில் ஒரு ஒழுங்கற்ற மற்றும் குழப்பத்தின் தன்மை இருக்கிறது. ஒரு விபத்து என்பது எப்போதும் விதிகளை மீறுவது, ஒரு விதிவிலக்கு, ஒரு திடீர் வியப்பு.

**ம:** வாழ்க்கை என்பதே திடீர் வியப்புக்களின் ஒரு ஓடை அல்லவா?

**கே:** இயற்கையில் ஒத்திசைவு உள்ளது. விபத்து போன்றது ஒரு தொந்தரவு.

**ம:** நீ காலத்தாலும், வெளியினாலும் கட்டுப்படுத்தப்பட்ட, ஒரு உடல் மற்றும் மனதின் பொருளடக்கமாகக் குறைக்கப்பட்ட ஒரு நபராகப் பேசுகிறாய். உனக்குப் பிடித்ததை 'இயற்கையானது' என்றும், பிடிக்காததை 'விபத்து போன்றது' என்றும் நீ சொல்கிறாய்.

**கே:** இல்லை. நான் சொல்வது அதற்கு எதிர்மறையானது. நான் இயற்கையான, விதிகளுக்குட்படும், எதிர்பார்க்கக் கூடியதை விரும்புகிறேன். விதிகளை மீறும், ஒழுங்கற்ற, அர்த்தமற்றதற்கு நான் பயப்படுகிறேன். விபத்துபோன்றது எப்போதும் பயங்கரமானது. 'அனுகூலமான விபத்து' என்று சொல்பவை இருக்கலாம். ஆனால் அவை விபத்து நிகழ வாய்ப்புள்ள பிரபஞ்சத்தில் உயிர் இருக்க முடியாது என்னும் விதியை நிரூபிப்பதாகத்தான் உள்ளன.

**ம:** ஒரு தவறான புரிதல் உள்ளதாக நான் நினைக்கிறேன். 'விபத்துபோன்று' என்றால் தெரிந்த எந்த விதியும் பொருந்தாத ஒன்று என்று நான் குறிப்பிடுகிறேன். எல்லாமும் விபத்துப் போன்று காரணமில்லாதவை என்று நான் சொன்னால், அவை இயங்கும் காரணங்களும், விதிகளும் நம் அறிதலுக்கு அப்பாற்பட்டவை, கற்பனைக்குக் கூட அப்பாற்பட்டவை என்னும் அர்த்தத்தில்தான் சொன்னேன். ஒழுங்காகவும், ஒத்திசைவோடும், முன் கூட்டியே கணிக்கக் கூடியதாகவும் உள்ளதை நீ இயற்கையானது என்று சொன்னால், எது உயர்வான விதிகளுக்குக் கீழ்ப் படிகிறதோ, உயர்வான சக்தியால் இயங்குகிறதோ அதைத் தன்னிச்சையானது என்று சொல்லலாம். இதன்படி, நமக்கு இரண்டு இயற்கையான நிலைகள் உள்ளன: தனிப்பட்ட, முன்கூட்டியே கணிக்கக் கூடிய ஒன்று; தனிப்பட்டதல்லாத, அல்லது மனிதத் தன்மைக்கும் அப்பாற்பட்ட மற்றும் கணிக்க முடியாத ஒன்று. கீழான இயற்கை மற்றும் உயர்வான இயற்கை என்று அதைச் சொல். விபத்துப் போன்ற என்னும் வார்த்தையை விட்டு விடு. நீ அறிவிலும் உள்முகப் பார்வையிலும் வளர வளர, கீழான மற்றும் மேலான இயற்கைகளுக்கு இடையிலான எல்லை சுருங்கிக்கொண்டே வரும். ஆனால் அவை இரண்டையும் ஒன்றாகப் பார்க்கும் வரை அவை இரண்டாக இருக்கும். ஏனெனில் உண்மையில், ஒவ்வொன்றும் மிகவும் அதிசயக்கத்தக்க வகையில் காரணம் கூறி விவரிக்க முடியாதவை.

**கே:** விஞ்ஞானம் நிறைய விளக்குகிறது.

**ம:** விஞ்ஞானம் பெயர்கள் மற்றும் வடிவங்கள், அளவுகள் மற்றும் தன்மைகள், படிவங்கள் மற்றும் விதிகளைக் கையாள்கிறது; அது அதன் சொந்த இடத்தில் சரி. ஆனால் வாழ்க்கை வாழப்பட வேண்டும்; பகுத்து அலசி ஆராய்ந்து பார்க்க நேரம் கிடையாது. எதிர்வினை உடனடியாக வர வேண்டும் - அதனால்தான் தன்னிச்சையானதற்கும், காலத்திற்கு அப்பாற்பட்டதற்கும் முக்கியத்துவம். நாம் தெரியாததில் வாழ்கிறோம்; இருக்கிறோம். தெரிந்தது என்பது கடந்த காலத்தையது.

**கே:** நான் என்ன என்று என்னை உணர்கிறேனோ அதை என் நிலைப்பாடாக எடுத்துக் கொள்ளலாம். நான் ஒரு தனி நபர். தங்களை உடலாக நினைத்துக்கொள்ளும் பல நபர்களுக்குள் ஒரு நபர். சிலர் பூரணமாகவும், ஏக ரூபமாகவும் இருக்கிறார்கள். சிலர் அவ்வாறு இல்லை. சிலர் பிரயத்தனம் ஏதுமின்றி வாழ்கிறார்கள், ஒவ்வொரு சூழ்நிலைக்கும் சரியாகத் தன்னிச்சையாக எதிர்வினை புரிந்து, அந்த கணத்திற்கு என்ன தேவையோ அதற்கு முழு நிறைவாகச் செயல்படுகிறார்கள். ஆனால் மற்றவர்களோ தடுமாறு கிறார்கள், தவறு செய்கிறார்கள், பொதுவாகத் தங்களை ஒரு தொந்தரவாக்கிக் கொள்கிறார்கள். ஏகரூபமான மக்களை விதியால் ஆளப்படும் இயற்கையானவர்கள் என்றும், ஒருங்கிணைப்பற்ற வர்களை விபத்துக்களுக்கு உட்படும் குழப்பவாதிகள் என்றும் சொல்லலாம்.

**ம:** குழப்பம் என்னும் கருத்து ஒழுங்கான, இயற்கையான, ஒத்திசைவான உணர்வை முன்பே கொண்டிருக்கிறது. குழப்பமும், ஒழுங்கமைதியும் ஒரே நிலையின் இரு தன்மைகள் அல்லவா?

**கே:** ஆனால் நீங்கள் எல்லாமும் குழப்பமானவை, விபத்து போன்றவை, முன்பே கணிக்க முடியாத, முறையற்றவை என்று சொல்வது போல் தெரிகிறது.

**ம:** ஆமாம், இருத்தலின் எல்லா விதிகளும் தெரிந்தவை அல்ல மற்றும் எல்லா நிகழ்வுகளும் கணிக்கப் படக்கூடியவை அல்ல என்னும் அர்த்தத்தில். நீ எந்த அளவு புரிந்து கொள்ள முடிகிறதோ

அந்த அளவு பிரபஞ்சம் உணர்ச்சி பூர்வமாகவும், மனதளவிலும் திருப்திகரமாகிறது. மெய் புனிதமானது, அழகானது (சிவம் - சுந்தரம்); நாம் தான் குழப்பத்தை உருவாக்குகிறோம்.

**கே:** நீங்கள் மனிதனின் சுதந்திரமான மனப்பாங்குதான் விபத்துக்களை உருவாக்குகிறது என்று சொன்னால் நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நாம் சுதந்திரமான மனப்பாங்கைப் பற்றி இன்னும் விவாதிக்க வில்லை.

**ம:** உனக்கு சந்தோசத்தைக் கொடுப்பதை ஒழுங்கானது என்றும், துன்பத்தைக் கொடுப்பதை ஒழுங்கற்றது என்றும் நினைக்கிறாய்.

**கே:** நீங்கள் அவ்வாறு சொல்லலாம். ஆனால் அந்த இரண்டும் ஒன்று என்று என்னிடம் சொல்ல வேண்டாம். என்னுடைய மொழியில் என்னிடம் பேசுங்கள் - சந்தோசத்தைத் தேடும் தனி மனிதனின் மொழியில். இருமைத் தன்மையை மறுக்கும் பேச்சுக்களால் என்னைத் திசை திருப்ப வேண்டாம்.

**ம:** நீ தனியான நபர் என்று எது உன்னை நம்ப வைக்கிறது?

**கே:** நான் தனி நபரைப் போல் நடந்து கொள்கிறேன். சுயபுத்தியால் இயங்குகிறேன். என்னை முதன்மையாகக் கருதுகிறேன். மற்றவர்களை என்னுடன் தொடர்பு படுத்தித்தான் பார்க்கிறேன். சுருக்கமாகச் சொன்னால், நான் என்னோடு மும்முரமாக இருக்கிறேன்.

**ம:** சரி, உன்னோடு தொடர்ந்து மும்முரமாக இரு. எதற்காக நீ இங்கு வந்தாய்?

**கே:** என்னைப் பாதுகாப்பாகவும், சந்தோசமாகவும் வைத்துக் கொள்ளும் நோக்கத்திற்காக. நான் மிகவும் வெற்றியடையவில்லை என்று ஒப்புக்கொள்கிறேன். நான் பாதுகாப்பாகவும் இல்லை. சந்தோசமாகவும் இல்லை. அதனால்தான் நான் இங்கு உள்ளேன். இந்த இடம் எனக்குத் தேவையில்லை. ஆனால் நான் இங்கு வந்ததற்கான காரணம் பழையது: பாதுகாப்பான சந்தோசம்; சந்தோசமான பாதுகாப்பு. இதுவரை என்னால் அதைக் காண முடியவில்லை. உங்களால் எனக்கு உதவ முடியுமா?

**ம:** எதை எப்போதும் தொலைக்கவில்லையோ அதை ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாது. உன்னுடைய பாதுகாப்பு மற்றும் சந்தோசத்திற்கான தேடுதலே உன்னை அவற்றிலிருந்து விலக்கிவிடும். தேடுவதை நிறுத்து. இழப்பது நின்றுவிடும். வியாதி எளிமையானது. குணமாவதும் அதேபோல எளிமையானதுதான். மனம்தான் உன்னைப் பாதுகாப்பற்றும், சந்தோசமில்லாமலும் செய்கிறது. எதிர்பார்ப்பு உன்னைப் பாதுகாப்பில்லாமலும், ஞாபகம் சந்தோசமில்லாமலும் செய்கின்றது. மனதைத் தவறாகப் பயன்படுத்துவதை நிறுத்து. அப்போது எல்லாமும் நன்றாக உன்னுடன் இருக்கும். நீ அதைச் சரிசெய்ய வேண்டாம் - நீ கடந்ததையும், எதிர்காலத்தையும் பற்றிய கவலையை விட்டுவிட்டு, நிகழ்காலத்தில் முழுவதும் வாழ ஆரம்பித்த உடனேயே அது தானாகவே தன்னைச் சரி செய்துகொள்ளும்.

**கே:** ஆனால் நிகழ்காலத்திற்குப் பரிமாணம் எதுவும் இல்லை. நான் ஒருவராக இல்லாதவனாகவும், ஒன்றுமற்றவனாகவும் ஆகிவிடுவேன்.

**ம:** மிகச் சரியாக! ஒன்றுமற்றதாக மற்றும் ஒருவராக இல்லாத தாக, ஆனால் நீ பாதுகாப்பாகவும், சந்தோசமாகவும் இருப்பாய். அந்த அனுபவத்தை நீ விரைவாகப் பெறலாம். வெறுமனே முயற்சி செய்.

ஆனால் நாம் திரும்பவும் எது விபத்து போன்றது மற்றும் எது தன்னிச்சையானது அல்லது இயல்பானது என்பதைப் பற்றிப் பார்ப்போம். நான் சொன்னதை நீ தெளிவாகப் புரிந்து கொண்டாயா? இயல்பானது ஒழுங்கானது என்றும், விபத்து என்பது குழப்பத்தின் அறிகுறி என்றும் நீ சொன்னாய். நான் வித்தியாசத்தை மறுத்தேன். காரணத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்றால் ஒரு நிகழ்வை விபத்து போன்றது என்று சொல்லலாம் என்றேன். இயற்கையில் குழப்பத்திற்கு இடமில்லை. மனித மனதில் மட்டும்தான் குழப்பத் திற்கு இடமுள்ளது. மனம் முழுமையைக் கைக்கொள்வதில்லை - அதன் பார்வையின் குவியம் மிகவும் குறுகலானது. அது உடைந்த பகுதிகளைத்தான் பார்க்கிறது. முழுப் படத்தையும் பார்க்கத் தவறிவிடுகிறது. ஒரு மனிதன் சப்தங்களைக் கேட்டாலும், மொழி

தெரியாததால் அதைப் புரிந்து கொள்ளாமல், பேசுபவரை அர்த்தமில்லாமல் உளறுவதாக குற்றம் சாட்டலாம். அது அவருடைய தவறைத்தான் நிரூபிக்கும். ஒருவருக்குக் குழப்பமான சப்தமாக இருப்பது மற்றவருக்கு ஒரு அழகான கவிதையாக இருக்கலாம்.

ஜனக மகாராஜா ஒருமுறை தான் ஒரு பிச்சைக்காரனாக இருப்பதாகக் கனவு கண்டார். விழித்த பிறகு தன் குரு அஷ்டவக்ரரை இவ்வாறு கேட்டார்: 'நான் ஒரு பிச்சைக்காரனாக இருப்பதாகக் கனவு கண்ட ஒரு அரசனா அல்லது ஒரு அரசனாக இருப்பதாகக் கனவு கண்ட ஒரு பிச்சைக்காரனா?' அதற்குக் குரு கீழ்க் கண்டவாறு பதிலளித்தார்: 'நீ இரண்டுமே அல்ல; நீ இரண்டுமே. நீ உன்னை என்னவென்று நினைக்கிறாயோ அது. இருப்பினும் நீ அதுவல்ல. நீ அதுதான் - ஏனெனில் நீ அதுபோல் நடந்துகொள்கிறாய். நீ அதுவல்ல. ஏனெனில் அது நிலைத்திருப்ப தில்லை. நீ ஒரு அரசனாகவோ, பிச்சைக்காரனாகவோ எப்போதும் இருக்க முடியுமா? எல்லாமும் மாறும். மாறாத எதுவோ அது நீ. யார் நீ?' என்று. ஜனகர் சொன்னார்: 'ஆமாம், நான் அரசனும் அல்ல, பிச்சைக் காரனும் அல்ல. நான் அக்கறையற்ற சாட்சி' என்று. குரு சொன்னார்: 'நீ ஞானி என்றும், சாதாரண மனிதரிலிருந்து வித்தியாசமானவன், உயர்ந்தவன் என்றும் நினைப்பதுதான் கடைசியான மாயக் கருத்து. மறுபடியும் உன்னை மனதுடன் ஏகரூபமாக்கிக் கொள்கிறாய்; இப்போது, நன்றாக நடந்து கொள்ளும், எல்லா வகையிலும் சிறப்பான ஒரு மனதுடன்' என்று. நீ மிகக் குறைந்த அளவு வித்தியாசத்தையாவது பார்க்கும் வரையில் மெய்யிற்கு நீ ஒரு அந்நியன்தான். நீ மனது அளவில்தான் இருப்பாய். எப்போது 'நான் என்றால் என் சுயம்' என்பது போகிறதோ அப்போது 'நான் எல்லாமுமே' என்பது வருகிறது. எப்போது 'நான் எல்லாமுமே' என்பது போகிறதோ அப்போது 'நான்' என்பது வருகிறது. எப்போது 'நான்' என்பதும்கூட போகிறதோ அப்போது மெய் மட்டுமே இருக்கிறது. அதில் ஒவ்வொரு 'நானும்' காப்பாற்றப்படுகிறது, மகிமைப்படுத்தப் படுகிறது. தனித்தனியாக அல்லாமல் பிரிந்திருப்பதுதான் மனதால் தொடக் கூடிய உச்சமான இறுதி. அதற்கு அப்பால் எல்லாச்

செயல்பாடுகளும் முடிவுற்றுவிடும். ஏனெனில் அதில் எல்லா இலக்குகளும் அடையப் பெற்றுவிடும். எல்லா நோக்கங்களும் நிறைவேறிவிடும்.

**கே:** உச்ச உயர்வான நிலை அடையப் பெற்றுவிட்டால் அதை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியுமா?

**ம:** உச்ச உயர்வான நிலை பிரபஞ்சமயமானது, இங்கு, இப்போதே பிரக்தியட்சமாக இருப்பது; வாழும் அனைத்தும் முன்பே அதைப் பகிர்ந்து கொண்டிருக்கின்றன. அது சத் - சித் - ஆனந்த நிலை. தான் இருப்பதையும், தான் இருப்பதை அறிதலையும் யார் விரும்ப மாட்டார்கள்? ஆனால் நாம் சுய விழிப்புணர்வோடு இருப்பதன் ஆனந்தத்தை உபயோகப் படுத்துவதில்லை, அதற்குள் செல்வதில்லை, அதற்கு அன்னியமானவைகளைக் களைந்து அதைச் சுத்தப்படுத்துவதில்லை. இந்த மனச் சுய சுத்திகரிப்பு, உள்ளத் தூய்மைப்படுத்துதல் மிகவும் அவசியம். எப்படி கண்ணில் உள்ள ஒரு தூசி கண்ணை வீங்கச் செய்து பார்வையை மறைக்கச் செய்யுமோ அப்படி, 'நான் மனோ - உடல்' என்னும் தவறான கருத்து சுய பச்சாதாபத்தை உருவாக்கும். அது பிரபஞ்சத்தை மறைக்கும். ஒரு வரையறைக்குட்பட்ட, தனி நபர் என்னும் உணர்வுடன் போராடுவது, அதன் வேர்கள் களையப்பட்டால் ஒழிய பயனற்றது. சுயநலம் என்பது தன்னைப் பற்றிய தவறான கருத்துக்களில் வேரூன்றி உள்ளது. இந்தத் தவறான கருத்துக்களை மனதிலிருந்து நீக்குவதுதான் சாதனா.

# 50. சுயப் பிரக்ஞைதான் சாட்சி

**கேட்பவர்:** என்னை மூன்று வகைகளில் கருதலாம் என்று நீங்கள் சொன்னீர்கள்: தனிப்பட்ட வெளிப்பட்டதாக (வியக்தி), மொத்த மாக வெளிப்பட்டதாக (வியக்தா) மற்றும் வெளிப்படாததாக (அவியக்தா). அவியக்தா என்பது அனைத்திலும் ஊடுருவி இருப்பது, மெய்யான மற்றும் தூய சுயம். வியக்தா என்பது 'நான்' என்பதாக விழிப்புணர்வில் அதன் பிரதிபலிப்பு. வியக்தி என்பது உடல் மற்றும் அதன் செயல்பாடுகளின் மொத்தம். தற்பொழுதின் குறுகிய எல்லைக்குள் வியக்தி, நபர்த்தன்மையின் விழிப்புணர்வை காலத்திற்குள்ளும், இடத்திற்குள்ளும் கொண்டிருக்கிறது; ஒரு நபரைப் பற்றி மட்டுமல்ல - கர்மா என்னும் கயிற்றினால் இணைக்கப் பட்டுள்ள நீண்ட நபர்களின் வரிசையையும். அது முக்கியமாக சாட்சி மற்றும் சேகரித்துச் சேர்த்து வைக்கப் பட்டுள்ள அனுபவங்களின் மிச்சம், ஞாபகத்தின் அடித்தளம், சுயத்தின் இணைப்பு (சூத்ராத்மா). பிறவிதோறும் உயிரால் ஏற்படுத்தப் பட்டு, வடிவமைக்கப்படும் மனிதனின் குணாதிசயம் அது. பிரபஞ்சமயமானது எல்லாப் பெயர்களுக்கும், வடிவங்களுக்கும் அப்பாற்பட்டது; விழிப்புணர்விற்கும், குணாதிசயங்களுக்கும் அப்பாற்பட்டது; தூய, சுய பிரக்ஞையற்ற இருப்பு. உங்களுடைய கருத்தை நான் சரியாகச் சொல்லி உள்ளேனா?

**மஹராஜ்:** மனதின் அளவில் சரி. மனதிற்கு அப்பால் ஒரு வார்த்தை கூடப் பொருந்தாது.

**கே:** நபர் என்பது ஒரு மன உருவாக்கம் என்பதையும், ஞாபகங்கள் மற்றும் பழக்க வழக்கங்களால் சமுதாயத்தால் குறிப்பிடப்படும் பெயர் என்பதையும் என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நபர் என்று யாருக்கு ஏற்படுகிறதோ, அந்தச் சாட்சி மையமும் மனதால் ஆனதா?

**ம:** எப்படி வர்ணம் தோன்ற ஒரு மேற்பரப்பு தேவையோ அப்படி நபர்த்தன்மை ஒரு வடிவம்பெற அடித்தளம் தேவை; அடையாளப் படுத்திக் கொள்ள ஒரு உடல் தேவை. வர்ணத்தைப் பார்ப்பது என்பது வர்ணத்திலிருந்து தனித்தது - வர்ணம் எதுவானாலும் பார்ப்பது என்பது ஒன்றுதான். வர்ணத்தைப் பார்க்க ஒருவருக்குக் கண் தேவை. வர்ணங்கள் பல. கண் ஒன்றுதான். நபர்த் தன்மையற்றது என்பது வர்ணத்தில் மற்றும் கண்ணில் இருக்கும் ஒளி போன்றது. இருப்பினும் எளியது, தனித்தது, பகுக்கப் பட முடியாதது; அதன் வெளிப்பாடுகளைத் தவிர மற்றபடி உணர முடியாதது. அறிய முடியாதது அல்ல, ஆனால். அந்த உணர முடியாததைப் புறப்பொருளாகவும், பிரித்தும் பார்க்க முடியாது. அது பொருள் மாயமானதோ, மனோ மாயமானதோ அல்ல. புறம் சார்ந்ததோ, அகம் சார்ந்ததோ அல்ல. அது பொருளின் ஆணி வேர்; விழிப்புணர்வின் மூல காரணம். வெறுமனே வாழ்வதற்கும், இறப்பதற்கும் அப்பால், அது எல்லாவற்றையும் உள்ளடக்கியது, எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது, அதில் பிறப்பது என்பது இறப்பு, இறப்பது என்பது பிறப்பு.

**கே:** நீங்கள் பேசுகின்ற உச்ச முடிவான சத்தியம் அல்லது உயிர், மெய்யானதா அல்லது எங்களுடைய அறியாமையை மூடுவதற்கான வெறும் கோட்பாடா ?

**ம:** இரண்டுமே - மனதிற்கு ஒரு கருத்து, அதைப் பொறுத்தவரை அதுவே மெய். அதுதான் மெய்மை.

அதன் உண்மை, மெய்யற்றதைத் தன்னிச்சையாகவும், முழுவது மாகவும் மறுப்பதில் இருக்கிறது. எப்படி ஒளி அது இருப்ப தாலேயே இருளைப் போக்குகிறதோ, அப்படி கற்பனையை உச்ச முடிவான மெய் அழிக்கிறது. எல்லா அறிவையும் அறியாமையின் ஒரு வடிவமாகப் பார்ப்பதே மெய்யின் ஒரு இயக்கம். சாட்சி என்பது நபர் அல்ல. ஒரு அடிப்படை, ஒரு உயிரினம், ஒரு உடல் இருந்தால்தான் நபர் என்பது உருவாக முடியும். அதில் உச்ச முடிவான மெய், விழிப்புணர்வாகப் பிரதிபலிக்கிறது. தூய பிரக்ஞை சுயத்தின் யோகப் பயிற்சியால் சுயத்தை அறிகிறது. சுயத்தின் அறிவுதான் சாட்சி. சாட்சியாகப் பார்க்க சுயம் இல்லாத போது

சாட்சி பாவமும் இருக்காது. இவை எல்லாமும் எளியவை; நபர் என்பது இருப்பதுதான் சிக்கலாக்குகிறது. நிரந்தரமாகத் தனிப்பட்ட நபர் என்று ஒன்று இல்லை என்பதை அறி. அப்போது எல்லாமும் தெளிவாகும்.

அசைகின்ற மற்றும் அசையாத இரு தன்மைகளிலும் தாமசம், ராஜசம், சாத்வீகம் ஆகிய மூன்று குணங்களிலும் ஜடப் பொருள் - மனம் - பிரக்ஞை எனக் கலந்து இருப்பது ஒரே மெய்மை.

**கே:** எது முந்தையது - விழிப்புணர்வா அல்லது பிரக்ஞையா?

**ம:** பிரக்ஞை நோக்கத்தைக் கொண்டிருக்கும்போது விழிப்புணர் வாகிறது. நோக்கம் எப்போதும் மாறிக்கொண்டிருக்கும். விழிப் புணர்வில் அசைவு இருக்கும். பிரக்ஞை அசைவற்றது, மற்றும் காலமற்றது; இங்கேயே, இப்போதே இருப்பது.

**கே:** தற்போது *(1971)* கிழக்கு பாகிஸ்தானில் துன்பமும், இரத்தம் சிந்துதலும் இருக்கின்றன. அதை நீங்கள் எவ்வாறு பார்க்கிறீர்கள்? அது உங்களுக்கு எவ்வாறு தோன்றுகிறது? அதற்கு எவ்வாறு எதிர்வினை புரிகிறீர்கள்?

**ம:** தூய விழிப்புணர்வில், எதுவுமே எப்போதும் நிகழ்வதில்லை.

**கே:** தயவு செய்து இந்தமாதிரியான ஆன்மீக உயரங்களிலிருந்து இறங்கி வாருங்கள். ஒரு துன்பப்படும் மனிதனிடம், உன்னைத் தவிர வேறு யாருக்கும் உன் துன்பம் தெரியாது என்று சொல்வதால் என்ன பயன்? எல்லாமும் மாயை என்று சொல்வது காயத்தை மேலும் காயப்படுத்துவது போல் ஆகும். கிழக்கு பாகிஸ்தானில் இருக்கும் பெங்காலி ஒரு நிஜம். அவனுடைய வேதனை ஒரு நிஜம். தயவு செய்து அவற்றை அலசி ஆராய்ந்து, அவை இல்லாதது போல் செய்யாதீர்கள்! நீங்கள் செய்தித்தாள்களை வாசிக்கிறீர்கள். பிறர் அதைப் பற்றிப் பேசுவதைக் கேட்கிறீர்கள். அவற்றைப் பற்றித் தெரியாது என்று உங்களால் சொல்ல முடியாது. நடப்பவைகளைப் பற்றி உங்களுடைய மனப்பாங்கு என்ன?

**ம:** மனப்பாங்கு ஒன்றும் இல்லை. எதுவும் நிகழ்வதில்லை.

**கே:** மக்கள் ஒருவரை ஒருவர் கொன்றுகொண்டு ஏற்படுத்தும் கலவரம் உங்கள் முன்னால் எப்போது வேண்டுமானாலும் நடக்

கலாம். அப்போது கண்டிப்பாக நீங்கள் எதுவுமே நடக்க வில்லை என்று சொல்லிக் கொண்டு விட்டேத்தியாக இருக்க முடியாது.

**ம:** விட்டேத்தியாக இருப்பதைப் பற்றி நான் ஒருபோதும் பேசியதில்லை. யாரையாவது காப்பாற்ற நான் பிரச்சனைக்குள் குதித்து கொல்லப்படுவதைக் கூட நீ பார்க்கலாம். இருப்பினும் எதுவுமே நடக்காது என்பது என் கருத்து.

ஒரு கட்டிடம் இடிந்து விழுவதைக் கற்பனை செய். சில அறைகள் சிதிலமடைந்தும், சில அறைகள் சிதையாமலும் இருக்கும். ஆனால் அறைகளுக்குள் உள்ள வெற்றிடத்தைச் சிதைந்தது அல்லது சிதைய வில்லை என்று உன்னால் சொல்ல முடியுமா? கட்டுமானமும், அதில் வசித்த மக்களும்தான் சிதைவுறுவர். வெற்றிடத்திற்கு எதுவும் நிகழாது. அதே போல வடிவங்கள் உடைந்தாலும், பெயர்கள் அழிந்து போனாலும் உயிருக்கு ஒன்றும் நிகழாது. பொற்கொல்லர் பழைய நகைகளை உருக்கி புதிய நகைகளைச் செய்வார். சில சமயம் புது நகையும் பழைய நகையுடன் சென்றுவிடும். ஆனாலும் அவர் கவலைப் பட மாட்டார். ஏனெனில் தங்கம் எதுவும் சேதமாக வில்லை என்று அவருக்குத் தெரியும்.

**கே:** நான் இறப்பை எதிர்க்கவில்லை. இறக்கும் விதத்தைத்தான் எதிர்க்கிறேன்.

**ம:** இறப்பது என்பது இயற்கையானது. இறக்கும் விதம் மனிதனால் ஏற்படுத்தப்படுவது. பிரிந்திருப்பது அச்சத்தையும், எதிர்ப்பையும் ஏற்படுத்துகிறது. அதனால் வன்முறை உருவாகிறது. மனிதனால் ஏற்படுத்தப் பட்ட பிரிவினைகளை விட்டுவிட்டால் மக்கள் ஒருவரை ஒருவர் கொல்லும் கொடூரம் கண்டிப்பாக முடிவுறும். ஆனால் உண்மையில் கொல்வதும், கொல்லப்படுவதும் இல்லை. மெய்யானது இறப்பதில்லை. மெய்யற்றது ஒருபோதும் வாழ்வதில்லை. உன் மனதைச் சரி செய். எல்லாமும் சரியாகும். உலகம் ஒன்று, மனித குலம் ஒன்று என்று நீ அறிந்தால் அதற்கேற்றவாறு நீ நடப்பாய். ஆனால் முதலில் நீ உணர்கின்ற, சிந்திக்கின்ற, வாழ்கின்ற முறைகளைக் கவனிக்க வேண்டும். உனக்குள் ஒழுங்கு இல்லை என்றால் உலகத்தில் ஒழுங்கு இருக்காது.

மெய்மையில் எதுவுமே நடப்பதில்லை. மனம் என்னும் திரையில் விதி தொடர்ந்து அதன் படங்களைத் திரையிடுகிறது. பழைய திரையிடல்களின் ஞாபகங்களை மீண்டும் திரையிடுகிறது. அதனால் மாயத்தோற்றம் தன்னைத் தொடர்ந்து புதுப்பித்துக் கொள்கிறது. படங்கள் வந்து போகின்றன - அறியாமை ஒளியைக் குறுக்கிடுவதால். மூல ஒளியைப் பார், படத்தைப் பொருட் படுத்தாதே.

**கே:** என்ன ஒரு மரத்துப்போன பார்வை. மக்கள் கொன்று கொண்டும், கொல்லப் பட்டுக் கொண்டும் இருக்கிறார்கள். நீங்கள் படத்தைப் பற்றி பேசுகிறீர்கள்.

**ம:** நீ செய்ய வேண்டியது அதுதான் என்று நினைத்தால், போ, போய்க் கொல்லப் படு. அல்லது கொல்வதுதான் உன் கடமை என்று நீ நினைத்தால் போய்க் கொல். ஆனால் கொடூரத்தை முடிக்க அதுவல்ல வழி. கொடூரம் என்பது நோய்வாய்ப் பட்ட மனதின் நாற்றம். உன் மனதைக் குணப்படுத்து. அப்போது அது திரிபுற்ற, அசிங்கமான படங்களைத் திரையிடாது.

**கே:** நீங்கள் சொல்வதை நான் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் உணர்வளவில் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. வாழ்க்கையைப் பற்றிய உன்னதமான பார்வை என்னை ஆழமாக வெறுத்துப் போக வைக்கிறது. நான் நிரந்தரமாகக் கனவு நிலையில் இருப்பதாக என்னால் நினைக்க முடியாது.

**ம:** நிரந்தரமற்ற உடலால் உருவாக்கப் பட்ட நிலையில் எப்படி ஒருவர் நிரந்தரமாக இருக்க முடியும்? இந்தத் தவறான புரிதல் நீ உடல் என்னும் கற்பனையை அடிப்படையாகக் கொண்டது. அந்தக் கற்பனையை ஆராய். அதன் உள்ளார்ந்த முரண்பாடுகளைப் பார். உன் தற்போதைய இருத்தல் ஒளித் துகள்களின் பொழிவைப் போன்றது என்று அறி - ஒவ்வொரு துகளும் ஒரு நொடிப் பொழுது, பொழிவே கூட ஒன்று அல்லது இரண்டு நிமிடங்களே நீடிப்பவை என அறி. கண்டிப்பாக ஆரம்பத்தையே முடிவாகக் கொண்டுள்ள ஒன்றிற்கு நடுப் பகுதி என்பது இருக்காது. உன் கருத்துக்களுக்கு மதிப்பு கொடு. பரம்பொருள் கணப் பொழுதானதாக இருக்க முடியாது. அது காலமற்றது. ஆனால் காலமற்ற தன்மை ஒரு கால அளவாகாது.

**கே:** நான் வாழும் உலகம் மெய்யானதல்ல என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் பார்க்கும் சிதைக்கப் பட்ட வடிவமாக ஒரு மெய்யான உலகம் இருக்கிறது. வடிவச் சிதைவு என் மனதிலோ, அல்லது உடலிலோ உள்ள சில குறைபாடுகளால் இருக்கலாம். ஆனால் நீங்கள் நிஜமான உலகம் என்பது இல்லை, என் மனதில் ஒரு கனவு உலகம்தான் இருக்கிறது என்று சொல்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. இருத்தலின் எல்லாக் கொடூரங்களும் நான் உடலைக் கொண்டிருப்பதால்தான் என்று நம்ப நான் விரும்புகிறேன். தற்கொலைதான் இதிலிருந்து வெளியேற வழி.

**ம:** நீ உன் சொந்தக் கற்பனைகளுக்கோ, அல்லது மற்றவர் களுடைய கற்பனைகளுக்கோ கவனத்தைச் செலுத்தும் வரையில் உனக்குத் தொந்தரவு ஏற்படும். ஆனால் நீ எல்லாப் போதனை களையும், எல்லாப் புத்தகங்களையும், வார்த்தைகளால் வெளி வந்துள்ள அனைத்தையும் ஒதுக்கித் தள்ளி, உனக்குள் ஆழமாக மூழ்கி, உன்னைக் கண்டுபிடித்தால் அது மட்டுமே எல்லாப் பிரச்சனைகளையும் தீர்த்து, உன்னை ஒவ்வொரு சூழ்நிலையிலும் முழு ஆளுமையுடன் இருக்கச் செய்யும். ஏனெனில் அந்தச் சூழ்நிலையைப் பற்றிய உன் கற்பனை உன்மேல் ஆதிக்கம் செலுத்தாது. ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நீ ஒரு அழகான பெண்ணுடன் இருக்கிறாய். அவளைப் பற்றிய கருத்து உனக்குக் கிடைக்கிறது. அது ஒரு பாலுணர்வுச் சூழ்நிலையை உருவாக்குகிறது. அப்போது ஒரு பிரச்சனை உருவாக்கப்பட்டு விட்டது. நீ சிற்றின்ப நுகர்வை அறவே விலக்கவோ அல்லது அனுபவிக்கத் தெரிந்து கொள்ளவோ புத்தகங்களை நாட ஆரம்பித்து விடுவாய். நீ ஒரு குழந்தையாய் இருந்தால் நீங்கள் இருவருமே ஆடையின்றி இருந்தாலும் எந்தப் பிரச்சனையும் உருவாகாமல் நெருக்கமாக இருக்கலாம். நீ உடல் என்று நினைப்பதை நிறுத்து. அப்போது வாழ்தல் மற்றும் இறத்தலால் ஏற்படும் பிரச்சனைகள் அவற்றின் அர்த்தத்தை இழந்து விடும். வரையறை உணர்வு போய்விட்டால் அச்சம், துக்கம் மற்றும் இன்பத்திற்கான தேடுதல் ஆகிய எல்லாம் போய்விடும். நீதான் பரமானந்த ஸ்வரூபம் என்னும் தூய விழிப்புணர்வு மட்டுமே மிஞ்சும்.

# 51. துன்பத்திற்கும், இன்பத்திற்கும் விருப்பு வெறுப்பற்று இரு

**கேட்பவர்:** நான் பிறப்பாலும், வசிப்பிடத்தாலும் பிரான்சு நாட்டைச் சேர்ந்தவன். கடந்த பத்து வருடங்களாக யோகாவைப் பயிற்சி செய்து வருகிறேன்.

**மஹராஜ்:** பத்து வருட முயற்சிக்குப் பிறகு நீ உன் இலக்கை நெருங்கி விட்டாயா?

**கே:** சிறிதளவு அருகாமையில் இருக்கலாம். யோகா மிகவும் கடினமான வேலை அல்லவா?

**ம:** ஆத்மா மிக அருகாமையில் உள்ளது. அதை அடையும் வழி எளிதானது. நீ செய்ய வேண்டியதெல்லாம் எதுவும் செய்யாமல் இருப்பதே.

**கே:** இருப்பினும் என் சாதனா மிகவும் கடினமானதாகத் தோன்றுகிறது.

**ம:** உன் சாதனா என்பது இருத்தல்தான். செயல்படுவது தானாகவே நிகழ்கிறது. வெறுமனே கவனித்துக் கொண்டிரு. நீ இருக்கிறாய் என்று ஞாபகம் வைத்திருப்பதில் என்ன கஷ்டம்? எல்லாமுமே நீ தான்.

**கே:** சந்தேகமில்லாமல், இருத்தல் என்னும் உணர்வு எல்லா நேரமும் இருக்கிறது. ஆனால் கவனத்தின் பிரதேசத்தை உணர்ச்சிகள், கற்பனைகள், கருத்துக்கள் போன்ற எல்லா விதமான மனோ நிகழ்வுகளும் ஆட்சி செய்கின்றன. அவற்றால் தூய இருத்தல் என்னும் உணர்வு பெரும்பாலும் ஆக்கிரமிக்கப்பட்டு இருக்கிறது.

**ம:** மனதில் உள்ள தேவை இல்லாததை நீக்க என்ன வழிமுறை வைத்திருக்கிறாய்? சித்தத்தைச் சுத்திகரிக்க உன்னுடைய வழிமுறைகள், கருவிகள் என்ன?

**கே:** அடிப்படையில் மனிதன் பயப்படுகிறவன். அவன் தன்னைப் பற்றித்தான் பெரும்பாலும் பயப்படுகிறான். வெடிக்கப் போகின்ற ஒரு வெடியைக் கையில் வைத்திருக்கும் ஒரு மனிதனைப் போலத் தான் என்னை உணர்கிறேன். அவனால் அதைச் செயலிழக்கச் செய்ய முடியாது. வீசவும் முடியாது. அவன் மிகவும் மிரண்டு போயிருக்கிறான். தீவிரமாகத் தீர்வைக் காண பைத்தியக்காரனைப் போல முயற்சிக்கிறான். ஆனால் முடியவில்லை. என்னைப் பொறுத்தவரை முக்தி என்பது இந்த வெடியிலிருந்து விடுபடுவது. இந்த வெடியைப்பற்றி எனக்கு அதிகமாக எதுவும் தெரியாது. சிறுவயதிலிருந்தே இது வருகிறது என்பது மட்டும் எனக்குத் தெரியும். பயப்படும் குழந்தை எப்படி அன்பு செலுத்தப்படாததால் உணர்ச்சிவசப்பட்டு எதிர்ப்பைத் தெரிவிக்குமோ அப்படி நான் உணர்கிறேன். குழந்தை அன்பிற்கு ஏங்குகிறது. அது கிடைக்காத தினால் பயத்துடனும், கோபத்துடனும் இருக்கிறது. சிலசமயம் எனக்கு யாரையாவது கொல்ல வேண்டும்போல் தோன்றும். அல்லது என்னையே கொன்றுகொள்ள வேண்டும் என்று தோன்றும். இந்த ஆசை மிகத் தீவிரமாக இருப்பதால் நான் எப்போதும் பயத்துடன் இருக்கிறேன். மேலும் எனக்கு எப்படி இந்தப் பயத்திலிருந்து விடுபடுவது என்று தெரியவில்லை.

ஒரு ஹிந்துவின் மனதிற்கும், ஐரோப்பியனின் மனதிற்கும் ஒரு வித்தியாச மிருப்பதைப் பார்க்கலாம். ஹிந்து மனம் ஒப்பிட்டுப் பார்க்கையில் எளிமையானது. ஐரோப்பிய மனம் மிகவும் சிக்கலானது. ஹிந்து அடிப்படையில் சாத்வீகமானவன். அவன் ஐரோப்பியனுடைய சுகவீனமான மனதை அறியமாட்டான்; ஐரோப்பியனுக்கு செய்ய வேண்டியது என்று நினைத்ததை நடத்திக் காட்டுவதில் உள்ள அயராத முயற்சியை, பெரும் பொது அறிவை ஹிந்து புரிந்து கொள்ள மாட்டான்.

**ம:** ஐரோப்பியனுக்கு அவனுடைய தர்க்கத்தால் வாதிடும் திறன் மிகவும் பெரியது. அவன் விவாதத்தின்போது தானே தன் மனதின்

தெளிவான நிலையைத் தாண்டிவிடுவான். அவனுடைய அறிவைப் பற்றிய சுய உறுதி தர்க்கத்தின் மேல் அவன் நம்பிக்கை வைத்திருப்பதால்தான்.

**கே:** ஆனால் சிந்திப்பதும், விவாதிப்பதும் மனதின் இயல்பான நிலை. மனம் வெறுமனே வேலை செய்வதை நிறுத்த முடியாது.

**ம:** அது வழக்கமான நிலையாக இருக்கலாம். ஆனால் அது இயல்பான நிலையாக இருக்க வேண்டியதில்லை. ஒரு இயல்பான நிலை வேதனையுடையதாக இருக்க முடியாது. ஆனால் ஒரு தவறான வழக்கம் பெரும்பாலும் முற்றிய வேதனையில் கொண்டு போய் விடும்.

**கே:** அது இயல்பான மற்றும் சாதாரணமான மனதின் நிலை அல்ல என்றால் எப்படி அதை நிறுத்துவது? மனதை அமைதிப்படுத்த ஒரு வழி இருக்க வேண்டும். ‘போதும், தயவு செய்து நிறுத்து, இந்த முடிவில்லாத வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வது போதும்’ என்று எத்தனை முறை நான் சொல்வது! ஆனால் என் மனம் நிறுத்தாது. உங்கள் மனம் எப்போதாவது நின்றிருக்கிறதா? சிறிது நேரம் வேண்டுமானால் ஒருவர் மனதை நிறுத்தலாம். நீண்ட நேரத்திற்கு முடியாது என்று நான் நினைக்கிறேன். ஆன்மீகவாதிகள் என்று சொல்லிக் கொள்பவர்கள் கூட தங்கள் மனதை அமைதிப் படுத்தத் தந்திரங்களைக் கையாள்கிறார்கள். செயல் படுவதை நிறுத்த, துரத்துவதை நிறுத்த, அசைவதை நிறுத்த எல்லா நேரமும் அவர்கள் மந்திரங்களைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள், பாடுகிறார்கள், துதிக்கிறார்கள், வேகமாகவோ, மென்மை யாகவோ சுவாசிக்கிறார்கள், உலுக்குகிறார்கள், சுத்துகிறார்கள், மனதை ஒருமுகப் படுத்துகிறார்கள், தியானிக்கிறார்கள், மெய் மறந்த நிலையைத் துரத்துகிறார்கள், நற்பண்புகளை வளர்க் கிறார்கள். அது மிகவும் துன்பமானதாக இல்லை என்றாலும், அபத்த மானது.

**ம:** மனம் இரு நிலைகளில் இருக்கிறது - தண்ணீரைப் போலவும், தேனைப் போலவும். தண்ணீரைச் சிறிது ஆட்டினாலும் அசையும். ஆனால் தேன் எவ்வளவு ஆட்டினாலும் உடனே அசைவற்ற நிலைக்குத் திரும்பும்.

**கே:** அதன் இயல்பில் மனம் அமைதியற்றது. அதை அமைதி அடையச் செய்யலாமே ஒழிய, அதுவே அமைதியானது அல்ல.

**ம:** உனக்குத் தீராத காய்ச்சல் இருக்கலாம். அதனால் எப்போதும் நடுங்கிக் கொண்டு இருப்பாய். ஆசைகளும் அச்சங்களும்தான் மனதை அமைதி இல்லாமல் செய்கின்றன. எல்லா எதிர்மறையான எண்ணங்களிலிருந்தும் விடுபட்டால் அது அமைதியடையும்.

**கே:** குழந்தையை எதிர் மறையான உணர்வுகளிலிருந்து காப்பாற்ற முடியாது. அது பிறந்த உடனேயே வேதனையையும், துக்கத்தையும் கற்றுக் கொள்கிறது. பசி ஒரு கொடூரமான ஆசான். அது சார்ந்திருப்பதையும், அச்சத்தையும் போதிக்கிறது. குழந்தை தாயை நேசிக்கிறது. ஏனெனில் தாய் உணவூட்டுகிறார். அவள் தாமதித்தால் அவளை வெறுக்கிறது. நம் விழிப்புணர்வற்ற மனம் முரண்பாடு களால் நிறைந்துள்ளது. அவை நிரம்பி வழிந்து விழிப்புணர்வில் நுழைகின்றன. நாம் ஒரு எரிமலையின் மேல் வாழ்கிறோம்; எப்போதும் அபாயத்தில் இருக்கிறோம். அமைதி யான மனம் உடைய மனிதர்களின் அருகாமையில் இருப்பது நல்ல ஒரு சுகமான அனுபவத்தைக் கொடுக்கும் என்பதை ஒப்புக் கொள் கிறேன். ஆனால் அவர்களை விட்டு அப்பால் சென்ற உடனேயே பழைய தொந்தரவு தொடங்கி விடுகிறது. இதனால்தான் நான் இந்தியாவிற்கு அடிக்கடி வருகிறேன் - என் குருவிடம் இருக்க.

**ம:** நீ பல்வேறு நிலைகள் மற்றும் மனோ பாவங்களுக்குள் வந்து போவதாகவும், ஊடுருவிச் செல்வதாக்வும் உன்னை நினைக் கிறாய். நான் உள்ளவற்றை உள்ளவாறு பார்க்கிறேன். கணப் பொழுதே ஆன நிகழ்வுகள், தங்களை அடுத்தடுத்த விரைவான தொடர்ச்சியாகக் காண்பித்துக் கொள்கின்றன. என்னிடமிருந்தே தங்களின் இருத்தலை ஏற்படுத்திக் கொண்டு, இருப்பினும் அவை கண்டிப்பாக நானோ அல்லது என்னுடையதோ அல்லாததாக. அபூர்வமாக உணரக் கூடிய ஏதொன்றும் நான் அல்ல. எதற்கும் உட்பட்டவனும் அல்ல. நான் மிக எளிமையாகவும், முழுமை யாகவும் சுதந்திரமானவன். அதை எதிர்ப்பிற்கும், மறுப்பிற்கும் பழக்கப்பட்ட உன் மனதால் கிரகிக்க முடியாது. நான் சொல்வதை முழு அர்த்தத்துடன் சொல்கிறேன்: நான் எதையும் எதிர்க்கவோ,

மறுக்கவோ வேண்டியதில்லை. ஏனெனில் நான் எதற்கும் எதிராகவோ, மறுப்பாகவோ இருக்க முடியாது என்று எனக்குத் தெளிவாகத் தெரியும். நான் அப்பாற்பட்ட நிலையில், ஒரு வித்தியாசமான பரிமாணத்தில் உள்ளேன். என்னை ஏதோ ஒன்றுடன் அடையாளப்படுத்தியோ, அல்லது எதிர்ப்பாகவோ பார்க்காதே; ஆசையும் அச்சமும் இல்லாத இடத்தில் என்னைப் பார். உன்னுடைய அனுபவத்தை இப்போது சொல். முற்றிலுமாக எல்லா கண நேரத்தலைகளிலிருந்தும் சம்பந்தப்படாமல் இருப்பதாக நீயும் உணர்கிறாயா?

**கே:** ஆமாம். எப்போதாவது. ஆனால் ஒரு அபாயமான உணர்வு உள்ளே ஏற்படுகிறது. அப்போது மற்றவர்களோடு உள்ள தொடர்புகளுக்கு வெளியே வந்து தனிமைப் படுத்தப்பட்டது போல் உணர்கிறேன். இங்குதான் நம் மனப்பாங்கில் வித்தியாசம் உள்ளது. ஹிந்துவிடம் உணர்ச்சிகள் எண்ணங்களைத் தொடர் கின்றன. ஒரு ஹிந்துவிடம் ஒரு கருத்தைக் கொடுத்தால் அவருடைய உணர்ச்சிகள் தூண்டப்படும். மேற்கத்தியவரிடம் அது எதிர்மாறானது. அவரிடம் ஒரு உணர்ச்சியைக் கொடுத்தால் அவர் ஒரு கருத்தை ஏற்படுத்துவார். உங்கள் கருத்துக்கள் அறிவுபூர்வமாக மிகவும் ஈர்ப்புடையவை. ஆனால் உணர்ச்சி அளவில் என்னால் அதற்கு எதிர்வினை புரிய முடியாது.

**ம:** உன் புத்தியை ஒதுக்கிவிடு. இந்த விசயங்களில் அதை உபயோகப் படுத்தாதே.

**கே:** என்னால் செயல் படுத்த முடியாத அறிவுரைகளினால் என்ன பயன்? இவை எல்லாம் கருத்துக்கள். நீங்கள் உணர்வுபூர்வமாக அவற்றிற்கு எதிர்வினை புரியச் சொல்கிறீர்கள். ஏனெனில் உணர்ச்சிகள் இல்லாமல் செயல் இருக்காது.

**ம:** செயலைப் பற்றி எதற்குப் பேசுகிறாய்? எப்போதாவது நீ செயல்படுகிறாயா? ஒரு அறியாத சக்தி செயல்படுகிறது. ஆனால் நீ செயல்படுவதாகக் கற்பனை செய்துகொள்கிறாய். என்ன நடக் கிறதோ அதில் எந்தவிதத்திலும் உன் செல்வாக்கு செல்லுபடியா காமல் நீ கவனித்துக் கொண்டிருக்கிறாய்.

**கே:** என்னால் ஒன்றும் செய்ய முடியாது என்று ஏற்றுக்கொள்ள ஏன் ஒரு மிகப் பெரிய தடை எனக்குள் இருக்கிறது?

**ம:** ஆனால் உன்னால் என்ன செய்ய முடியும்? நீ அறுவை சிகிச்சைக்காக மயக்க மருந்து கொடுக்கப்பட்டுள்ள நோயாளியைப் போல் உள்ளாய். நீ விழித்து எழும்போது அறுவை சிகிச்சை முடிந்துவிட்டது என்று அறிகிறாய். நீ ஏதாவது செய்தாய் என்று சொல்ல முடியுமா?

**கே:** ஆனால் நான்தான் அறுவை சிகிச்சை செய்துகொள்ளலாம் என்று முடிவு செய்தவன்.

**ம:** கண்டிப்பாக இல்லை. உன் சுகவீனம் ஒருபுறம், மருத்துவர் மற்றும் குடும்பத்தாருடைய வற்புறுத்தல் ஒருபுறம் உன்னை முடிவெடுக்கச் செய்தது. அது உன் முடிவல்ல. அந்த முடிவில் உன் பங்கு ஒரு பகுதிதான்.

**கே:** இருப்பினும் நீங்கள் சொல்வது போல் அவ்வளவு இயலாத நிலையில் நான் இல்லை என்று உணர்கிறேன். நான் நினைப்பது எதையும் என்னால் செய்ய முடியும் என்று நினைக்கிறேன். ஆனால் எப்படி என்றுதான் தெரியவில்லை. என்னிடம் இல்லாதது சக்தி அல்ல; அறிவு. எனக்குச் செயல் புரிய வழிமுறைகளைக் கொடுங்கள். நான் எதை வேண்டுமானாலும் சாத்தியமாக்குவேன்.

**ம:** வழி தெரியாதது சக்தி இல்லாததைப் போன்றே மோசமானது! ஆனால் இந்தச் சமாச்சாரத்தை இத்துடன் விட்டுவிடுவோம்; நாம் தற்போதைக்குத் திக்கற்றவர்கள் என்பதை அறிந்துகொண்டால் ஏன் திக்கற்றவர்களாக உணர்கிறோம் என்பது முக்கியமில்லை.

எனக்கு 74 வயதாகிறது. இருப்பினும் நான் 74 வருடங்களுக்கு முன்பிருந்த குழந்தை. எல்லா மாற்றங்கள் இருந்தாலும் நான் அதே குழந்தை என்று தெளிவாக அறிகிறேன். என் குரு சொன்னார்: 'அந்தக் குழந்தை, இப்போது கூட நீயாக உள்ளது, அது உன் மெய்யான ஸ்வரூபம். எங்கு 'நான்' என்பது இன்னும் தூய்மையாக, 'இது நான்', அல்லது 'அது நான்' என்பவற்றால் மாசு படுத்தப் படாமல் இருக்கிறதோ, அந்தத் தூய இருத்தலாகிய நிலைக்குத் திரும்பச் செல்' என்று. உனக்குச் சுமையாக இருப்பதெல்லாம்

பொய்யான சுய அடையாளங்கள் - அவை எல்லாவற்றையும் ஒழித்துவிடு. என் குரு என்னிடம் சொன்னார் - 'என்னை நம்பு. நான் சொல்கிறேன் - நீ தெய்வீகமானவன். இதைத் தீர்க்கமான உண்மையாக எடுத்துக் கொள். உன் சந்தோசம் தெய்வீகமானது, உன் துக்கமும் கூட தெய்வீகமானது. எல்லாமும் கடவுளிடமிருந்து வருகிறது. இதை எப்போதும் நினைவில் கொள். நீ கடவுள். உன் விருப்பம் மட்டுமே நிறைவேறும்' என்று. நான் அவரை நம்பினேன். விரைவாக அவருடைய வார்த்தைகள் எவ்வளவு ஆச்சரியமான உண்மை மற்றும் துல்லியமானவை என்று அறிந்தேன். என் மனதை 'நான் கடவுள், நான் அற்புதமானவன், நான் அப்பாற்பட்டவன்' என்னும் நினைவுகளால் வரையறுத்துக் கொள்ளவில்லை. தூய இருத்தலாகிய 'நான்' என்பதில் என் மனதைக் குவித்து, அதிலேயே இருக்க வேண்டும் என்னும் அவருடைய குறிப்பை வெறுமனே பின்பற்றினேன். மனதில் 'நான்' என்பதை மட்டுமே வைத்துக் கொண்டு மணிக்கணக்கில் அமர்ந்திருப்பேன். விரைவாக அமைதியும், ஆனந்தமும், எல்லாவற்றையும் அரவணைக்கும் அன்பும் என் இயல்பான நிலையாக மாறியது. அதில் எல்லாமும் மறைந்துவிட்டன - நான், என் குரு, நான் வாழும் வாழ்க்கை, என்னைச் சுற்றி உள்ள உலகம் ஆகிய அனைத்தும். அமைதியும், ஆழங்காணமுடியாத மௌனமும் மட்டுமே மிஞ்சியது.

**கே:** இது எளிமையானதாகவும், சுலபமானதாகவும் தோன்றுகிறது. ஆனால் கண்டிப்பாக அவை அப்படி இல்லை. சில சமயம் ஆனந்தமான அமைதியை உடைய உன்னதமான நிலை என்னுள் ஏற்படுகிறது. அப்போது நான் பார்த்து அதிசயப்படுவேன்: 'எவ்வளவு இயல்பாக இது வருகிறது, எவ்வளவு தெரிந்ததாக இது இருக்கிறது, எவ்வளவு முழுமையாக என்னுடையதாக இருக்கிறது. இவ்வளவு நெருக்கமாக உள்ள நிலைக்கு ஏன் இவ்வளவு கடினமாகப் பிரயத்தனப் படவேண்டும்? இந்த முறை கண்டிப்பாக அது என்னிடம் தங்கப் போகிறது' என்று. இருப்பினும் இவை எல்லாம் சீக்கிரமே கரைந்து போய், இது பரம்பொருளின் ஒரு ருசியா, அல்லது மற்றுமொரு மனக் கோளாறா என்று என்னை ஆச்சரியத்தில் விடுகின்றன. அது பரம்பொருள் என்றால் ஏன் போக வேண்டும்? இந்தப் புதிய நிலையில் என்னை நிலையாக இருக்கச்

செய்ய சில தனித்தன்மை வாய்ந்த பழக்கம் தேவைப் படலாம். அந்த அதிக மகத்துவமான அனுபவம் வரும் வரை இந்த ஒளிந்து கண்டுபிடிக்கின்ற விளையாட்டு தொடரவேண்டும்.

**ம:** வித்தியாசமான மற்றும் திடீரென்ற ஏதோ ஒன்றை, உன்னதமான வெடிப்பைப் போன்ற ஒன்றை நீ எதிர்பார்ப்பதுதான் வெறுமனே உன் சுயம் அறிதலைத் தடுக்கிறது மற்றும் தாமதிக்கிறது. நீ வெடித்தலை எதிர்பார்க்கக் கூடாது. ஏனெனில் வெடித்தல் முன்பே ஏற்பட்டு விட்டது - நீ பிறந்த கணத்திலேயே, உன்னை இருத்தல் - அறிதல் - ஆனந்தம் (சத்-சித்-ஆனந்தம்) என்று புரிந்து கொண்ட உடனேயே. நீ ஒரே ஒரு தவறைத்தான் செய்கிறாய்: அகத்தே உள்ளதை புறமாகவும், புறத்தே உள்ளதை அகமாகவும் எடுத்துக் கொள்வதுதான். உனக்கு உள்ளே உள்ளதை வெளியே உள்ளதாகவும், வெளியே உள்ளதை உனக்குள் உள்ளதாகவும் எடுத்துக் கொள்கிறாய். மனமும், உணர்ச்சிகளும் புறவயப் பட்டவை. ஆனால் அவற்றை நீ அகத்தில் உள்ளவையாகவும், நெருக்கமானவையாகவும் எடுத்துக் கொள்கிறாய். நீ உலகத்தை புறப் பொருளுக்குரியதாகப் பார்க்கிறாய். ஆனால் அதுவோ முற்றிலுமாக உன் மனதின் உருவாக்கம். அதுதான் அடிப்படைக் குழப்பம். எந்தப் புது வெடிப்பும் அதைச் சரி செய்யாது. அதிலிருந்து வெளியேற நீ சிந்திக்க (விசாரம் செய்ய) வேண்டும். வேறு வழி இல்லை.

**கே:** என் எண்ணங்கள் அவை விரும்பியபடி வந்து போய்க் கொண்டிருக்கும் போது என்னால் எப்படி அவற்றிலிருந்து வெளியே வர முடியும்? அவற்றின் முடிவற்ற தொணதொணப்பு என் கவனத்தைத் திசைதிருப்பி, சோர்வடையச் செய்கின்றன.

**ம:** தெருவில் உள்ள போக்குவரத்தை கவனிப்பது போல உன் எண்ணங்களைக் கவனி. மக்கள் வந்து போகிறார்கள். நீ எதிர்வினை புரியாமல் பார்த்துக் கொண்டிருப்பாய். ஆரம்பத்தில் அது அவ்வளவு சுலபமல்ல. ஆனால் சிறிது பயிற்சியால் உன் மனம் ஒரே நேரத்தில் பல நிலைகளில் இயங்க முடியும் என்று நீ காண்பாய். அவற்றைப் பற்றிய பிரக்ஞையும் உனக்கு இருக்கும். ஏதாவது ஒரு குறிப்பிட்ட நிலையில் உனக்குத் தனிப்பட்ட ஆர்வம் இருந்தால் உன் கவனம்

அதில் சிக்குண்டு, மற்ற நிலைகளை மறைத்து விடும். அப்போதும் கூட, மறைக்கப் பட நிலைகளில், விழிப்புணர்வுப் புலத்திற்கு வெளியே வேலை நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

உன் ஞாபகத்துடனும், எண்ணத்துடனும் போராடாதே; 'நான் யார்?', 'நான் எதனால் பிறந்தேன்?', 'என்னைச் சுற்றி உள்ள பிரபஞ்சம் எங்கிருந்து வந்தது?', 'எது மெய்யானது, எது தற்காலிகமானது?' என்பது போன்ற முக்கியமான கேள்விகளை உன் கவனப் பிரதேசத்திற்குள் சேர்க்க மட்டும் முயற்சி செய். நீ அக்கறை செலுத்தாமல் இருந்தால் எந்த ஞாபகமும் நிலைக்காது. உணர்ச்சி பூர்வமான இணைப்புதான் தொடர்ந்த பந்தத்தை நீடிக்கச் செய்கிறது. நீ எப்போதும் இன்பத்தை நாடுகிறாய், துன்பத்தைத் தவிர்க்கிறாய். எப்போதும் மகிழ்ச்சியையும், அமைதியையும் வேண்டுகிறாய். உன் மகிழ்சிக்கான தேடுதல்தான் உன்னைத் துயர் மிகுந்தவனாக உணரச் செய்கிறது என்று உனக்குத் தெரிய வில்லையா? மற்றொரு வழியை முயற்சி செய்: வேதனைக்கும், சந்தோசத்திற்கும் விருப்பு, வெறுப்பு கொள்ளாதே. அதை வேண்டவோ, மறுக்கவோ செய்யாதே. உன் முழுக் கவனத்தையும் காலவரையறை இன்றி இருக்கும் 'நான்' என்பதின் மீது செழுத்து. விரைவில் அமைதியும், ஆனந்தமும் உன் இயல்பான நிலை என்பதையும், அதைக் குறிப்பிட்ட சில வழிகளில் தேடுவதுதான் தொந்தரவு செய்கிறது என்றும் அறிவாய். இந்தத் தொந்தரவை நிறுத்து. அவ்வளவுதான். தேடுவது அவசியமில்லை; உன்னிடம் முன்பே இருப்பதை நீ தேட மாட்டாய். நீயே கடவுள், பரம சத்ய ஸ்வரூபம். ஆரம்பிப்பதற்கு என்னை நம்பு. இந்த நம்பிக்கையை பக்தி- குருவின் மீது கொண்டுள்ள நம்பிக்கை என்று சொல்வார்கள். அது உன்னை முதலடி எடுத்து வைக்க ஏதுவாக்கும். பிறகு உன் சொந்த அனுபவம் உன் நம்பிக்கையை உறுதிப் படுத்தும். வாழ்கையின் எல்லா நிலைகளிலும் நம்பிக்கை அவசியம்; அது இல்லாமல் சிறிதளவே நிறைவேற்ற முடியும். ஒவ்வொரு செயல்பாடும் நம்பிக்கையின் விளைவே. உன் தினசரி உணவைக் கூட நம்பிக்கையின் அடிப்படையில்தான் உண்கிறாய். நான் உனக்குச் சொன்னவைகளை நீ ஞாபகம் வைத்திருந்தால், நீ எல்லாவற்றையும் அடைவாய். நான் உனக்கு மறுபடியும்

சொல்கிறேன்: நீ எல்லாவற்றிலும் ஊடுருவி இருக்கின்ற, எல்லா வற்றையும் கடந்துள்ள பரம்பொருள். அதுபோல நடந்துகொள். சிந்திப்பது, உணர்வது, செயல்படுவது ஒத்திசைந்து நடக்கட்டும். அப்போது சீக்கிரமே நான் சொல்வதன் ப்ரத்தியட்சமான அனுபவம் உனக்குள் உதிக்கும். எந்த முயற்சியும் தேவை இல்லை. அதன் மீது நம்பிக்கை வைத்துச் செயல்படு. நான் உன்னிடமிருந்து எதையும் எதிர்பார்க்கவில்லை என்பதைப் புரிந்துகொள். உன்மேல் உள்ள அக்கறையினால் நான் பேசுகிறேன். ஏனெனில் எல்லாவற்றிற்கும் மேலாக, நீ உன்னை நேசிக்கிறாய், நீ பத்திரமாகவும், சந்தோச மாகவும் இருக்க வேண்டுகிறாய். அதற்கு வெட்கப்படாதே, அதை மறுக்காதே. தன்னை நேசிப்பது இயற்கையானது மற்றும் நல்லது. எதை நேசிக்கிறாய் என்பதை நீ துல்லியமாக அறிந்துகொள்வதுதான் முக்கியம். நீ நேசிப்பது உடலை அல்ல; நீ நேசிப்பது தெரிந்து கொள்கின்ற, உணர்கின்ற, சிந்திக்கின்ற, செயல்படுகின்ற, எதிர் பார்க்கின்ற, முயல்கின்ற, உருவாக்குகின்ற உயிரின் அனுபவத்தை. அந்த உயிரை நேசிக்கின்ற அன்பு, அதுதான் நீ, அவ்வளவுதான். அதை எல்லாப் பிரிவினைகளையும், வரையறைகளையும் கடந்து முழுமையாக அறிந்து கொள். உன் எல்லா ஆசைகளும் அதில் இணைந்துவிடும். ஏனெனில் பெரியது சிறியதை உள்ளடக்கியது. ஆகையால் உன் மெய்யான சுயத்தைக் கண்டுபிடி. ஏனெனில் அதைக் கண்டு பிடிப்பதால் எல்லாவற்றையும் நீ கண்டுபிடிப்பாய்.

இருத்தல் எல்லோருக்கும் பிடிக்கும். ஆனால் சிலர் மட்டும்தான் அதன் முழுமையை அறிவார்கள். உன் மனதில் 'நான்' (சத்), 'எனக்குத் தெரியும்'(சித்), 'நான் நேசிக்கிறேன்'(ஆனந்தம்) என்பவை உறுதியானால் நீ அதை அறிவாய். இந்த வார்த்தைகளின் மிக ஆழமான அர்த்தத்தைப் புரிந்துகொள்ள வேண்டும் என்னும் தீவிர ஆசையைக் கொண்டிருப்பது மட்டும்தான் தேவை.

**கே:** என்னை 'நான் கடவுள்' என்று நினைக்கலாமா?

**ம:** உன்னை ஒரு கருத்துடன் அடையாளப் படுத்திக் கொள்ளாதே. கடவுள் என்பதை அறியாதது என்று அர்த்தப் படுத்தினால், 'நான் என்ன என்று எனக்குத் தெரியாது' என்று நீ சொல்வதாகும். நீ கடவுளை அறிந்தால் உன்னை அறிவாய்.

அப்போது அதை நீ சொல்ல வேண்டியதில்லை. 'நான்' என்னும் எளிய உணர்வுதான் மிகச் சிறந்தது. அதில் பொறுமையாக உறுதியுடன் ஆழ்ந்திரு. இங்கு பொறுமைதான் புத்திசாலித்தனம்; தோல்வியைப் பற்றி நினைக்காதே. இந்த முயற்சியில் தோல்வியே இருக்க முடியாது.

**கே:** என் எண்ணங்கள் இவ்வாறு செய்ய என்னை விட மாட்டா.

**ம:** அதற்குக் கவனத்தைச் செலுத்தாதே. அவற்றுடன் போராடாதே. அவற்றைப் பற்றி ஒன்றும் செய்யாதே. அவை என்னவாக இருந்தாலும் இருக்கட்டும். உன் போராட்டம் அவற்றிற்கு உயிர் கொடுத்துவிடும். வெறுமனே ஒதுக்கித்தள்ளு. அவற்றின் ஊடாகப் பார். 'எது நடந்தாலும் நான் இருப்பதால் நடக்கிறது' என்பதை ஞாபகம் வைத்திரு. எல்லாமும் நீ இருப்பதை நினைவூட்டுகின்றன. அனுபவப் பட நீ இருக்க வேண்டும் என்னும் நிஜத்தின் முழு அனுகூலத்தையும் எடுத்துக்கொள். சிந்திப்பதை நீ நிறுத்த வேண்டியதில்லை. வெறுமனே ஆர்வத்துடன் இருப்பதை நிறுத்து. சுயநலமின்மைதான் விடுதலை அளிக்கும். எதையும் பிடித்துக் கொள்ளாதே. அவ்வளவுதான். உலகம் வளையங்களால் ஆனது. கொக்கிகள் எல்லாம் உன்னுடையவை. கொக்கிகளை நிமிர்த்தினால் எதுவும் உன்னைப் பிடித்துக் கொள்ளாது. உன் பழக்க அடிமைத்தனத்தை விட்டு விடு. வேறு எதையும் விட வேண்டிய தில்லை. உன் நன்மைக்காகத் தேடிப் பெறுகின்ற வழக்கத்தையும், பலனை எதிர்பார்ப்பதையும் நிறுத்து. அப்போது பிரபஞ்சத் திலிருந்து முக்தி உன்னுடையதுதான். பிரயத்தனமின்றி இரு.

**கே:** வாழ்க்கையே பிரயத்தனம்தான். பல வேலைகளைச் செய்ய வேண்டி இருக்கிறது.

**ம:** செய்ய வேண்டியதைச் செய். அதைத் தடுக்காதே. உன் சமநிலை பலமானதாக இருக்க வேண்டும். அது கணத்திற்குக் கணம் சரியானதைச் செய்வதை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். வளர விருப்பமில்லாத குழந்தையைப் போல் இருக்காதே. ஒரேமாதிரியான பாவனைகளும், தோரணைகளும் உனக்கு உதவமாட்டா. உன் எண்ணத்தின் தெளிவையும், நோக்கத்தின் தூய்மையையும், செயலின் ஒழுங்கையும் முழுவது

மாக நம்பு. நீ தவறாகப் போக வாய்ப்பில்லை. அன்பு செலுத்தாத தாயின் அன்பில்லாத குழந்தை என்பதெல்லாம் மனதின் குழப்பம் மட்டுமே. கடந்து செல். எல்லாவற்றையும் பின்னால் விட்டுவிடு.

ம: எதையும் நிரந்தரமாக விட முடியுமா?

**கே:** நீ இருபத்தி நான்கு மணி நேரமும் பரமானந்தத்தில் இருக்க வேண்டுகிறாய். பரமானந்த நிலை வரும்; போகும். வருவதும் போவதும் அவசியம். ஏனெனில் மனித மூளை பதற்றத்தை நீண்ட நேரம் தாக்குப் பிடிக்க முடியாது. உன் மூளை தீர்க்கமாகத் தூய்மையாகவும், நுண்ணியதாகவும் இருந்தால் ஒழிய ஒரு தொடர்ந்த பரமானந்தம் அதை எரித்துவிடும். இயற்கையில் எதுவும் நிலையாக நிற்பதில்லை. எல்லாமும் துடிக்கின்றன, தோன்றி மறைகின்றன. இதயம், மூச்சு, ஜீரணம், உறக்கம் மற்றும் விழிப்பு, பிறப்பு மற்றும் இறப்பு - எல்லாமும் அலைகளைப் போல வந்து போகின்றன. லயம், கால அளவு முறை, உச்ச எல்லைகளின் ஒத்திசைந்த மாறி மாறித் தோன்றும் தன்மைதான் நியதி. வாழ்கையின் அடிப்படைப் படிவத்தை எதிர்த்துப் போராடுவதில் எந்தப் பயனும் இல்லை. மாற்ற முடியாததை நீ தேடினால் அனுபவங்களுக்கு அப்பால் செல். 'நான்' என்பதை எல்லா நேரமும் ஞாபகம் வைத்திரு என்று நான் சொன்னால் 'நான் என்பதற்குத் திரும்பத் திரும்ப வா' என்ற அர்த்தத்தில் சொன்னேன். மௌனத்தைத் தவிர வேறு எந்தக் குறிப்பிட்ட எண்ணமும் மனதின் இயல்பான நிலையாக இருக்க முடியாது. மௌனத்தைப் பற்றிய கருத்து அல்ல; மௌனமேதான். மனம் இயற்கையான நிலையில் இருக்கும்போது ஒவ்வொரு அனுபவத்திற்குப் பிறகும் அது மௌனத்திற்குத் தன்னிச்சையாகவே திரும்புகிறது. உண்மையில் ஒவ்வொரு அனுபவமும் நிசப்தத்தைப் பின்னணியாகக் கொண்டு ஏற்படுகிறது.

இப்போது நீ இங்கு கற்றுக் கொண்டது விதையாக இருக்கும். வெளிப்படையாக நீ அதை மறக்கலாம் . ஆனால் அது உயிருடன் இருக்கும். சரியான பருவத்தில் முளைத்து, வளர்ந்து, பூத்து, கனிகளைக் கொடுக்கும். எல்லாமும் தானாக நடக்கும். நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை. அதைத் தடுக்காமல் இருந்தால் போதும்.

# நிசர்க யோகா

**- மோரிஸ் ஃப்ரைட்மேன்**

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் எளிய இல்லத்தில் மின்சார விளக்குகள் மற்றும் தெருவின் போக்குவரத்துச் சத்தத்தைத் தவிர, மனித சரித்திரத்தின் எந்தக் காலத்தில் தான் இருக்கிறேன் ஒருவர் அறிய முடியாது. அவருடைய சிறு அறையில் ஒரு காலமற்ற தன்மை இருக்கும். அங்கு விவாதிக்கப்பட்ட கருத்துக்கள் காலமற்றவை - எல்லாக் காலத்திலும் செல்லுபடியாகக் கூடியவை. அவற்றை விவரிக்கப்பட்ட விதமும், ஆராயப்பட்ட விதமும் காலமற்றவை. மிகவும் புராதனமானதும், சாசுவதமாகப் புதியதானதுமான விஷயங்கள் அங்கு கையாளப்பட்டன.

அங்கு நடந்த விவாதங்களும், கொடுக்கப்பட்ட உபதேசங்களும் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பும், இப்போதிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு பின்பும் ஒன்றாகத்தான் இருக்கும். எப்போதும் உணர்வுடன் இருப்பவர்கள் தாங்கள் உணர்வுடன் இருப்பதான நிஜத்தைப் பற்றியும், அவற்றின் காரணம் மற்றும் நோக்கத்தைப் பற்றியும் விசாரம் செய்து கொண்டிருப்பார்கள். ''எங்கிருந்து 'நான்'என்பது வந்தது?'' ''நான் யார்?'' - இம்மாதிரியான கேள்விகளுக்கு ஆரம்பமும், முடிவும் இல்லை. அவற்றிற்கான விடைகளை அறிவது மிகவும் முக்கியம். ஏனெனில் தன்னைப் பற்றிய முழுப் புரிதல் இல்லாமல், காலத்திலும், காலமற்ற தன்மையிலும் வாழ்க்கை இருக்கிறது - ஆனால் ஒரு கனவாக, நம் மேல் நமக்குத் தெரியாத, நம்மால் புரிந்து கொள்ள முடியாத காரணங்களால் திணிக்கப்பட்டதாக.

மஹராஜ் ஒரு அதிகக் கல்வி கற்ற மனிதர் அல்ல. அவருடைய தாய்மொழியான மராத்தியில் அவருக்குப் புலமை இல்லை; அவர்

வல்லுநர்களை மேற்கோள் காட்டவில்லை; சாஸ்திரங்கள் அரிதாகத்தான் குறிப்பிடப்பட்டன. இந்தியாவின் ஆச்சரிய கரமான, செழுமையான ஆன்மீகப் பாரம்பரியம் அவரிடம் வெளிப்படையாக இல்லாமல் உள்ளார்ந்து இருந்தது. அவரைச் சுற்றி எந்த ஒரு ஆசிரமும் எழுப்பப்படவில்லை. அவரைப் பின்பற்றியவர்களில் பெரும்பாலானவர்கள் மஹராஜுடன் அவ்வப்போது ஒரு மணி நேரத்தைச் செலவிடக் கிடைக்கும் வாய்ப்பைப் போற்றும், வேலைக்குச் செல்லும் எளிய மக்கள்.

எளிமையும், தாழ்மையும்தான் அவருடைய வாழ்க்கை மற்றும் போதனைகளின் அடிப்படை. புறத்திலும், அகத்திலும் அவர் ஒருபோதும் உயர்ந்த இடத்தை எடுத்துக் கொண்டதில்லை. அவர் குறிப்பிட்டுப் பேசுகின்ற இருத்தலின் சாரத்தைத் தன்னில் எவ்வளவு நெருக்கமாகப் பார்த்தாரோ அவ்வாறே மற்றவர்களுக்குள்ளும் பார்த்தார். தனக்கு அதைப் பற்றித் தெரியும்; மற்றவர்களுக்கு இன்னும் தெரியவில்லை என்றும், ஆனால் இந்த வேறுபாடு தற்காலிகமானது; மனதிற்கும், அதன் எப்போதும் மாறுகின்ற உள்ளடக்கத்திற்கும் தவிர சிறிதளவே முக்கியமானது என்றும் அவர் ஒப்புக் கொண்டார். அவருடைய யோகாவைப் பற்றிக் கேட்ட போது, எந்த வழிமுறையும் கிடையாது; எந்த வேத சாஸ்திரமோ, அண்டப் பிறப்புக் கோட்பாடோ, மனோதத்துவ இயலோ, தத்துவமோ தன்னிடம் கொடுப்பதற்கு இல்லை என்றார். அவருக்குத் தன்னுடைய மற்றும் தான் பேசுவதைக் கேட்பவர் களுடைய மெய்யான தன்மை தெரிந்திருந்தது. கேட்பவர், கண்கூடாக அதைச் சாதாரணமாகவும், நேரடியாகவும் பார்க்க முடிவதில்லை. ஏனெனில் அவருக்குத் தெரிவதெல்லாம் அவருடைய புலன்களால் தூண்டப்பட்ட மனதின் மூலம்தான் தெரியும். அந்த மனமே ஒரு புலன் என்பதை அவர் சந்தேகிக்கக்கூட மாட்டார்.

**'நிசர்க யோகா'** – மஹராஜ் அவர்களின் 'இயற்கை யோகா' மிகவும் எளிமையானது. எல்லாமாகவும் ஆகக் கூடிய மனம் அதன் சுய இருத்தலையே - இது அல்லது அதுவாக, இங்கு அல்லது அங்கு, அப்போது அல்லது இப்போது என்றில்லாமல், காலமற்ற இருத்தலாக அடையாளம் கண்டு ஊடுருவ வேண்டும்.

இந்தக் காலமற்ற இருத்தல்தான் உயிருக்கும், விழிப்புணர்விற்கும் ஆதாரம். காரணமற்ற காரணமானதால் காலம், இடம் மற்றும் காரணத்தன்மை ஆகியவற்றை வைத்துப் பார்த்தால் அது முழு வலிமையுடையது. அது ஆரம்பமோ, முடிவோ இல்லாமல் எப்போதும் இருப்பதால் அது எல்லாவற்றிலும் ஊடுருவுவது, சாசுவதமானது. காரணமற்றதால் அது சுதந்திரமானது; எல்லா வற்றிலும் ஊடுருவுவதால் அது அறியும்; பிரிவற்றதால் அது மகிழ்ச்சியோடு இருப்பது. அது வாழ்கிறது, நேசிக்கிறது, பிரபஞ்சத்தை வடிவமைப்பதாலும், மறு வடிவமைப்பதாலும் முடிவற்ற வேடிக்கை உடையது. ஒவ்வொரு மனிதனும் அதைக் கொண்டிருக்கிறான். ஒவ்வொருவரும் அதுதான். ஆனால் எல்லோருக்கும் தங்களை உள்ளபடி தெரியாது. அதனால் தங்களைப் பெயர், வடிவம் மற்றும் விழிப்புணர்வின் உள்ளடக்கம் ஆகியவற்றில் அடையாளம் காண்கிறார்கள்.

இந்தத் தன்னுடைய மெய்மையைத் தவறாகப் புரிந்து கொள்ளலைச் சரிப்படுத்த ஒரே வழி ஒருவருடைய மனதின் செயல் படும் வழிகளை முழுமையாக அறிந்து, அதைச் சுயம் அறிதலுக்கான ஒரு கருவியாக மாற்றுவதுதான். உயிர்வாழ்வதற்கான போராட்டத்தில் உள்ளபடியே மனம் ஒரு கருவி. இயற்கையை வெல்ல அது இயற்கையின் விதிகளையும், வழிமுறைகளைகயும் கற்றுக் கொள்ள வேண்டும். மனம் அதைச் செய்தது; செய்து கொண்டிருக்கிறது. ஏனெனில் மனமும், இயற்கையும் ஒன்றோடு ஒன்று இணைந்து செயல்பட்டால் உயிர் வாழ்வதை உயர்ந்த நிலைக்கு உயர்த்தலாம். ஆனால் இந்தச் செயல்பாட்டின் போது மனம் குறியீடுகளாகச் சிந்திப்பது மற்றும் தகவல் பரிமாறுவது என்னும் கலையையும், மொழியின் கலையையும், திறமையையும் பெற்றுக் கொண்டுவிட்டது. வார்த்தைகள் முக்கியமாகிவிட்டன. கருத்துக்களும், கருத்துச் சுருக்கங்களும் மெய்த் தோற்றத்தைப் பெற்றுவிட்டன; மெய்யிற்குப் பதிலாக கருத்து உருவாக்கம் இடம் கொண்டுவிட்டது. இதனால் மனிதன் வார்த்தைக் கூட்டத்தால் சூழப்பட்டு, வார்த்தைகளால் ஆளுமைப் படுத்தப்பட்ட ஒரு வாய் மொழியான உலகத்தில் வாழ்கிறான்.

வெளிப்படையாகப் பொருட்களையும், மக்களையும் கையாள வார்த்தைகள் மிகவும் உபயோகமானவை. ஆனால் அவை நம்மை முழுவதும் குறியீட்டாலான உலகத்தில் வாழ வைக்கின்றன. அதனால் அவை நிஜமல்ல. இந்தச் சொல்மயமான மனச் சிறையை உடைத்து, மெய்மைக்குள் புக ஒருவர் தன் கவனத்தை உலகத்தி லிருந்து மாற்றி, வார்த்தைகள் எவற்றைக் குறிக்கின்றனவோ அதன்மீதே வைக்க வேண்டும்.

மிகச் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படுவதும், உணர்ச்சி களால் நிரப்பப்பட்டதுமான வார்த்தை 'நான்'. மனம், உடல் மற்றும் பூரணம் ஆகிய ஒவ்வொன்றையும் அதில் சேர்க்க முயற்சிக்கிறது. நடைமுறையில் அது நேரடியான, நெருக்கமான, அதி முக்கியமான ஒரு அனுபவத்தைச் சுட்டிக் காண்பிப்பதாக இருக்கிறது. இருத்தலும், ஒருவர் இருப்பதாக அறிதலும் மிகவும் முக்கியமானவை. ஒன்றில் ஆர்வத்துடன் இருக்க, ஒருவருடைய ஒவ்வொரு ஆசை மற்றும் அச்சத்தின் மையப் புள்ளியாக உள்ள விழிப்புணர்வுடைய இருத்தலுக்குத் தொடர்புடையதாக அது இருக்கவேண்டும். ஒவ்வொரு ஆசையின் உச்ச இறுதியான நோக்கம் இருத்தல் உணர்வை மேம்படுத்துவதும், தீவிரப் படுத்துவதும் ஆகும். அதேசமயம் எல்லா அச்சங்களும் அதன் சாரத்தில் சுய அழிவைப் பற்றியதே.

மிகவும் நிஜமாகவும், இன்றியமையாததாகவும் உள்ள 'நான்' என்னும் உணர்விற்குள் அதன் ஆதாரத்தை அடைய ஆழ்ந் திருப்பதே 'நிசர்க யோகா'வின் மையக் கருத்து. தொடர்ச்சியாக இல்லாமல் 'நான்' என்னும் உணர்வு ஊற்றெடுக்கவும், திரும்பிச் செல்லவும் அது ஒரு ஆதாரத்தைக் கொண்டிருக்க வேண்டும். விழிப்புணர்வுடைய இருத்தலின் இந்தக் காலமற்ற ஆதாரத்தைத்தான் மஹராஜ் சுயத்தின் இயல்பு, சுயத்தின் இருத்தல், ஸ்வரூபம் என்கிறார்.

ஒருவருடைய சுய இருத்தலுடனான உச்ச உயர்வான அடையாளத்தை அறியும் வழிமுறைகளைப் பற்றி மஹராஜ் பொறுப்பெடுத்துக் கொள்வதில்லை. மெய்மைக்கு ஒவ்வொரு வரும் தங்களுடைய சொந்த வழியைக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்குப் பொதுவான வழிமுறை எதுவும் கிடையாது. ஆனால் எந்தப் பாதையில் என்று அடைந்தாலும் மெய்மைக்கான வாசல் 'நான்' என்னும் உணர்வுதான். 'நான்' என்பதன் முழு முக்கியத்துவத்தைக் கிரகித்து, அதைக் கடந்து அதன் ஆதாரத்திற்குச் செல்வதால்தான் ஒருவர் ஆதியிலிருந்தே உள்ள, இறுதியான உச்ச உயர்வான நிலையை அடைய முடியும். ஆரம்பத்திற்கும், முடிவிற்கும் வித்தியாசம் மனதில்தான் உள்ளது. மனம் இருண்டோ அல்லது அலைக்கழிக்கப்பட்டோ இருக்கும்போது ஆதாரம் அனுமானிக்கப்படாது. அது தெளிவாகவும், ஒளி பொருந்தியும் இருந்தால் ஆதாரத்தின் ஒரு உண்மையான பிரதிபலிப்பாக மாறும். இருளுக்கும், ஒளிக்கும் அப்பாலும், உயிர் வாழ்தலுக்கும் இறப்பிற்கும் அப்பாலும், விழிப்புணர்விர்க்கும், விழிப்புணர் வில்லாமைக்கும் அப்பாலும் உள்ள அந்த ஆதாரம் எப்போதும் ஒன்றுதான்.

இந்த 'நான்' என்னும் உணர்வில் தங்குவது எளிய, சுலபமான, இயற்கையான யோகா- 'நிசர்க யோகா.' அதில் இரகசியம் எதுவும் இல்லை; அதற்காக எதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை; அதற்காக ஆயத்தப்பட வேண்டியதில்லை; தீட்சை பெற வேண்டியதில்லை. யாரெல்லாம்தான் ஒரு விழிப்புணர்வுடைய இருத்தலாக இருப்பதால் தடுமாறி, தன் சுய ஆதாரத்தை அறிய உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இருக்கிறார்களோ, அவர்கள், எப்போதும் இருக்கின்ற 'நான்' என்னும் உணர்வைக் கிரகித்து, மனதை மறைக்கின்ற மேகங்கள் கரைந்து, இருத்தல் அதன் மகிமையோடு பார்க்கப் படும் வரை அதில் சோம்பல் இல்லாமல் பொறுமையாகத் தங்குவார்கள்.

'நிசர்க யோகா'வை விடா முயற்சியுடன் அதன் முதிர்ச்சிக்குக் கொண்டுவந்தால், அது ஒருவர் எப்போதும் விழிப்புணர்வற்றும், மந்தமாகவும் இருக்கும் நிலையில் விழிப்புணர்வையும், இயக்கத்தையும் கொண்டுவரும். அதன் தன்மையில் வித்தியாசம் இல்லை. விதத்தில்தான் வித்தியாசம் உள்ளது - ஒரு தங்கக் கட்டிக்கும், அதிலிருந்து செய்யப்பட்ட ஒரு அழகான நகைக்கும் உள்ள வித்தியாசத்தைப் போல. அப்போதும் வாழ்க்கை தொடரும்;

ஆனால் தன்னிச்சையாகவும், சுதந்திரமாகவும், அர்த்தமுள்ள தாகவும், ஆனந்தமாகவும்.

மஹராஜ் இந்தத் தன்னிச்சையான நிலையை மிகத் தெளிவாக விவரிக்கிறார். ஆனால் எப்படி ஒரு பார்வையற்றவர் ஒளியையும், வர்ணங்களையும் கற்பனை செய்து காண முடியாதோ அப்படி மெய்ஞானம் பெறாத மனம் இம்மாதிரியான விவரிப்பு களுக்கு அர்த்தத்தைக் கொடுக்க முடியாது. பற்றற்ற மகிழ்ச்சி, பாசமான விடுபடல், பொருட்கள் மற்றும் இருத்தலின் காலமற்ற மற்றும் காரணமற்ற தன்மை ஆகிய சொற்றொடர்கள் அவர்களுக்கு வினோதமாகத் தோன்றும். அவை எந்த ஒரு எதிர்வினையையும் ஏற்படுத்த மாட்டா. அவை ஆழ்ந்த அர்த்தத்தைக் கொண்டிருக் கின்றன என்று நாம் உள்ளுணர்வில் அறிவோம். வர்ணனைக்கு அடங்காத ஒரு வினோதமான வேட்கையை அவை நமக்குள் உருவாக்குகின்றன. வரப்போகின்றவற்றிற்கு அவை ஒரு முன்னோடி. அவ்வளவுதான். மஹராஜ் சொல்வதைப் போல வார்த்தைகள் குறியீடுகள் மட்டும்தான். அவை செல்ல வேண்டிய திசையைத்தான் காண்பிப்பவை. ஆனால் அவை நம்முடன் கூடவே வரமாட்டா. உள்ளார்ந்த செயலின் பலன் மெய்யறிதல். வார்த்தைகள் வெறுமனே வழியைத்தான் சுட்டுபவை.



# மோரிஸ் ஃப்ரைட்மேன்

- வாழ்க்கைக் குறிப்பு

மோரிஸ் ஃப்ரைட்மேன், (சுவாமி பாரதானந்தா) 1896ம் ஆண்டு போலந்தில் பிறந்து, 1930களில் இந்தியாவிற்கு வந்து, மைசூர் அரசாங்கத்தில் மின்சாரப் பொறியியலாளராகப் பணி புரிந்தார். அவருக்கு மகாத்மா காந்தி, ஸ்ரீ ரமண மகரிஷி, ஸ்ரீ நிசர்கத்த மஹராஜ், ஜே.கிருஷ்ணமூர்த்தி ஆகியோரிடம் நெருங்கிய தொடர்பும், புரிதலும் இருந்தது.

அவர் 1938ல் வட இந்தியாவிலிருந்த அவுந்த் என்னும் சிறு நாட்டின் அரசரைத் தன் நாட்டைக் குடியரசாக மாற்ற ஒப்புக்கொள்ளச் செய்து, காந்திஜியுடன் சேர்ந்து அந்த நாட்டில் அரசியலமைப்புச் சட்டத்தை 'அவுந்த் பிரகடனம்' மூலமாகச் செயல்படுத்தினார். மற்ற சிற்றரசர்களுக்கு அது முன்னோடியாகவும், இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் ஒரு முக்கிய நிகழ்வாகவும் இருந்தது. அவர் அக்காலத்தில் இந்தியாவிற்கு வந்த திபெத்திய அகதிகளுக்குக் குடியிருப்பை ஏற்படுத்தவும், பொருளுதவி செய்யவும் அரசாங்கத்தை வலியுறுத்திக் கிடைக்கச் செய்தார். காந்திஜியின் ராட்டினத்தைச் சிறப்பாக வடிவமைத்தவரும் அவரே.

ஃப்ரைட்மேனின் ஆன்மீகப் புரிதல் மிக உயர்ந்த நிலையில் இருந்தது. அவரும் ஒரு ஞானி. ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜும் அவரை ஞானி என்று அடையாளம் கண்டார். அவர் மஹராஜின் உரையாடல்கள் அடங்கிய மராத்தி ஒலிப்பதிவுகளைத் தொகுத்து "I AM THAT" என்னும் புத்தகமாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அது 1973ம் ஆண்டு வெளியிடப்பட்டு ஆன்மீகச் செவ்விலக்கியமாக உலகெங்கிலும் போற்றப்படுகிறது. அதன் மராத்தி மொழியிலான மூலப்புத்தகமும் அப்போதே மஹராஜ் அவர்களால் சரி பார்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. அவர் 9.3.1976ம் தேதி, மும்பையில் சமாதியானார். அப்போது மஹராஜ் அவர் அருகில் இருந்தார்.

மோரிஸ் ஃப்ரைட்மேன் என்னும் மாமனிதருக்கு இந்திய மக்களும், உலகெங்கிலும் உள்ள ஆன்மீகச் சாதகர்களும் என்றென்றும் நன்றி உடையவர்களாக இருப்பார்கள்.

# அருஞ்சொல் அகராதி

| | | |
|---|---|---|
| விழிப்புணர்வு | : | CONSCIOUSNESS |
| பிரக்ஞை | : | AWARENESS |
| இருத்தல் | : | BEING |
| இருப்பு | : | EXISTENCE |
| அகம் சார்ந்த | : | SUBJECTIVE |
| புறம் சார்ந்த/ புற வயப்பட்ட | : | OBJECTIVE |
| உச்ச உயர்வு | : | SUPREME |
| மெய்மை | : | REALITY |
| இடம்/வெளி | : | SPACE |
| சாசுவதமான | : | ETERNAL |
| உச்சமுடிவான | : | ULTIMATE |
| முடிவற்ற | : | INFINITE |
| பூரணம் | : | ABSOLUTE |
| சாட்சி | : | WITNESS |
| சாட்சிபாவம் | : | WITNESSING |
| உணர்வு | : | CONSCIOUS |
| நிஜம் | : | FACT |
| உணர்ந்தறிதல் | : | PERCEPTION |
| பழக்க அடிமைத்தனம் | : | ADDICTION |
| கருத்து | : | CONCEPT |
| மனமார்ந்த ஈடுபாடு | : | EARNESTNESS |
| ப்ரக்தியட்சம் | : | ACTUAL |

| | | |
|---|---|---|
| ஆதாரம் | : | SOURCE |
| மகிழ்ந்து அனுபவித்தல் | : | ENJOYMENT |
| மெய்யறிதல்/<br>சுயம் அறிதல்/<br>ஆத்ம ஞானம் | : | SELF REALISATION |
| தளை | : | BONDAGE |
| பிரபஞ்சம் | : | UNIVERSE |
| வியக்தி<br>(நபராகப் பரிணமிப்பது) | : | MANIFESTED AS INDIVIDUAL |
| வியக்தா<br>(பிரபஞ்ச அளவில்<br>பரிணமிப்பது/ சாட்சி) | : | MANIFESTED |
| அவியக்தா<br>(பரிணமிக்காதது) | : | UNMANIFESTED |
| தொடர் மனப் பழக்கம் | : | OBSESSION |



இந்தியாவின் மாபெரும் ஞானிகளுள் ஒருவரான **ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்** அவர்களின் காலவரம்பற்ற உபதேசங்களின் இந்தத் தொகுப்பு, அந்தத் தீர்க்கதரிசியின் வாழ்க்கைக்கும், செயல்பாட்டிற்கும் ஒரு அத்தாட்சி. ஆங்கிலத்தில் 'I am That' என்னும் புத்தகமாக 1973ம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டதிலிருந்து சுயம் அறிதலில் தீவிர ஈடுபாடுடைய மெய்யார்வலர் களுக்கு ஞானத் தெளிவைக் கொடுத்து வருகிறது.

ஸ்ரீ நிசர்கதத்தமஹராஜ் எந்த ஒரு சித்தாந்தத்தையோ, மதத்தையோ முன்வைக்கவில்லை. ஆனால் சுயம் பற்றிய புதிரை மென்மையாக விடுவித்தார். அவருடைய செய்தி எளிமையானது, நேரடியானது, உன்னதமானது. அந்த ஞானியின் தனித்த ஒரே அக்கறை மானிடத்தின் துன்பங்களைப் போக்குவதுதான். ஒருவருடைய மெய்யான இயல்பையும், காலவரம்பற்ற இருத்தலையும் புரியவைப்பதுதான் அவருடைய குறிக்கோள். மனம் அதன் சொந்த இருத்தலை அடையாளம் கண்டு, ஊடுருவி, 'இது அல்லது அதுவாக, இங்கு அல்லது அங்காக, அப்போது அல்லது இப்போதாக' அல்லாமல் வெறுமனே காலமற்ற இருத்தலாக அறியவேண்டும் என்று கற்பித்தார். தங்களுடைய பொய்யான அடையாளங்களை அழித்துக் கொள்ள மும்பையிலிருந்த அவருடைய வீட்டிற்கு உலகெங்கிலுமிருந்து வந்த பலதரப்பட்ட மெய்யார்வலர்களுக்கு, 'மெய்யான அனுபவத்திற்கு அப்பால் இருப்பது மனம் அல்ல - சுயம், ஒவ்வொன்றும் எதில் தெரிகின்றதோ அந்த ஒளி, ஒவ்வொன்றும் எதில் நிகழ்கிறதோ அந்தப் பிரக்ஞை' என்னும் நம்பிக்கையை அவர் கொடுத்தார். காலகாலமாக இருக்கும் 'நான் யார்?' என்னும் கேள்விக்கு வாசகர்கள் 'நான் ப்ரம்மம்' என்னும் இந்தப் புத்தகத்தில் பதில்களைக் கண்டு, தங்களையே தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

மகோன்னதமான ஞானப் பெட்டகத்தின் திறவுகோல்
இதோ உங்கள் கைகளில்!

ISBN 978-81-8402-782-2



கண்ணதாசன் பதிப்பகம்